# பெரியார்

# ஈ. வெ. ரா. சிந்தனைகள்

## THOUGHTS OF PERIYAR E. V. R.

## 1



பதிப்பாசிரியர்: வே. ஆனைமுத்து

சிந்தனையாளர் கழகம்
திருச்சிராப்பள்ளி-2.




போன் : 0422 – 2572635
செல் : 936 2970121

பொறிஞர் கு.ம. சுப்பிரமணியன் பி.இ., எம்.பி.ஏ., எஃப்.அய்.இ.
(மருத நாடன்)
தலைமைப் பொறியாளர் மி.வா. (ஓய்வு)
தலைவர் : சிந்தனையாளர் கழகம்
தமிழ் தமிழர் ஒருங்கிணைப்பாளர்
அமைப்பாளர் : தொழில் நுட்ப வல்லுநர் குழுமம்

18/12ஏ, அண்ணாநகர், ஆறுமுகம் லே–அவுட்,
பூளைமேடு (அஞ்சல்), கோயமுத்தூர் – 641 004.

இன்று கோவையில் பொறிஞர். கு.ம.சுப்பிரமணியம் அவர்களை அவரது இல்லத்தில் சந்தித்தேன். இவர் மின்வாரியத்தில் தலைமைப் பொறியாளராகப் பணியாற்றி பணிநிறைவு பெற்றவர். தந்தை பெரியாரோடு இணைந்து தமிழகம் முழுவதும் பகுத்தறிவுக் கருத்துகளைப் பரப்பியவர்.

திருச்சி சிந்தனையாளர் கழகத்தின் தலைவராக இருந்தவர். இவரது முயற்சியால் திரு.வே. ஆனைமுத்து அவர்கள் தொகுத்த பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் மூன்று தொகுதிகளாக வெளியிடப்பட்டன. 2200 பக்கங்களுக்கு மேற்பட்ட இந்த மூன்று தொகுதிகளும் பெரியாரின் சொற்பொழிவுகளும் கட்டுரைகளும் அடங்கிய தொகுப்பு ஆகும். பெரியாரின் பன்முக ஆற்றலை வெளிப்படுத்துகிற அரிய நூலாக இன்றளவும் இந்த நூல் போற்றப்படுகிறது.

பொறிஞர். கு.ம.சுப்பிரமணியம் எழுதிய கவிதை நூலை இணையத்தில் வலையேற்றுவதற்காக அவரைச் சந்தித்தபோது பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் என்ற நூலைப்பற்றி அவரிடம் பேசினேன். அந்த நூலை வெளியிட்ட நினைவலைகளை அவர் விளக்கினார். நூல் வெளியீட்டிற்காப் பட்டபாடுகள் என் கண்முன் நிழலாடியது. அவர் காட்டிய தந்தை பெரியாரின் உருவம் என் முன் நிழலாடியது. பகுத்தறிவு விதைப்பிற்காகத் தன்வாழ்நாளின் இறுதிவரை பேசியும் எழுதியும் வந்த அவரது உறுதி தெரிந்தது.

பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் தொகுப்பினை இணையத்தில் வலையேற்றினால் உலகமக்கள் வலைஇறக்கிப் படித்து மகிழ்வார்களே என்று சொன்ன பொழுது, நூலை வெளியிட்ட சிந்தனையாளர் கழகத்தின் தலைவர் திரு. கு.ம. சுப்பிரமணியம் அவர்கள் மகிழ்வோடு, தன் கைப்படியாக வைத்திருந்த அந்த முதன்மைப் படியை அன்போடு எடுத்து வந்து கொடுத்தார்.

இணையத்தில் வெளியிடுங்கள், அய்யாவின் கருத்துகள் உலகம் முழுவதும் பரவட்டும் என்று அவர் கொடுத்தபோது நான் பெருமகிழ்வு அடைந்தேன். நான் பத்தாம் வகுப்பு படித்தபோது, தாராபுரம் நூலகத்தில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பக்கமாகப் படித்து நெஞ்சில் பதிந்து என்னை வழிநடத்திய அந்த நூலை நான் படவடிவக் கோப்பாக்கும் வாய்ப்பு கிடைத்தது கண்டு நெஞ்சு நெகிழ்ந்தேன்.

ஆனைமுத்து அய்யா அவர்கள் பெருமுயற்சியில் திரட்டிச் சேகரித்த பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள் என்ற இந்த மூன்று தொகுதிகளும் உலகம் முழுவதும் உள்ள நம் தமிழ் மக்களுக்கும் இனிவரும் அடுத்த தலைமுறையினருக்கும் வழிகாட்டியாக நின்று பகுத்தறிவூட்டும் என்று நம்புகிறேன்.

bghs;shr;rp erd; (09-06-2011)
jkpHk; tiy (www.thamizham.net)

# பெரியார்
# ஈ. வெ. ரா. சிந்தனைகள்

(பெரியார் ஈ. வெ. இராமசாமி அவர்களின்
சொற்பொழிவுகளும் கட்டுரைகளும்)

## முதல் தொகுதி

பதிப்பாசிரியர்

வே. ஆனைமுத்து

---

வெளியீடு :
சிந்தனையாளர் கழகம்
தெப்பக்குளம்
திருச்சிராப்பள்ளி–2

# THOUGHTS OF PERIYAR E. V. R.

(Speeches and Writings of Periyar E. V. Ramasami)

## VOLUME I

*Compiled and Edited by*

V. ANAIMUTHU

திரு பொன்னாச்சி நேசன்
அவர்களுக்கு நினைவகத்தில்
வைக்க இந்நூலை அளிக்கின்றோம்.
[illegible]
5-6-2011.
தலைவர்.

*Published by*

THINKERS' FORUM

Teppakulam

Tiruchirappalli-2



சென்னையில் அரசாங்க தலைமை மருத்துவமனையில்
23-4-1968 ல் தந்தை பெரியார்



திருச்சியில், 6–9–1972-ல் " பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள் "
நூலுக்குரிய கையேட்டுப்படி (Manuscript)யைப் பார்வையிட்டு
பெரியார் ஈ. வெ. ரா. கையொப்பமிடுகிறார்.



ஈரோட்டில், 17-9-1879-ல் பெரியார் ஈ. வெ. ரா. பிறந்த இல்லம்



## நான் யார்?

ஈ. வெ. ராமசாமி என்கின்ற நான் திராவிட சமுதாயத்தைத் திருத்தி உலகில் உள்ள மற்ற சமுதாயத்தினரைப்போல் மானமும் அறிவும் உள்ள சமுதாயமாக ஆக்கும் தொண்டை மேற்போட்டுக் கொண்டு அதே பணியாய் இருப்பவன்.



அந்தத் தொண்டு செய்ய எனக்கு 'யோக்கியதை' இருக்கிறதோ இல்லையோ, இந்த நாட்டில் அந்தப் பணி செய்ய யாரும் வராததினால், நான் அதை மேற்போட்டுக் கொண்டு தொண்டாற்றி வருகிறேன்.

இதைத் தவிர வேறு பற்று ஒன்றும் எனக்கு இல்லாததாலும்,



பகுத்தறிவையே அடிப்படையாய்க் கொண்டு கொள்கைகளையும், திட்டங்களையும் வகுப்பதாலும், நான் அத் தொண்டுக்குத் தகுதி உடையவன் என்றே கருதுகிறேன்.

சமுதாயத் தொண்டு செய்பவனுக்கு இது போதும் என்றே கருதுகிறேன்.

# பதிப்பாசிரியர் முன்னுரை

திருச்சி சிந்தனையாளர் கழகம் மேற்கொண்டுள்ள பணிகள் பலவாம்.

உலக நாத்திக அறிஞர்களின் சொற்பொழிவுகளையும் கட்டுரைகளையும் தொகுத்து வெளியிடுவது அவற்றுள் ஒன்றாகும். இதற்கேற்ப 'புத்த நெறி' என்ற தலைப்பில் தந்தை பெரியார் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவுத் தொகுப்பு 1970ஆம் ஆண்டு மே திங்களில் வெளியிடப்பெற்றது. அது மிகச் சிறு நூல்.

அடுத்து, 1970 முதல் தந்தை பெரியார் அவர்கள் சிந்தனையாளர் கழகச் சார்பில் ஆற்றிய உரைகளைத் தொகுத்து 500 பக்க அளவில் ஒரு நூல் வெளியிடுவதென 17-12-1971இல் நடைபெற்ற செயற் குழுவில் முடிவு செய்யப்பட்டது.

இதனைத் தொடர்ந்து 7-1-1972இல் கூடிய சிந்தனையாளர் கழகப் பொதுக் குழு மேலும் தீவிரமான திட்டத்தை அறிவித்தது. இதன்படி, பெரியார் அவர்களின் சொற் பொழிவுகளையும் எழுத்துக்களையும்—கிடைக்கின்ற எல்லா ஆதாரங்களிலிருந்தும் தொகுத்து, 50 அல்லது 60 தலைப்புகளில் ஒரே தொகுதியாக (In one volume) வெளியிடுவது என்றும், இவ்வாறு வெளியிட சிந்தனையாளர் கழகம் பெரியார் அவர்களிடம் பதிப்புரிமை பெறுவது என்றும், இவ்வெளியீட்டுப் பணிக்குச் சுமார் முப்பதினாயிரம் ரூபாய் செலவாகலாம் என்றும் விவாதித்து முடிவெடுத்தது.

இதனையொட்டி பெரியார் அவர்களின் சொற்பொழிவுகளையும் எழுத்துக்களையும் தொகுக்கும் பணியினைச் சிந்தனையாளர் கழகத்தார் அன்புடன் என்பால் ஒப்புவித்தனர். இந்த ஏற்பாடுகள் அனைத்துக்கும் பெரியார் அவர்கள் மனமுவந்து 9-1-1972இல் முழு ஒப்புதல் அளித்தார்கள்.

நூல் தொகுப்புக்கு வேண்டிய ஆதாரத் தொகுதிகளான குடி அரசு, புரட்சி, பகுத்தறிவு, விடுதலை, திராவிடநாடு, தோழன், தனி அரசு முதலான ஏடுகளின் தொகுதி களையும்; ஈரோடு குடி அரசுப் பதிப்பகத்தாராலும், பெரியார் சுயமரியாதைப் பிரசார நிறுவனத்தாராலும், மற்றும் பல்வேறு நிறுவனத்தினராலும் வெளியிடப்பட்ட சிறு சிறு நூல்கள் சிலவற்றையும் தந்தை பெரியார் அவர்களிடமிருந்து 26-1-1972இல் பெற்று வந்தேன். 27-1-1972 முதல் தொடர்ந்து பல மாதங்கள் பகலும் இரவுமாக இவ் வேடு களையும் நூல்களையும் ஆழ்ந்து படித்தேன். இவ்வாறு படித்துக் கொண்டே செல்லுங் கால், 'கூறியது கூறல்' என்றபடி ஒரே கருத்து விளக்கம் பலவிடங்களிலும் வரும்போது அவற்றைத் தவிர்க்க வேண்டி நேரிட்டது. இதனை முன் வைத்து, தொகுப்புக்கு வேண்டிய பகுதிகளை மட்டும் அடைப்புக் குறி செய்து தனிப்படுத்தினேன். இவ்வாறு குறிக்கப்பட்ட ஒவ்வொரு பகுதிக்கும் பொருத்தமான தலைப்பையும், அத் தலைப்பு எந்தப் பெரும் பாகத்தின் (Part) கீழ் வரக் கூடுமோ அதன் பெயரையும் எழுதி வரலானேன். இத்துடன், இவ்வாறு அடைப்புக் குறி செய்யப்பட்ட பகுதி வெளியாகியுள்ள ஆதாரத்தின் (Source) பெயர், நாள், பக்க எண், பத்தி எண் (Column) இவற்றையும் குறிப்பிட்டு வந்தேன்.

இதற்கிடையில் இத் தொகுப்புப் பணியினைச் சுயமரியாதை இயக்க அறிஞர்கள், தோழர்கள் பலருடைய ஆலோசனைகளையும் திட்டங்களையும் கேட்டறிந்து செயல் படுத்தினால், அதிகப் பயன் விளையும் என மனமார கழகக் குழுவினர் கருதலாயினர். இதற்கொப்பத் தமிழகத்திலும், கருநாடகத்திலும் உள்ள சுயமரியாதை இயக்க அறிஞர்கள், தோழர்கள் ஆகியோருக்கு இதுபற்றி விளக்கமான மடல் விடுத்தோம். 2-2-1972 முதல் 15-2-1972 முடிய பல நாட்களில் 87 பேர்கட்கு இவ்வாறு மடல்கள் விடுக்கப்பட்டன.

கீழ்க்கண்ட அறிஞர்கள், தோழர்களிடமிருந்து அரிய ஆலோசனைகளையும் திட்டங் களையும் கொண்ட பதில் மடல்கள் கிடைத்தன.

தமிழகத்தில் திருவாளர்கள், திருச்சி புலவர் து. தயாளசாமி, கோ. கலியராசனு எம். ஏ., பி. இடி., கரூர், பி. ஆர். குப்புசாமி பி. ஏ., பி. எல்., முசிறி மா. சிவசங்கரன் பி. எஸ்ஸி., பி.டி., சென்னை ஏ. பி. சனார்த்தனம் எம். ஏ., திருச்செங்கோடு பி. பூவராகன் பி. எஸ்ஸி., பி. இடி., திருத்துறைப்பூண்டி வி. பொ. பழனி வேலன் பி. ஓ. எல்., வி. கணபதி பி. ஏ., கண்ணியம் கு. செயராமன், தருமபுரி புலவர் துரை-கணேசன், கீழமாளிகை—தமிழ் மறவர் வை. பொன்னம்பலனார், பவானி புலவர் குழந்தை, கரந்தை சிவ-சண்முகசுந்தரம், தவத்திரு. குன்றக்குடி அடிகளார், சேலம் தி. வை. சொக்கப்பா எம். ஏ., எல். டி., ஈரோடு எம். கே. சுப்பிரமணியம் எம். ஏ., தஞ்சை புலவர் தி. பால சுப்பிரமணியம், மதுரை ஓ. வி. கே. நீர்காத்தலிங்கம் ஆகியோர்களிடமிருந்தும்; கருநாடகத்தில் பெங்களூரிலுள்ள திரு வாளர்கள், ஏ. எம். தருமலிங்கம் எம். ஏ., எல்எல். எம்., பூ. அ. கொடையரசன், வி. நாரா யணசாமி, வி. சி. வேலாயுதம், திருமதி சி. ஆர். விசாலக்குமி-சிவலிங்கம் ஆகியோர்களிட மிருந்தும் பதில் மடல்கள் வரப்பெற்றன.

இந்த அறிஞர்கள் அளித்த ஆலோசனைகள் அனைத்தையும் ஏற்ற வகையில் பயன் படுத்திக் கொண்டேன். கழகச் சார்பில் இவர்கட்கு நன்றியினை உரித்தாக்குகின்றேன்.

இவ்வகைகளில் தொகுக்கப்பெற்ற 341 தலைப்புகளின் பெயர்களைமட்டும் பட்டியல் எடுத்துப் பெரியார் அவர்களிடம் கழகக் குழுவினர் காண்பித்தனர். இப் பட்டியல் முழுவதை யும் பார்வையிட்ட அய்யா அவர்கள் 'இத்தனைத் தலைப்புகளிலேயே எல்லாம் அடங்கி விடுமா?' என்று பொருள் பொதிந்ததும், சிந்தனை நிறைந்ததுமான ஒரு வினாவை மட்டும் எழுப்பிவிட்டு, இரண்டு முக்கிய எச்சரிக்கைகளைத் தம் விருப்பங்களாகச் சொன்னார்கள்.

1. 'என்னால் ஒரு தடவை பேசப்பட்டவை, எழுதப்பட்டவை திரும்பத் திரும்ப வந்திருக்கும் இடங்களைக் கவனமாகப் பார்த்து Repetition னைத் தவிர்க்கவேண்டும்.'

2. 'கருத்து முரண்பாடுகள் உள்ளதுபோல் தோன்றும் இடங்களைக்கண்டு, அவற்றுக்குத் தெளிவான விளக்கம் அமையும்படி தொகுப்பு அமையவேண்டும்'.

மேற்கண்டவாறு அன்னார் தொடுத்த வினாவும், விடுத்த எச்சரிக்கைக் கட்டளை களும் தொகுப்புப் பணி மேலும் விரிவானதாக ஆகுமாறு செய்தன. அத்துடன், தொகுப்புப் பணியில் நேரக்கூடிய குறைபாடுகளைத் தவிர்த்துக் கொள்ளவும் இவை வழிகாட்டிகளாக அமைந்தன.

பெரியார் அவர்களின் விருப்பத்தை முழு அளவில் நிறைவேற்ற வேண்டுமாயின் அனைத்து ஆதாரங்களையும் ஒருவரே தொடர்ந்து படித்து, எல்லாவற்றையும் உள்ளத்தில் வாங்கி நிரல்படுத்திப் பார்த்தால்தான் இது இயலுவதாகும் எனத்தென்பட்டது. அவ்வாறே தொடர்ந்து பணியாற்றத் தொடங்கினேன்; அச்சடிக்கப்பட்டுள்ள ஆதாரங்கள்—கிடைத்த அளவுக்கு, அனைத்தையும் முறையாகப் படித்துக் குறியிட்டேன்.

இவ்வாறு தனிப்படுத்தப்பட்ட பகுதிகளை எடுத்தெழுதும் பணி ஒரே அமயத்தில் நான்கு, அய்ந்து நண்பர்களைக் கொண்டு 6-2-1972 முதலே தொடங்கப்பட்டிருந்தது; இப் பணி 1972 மே திங்களில் பெரும் அளவுக்கு முடிந்திருந்தது. இவ்வாறு எடுத்தெழுதப்பட்ட 2000 இரட்டை முழுத் தாட்களையும் (Double Cap) ஒருமுறை படித்துப் பார்த்தேன். அக் கைப்படியை அச்சிட்ட மூல ஆதாரங்களுடன் சரி பார்த்தல், அவற்றில் காணப்பட்ட இலக்கணப் பிழைகளைத் திருத்தம் செய்தல் ஆகியவற்றையும் தொடர்ந்து செய்தேன்; 1972 சூன் திங்களில் சரி பார்க்கும் பணி முடிவடைந்தது. இவ்வாறு சரி பார்க்கப்பட்ட வற்றை மீண்டும் திருத்தக் கையெழுத்துப்படி (Fair copy of manuscript) யெடுக்கும் பணி நான்கு, அய்ந்து நண்பர்களைக் கொண்டு 1972 ஆகஸ்டில் முடிக்கப்பெற்றது.

இந் நிலையில் மேலும் புதிதாக 1000 இரட்டை முழுத் தாட்கள் அளவுக்கு, பெரியார் அவர்களின் சொற்பொழிவுகளும் எழுத்துக்களும் எடுத்தெழுதப்படுவது இன்றியமையாதது என 1972 ஆகஸ்டில் உணரப்பட்டது; என்னால் ஏற்கனவே குறியிடப்பட்ட பகுதிகள் அந்த அளவுக்குக் கைவசமிருந்தன. எனவே, 1972 செப்டம்பரில் தொடர்ந்து எழுதத் தொடங்கி 1973 பிப்ரவரியில் இப்பணி முடிக்கப்பட்டது.

தொகுப்புப் பணியும் (Compilation work), கையெழுத்துப் படி தயாரிக்கும் பணியும் (Preparation of manuscript) இவ்வாறாக இரண்டு கட்டங்களில் முடிவுற்றன. முதல் கட்டத்தில் 2000 தாட்களும், இரண்டாம் கட்டத்தில் 1222 தாட்களும்—ஆக 3222 இரட்டை முழுத் தாட்களில் கையெழுத்துப் படி தயாரிக்கப்பட்டது.

கையெழுத்துப் படியின் முதல் 2000 பக்கங்கள் தயாரான நிலையில் 6-9-1972 இல் தொடங்கி சமயம் நேர்ந்தபோதெல்லாம் தந்தை பெரியார் அவர்களிடம் அவற்றைத் தந்து படிக்கச் செய்தும், படித்துக் காட்டியும் கையொப்பம் பெற்றோம். கழகக் குழுவினர் இவ்வாறு 3222 பக்கங்களில் பல இடங்களில் அவர்தம் கையொப்பமும், கடைசிப் பக்கத்தில் அவரால் பதிப்புரிமை வழங்கப்பட்ட ஒப்புதல் கையொப்பமும் பெறலானோம்.

அவ்வாறு கையொப்பமிட்ட பல சமயங்களில் அன்னார் பழைய நினைவுகளைக் கூர்ந்து—குறிப்பிட்ட பல தலைப்புகளை எங்களையே படித்துக் காண்பிக்கும்படி மிக ஆவலுடன் பணித்தார்கள். வருத்தம் பாராது பலநாட்கள் அப் பணியை மேற்கொண்ட அய்யா அவர்கள் நாளொன்றுக்குச் சுமார் 100 பக்கங்களைப் படிக்கக் கேட்டும்—படித்துப் பார்த்தும் ஒப்புதல் தந்தார்கள்.

அவ்வாறு படித்துக் காண்பிக்க நேர்ந்த பல தலைப்புகளுள் 'மொழி'; 'நாகம்மாள் மறைவு'; 'ஈ. வெ. கி. மறைவு' போன்ற தலைப்புகளைப் படித்துக் காண்பித்தபோது—அவற்றில் 20, 30, 40 ஆண்டுகளுக்கு முன்னர் அவர் கையாண்டிருந்த சொற்களைத் தாமே நினைவுகூர்ந்து,நான் படிக்கும் முன்னரே முன்னோடியாக அச் சொற்களைக் குறிப்பிட்டுக் கூறி, சில வரிகளை அப்படியே நினைவு கூர்ந்து சொன்ன பாங்கு கழகக் குழுவினரை மிகவும் வியப்பில் ஆழ்த்தியது; எங்கள் நெஞ்சங்களில் பெரும் நெகிழ்ச்சியையும் உண்டு பண்ணியது.

அவ்வமயம் பெரியார் காட்டிய மகிழ்ச்சி நிறைந்த சுறுசுறுப்புக்கும், வேகத்துக்கும் அவருக்குத் துணைபுரிந்த கழகக் குழுவினர் திருவாளர்கள் நோபின் கு. கோவிந்தராசலு, கு. ம. சுப்பிரமணியன் பி. இ., ச. சோமு ஆகியோராலும் என்னாலும் ஈடுகொடுக்க இயலவில்லை.

அத்துடன் இத் தொகுப்புப் பணி குறித்தும், இந் நூலை வெளியிட இக் கழகம் மேற் கொண்டுள்ள அரிய முயற்சி குறித்தும் அவ்வமயங்களில் அவர் பொழிந்த முழுமன நிறைவான பாராட்டுச் சொற்கள் எங்களின் உடலங்களைப் புல்லரிக்கச் செய்தன.

நாற்பதாண்டுக் கால நெடிய இடைவெளி; ஆண்டில் சுமார் 200 நாட்கள் சுற்றுப் பயணம்; ஓய்வறியாத பேச்சு, எழுத்து; கிளர்ச்சிகள், சிறைவாசம், உடல்நலக் குறைவு ஆகிய இத்துணைத் தடைகளையும் தாண்டிவந்து முதிர்ந்த வயதில்—கட்டிளங் காளைக்குரிய முறுக்குடனும் ஆர்வத்துடனும் கையெழுத்துப் படி முழுவதையும் படித்தும், படிக்கக் கேட்டும் ஒப்புதலளித்த தன்னிகரற்ற பெரியார் அவர்களின் திறனை எண்ணி வியந்து பல நாட்கள் நாங்கள் உரையாடினோம். தம் பழைய எழுத்துக்களை நன்கு நினைவு கூர்ந்தது போன்றே, 1915 முதல் நிகழ்ந்த மிகப் பல சம்பவங்கள் தொடர்பான நபர்கள், இடங்கள், காலம் இவற்றை நினைவு கூர்ந்து பேசி விளக்கமளித்த அவர்தம் திறம் அரிதினும் அரிதான ஒன்றாகும்.

'பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்' என்ற நூல் இருதொகுதிகளாக 1972 செப்டம்பரில் வெளியிடப் படவேண்டும் என்பது கழகத்தின் திட்டமாகும். ஆயினும், தொகுப்புப் பணியின் ஒரு பகுதி முடியவே அவ்வளவு காலம் நீடித்துவிட்டது. இதற்குக் காரணம் தொகுப்புப் பணியால் விளைந்த கடும் வேலைச் சுமை மட்டுமன்று. வேறென்ன வெனில், தொகுப்புப் பணி மேற்கொள்ளப்பட்டிருந்த அதேசமயத்தில் திருவாளர்கள் கழகத் தலைவர் கு. ம. சுப்பிரமணியன் பி. இ., கழகப் பொருளாளர் நோபிள் கு. கோவிந்தராசலு, ச. சோமு ஆகியோரும், நானும் 25-4-1972 முதல் பெரும்பகுதி ஓய்வு நேரத்தைப் பொருள் திரட்டும் பணியில் ஈடுபடுத்தவேண்டிய இடர்ப்பாடான நிலைக்கு ஆளாக நேர்ந்ததேயாகும்.

அன்றியும், நூல் வெளியீட்டுப் பணிக்கு ஆகும் செலவு முப்பதினாயிரம் ரூபாய் என்கிற நிலைமாறி, சுமார் ஒன்றேமுக்கால் இலட்ச ரூபாய் ஆகும் என்ற புதுநிலை தோன்றியமையால், எங்களின் வேலைச் சுமை மிகப் பெரிதாயிற்று. நூலின் மொத்த அச்சுப் பக்கங்கள் சுமார் 2000 ஆகவும், தொகுதிகள் இரண்டாகவும் (Two volumes) கெட்டியான அழகிய ரெக்சைன் துணி போர்த்த கட்டடம் உள்ளதாகவும் அமைக்கப்பட வேண்டி நேர்ந்தமையால் அச் சுமையான பணியைப் பல இன்னல்களுக்கிடையே ஏற்றுச் செயல்பட வேண்டியதாயிற்று.

இக் கழகத்தினர் எடுத்துக்கொண்ட இம் மாபெரும் பணி துவண்டுவிடாமல்—அவ்வப் போது எங்களை உசாவியும், ஊக்குவித்தும், விரைவில் வெளியிடத் தூண்டியும் ஆக்க மளித்தவர் பெருந்தகை தந்தை பெரியார் அவர்களே ஆவார். அவ்வப்போது திருமதி ஈ. வெ. ரா. மணியம்மையார் அளித்த ஊக்கம் எங்கட்கு நற்றுணையாக நின்றது.

அடுத்து, கழகப் புரவலர் அமைச்சர் திரு. அன்பில் பெ. தருமலிங்கம், அமைச்சர் திரு. என். வி. நடராசன் ஆகியோர் கழகத்தினரைக் காட்டிலும் மிகுந்த ஆக்கமும் ஊக்கமும் அளித்து இப் பணி இடையீடு இன்றித் தொடர்ந்து நடைபெற இரு பெருந் தூண்களாக நின்று உதவினர்.

சிந்தனையாளர் கழகம் மேற்கொண்ட இப் பணிக்குக் கழக உறுப்பினர்களும், பல் வேறு மாவட்டங்களிலுமுள்ள சுயமரியாதை இயக்கத் தோழர்கள் சிலரும் உறுதுணை புரிந்தனர்.

எனினும், ஒரு கட்டத்தில், இப் பணி, கையெழுத்துப் படியாகவே கிடந்துவிடும் நிலைக்கு இலக்காகிவிடுமோ என நாங்கள் எண்ணி எண்ணி வருந்தும் நிலை ஏற்பட்டது. இத்தன்மையானது, இம்முயற்சியில் ஈடுபட்டிருந்த எங்கட்கு ஓயாத அலைச்சலையும், மன உளைச்சலையும், தூக்கம்பிடிக்காத அளவுக்குக் கவலைகளையும் பெருக்கிவிட்டன.

ஆயினும், இந் நிலைமைகள் அனைத்தையும் நன்குணர்ந்த நிலையில்—இருபதாம் நூற்றாண்டின் தலைசிறந்த உலகப் பெருஞ் சிந்தனையாளராகத் திகழ்ந்த தந்தை பெரியார் அவர்களின் சிந்தனைக் கடலில் விளைந்த எண்ணற்ற முத்துக்களைத் தொகுத்து உலகுக்கு ஒருசேர வழங்கும் இப் பெரும் பணியை—திருச்சி சிந்தனையாளர் கழகத்தார் நிறைவேற்றுதல் மிகப் பொருத்தமானது என முடிவுசெய்து, அய்யா அவர்களே இப் பணியினை எங்களிடம் ஒப்படைத்தமையைக் கிடைத்தற்கரிய பெரும் பேறாகக் கருதிச் செயல்பட்டோம்; அய்யா அவர்கள் அளித்த பேருக்கம் எங்கட்கு மாமருந்தென அமைந்தது.

சுயமரியாதைக் கொள்கையின் கர்த்தாவான பெரியார் அவர்களையும் அவர்தம் கொள்கைகளையும் நன்கு புரிந்துகொண்டு இக் கழகத்தினராகிய நாங்கள் முயன்று இப் பணியினைச் செய்துமுடித்திருப்பது—'நம் நன்றிக் கடனை ஆற்றுவதற்குக் கிடைத்த மிகப் பெரும் வாய்ப்பினைப் பயனுறச் செய்தோம்' என்கிற அந்த அளவிலேயே சிறப்பினைப் பெறத்தக்கதாகும்.

'பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்' அச்சிடுவதற்கான முழு ஆயத்தம் 1973 செப்டம்பரில் செய்யப்பட்டது; அச்சிடும் வேலையும் அப்போதே விரைந்து மேற்கொள்ளப் பட்டது. 9-12-1973 வரையில் சுமார் 400 பக்கங்கள் அச்சிடப் பெற்று தந்தை பெரியார் அவர்களின் பார்வைக்கு உட்படுத்தப்பட்டது.

எதிர்பாராத வகையில் தந்தை பெரியார் அவர்கள் மறைந்து விட்டதன் காரணமாக, சில நாட்கள், அச்சிடும் வேலை தேக்கமுற்றது. இடைப்பட்ட இக் காலத்தில் வேறு சிக்கல்கள் தோன்றின. அவற்றுள் ஒன்று அச்சிடும் காகிதத்தின் விலை திடுமென இரண்டு மடங்குக்கு மேல் உயர்ந்து விட்டதாகும்.

அன்றியும், 1973 டிசம்பர் வரையில் இரண்டு தொகுதிகளில் இந்நூலை வெளியிடத் திட்டமிட்டது மாற்றப்படவேண்டியதாகி, மூன்று தொகுதிகளாக—ரெக்சைன் கட்டடத் துடனே வெளியிட வேண்டி ஏற்பட்டது. நூலினைக் கையாள்வதற்கு வசதியாகவே, இந்த மாற்றம் செய்ய நேர்ந்தது.

இத்துணை இடர்ப்பாடுகளையும் கடந்துவர நேரிட்டமையின் இந்நூல் வெளியீடு தாமதப்பட்டு 1974 மே திங்களில் திகழவேண்டியதாயிற்று.

இனி இத் தொகுப்புப் பணி பற்றிப் பேசப்பட்ட பல கருத்துகளைக் குறித்தும் சில காண்போம்.

(1) பல அறிஞர்கள் சில குழுவினராக அமர்ந்து பல ஆண்டுகள் முயற்சித்து இப் பணியை மேற் கொண்டிருத்தல் வேண்டும் என்பது ஒரு சாரார் கருத்தாகும். இதற்கு ஓர் இயற்கைத் தடை இருந்தது.

அதாவது, பெரியார் அவர்களின் சொற்பொழிவுகளையும் எழுத்துக்களையும் அச்சிடப்பட்ட ஆதாரங்களிலிருந்து அவற்றில் வெளிவந்துள்ளவாறே தொகுத்து, பொருள் வாரியாக வகைப்படுத்திப் பதிப்பிக்கும் பணி ஒன்றே, என்பால் கழகத்தாரும், தந்தை பெரியார் அவர்களும் ஒப்படைத்ததாகும். இவ்வகைப் பணி ஓர் ஆராய்ச்சிப் பணியன்று. ஆதலின் வருத்தம் பாராது ஒருவரே இப் பணியைச் செய்தாலன்றி 'கூறியது கூறல்' என்ற குறைபாடு இல்லாமல் தொகுக்க இயலாது என்று கொண்டு இதனை என்பால் ஒப் படைத்தனர்.

அன்றியும், திறனாய்வு (Criticism); ஆராய்ச்சி (Research); ஒப்பியல் ஆய்வு (Comparative study) முதலான வகைகளைச் சார்ந்த பணியாக இதனைக் கழகம் மேற் கொண்டிருப்பின்—பல குழுக்கள் தேவை; பல ஆண்டுகள் தேவை. நாங்கள் மேற்கொண்ட பணி அவ்வகையினதன்று. வேறென்னவெனின், ஆராய்ச்சி மேற்கொள்ளவும், படித் துணரவும் விரும்பும் அனைவர்க்கும் பெரியார் அவர்களின் கருத்துகளை ஒருசேரத் திரட்டி அளிப்பதே நாம் மேற்கொண்ட பணியாகும்.

எனினும் மேற்கண்ட ஆராய்ச்சிப் பணிகளின் அளவில் முக்காற் பகுதிக்குக் குறை வில்லாத தன்மையுடைய இப் பெருஞ்செயலை நானே பொறுப்பேற்றுச் செய்ய வேண்டு மென்று தந்தை பெரியார் அவர்களும் கழகத்தினரும் விரும்பினமையின்—மனமார்ந்த பூரிப்புடன் இதனை நான் மேற்கொண்டேன்.

(2) அடுத்து, பெரியாரின் கொள்கைகளை விளக்கும் நூல்கள் மிக எளிய விலையில் 45 ஆண்டுகளாக வெளிவந்து பரவியுள்ள போது, அதிக விலை கொண்ட உயரிய பதிப்புகள் வேண்டுமா? என்பது இன்னொரு சாரார் கருத்தாகும்.

இவ்வாறு எளிய விலையில் வெளியிடப்பட்ட நூல்கள் சுமார் 100-க்கு மேல் உள்ளன; இவை பொருள் வாரியாக அவ்வப்போது வெளிவந்துள்ளன என்பது உண்மையே. ஆனால், இவற்றுள் எந்த ஒரு நூலும் அல்லது சில நூல்களும் பெரியாரின்

கொள்கைகளை, 'ஏறக்குறைய முழுவதுமாக' என்கின்ற அளவில் உணர்த்துவதற்குக் கூடப் போதுமானவையல்ல. இது அந் நூல்களின் குறைபாடன்று; சிறு நூல்களில் அவ்வளவே தொகுத்து அளிக்க இயலும்.

கிடைக்க வாய்ப்புள்ள எல்லா ஏடுகளையும் தேடிப்பெற்று அவற்றுள் வெளிவந்துள்ள கருத்துகளுள், 'ஏறத்தாழ முழுவதையும்' தொகுத்து வெளியிட்டால் வருங்காலத் தலை முறையினர் பெரியாரவர்களின் கருத்துகளை ஒருசேரப் படித்தறிய ஏதுவாக இருக்கும் என்பதே, இப் பெருந் தொகுப்பினை இக் கழகம் வெளியிட முனைந்ததற்கான முக்கிய காரணமாகும்.

இன்னொன்றும் கவனிக்கற்பாலது. அச்சுக் கலை, புத்தகக் கட்டடக் கலை (Binding) இவை சிறந்த முன்னேற்றம் பெற்றிருந்த கால கட்டத்தில்—பாதுகாப்பாக வைத்துக்காக்கப் போதிய இடவசதியும், நிலைப் பேழைகளும் மற்றும் பல வசதிகளும் நிறைந்திருந்த கால கட்டத்தில் வெளியிடப்பட்ட 'குடி அரசு', 'புரட்சி', 'பகுத்தறிவு', 'ரிவோல்ட்', 'விடுதலை' ஆகிய ஏடுகளின் பழைய தொகுதிகள் முறையாகவும், முழுமையாகவும், செம்மையாகவும் எவராலும் பாதுகாக்கப் பெறாது போயின.

தற்போது வெகுசிலரிடம் உள்ள அப் பழைய ஏடுகள் முழுமையாகவும், முறையாகவும் அமையவில்லை. அந்த ஏடுகளும் இன்னுஞ் சில ஆண்டுகளில் மக்கியும், மடிப்புற்றும், சிதைந்தும் போக வாய்ப்பு உண்டு.

இந்த ஏடுகளைப் பாதுகாக்க வேறு வழிகள் இல்லையா எனின், உண்டு. இவற்றை உருச் சுருக்கிப் படம் (Microfilm) எடுத்து அப்படியே காத்தல் இயலும். ஆனால் அவ்வாறு செய்தல் இரண்டொருவர்க்கே இயலும்; இயன்றாலும் அந்த ஏற்பாட்டை மிகச் சிலரே பயன் படுத்த முடியும்.

பழைய தொகுதிகள் ஆராய்ச்சி மாணவர்கட்கும் (Research Scholars), அறிஞர் கட்கும் மிக இன்றியமையாது வேண்டியவையாம். அவை சிலரிடமிருந்து கிடைப்பினும் அவற்றைப் பயன்படுத்துவது என்பதில் அவர்கட்குப் பேரிடர்ப்பாடு உள்ளது.

அஃதென்னவெனில், பெரியார் அவர்கள் துவக்க காலம் முதல் 19-12-1973 வரை ஆற்றிய சொற்பொழிவுகளிலும்; எழுதிய கட்டுரைகளிலும், தலையங்கங்களிலும், அறிக்கை களிலும் பெரிதும் எல்லாத் துறை பற்றிய தம் கருத்துகளையும் இடையிடையே இணைத்தே பேசியும், எழுதியும் வந்துள்ளார். இத்தன்மைக்கு விலக்காக அமைந்த சொற்பொழிவுகளும், எழுத்துக்களும் மிகச் சிலவேயாம்.

அவர் கட்டற்ற சிந்தனையாளராகவும், இணையற்ற கருத்தாளராகவும் (Opinionist), சுழன்றுலவும் பிரசாரகராகவும் (Roving Propagandist), கருத்துப் புரட்சியாளராகவும், முழுநேரப் பொதுத் தொண்டராகவும் தம்மை ஆக்கிக் கொண்ட மையால்–குறிப்பிட்ட ஒரு தலைப்பில் நின்று பேசுவது, எழுதுவது என்கிற கட்டுப்பாட்டை உடைத்தெறிய வேண்டியவராக ஒவ்வொரு நேரத்திலும் விளங்கினார்.

இத் தன்மையில் அமைந்துவிட்ட அன்னாரின் சொற்பொழிவுகளையும், எழுத்துக் களையும் பொருள் வாரியாகவும், காலவரன் முறையிலும் தொகுத்துப் பதிப்பித்து வெளி யிடுவதானது–பெரியாரை முழுமையாக அறிய விரும்பிக் கற்கும் ஒவ்வொருவருக்கும் பெரும் பயன் தருவதாகும்; குறிப்பாக, ஆராய்ச்சி மாணவர்களுக்கும், அறிஞர்களுக்கும் மிகப் பெரும் பயன் விளைப்பதாகும்.

சிறு சிறு நூல்களாக உள்ள எவையும் இக் கண்ணோட்டத்தில் போதிய பயன் விளைப்பன ஆகா.

அன்றியும் அச்சுக்கலை வளரத் தலைப்பட்டபின் அரசியல் கொள்கைகளும், பொருளியல் கொள்கைகளும், அறிவியல் கொள்கைகளும் மக்களிடையே விரைந்து பரவப்

பெருவாய்ப்பு ஏற்பட்டது. அதேபோல் அறிவியக்கக் கொள்கைகளும், மதக் கொள்கைகளும் பரவவும் இது பெருங் கருவியாயிற்று.

அறிவியக்கப் பிரசாரத்தினாலும், அறிவியல் வளர்ச்சியினாலும் மதக் கட்டுக்கோப்பை உடைத்துவரும் மக்களிடையே, நாடோறும் மிகப் பல மொழிகளில் நூல் வாயிலாக மதக் கோட்பாடுகளைத் திணிக்கும் பணியைச் சமய நிறுவனத்தினர் திட்டமிட்டுச் செய்து வருகின்றனர்.

காட்டாக, பைபிள் கொள்கைகள் பற்றி இலவச வெளியீடுகள், எளிய விலை வெளியீடுகள் எனச் சிறு நூல்களாக ஏராளமான நூல்கள் நாடோறும் ஆயிரக்கணக்கான அமைப்புகள் மூலம் உலகெங்கும் பரப்பப்படுகின்றன. ஆயினும், கிறித்துவக் கொள்கைகள் முழுவதையும் கொண்ட பழைய ஏற்பாடு (Old Testament), புதிய ஏற்பாடு (New Testament) எனப்படும் முழுமையான பெரிய தொகுதிகள்—அதிக விலையில், உயர்ந்த பரிசுப் பதிப்பாகவும் இடையறாது தொடர்ந்து வெளியிடப்பட்டு, பல இலட்சக்கணக்கில் விற்கப்படுகின்றன என்பது ஒவ்வொருவரும் அறியற்பாலது. பிற சமயத்தினரும் இத்தன்மையில் பணிபுரிவதை அனைவரும் அறிவர்.

இவ்வகையில், ‘பெரியாரின் சிந்தனைகள்’ இலவச அறிக்கைகளாகவும், எளியவிலை நூல்களாகவும் கடந்த 45 ஆண்டுகளாகப் பரப்பப்படுகின்றன எனினும்—‘ஏறக்குறைய எல்லாவற்றையும் அடக்கிய’ தொகுதிகளாக, ‘பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்’ இக் கழகத்தினரால் வெளியிடப்படுவது என்பது—அறிவியக்கத்தின் மதிப்பிட முடியாத கருவூலத்தை ஒரு பேழையில் வைத்து உலகுக்கு வழங்குவதான அருஞ்செயலாகும். இதனை எண்ணி அறிவியக்கத் தொண்டர்கள் அனைவரும் பெருமை கொள்வர் என நம்புகிறோம்.

அடுத்து இத் தொகுப்பின் தன்மை பற்றிச் சில கூறுவோம்.

‘பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்’ என்னும் இந் நூலின் மூன்று தொகுதிகளிலும் பெரியார் அவர்களின் சொற்பொழிவுகளும், எழுத்துக்களும் நூற்றுக்கு நூறும் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன எனக்கூற இயலாது; அவர்தம் கருத்துகள் ‘ஏறத்தாழ முழுவதும் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன’ எனக் கொள்ளலே சாலப்பொருத்தம் ஆகும்.

அஃதே போன்று குறிப்பிடத்தக்க சொற்பொழிவுகள்; அறிக்கைகள், கட்டுரைகள், தலையங்கங்கள் சில, இத் தொகுப்பில் விடுபட்டிருக்கலாம்.

இவ்வாறு நேர வாய்ப்புள்ள எல்லாக் குறைபாடுகளையும் களைந்து, வருங்காலத்தில் சமயம் நேரும்போது இன்னும் ஒரு தொகுதி அல்லது இரு தொகுதிகள் வெளியிடுவதன் மூலம்—நூற்றுக்கு நூறுமாக நிறைவேற்றி வைக்க இக் கழகம் பெரிதும் விருப்பங் கொண்டுள்ளது என்பதை அன்புடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

இத் தன்மையில் குறிப்பிடத்தக்கவை விடுபட்டுள்ளதாகக் காணப்படும்போது, அறிஞர்களும் தோழர்களும் அவற்றைக் குறிப்பிட்டு எழுதினாலும், அல்லது தொகுத்து அனுப்பி வைத்தாலும்; அத்துடன் இதில் காணப்படும் வேறு எவ்வகையான குறைபாட்டினையும் சுட்டிக்காட்டினாலும் அவற்றை, இக் கழகம், மனமுவந்த நன்றியுடன் ஏற்றுத் தக்கவாறு பயன்படுத்திக் கொள்ளும் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

‘பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்’ நூல் மூன்று பெருந் தொகுதிகளாக அமைக்கப் பட்டுள்ளது.

இத் தொகுதிகளுள் அய்யா அவர்களின் சொற்பொழிவுகளும், உரையாடல்களும், தலைவர்களோடு சந்திப்பு நிகழ்ந்த காலை நடந்த விவாதங்களின் குறிப்புகளும்; மிகப் பல

நாட்கள் தலையங்கம், கட்டுரை, வேண்டுகோள் அறிக்கை, ஆராய்ச்சிக் கட்டுரை என்ற தன்மைகளில் அன்னார் வெளிப்படுத்திய எழுத்துக்களும் ஒருவாறு தொகுத்தளிக்கப் பட்டுள்ளன.

தமிழ் ஏடுகளில் 'சித்திரபுத்திரன்' என்ற பெயரிலும், 1925 முதலே அன்னார் எழுதியுள்ளார்; 'ரிவோல்ட்' என்ற ஆங்கில ஏட்டில், 'Eaviyar' என்ற பெயரில் எழுதி வந்துள்ளார்; மற்றவையனைத்தும் சொந்தப் பெயரில் அன்னார் வெளிப்படுத்தியவையாம்.

அவர்தம் எழுத்துக்கள் 1924ஆம் ஆண்டு முதலே பல ஏடுகளில் வெளிவந்துள்ளன என்றும், அவ்வாறே சொற்பொழிவுகளும் வெளியிடப்பட்டுள்ளன என்றும் அறிகிறோம். அவை 1924-ல் வெளியாகிக்கொண்டிருந்த 'நவசக்தி' போன்ற ஏடுகளில் வெளி வந்திருப்பதாக அறிய முடிகிறது, ('தமிழர் தலைவர்', 1971 பதிப்பு, பக்கம் 64, 84). வேறு ஆதாரங்கள் கிடைத்தில.

'குடி அரசு' ஏடு துவக்கப்பட்ட 1925 மே முதல் அவர்தம் சொற்பொழிவுகளும் எழுத்துக்களும் அவ் ஏட்டில் வெளி வந்துள்ளன. 7-11-1928-இல் துவக்கப்பட்ட Revolt—'ரிவோல்ட்' என்னும் ஆங்கில வார ஏடு சுமார் 55 இதழ்களோடு 19-1-1930-இல் (Volume II, No. 3—தொகுதி II, இதழ் 3) நின்றுவிட்டதாகத் தெரிகிறது. அவ் ஏட்டிலும் அவர்தம் சொற்பொழிவுகள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு வெளிவந்துள்ளன; சில கட்டுரைகளும் வெளிவந்துள்ளன.

'புரட்சி' என்ற வார ஏடு 20-11-1933-இல் (மாலை 1, மலர் 1) வெளியிடப்பட்டு அதிலும் அவர்தம் சொற்பொழிவுகளும், எழுத்துக்களும் வெளிவந்துள்ளன.

15-3-1934-இல் துவக்கப்பட்ட 'பகுத்தறிவு' என்ற தினசரி ஏடு சுமார் இரண்டு மாத காலம் வெளிவந்து 1934 மே மாதம் நின்றுவிட்டதாக அறிய முடிகிறது. பின்னர் 26-8-1934-இல் (மாலை 1, மலர் 1) 'பகுத்தறிவு' என்ற பெயரில் துவக்கப்பட்ட வார ஏடு கொஞ்ச காலம் வெளிவந்து 6-1-1935-இல் (மாலை 1, மலர் 20) நிறுத்தப்பட்டதாக அறிய முடிகிறது.

'பகுத்தறிவு' என்ற பெயரில் 1-5-1935-ல் துவக்கப்பட்ட மாத வெளியீடு சுமார் நான்காண்டுகள் வெளிவந்ததாகக் காணப்படுகிறது. இங்கு குறிக்கப்பட்ட ஏடுகள் அனைத்திலும் அவர்தம் சொற்பொழிவுகளும் கட்டுரைகளும் வெளிவந்துள்ளன.

'விடுதலை' ஏடு தென்னிந்திய நல உரிமைச் சங்கம் என்னும் நீதிக் கட்சியின் சார்பாக வாரம் இருமுறை ஏடாக, அரையணா விலையில் 1-6-1935-ல் துவக்கப்பட்டது. பின்னர் இரண்டாண்டுகள் கழித்து நாளேடாக மாற்றப்பெற்று, காலணா விலையில் வெளியிடப்பட்டது ('குடி அரசு' 15-8-1937). இன்றும் நாளேடாக 'விடுதலை' வெளிவருவதாகும்.

மிகப் பிற்காலத்தில் 1970 சனவரியில் (14-1-1970) துவக்கப்பட்ட 'உண்மை' தமிழ் மாத ஏடும், 1971 செப்டம்பரில் துவக்கப்பட்ட 'The Modern Rationalist' என்ற ஆங்கில மாத ஏடும் அவர்தம் முற்காலத்திய கட்டுரைகள், அவ்வப்போது எழுதிய கட்டுரைகள், சொற்பொழிவுகள் இவற்றைத் தாங்கி இன்றும் வெளிவருவனவாம். இவை அத்துணை ஏடுகளும் அவர்தம் கண்காணிப்பில் இயக்க ஏடுகளாக வெளிவந்தவையாம்.

இத்துணை ஏடுகளிலும் 1925 முதல் 19-12-1973 வரை 48 ஆண்டுகாலம் அன்னார் ஆற்றிய சொற்பொழிவுகள் வெளியாகியுள்ளன. ஆயினும் தம் சொற்பொழிவினை அப்படியே வெளியிட அவர் ஏற்பாடு செய்திருந்ததாக அறிய முடியவில்லை. அவ்வப்போது அவரோடு சுற்றுப்பயணம் மேற்கொண்ட உதவியாளர்கள் அவர்தம் சொற்பொழிவினை எழுதி அவருடைய பார்வைக்கு உட்படுத்திய பின்னர் ஏடுகளில் வெளிவந்தவையே

அவையாம். இந்த ஏற்பாடுகூட இல்லாமலிருந்திருந்தால் அவர்தம் சொற்பொழிவுகள் நமக்குக் கிடைத்திருக்க இயலாது. மாநாட்டுத் தலைமையுரைகள் சில, இத்தன்மைக்கு விதிவிலக்காக, முழுமையாக உள்ளன என்பதும் அறியத்தக்கது.

நீதிக் கட்சியினரால் வெளியிடப்பட்ட, 'திராவிடன்' என்ற தமிழ் நாளேடு; Justice–'ஜஸ்டிஸ்' என்ற ஆங்கில ஏடு இவற்றிலும்; மிகப் பிற்காலத்தில் சுயமரியாதை இயக்கத் தோழர்கள் பலரால் வெளியிடப்பட்ட 'சண்டமாருதம்', 'புதுவை முரசு', 'நகர தூதன்', 'திராவிட நாடு', 'தனி அரசு' 'பொன்னி' முதலான ஏடுகளிலும் அவர்தம் பேச்சும் எழுத்தும் வெளிவந்துள்ளன. 1927 செப்டம்பர் முதல் 'திராவிடன்' தினசரியின் ஆசிரியராகப் பொறுப்பேற்றுச் சிறிதுகாலம் பணியாற்றினார், பெரியார்.

இவ் ஆதாரங்கள் எல்லாம் நமக்குக் கிடைத்தில; ஒரு சில கிடைத்துள்ளன. அவற்றுள், 'குடி அரசு', 'புரட்சி', 'பகுத்தறிவு', 'விடுதலை', 'ரிவோல்ட்' இவை குறிக்கத்தக்க அளவு கிடைத்தவையாம். அவ்வாறு கிடைத்த ஆதாரங்களை நன்கு பயன் படுத்தி இத் தொகுப்புப் பணியினைச் செய்துள்ளோம்.

அவர்தம் சொற்பொழிவுகள் கேட்போர் உள்ளத்தைப் பிணிக்கும்; பாமரரும் புரிந்து கொள்ளும் தன்மையில் எளிய நடையில் இலங்கும்; தம் நீண்டகால அனுபவத்தைக் கொண்டு அவர் தரும் ஆதாரங்கள் மிக்க உரைகள் எல்லோரையும் வாயடைக்கச் செய்யும்; உவமைகள், சிறு கதைகள், பழமொழிகள் விரவியதாக அமையும்; தங்குதடையின்றிக் கடல்மடை திறந்தாலன்ன கருத்துமழை சொரிவதாக அமையும்.

கேட்போர் சலிப்படையாவண்ணம் பல மணிநேரம் சொற்பொழிவாற்றி மக்களைக் கவரும் தன்மையில் அவர்தம் பேச்சு எப்போதும் அமையும். இது அவர் ஒருவருக்கே வாய்த்த தனிச் சிறப்பாகும்.

அவர்தம் எழுத்து நீரோட்டமான நடையுடையது. அவர் கையாளும் சொற்கள் பசுமரத்து ஆணிபோல் படிப்போர் உள்ளத்தில் பதியும் தன்மை வாய்ந்தவை; எளிய படிப் புள்ளவரும் வாழ்க்கைத் தத்துவங்களை எளிதில் அறியக்கூடிய தன்மையில் விளக்கம் கொண்டவை; அனுபவம், பிரத்தியட்ச நோக்கு, சிந்தனைத் தெளிவு விரவியவை.

அன்னார் இனநலக் கண்ணோட்டத்துடன் கருத்துகளை வெளியிடுங்கால் சிறிது தாட்சண்யம் தொனிக்கும்; அத் தாட்சண்யம் கருத்தளவில் இராது—ஆளப்படும் சொல் லளவிலேயே நிற்கும். தமக்கு எதிரான நோக்குள்ளவர்களும் விடை சொல்ல அஞ்சும் தன்மையில் அவர்தம் பேச்சும் எழுத்தும் அமைந்தன.

'குடி அரசு' துவக்கப்பட்ட பின்னர் கடவுள், மதம், ஆத்மா, மறு பிறவி முதலான மூட நம்பிக்கைகளை வன்மையாகப் பெரியார் அவர்கள் கண்டித்துள்ள அதே நேரத்தில்—'குடி அரசு' ஏட்டில் 'ஆத்மா', 'புனிதம்', 'ஆசீர்வாதம்' போன்ற சொற்கள் சில சமயங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவ்வாறு பயன்படுத்தப்பட்டதில் அவருடைய லட்சியத்திற்கு எதிரான தன்மை ஏதும் கொள்ளப்படவில்லை என்பதை நாம் அறிய முடிகிறது.

சான்றாக, 1-5-1927 இதழில் பக்கம் 8-ல், 'குடி அரசு தனது ஆத்மாவை வெளிப் படுத்தும் (தத்துவத்தை விளக்கும்)போது' என ஒரு தொடரின் பகுதி வந்துள்ளது. இக் குறிப்பில் 'ஆத்மா' என்ற சொல்லுக்கு உலகில் வழங்கப்படும் சமயச் சார்பான ஆன்மீகக் கருத்து அவரால் கொள்ளப்படவில்லை என்பதை விளக்கும் வகையில், 'ஆத்மா' என்பதற்குத் தத்துவம் எனத் தாம் பொருள் கொண்டதைத் துல்லியமாக விளக்கும் தன்மையில் அடைப்புக் குறிக்குள் அமைத்து அவரே வெளியிட்டுள்ளார்.

துவக்கத்தில் எல்லாத் துறைகளிலும் விரவியிருந்த பார்ப்பன ஆதிக்கத்தை ஒழிப்பதை மிக முக்கியமாகக் கொண்ட பெரியார் அவர்கள், உலக வழக்கிலுள்ள சமயச்

சார்புடைய மேற்கண்ட சொற்களைச் சம்பிரதாய அளவிலேயே பயன்படுத்தினார் என்பதையும் நாம் நினைவு கூர்தல் வேண்டும்.

அடுத்து அவர் கையாண்டுள்ள வேறு சொற்கள் குறித்தும் இங்குக் காணலாம்.

'குடி அரசு' துவக்கத்தில் ஒருவருடைய பெயரின் முன்னால் மரியாதை அடைமொழியாக 'ஸ்ரீமான்' என்று சில ஆண்டுகள் குறிப்பிட்டு வந்தவர், 1927-க்குப் பிறகு திரு, திருமதி, செல்வி, தோழர் போன்ற சொற்களை அதிகமாகப் பயன்படுத்தத் தொடங்கினார். 20-11-1932-க்குப் பின் பெரிதும் தோழர், தோழியர் என்றே எழுதலானார்.

அவ்வாறே துவக்கத்தில் பார்ப்பனரைக் குறிக்க 'பிராமணர்' என்ற சொல்லைக் கையாண்ட அவர், 1928-க்குப் பின்னர் பெரிதும் 'பார்ப்பனர்' என்ற சொல்லையே கையாளலானார்.

அவர்தம் சொற்பொழிவுகளைக் கூர்ந்து கவனிப்போர் இன்னொரு உண்மையை அறியலாம்.

அவர் சொற்பொழிவு ஆற்றத் துவங்கும்போது நிகழ்ச்சித் தலைவரையும், அவையோரையும் நோக்கி, 'அக்கிராசனர் அவர்களே!; அக்கிராசனாதிபதி அவர்களே!; சகோதரிகளே!; சகோதரர்களே!' என விளித்துப் பேசுவது என்பதே 1932 அக்டோபர் வரையில் அவர்தம் பழக்கமாகவிருந்தது.

இத் தன்மையினை அடியோடு கைவிட்டு, இலங்கையில் அவர் சுற்றுப்பயணம் செய்த காலையில், 17-10-1932 முதல், 'தலைவர் அவர்களே!; தோழர்களே!' என விளித்துப் பேசத் தொடங்கினார்; இறுதி வரையில் அவ்வாறே கூறி வந்தார்.

இத் தொகுப்பின்கண் மேற்கண்ட அவர்தம் சொல்லாட்சிகளை அவ்வண்ணமே வெளியிடுதல் நமது இன்றியமையாத கடமையாகும் எனக் கருதி—சொற்பொழிவுகளிலும், எழுத்துக்களிலும் அவற்றை அப்படியே வெளியிட்டுள்ளோம்.

இனி இத் தொகுப்புகள் அமைக்கப்பட்டுள்ள தன்மை பற்றிக் காண்போம்.

'பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்' என்னும் இத் தொகுப்பு நூல் மூன்று தொகுதிகளாக வெளியிடப்பட்டிருப்பதில், ஒவ்வொரு தொகுதியிலும் (Volume) சில பகுதிகளை (Parts) அடக்கி வெளியிடப்பட்டுள்ளது.

தொகுப்புப் பணியினை முடித்த பின்னர், திருத்தக் கைப் படி முழுவதையும் மீண்டும் படித்துத் தனித் தனிக் கட்டுரையும், சொற்பொழிவும் அமைந்துள்ள தன்மையை மனதிற் கொண்டு, அவற்றுள் ஒரே பொருள் பற்றியவையாகக் காணப்பட்ட சொற்பொழிவுகளும் எழுத்துக்களும் ஒன்று சேர்க்கப்பட்டு, குறிப்பிட்ட ஒரு பகுதியின் கீழ் என்னால் வைக்கப் பட்டுள்ளன. இதனைப் பிறிதோரிடத்திலும் சுட்டியுள்ளேன்.

பெரும்பாலான கட்டுரைகள் மூல ஆதாரங்களிலுள்ள அதே தலைப்புகளுடன் இங்கு வெளியிடப்பட்டுள்ளன; சில கட்டுரைகளுக்கு மூல ஆதாரத்திலிருந்த தலைப்பு மாற்றப் பட்டு வேறு தலைப்பு அளிக்கப்பட்டுள்ளது.

சொற்பொழிவுகளுள் குறிப்பிட்ட தலைப்பின் கீழ் ஆற்றப்பட்டவையாக, சிலவே அமைந்துள்ளன. பெரும்பாலான சொற்பொழிவுகள் அய்யா அவர்களின் அறிவுரைகள் என்ற தன்மையில் உள்ளவையாம். ஆதலின், ஒரு சொற்பொழிவினைப் படித்த பின்னர் அதற்கு எந்தத் தலைப்பு அளிக்கப்பட்டால் அதில் அடங்கியுள்ள பொருளுக்குப் பொருத்தமாக இருக்கக்கூடும் எனத் தோன்றியதோ, அதற்கேற்ப அதற்குத் தலைப்பு தரப்பட்டுள்ளது. ஒரே சொற்பொழிவு, பல்வேறு பகுதிகளின்கீழ் பிரித்தமைக்கப்பட நேர்ந்துள்ளதும் குறிக்கத்தக்கது.

ஒரு ‘பகுதி’—Part என்பதில் உள்ள பிரிவுகள், ‘உட்பிரிவுகள்’—Chapters என்ற தன்மையில் அமைக்கப்பட்டுள்ளன.

இந்த ‘உட்பிரிவு’ என்பதன் கீழ் வைக்கப்பட்டுள்ள சொற்பொழிவுகளும், எழுத்துக் களும் முறையே அவை பேசப்பட்ட அல்லது எழுதப்பட்ட காலவரன் முறைப்படி அமைக்கப் பட்டுள்ளன. மிகச் சில இடங்களில் இக் காலவரன் முறை மாறியும் அமைந்துள்ளது. அப்படி அமைப்பதனால், பொருள் விளக்கம் முறையாக அமைய உதவியாகும் எனக் கருதப்பட்டது; ‘கடவுள்’ என்ற பகுதி இதற்குக் காட்டாகும்.

இவற்றைப் பின்வரும் முறையில், முதல் தொகுதியினை அமைத்துள்ள தன்மையை விளக்குவதன் மூலம் அறியலாம்.

முதல் தொகுதியில் மூன்று பகுதிகள் அடங்கியுள்ளன. அவை ‘சமுதாயம்’; ‘இயக்கங்கள்’; Social Reform or Social Revolution? என்பவையாம். ‘சமு தாயம்’ முதல் பகுதி (பகுதி I) எனவும், ‘இயக்கங்கள்’ இரண்டாம் பகுதி (பகுதி II) எனவும் அமைக்கப்பட்டுள்ளன.

‘சமுதாயம்’ என்ற பகுதியில் உள்ள ‘உட்பிரிவுகள்—Chapters’ எட்டு ஆகும்.

அவையாவன:

1. சமுதாயம்
2. ஆதித் திராவிடர்
3. பெண்ணுரிமை
4. வாழ்க்கை ஒப்பந்தம்
5. மக்கள் பிரிவினை
6. விழாக்கள்
7. வாழ்க்கை நெறி
8. சீர்திருத்தம்

இவற்றைக் கொண்டு தொகுதி I-ன் பகுதி I-ல் அடங்கியுள்ள உட்பிரிவுகள் எட்டு என அறியலாம்.

இங்கு 8-ஆவது உட்பிரிவாக உள்ளது, ‘சீர்திருத்தம்’. இந்த உட்பிரிவின் கீழ் 5 கட்டுரைகள் உள்ளன.

அவை,

1. சீர்திருத்தம்
2. சீர்திருத்தக்காரர்களுக்கு
3. எது ஆக்க வேலை?
4. சீர்திருத்தமா? அழிவு வேலையா?
5. மாறுதலுக்கு எதிர்ப்பு

என்பனவாம்.

இவற்றுள் எண் 1, 2 இவை எழுத்துக்களாகவும் (Writings); எண் 3, 4, 5 இவை சொற்பொழிவுகளாகவும் (Speeches) உள்ளன. வசதி கருதி இவ் அய்ந்தையும் ‘கட்டுரைகள்—Articles’ எனக் கொண்டுள்ளோம். அதாவது, ‘கட்டுரை’ என்ற சொல் எழுத்துக்கள், சொற்பொழிவுகள் ஆகிய இரண்டு வகையினையுமே குறிப்பதற்கான பொதுச் சொல்லாக இங்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

இவ்வாறாக, இந் நூலானது, தொகுதி—பகுதி—உட்பிரிவு—கட்டுரைகள் என்ற தன்மையில் அமைக்கப்பட்டுள்ளது என்பது அறியத்தக்கது.

அடுத்து, ஒரு தொகுதியில் குறிப்பிட்ட சில பகுதிகளை அடக்கியுள்ளதற்குத் தனியான காரணம் அல்லது பொருத்தம் ஏதும் கொள்ளப்படவில்லை.

தந்தை பெரியார் அவர்கள் கட்டற்ற சிந்தனையாளராகவும், மானிடத்தின் வாழ்வுத் தொடர்பான எல்லாத் துறைகளைப் பற்றியும் உயர் எண்ணங்களை உலகுக்கு அளித்தவராகவும் திகழ்ந்தவர் என்பதை நாம் அறிந்துள்ளோம். எனினும், அவர்தம் சிந்தனையிலும், செயல் முறைகளிலும் மேலாடி நின்றது 'சமுதாயம்' என்ற துறையேயாகும். இந்த ஒரு காரணம் பற்றி முதல் தொகுதியில், முதல் பகுதியாக, 'சமுதாயம்' என்பது வைக்கப் படலாயிற்று.

அடுத்து, நூலின் பக்க எண்கள், ஒவ்வொரு தொகுதியிலும் தனித்தனியாக பக்கம் 1 முதல்—எனத் தொடங்கி முடிக்கப்படவில்லை; அதற்கு மாறாக மூன்று தொகுதிகளுக்கும் சேர்ந்தாற்போல் பக்க எண் 1 முதல் தொடங்கி, தொடர் எண்களாக, பக்க எண்கள் தரப் பட்டுள்ளன. அதாவது, 'பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்'—'பக்கம் எண் 100' எனக் குறிப்பிடப்படுங்கால், அவ்வாறு ஒரே தடவைதான் குறிப்பிட முடியும். ஏனெனில் மூன்று தொகுதிகளுக்கும் பக்கம் 2076 முடிய மொத்தமாகத் தொடர் பக்க எண்கள்தான் தரப்பட் டுள்ளன; ஒவ்வொரு தொகுதியிலும், 'பக்கம் எண் 100' என்பதாக ஏதும் இல்லை.

ஒவ்வொரு தொகுதியின் இறுதியிலும் பெரியாரின் சொற்பொழிவுகளும், எழுத்துக் களும் ஆங்கிலத்தில் உள்ளவை சேர்க்கப்பட்டுள்ளன. அவற்றின் பக்க எண் i, ii என்று ரோமன் முறையில் அமைக்கப்பட்டுள்ளது; அந்த எண் முறை ஒவ்வொரு தொகுதிக்கும் தனித்தனியாக i முதல் தொடங்கி அந்தத் தொகுதியிலேயே முடிந்துவிடுகிறது; மூன்று தொகுதிகளுக்கும் தொடர் எண் என்பதாக இல்லை. ஆங்கிலத்தில் உள்ளது, தனியாக ஒரு 'பகுதி' எனக் கொள்ளப்பட்டு, அது வைக்கப்பட்டுள்ள தொகுதியில் அடங்கியுள்ள பகுதி கள் எவை பற்றிக் கூறுகின்றனவோ, அவற்றுள் அதற்குத் தொடர்புடைய பகுதியின் பெயர் அளிக்கப்பட்டு, அவ்வத் தொகுதியின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது.

இப்போது, சிந்தனையாளர் கழகம் வெளியிட்டுள்ள மூன்று தொகுதிகளிலும் மொத்தம் இருபத்தோரு பகுதிகள் உள்ளன. இந்த இருபத்தோரு பகுதிகளும் தொகுதி வாரியாகப் பின்வருமாறு அமைக்கப்பட்டுள்ளன.

## 'பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்'

முதல் தொகுதி—Volume I-யில், பகுதி I—சமுதாயம், பகுதி II—இயக்கங்கள், பகுதி III (ஆங்கிலப் பகுதி) (Social Reform or Social Revolution?) என மூன்று பகுதிகள் மட்டும் அடங்கியுள்ளன.

இரண்டாம் தொகுதி—Volume II-யில், பகுதி I—நாட்டுப் பிரிவினை, பகுதி II—அரசியல், பகுதி III—வகுப்புரிமை, பகுதி IV—மொழி, பகுதி V—தலைவர்கள், பகுதி VI—தத்துவம், பகுதி VII—அறிவு வளர்ச்சி, பகுதி VIII—கலைகள், பகுதி IX (ஆங்கிலப் பகுதி) (Dravidasthan Separation) முதலான ஒன்பது பகுதிகள் மட்டும் அடங்கியுள்ளன.

மூன்றாம் தொகுதி—Volume III-யில் பகுதி I—கடவுள், பகுதி II மதம், பகுதி III —பொருளாதாரம், பகுதி IV—கிளர்ச்சிகள், பகுதி V—செய்திகள், பகுதி VI—உலகம், பகுதி VII தன்னைப்பற்றி, பகுதி VIII—இறுதிச் சொற்பொழிவுகள், பகுதி IX (ஆங்கிலப் பகுதி) Religion ஆகிய ஒன்பது பகுதிகள் மட்டும் வைக்கப்பட்டுள்ளன.

இந் நூலின் தொகுதிகள் ஒவ்வொன்றிலும் முன்னுரைக்கு அடுத்துப் பொருளடக்கம் வைக்கப்பட்டுள்ளது. நூலுக்கு உரிய முழு முன்னுரை முதல் தொகுதியில் மட்டும் வெளியிடப்பட்டுள்ளது. இரண்டாம் தொகுதி, மூன்றாம் தொகுதிகளில் மிகச் சுருக்கமான முன்னுரைகள் உள்ளன. முன்னுரைக்கு ரோமன் முறையில் தனியாக பக்க எண் தரப் பட்டுளது.

அடுத்து, இத் தொகுதிகளைப் படிப்போர் எளிதில் பயன்பெறுவதற்குத் துணையாக, 'பெயர்க் குறிப்பு அகராதி' என ஒன்றும்; 'பொருட் குறிப்பு அகராதி' என இன்னொன்றும் மூன்றாம் தொகுதியின் இறுதியில் தரப்பட்டுள்ளன.

'பெயர்க் குறிப்பு அகராதி'யில் தலைவர்கள், முக்கிய நபர்கள், கடவுள்கள் பெயர்கள் முதலான சிறப்புப் பெயர்கள் ஒருவாறு தொகுத்தளிக்கப்பட்டு, அவற்றுள் ஒவ்வொரு பெயரும் முக்கியமாகப் பயிலப்படும் பக்கங்களின் எண்கள் தரப்பட்டுள்ளன.

'பொருட் குறிப்பு அகராதி'யில் இந் நூலின்மூன்று தொகுதிகளிலும் அடங்கியுள்ள எல்லாக் கட்டுரைகளின் (Articles) பெயர்களும் தொகுக்கப்பட்டு, அகர வரிசையில் அமைக்கப்பெற்று, மூன்றாம் தொகுதியில் 'பெயர்க் குறிப்பு' அகராதிக்குப் பின்னர் வைக்கப்பட்டுள்ளது.

இவை இரண்டும் இவ்வாறு மூன்றாம் தொகுதியில் வைக்கப்பட்டதானது பின் வரும் காரணங்கள் கொண்டேயாம் :—

1. ஒரு குறிப்பிட்ட செய்தியைத் தேடும்போது பொருட்குறிப்பகராதி ஒரே இடத்தில் அமைந்திருந்தால் மூன்று தொகுதிகளிலும் தேடாமல் சரியாக எந்தத் தொகுதியில் எந்தப் பக்கத்தில் நாம் தேடும் செய்தி உள்ளதென்று கண்டு கொள்ளலாம்.

2. ஒரே செய்தி மூன்று தொகுதிகளிலும் பல்வேறு சந்தர்ப்பங்களில் பேசப்பட்டிருந்தால் அவற்றை முழுமையாகத் திரட்டிக்கொள்ள இது சரியான வாய்ப்பாகும்.

3. இவ் அகராதிகள் ஒவ்வொரு தொகுதியிலும் அததற்கு உரியவை தனியாக வைக்கப்பட்டாலும், மூன்றாம் தொகுதியில், மூன்று தொகுதிகளுக்கும் உரிய அகராதிகள் வைக்கப்படவேண்டும் என்பதே இன்று உள்ள நடைமுறையாகும். அது இரட்டிப்பு வேலை எனக் கருதி விடப்பட்டது.

ஒவ்வொரு தொகுதியின் இறுதியிலும் அத் தொகுதியிலுள்ள பிழைகளுக்கான திருத்தப் பட்டியல் அளிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு ஒரு பட்டியல் தர நேர்ந்தமைக்கு மிகவும் வருந்துவதுடன், எதிர்காலத்தில் வரும் பதிப்புக்களில் இவை தவிர்க்கப்படும் என உறுதி கூறுகிறேன்.

இவ்வனைத்தையும் அறிஞர்கள் ஏற்றவாறு பயன்படுத்திக் கொள்வார்களாக.

அடுத்து,

'பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்' நூல் பயன்படக்கூடிய தன்மைபற்றிச் சிறிது காண்போம்.

1. சுயமரியாதைக் கொள்கைகளை நெடுங்காலமாகக் கைக்கொண்டு பரப்பிவரும் எண்ணற்ற தோழர்கள் தமிழகத்தின் எல்லாப் பகுதிகளிலும், உலகின் பிற பகுதிகளிலும் உள்ளனர். அவர்களுள் பொருள் வசதியும் நல்ல வாய்ப்பும் உள்ளவர்களும் முயன்றாலுங் கூட, 'குடிஅரசு', 'புரட்சி', 'பகுத்தறிவு', 'விடுதலை' இவற்றின் பழைய ஏடுகளைப் பெற்று, முழுமையாகப் பெரியார் கருத்துகளை அறிதல் என்பது இயலாததாகும். ஏனெனில் அவை எல்லோருக்கும் கிடைக்கும் வகையில் அப்படியே புதிதாக அச்சிட்டுத் தரப்பட முடியாது.

இந் நூலின் மூன்று தொகுதிகளும் ஓரளவு வசதியுள்ளவர்கள் பெற்றுக்கொள்ளத்தக்க வகையிலும், 'ஏறக்குறைய முழுமையாக' பெரியார் கருத்துகளைத் தரக்கூடியவையாகவும் அமைத்து அளிக்கப்பட்டுள்ளன.

2. தமிழகத்திலுள்ள சுமார் 12,500 ஊராட்சிகளிலும் இம் மூன்று தொகுதிகளும் ஊருக்கு ஒரு கொத்து (Set) வீதம் பரவுவதற்கு ஏற்ற தன்மையில் நல்ல அழகிய கட்டடத்துடன் அமைக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன. தமிழ்நாட்டிலுள்ள நான்கு கோடித் தமிழர்

களையும், பிற மாநிலங்களிலும், வெளிநாடுகளிலும் வாழும் ஒரு கோடித் தமிழ் மக்களையும் பெரியாரின் கொள்கைகளை முழுமையாக உணரச் செய்ய இதனினும் சிறந்த வேறு வகையான முயற்சி எங்கட்குத் தோன்றவில்லை.

3. அன்றியும் தமிழகத்தின் பல பகுதிகளிலுமுள்ள அரசாங்க நூல் நிலையங்களிலும் தனியார் நூல் நிலையங்களிலும்; கல்லூரிகள், உயர்நிலைப் பள்ளிகளிலுள்ள நூல் நிலையங்களிலும் பொதுமக்களும், மாணவர்களும் படித்துணர வாய்ப்பளிக்கும் தன்மையில் வாங்கிவைக்க இத் தொகுதிகள் சாலப் பொருத்தமானவையாம்.

4. பெரியார் அவர்களின் கருத்துகள் உலக மானிடத்தைத் தழுவியவை. ஆதலின் இந்தியாவிலும், பிற நாடுகளிலுமுள்ள நூறு கோடிக்கணக்கான மக்கள் அன்னாரின் கருத்துகளை உணர ஏதுவாக இந்தி மொழியிலும், ஆங்கில மொழியிலும் பிற மொழி களிலும் இந் நூல் முழுவதையுமோ அன்றி இதன் சுருக்கத்தையோ மொழிபெயர்த்து வெளியிட்டு உலகெங்கும் பரப்பத் தமிழ் மக்கள் முனைதல் நன்றாகும். அதனை இக் கழகம் உரியவாறு வரவேற்கும். இப் பணிக்கு, இந் நூலின் தொகுதிகள் உற்ற துணையாக விளங்க ஏற்றவையாம். கிட்டும் வாய்ப்பினைப் பயன்படுத்தி, இம் மொழிபெயர்ப்பு வெளியீட்டுப் பணியையும், திருச்சி சிந்தனையாளர் கழகம் மேற்கொள்ளல் சாலச் சிறந்ததாகும்.

5. தமிழ்நாட்டு அரசினரும், பல்கலைக் கழகத்தினரும், அறிஞர்களும் 'பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்' ஒரு படிப்புத் துறையாக, தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களில் அமைக்கப்பெற முயற்சித்தல் நலந்தருவதாகும்.

இத்தன்மையில் மதுரைப் பல்கலைக் கழகத்தார், 'காந்திய சிந்தனை' என ஒரு படிப்புத் துறையினை ஏற்படுத்தி, 'சான்றிதழ் வழங்கும் பயிற்சி–Certificate Course'; 'டிப்ளமா வழங்கும் பயிற்சி–Diploma Course' வகுப்புகளை ஏற்படுத்தியுள்ளனர். இத் தேர்வுகட்குப் பாடங்கள் கற்பிப்பதற்கென்று, 'காந்தி நினைவு நிதி'யினர், மதுரையில், 'காந்தி சிந்தனைக் கல்லூரி' ஒன்றை நிறுவி நடாத்துகின்றனர். இப் பாடப் பயிற்சிகட்கு, 'காந்தியின் சிந்தனைகள்' பல தொகுதிகளாக (Volumes) உள்ள நூல்கள் பயன்படு கின்றன. அன்றியும் அங்கு மார்க்சீய சிந்தனையையும் ஒரு படிப்புத் துறையாக அமைக்க உறுதி செய்துள்ளனர்.

இதே தன்மையில் 'பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்' தேர்வுப் பாடப் பயிற்சிக்குப் பயன்படும் தன்மையில் மூன்று பெருந் தொகுதிகளை உருவாக்கித் தந்துள்ள அடக்கமான பெரும் பணியினை திருச்சி சிந்தனையாளர் கழகம் ஆற்றியுள்ளது.

6. இங்கு இன்னொன்றும் குறிக்கத்தகும். திரு. ஜவஹர்லால் நேரு அவர்களின் உயிர்க் கொள்கைகளான சோஷலிசம், அறிவியல் உணர்வு, தொழில் நுட்பவியல் (Technology), உலக அமைதி, மதச் சார்பற்ற கோட்பாடு முதலான கொள்கைகளைப் பரப்புவதைக் குறிக்கோளாகக் கொண்டு, 1972ஆம் ஆண்டில், மத்திய பம்பாயில், 'நேரு மையம்' என்ற ஒரு நிறுவனம் அமைக்கப்பட்டுள்ளது. மேலும், அம் மையத்தில் இந்தியரும், அயல்நாட்டினரும் நேருவின் கொள்கைகளை ஆராய்வதற்கான திட்டம் செயல்படுத்தப்படவுள்ளது ('The Hindu' Madras, 4–11–1972).

இத் தன்மையில் 'பெரியார் கொள்கைகள்' பற்றி இனியும் ஆராய்ச்சி மேற்கொள் வோரின் முயற்சிக்கும் இந் நூலின் தொகுதிகள் உதவியாக அமையும்.

இவ் வகைகளில், சிந்தனையாளர் கழகம் மேற்கொண்டு முடித்துள்ள இந்த எளிய முயற்சியானது, சுயமரியாதை இயக்கத்தின் கடந்த 49 ஆண்டுகால வரலாற்றிலும், தமிழ் நாட்டின் சென்ற 2000 ஆண்டுகால வரலாற்றிலும் தலையான இடத்தைப் பெறுவதாகும் எனக் கருதுகிறோம்.

'பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்' நூல் தொகுப்புப் பணியினை நான் மேற் கொண்டதற்குப்பின், 3–9–1973 முடிய உள்ள காலத்தில், தந்தை பெரியார் அவர்களை

திரு. நோபிள் கு. கோவிந்தராசலு அவர்களும் நானும் பல தடவைகள் நேரில் கண்டு உரையாடி பல நிகழ்ச்சிகளைக் குறித்த உண்மையான விளக்கங்களைப் பெற்றோம். அத்துடன், பெரியாரவர்களோடு பலதடவைகள் நான் சுற்றுப் பயணத்தில் கலந்து கொள்ள நேர்ந்த சமயங்களில் பல விவரங்களை அன்னாரிடம் கேட்டறிந்தேன். அவ்வாறெல்லாம் கேட்டறிந்த விவரங்களும், நான் எழுதி வைத்த கைக் குறிப்புகளும் நல்ல விளக்கம் தருவனவாக அமைந்தன. அவையெல்லாம் இம் முன்னுரையிலும், 'தந்தை பெரியார் அவர்களைப்பற்றி' என நான் எழுதியுள்ள முன்னுரைப் பகுதியிலும் ஆங்காங்கே விரவி உள்ளன.

உலக மானிடத்திற்கு உற்ற நெறி காட்டவல்ல தனி நூலாகவும், திராவிட மக்களின் வருங்கால வாழ்வுக்குக் கலங்கரை விளக்கமாகவும் நின்றிலங்கவிருக்கும் தன்மை வாய்ந்த, 'பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்' என்னும் இப் பெரு நூலைத் தொகுத்து, பதிப்பித்துத் தரும் வரலாற்றுச் சிறப்புக்கு உரிய அரும் பணியினை என்பால் ஒப்புவித்து, என் எளிய-34 ஆண்டுகால சுயமரியாதைத் தொண்டுக்கு ஓர் சிறப்பினை உண்டாக்கித் தந்த தலைவர் தந்தை பெரியார் அவர்கட்கும்; திருச்சி சிந்தனையாளர் கழகப் பொறுப் பாளர்கள், செயற் குழுவினர், மற்றும் அனைத்து உறுப்பினர்கட்கும்; இப் பணிக்கு எனக்கு உறுதுணையாக அமைந்த மற்ற அருமை நண்பர்கள் அனைவர்க்கும் என் உளங் கனிந்த நன்றியினை வணக்கத்துடன் உரித்தாக்குகின்றேன்.

வாழ்க தந்தை பெரியார் புகழ்! வெல்க அவர்தம் கொள்கைகள்!

திருச்சிராப்பள்ளி,
1-5-1974

வே. ஆனைமுத்து
பதிப்பாசிரியர்

# தந்தை பெரியார் அவர்களைப்பற்றி

தந்தை பெரியார் அவர்களின் சொற்பொழிவுகளும், எழுத்துக்களும் 1925 முதல் கடந்த 48 ஆண்டுகளாகத் தமிழ் மக்களாலும், பிறராலும் கேட்கப்பட்டும், படிக்கப்பட்டும், பின்பற்றப்பட்டும், ஆராய்ச்சிக்கு உரியவையாகக் கொள்ளப்பட்டும் வருபவையாம்.

எனவே இங்கு, தந்தை பெரியார் அவர்களின் கொள்கைகள், இயக்கங்கள், கிளர்ச்சிகள், சாதனைகள் முதலானவற்றைச் சுருக்கமாகக் காண்டல் இன்றியமை யாததாகும்.

அன்னாரின் பள்ளிப் படிப்பு மூன்றாண்டு காலத் திண்ணைப் பள்ளிக் கல்வி யோடும், இரண்டாண்டு கால பிரைமரி பள்ளிக் கல்வியோடும் 11 வயதில் முடிவுற்றது.

அக் காலத்தில் நம் சமுதாயத்தின் எல்லாத் தரப்பினரும் கடவுள், மத, சாஸ்திர, புராண நம்பிக்கைகட்குப் பெரிதும் அடிமைப்பட்டிருந்தனர். இந்து வைதிகக் கொள்கை களைப் போற்றுவதும் பின்பற்றுவதும் தங்களை உயர்ந்த மனிதர்களாக்கிக் கொள்வதற்குச் சரியான வழி யென்று 'பெரிய மனிதர்கள்' என்பவர்களும், 'படிப்பாளிகள்' எனப் பட்டோரும், 'மேல் சாதி மக்கள்' எனக் கூறிக்கொண்டோரும் அக் காலத்தில் கருதினர். மதம் என்பதன் பேராலும், சமுதாயப் பழக்க வழக்கம் என்பதன்பேராலும் பார்ப்பனர்—திராவிடரின் மத குருவாகவும், மதத் தலைவராகவும் ஆதிக்கம் கொண்டு விளங்கினர்.

நம் சமுதாயத்தினருள் பெரும்பாலோர் கல்வியறிவு அற்றவராயிருந்தனர். நூற்றுக்கு ஏழு பேரே படிப்பறிவு பெற்றிருந்தனர் எனின் அவர்களுள் பார்ப்பனர் மூவர்; கிறிஸ்தவர் ஒருவர்; சாதி இந்துக்கள் இருவர்; பிறர் ஒருவர் என்கிற அளவில் இருந்தது.

'சூத்திரனுக்கு அறிவு கொடுக்கப்படக்கூடாது' என்பதே ஆயிரக்கணக்கான ஆண்டு காலமாகத் தென்னாட்டில் ஆட்சி புரிந்தவர்களின் கல்விக் கொள்கையாக இருந்தது. வெள்ளையர் ஆட்சியிலும், கி. பி. 1800-க்குப் பின்னர் 'படித்தவர்கள் என்றால், பார்ப்பனர்' என்ற நிலைமை மட்டுமே இருந்தமையின், அரசு அலுவல் துறைகள் அனைத்திலும் பார்ப்பனரே ஆதிக்கம் பெற்றிருந்தனர். 'படிப்புத் தகுதி' ஒன்றே கருதி அலுவலர்கள் அமர்த்தப்பட நேர்ந்தவுடன் 'படிப்புத் தகுதி' பெற வாய்ப்பில்லாதவர்களாக ஆக்கப் பட்டிருந்த அனைத்துச் சமுதாயத்தினரும் ஒதுக்கப்பட்டனர்.

சமுதாயத்தில் பெரும்பான்மையினராக இருந்த 'சூத்திரர்' எனப்படுவோர்—பார்ப்பனர்களால் தீண்டத் தகாதவர் எனக் கருதப்பட்டனர். பார்ப்பனர் புழங்கும் பொது இடங்களில்—உணவு விடுதிகள், குளிக்கும் துறைகள், கோவில்கள் போன்ற அனைத்திலும் 'சூத்திரர்' புழங்கக் கூடாதவராகக் கருதப்பட்டனர். பார்ப்பனர் அனுபவித்த உரிமைகள் எதனையும், எந்தத் துறையிலும் சூத்திரர் அனுபவிக்க இயலாது என ஆக்கப்பட்டிருந்தது.

கோவில்களைக் கட்டி முடிப்பவர்—சூத்திரர்; ஆனால் கோவில் குடமுழுக்குக்கு நீர் ஊற்றுபவர், கோவிலில் அர்ச்சனை செய்பவர், இரதத்தில் சிலையோடு அமர்ந்து ஊர்வலம் வருபவர்—பார்ப்பனர் என்ற நிலைமை நிலவியது.

எந்த நிலையுடைய அல்லது சாதிக்கு உரிய திராவிடரையும், 'வா, போ, நீ'; என்றும்; 'வாடா, போடா' என்றும் பார்ப்பனர் ஏகமாக அழைக்கும் நிலைக்கு, நம் மக்கள் இழி நிலையில் துன்புற்றனர். தமிழர் வீட்டு நிகழ்ச்சிகள் அனைத்துக்கும் பார்ப்பனரே குரு—தலைவர் என்பது நிலவியது.

தீண்டப்படாதவர் எனப்படும் பள்ளர், பறையர் முதலானோர் வேறு எந்த வகுப்பாராலும் தீண்டப்படாதவராகவே நடத்தப்பட்டனர். பார்ப்பனரும் பார்ப்பனரல்லாத மேல் சாதி மக்களும் புழங்கும் எந்தப் பொது இடத்திலும் பள்ளரும் பறையரும் புழங்கக்கூடாது; சில தெருக்களில் நடக்கக்கூடாது—மாட்டு வண்டிகளில் உட்கார்ந்து செல்லுவதோ, செருப்புகள் அணிந்து போவதோ, குடை பிடித்துச் செல்வதோ, பொதுக் கிணற்றிலும்—குளத்திலும் குளிப்பதோ, நீர் அருந்துவதோ கூடாது; எங்கோ அரிதாகக் காணப்படும் தண்ணீர்ப் பந்தல்கள், காப்பிக் கடைகளில்கூட மூங்கில் குழாயில் ஊற்றப்படும் காபி, மோர், நீர் இவற்றைக் கொட்டாங்கச்சிகளில் வாங்கிக் குடித்துச் செல்ல வேண்டும் என்பதே எல்லா ஊரினரும் கொண்டிருந்த சமுதாய நெறியாக இருந்தது.

பறையரும் பள்ளரும்—பார்ப்பனர்களால் காணத் தகாதவர்களாக, அண்டத் தகாதவர்களாக, தீண்டத் தகாதவர்களாகக் கருதப்பட்டனர். ஒற்றையடிப் பாதைகள், வண்டிப் பாட்டைகளில் பார்ப்பனரை எதிர்ப்படும் பறையர் முதலானோர் கூப்பிடு தூரம் ஒதுங்கியோடி, மறைந்து நடத்தல் வேண்டும்; பறையர் எனப்படுவோர் முழங்காலுக்குக் கீழ் தொங்கும்படி துணி அணியக் கூடாது; தோளில் துணி போடக் கூடாது; உலோகப் பாத்திரங்களைப் பயன்படுத்தக் கூடாது; தங்க நகைகளை விரும்பிப் பெறல் கூடாது; மண் சுவரும், ஓலைக் குடிசையும் தவிர வேறு வகையான வீடு பெற விரும்பக் கூடாது. மொத்தத்தில் எந்தச் சுதந்தரமும் உரிமையும் பெறக்கூடாதவராய் அடிமை வேலை செய்தே வாழவேண்டும் என்ற இழிவுக்கு ஆளாக்கப்பட்டிருந்தனர்.

சில சூத்திர சாதிப் பெண்டிரும், ஆதித் திராவிடப் பெண்டிரும் மாராப்புத் துணி போடுவதும், சட்டை போடுவதும் மேல் சாதியினர் என்பவர்களை அவமரியாதை செய்வதாகக் கருதப்பட்டு, அனுமதிக்கப்படாமல் இருந்தது. மனிதப் பிறவியில் பெண்கள் இழி பிறவிகள் எனவும், ஆண்களோடு சம உரிமை பெற அருகதையற்றவர்கள் எனவும் அனைவரும் கருதினர்.

கேட்கவும் படிக்கவும் நெஞ்சு பொறுக்காத இந்த இழிநிலை சேரர், சோழர், பாண்டியர், பல்லவர், நாயக்கர், நவாபுகள் ஆகிய அனைவரின் ஆட்சிக் காலங்களிலும் இருந்தது. இந்தக் கோர நிலைக்குப் பரிகாரம் தேட முயன்ற வெள்ளையரை, பார்ப்பனர் எதிர்த்தனர்; பணக்காரர் எதிர்த்தனர். 'இத்தகைய அமைப்பு எதையும் மாற்றக் கூடாது; இத் துறைகளில் பிரிட்டிஷார் தலையிடக் கூடாது' என்ற உறுதி மொழியினை கி.பி. 1773, 1857 ஆண்டுகளில்—அதிகாரபூர்வமாகப் பெற்றனர்—பார்ப்பனர்.

இத் தன்மையில், இருண்டு கிடந்த—அறியாமை ஆட்சி புரிந்த—சமூக இழிவுகாப்பதே வாழ்க்கை நியதியாக இருந்த தென்னாட்டில் அறியாமை இருளையும், சமூக இழிவு இருட்டினையும் சுட்டெரிக்கும் தன்மையினராகத் தோன்றிய பெரியார், தமிழகத்தில் ஈரோடு பெருநகரில் 1879 செப்டம்பர் 17-ல் உதித்தவராவார். இவருடன் பிறந்தவர் மூவர். தமையனார் திரு. ஈ. வெ. கிருஷ்ணசாமி, 28-9-1877-ல் உதித்தவர்; தங்கைகள் இருவர்—பொன்னுத்தாய், கண்ணம்மாள் ஆகியோர்.

முன்னர் குறிக்கப்பட்ட இழி நிலைகள் மனிதாபிமான உணர்வுக்கும், பிரத்யட்ச அனுபவத்திற்கும், தன்மான உணர்வுக்கும் நேர்மாறான நிலையாகும் எனப் பெரியார் அவர்கள் 1891 முதலே உணரத் தலைப்பட்டார்.

மிக இளம் பிள்ளைப் பருவத்தில் தனது சிறிய பாட்டியின் கண்காணிப்பில் வளர்ந்து வந்த அவர் கட்டுக்கடங்காத முரட்டுப் பிள்ளையாகத் திரிந்தார்; சமுதாய மக்கள் பலரும் அனுசரித்து வந்த சாதி அனுஷ்டானங்களை நாடோறும் மீறிவந்தார்; சமுதாயத்தில் தாழ்ந்தவர்களெனக் கருதப்பட்ட வாணியர், பணிக்கர், குறவர் முதலானோர் வீடுகளிலும்; முஸ்லிம்கள் வீடுகளிலும் நீர் பருகுவதும், பண்டங்களை உண்பதும் அவரது பிள்ளைக் குறும்புகளாக இருந்தன. அத் தன்மை வளர வளர—மனிதரிடையே உயர்வு தாழ்வு

கற்பிக்கப்பட்டிருப்பது தவறு எனவும்; சுயநல வாழ்வுக்காரர்களின் சூழ்ச்சியினாலேயே—செயற்கை முறையில் மனித இனம் பிரிந்து கிடக்கிறது எனவும் உணரத் தலைப்பட்டார்.

மத நம்பிக்கையின் பேரால் பொருளற்ற முறையில் சடங்குகள் செய்து பேய் ஓட்டுதல், கண்ணெறி கழித்தல், காக்கைக்குச் சோறு எறிதல் முதலான சடங்குகளைச் செய்து மக்களால் தெருவிலும் முச்சந்தியிலும் எறியப்பட்ட தேங்காய், பழம் போன்ற பண்டங்களை எடுத்துத் துடைத்துவிட்டும், கழுவாமலும்—சிறிதும் அச்சமின்றிச் சிறு பிள்ளைப் பருவத்தில் உண்டார்.

பள்ளிப் படிப்பு நிறுத்தப்பட்டவுடன் மண்டிக்கடை வாணிபத்தில் ஈடுபடுத்தப்பட்ட அவர், செல்வமும் வைதிகமும் ஒருங்கே நிறைந்த தமது இல்லத்தை நாடி வந்த சன்னியாசிகள், சாமியார்கள், பாகவதர்கள், பார்ப்பனர்கள், வித்துவான்கள் முதலான பக்திப் பிரசாரகர்களிடம் புராணங்கள், சாஸ்திரங்களில் இருக்கும் அருவருப்பான—அறிவுக்குப் பொருந்தாத நம்பிக்கைகளையும் கதைகளையும் கிண்டல் செய்து அவர்களோடு வாதமிடுவதை அன்றாட வேலையாக மேற்கொண்டார்.

புராணங்கள், சாஸ்திரங்கள், கடவுளர் கதைகள் முதலானவற்றை முறையாகப் படிக்க வேண்டிய தொல்லையான பணியைவிட, அவ்வாறு வாதமிட்டு அவற்றின் தன்மைகளை உணருவது அவரது இளமைப் பருவத்திற்கு ஏற்றதாகவும் உற்சாகம் தருவதாகவும் அமைந்தது.

இவற்றின் விளைவாக 1891 முதலே கடவுள், மதம், சாதி இவற்றில் நம்பிக்கையற்றவராக உருவானார். முன்னர் குறிப்பிட்ட சமுதாய இழிவுப் பழக்கங்கள் ஏறக்குறைய 1942-ஆம் ஆண்டு வரையில் கொடிய ஆதிக்கம் செலுத்திய இந்த நாட்டில்—1900 முதலே அவற்றை வெளிப்படையாகக் கண்டித்துப் பேசியும், தாமே அவற்றை மீறியும் செயல்பட்டார். அன்னார் பிற்காலத்தில் ஆற்றிய சொற்பொழிவுகளில், இந்நிலைமையை அவரே விளக்கியுள்ளார். எடுத்துக்காட்டாகப் பின்வரும் பகுதியைக் காணலாம்.

'எனக்குச் சிறுவயது முதற்கொண்டு சாதியோ, மதமோ கிடையாது; அதாவது நான் அனுஷ்டிப்பது கிடையாது. ஆனால், நிர்ப்பந்தமுள்ள இடத்தில் போலியாகக் காட்டிக் கொண்டிருந்திருப்பேன். அதுபோலவே, கடவுளைப்பற்றியும், மனத்தில் ஒரு நம்பிக்கையோ, பயமோ கொண்டிருந்ததும் இல்லை. நான் செய்யவேண்டுமென்று கருதிய எதையும்—கடவுள் கோபிப்பாரே என்றோ, தண்டிப்பாரே என்றோ கருதி (எந்தக் காரியத்தையும்) செய்யாமல் விட்டிருக்கமாட்டேன். கடவுள் மகிழ்ச்சியடைவாரென்று கருதியோ, சன்மானம் அளிப்பார் என்று கருதியோ எந்தக் காரியத்தையும் செய்திருக்கவும் மாட்டேன்.'

'எனது வாழ்நாளில் என்றைக்காவது சாதி—மதத்தையோ, கடவுளையோ உண்மையாக நம்பியிருந்தேனா என்று இன்னும் யோசிக்கிறேன், இதற்கு முன்பும் பலதடவை யோசித்திருக்கிறேன். எப்பொழுதிலிருந்து எனக்கு இவற்றில் நம்பிக்கையில்லை என்றும் யோசித்து யோசித்துப் பார்த்திருக்கிறேன்; கண்டுபிடிக்கவே முடியவில்லை.'

('நவமணி' 1937, ஆண்டு மலரிலிருந்து, 'தமிழர் தலைவர்' நூல் பக்கம் 7, 8-ல் காட்டப்பட்டுள்ளது; 1971, பதிப்பு)

அவர்தம் 19-ஆம் வயதில், அவரது விருப்பத்தை நன்குணர்ந்து, நாகம்மை என்னும் பெண்மணியை அவருக்கு மணம் புரிவித்தனர், அவர்தம் பெற்றோர்கள். அவ்வம்மையார் கணவரின் இயல்பறிந்து நடந்து அவருக்கு உற்ற துணையாக விளங்கினார்.

அக் காலத்தில் பொது வாழ்வெனக் கருதப்பட்டது, கவுரவப் பதவிகளை வகிப்பதும், உள்ளாட்சித் துறைப் பதவிகளைப் பெறுவதுமேயாகும். மக்கட்குப் 'பொதுத் தொண்டு' ஆற்றுவது என்பது 'தேசிய சேவை' புரிவதேயாகும்.

இவ்வகையில் 1907 முதல் 1919 வரையில் சுமார் 29 பதவிகளை வகித்த அவர், 1907 முதல் காங்கிரஸ் இயக்கத்தில் நாட்டங்கொண்டார். காங்கிரசில் மிதவாதிகள், தீவிர வாதிகள் என்ற பிரிவினரிடையே 1907இல் அடிதடி நடந்தது. அந்தப் பிரபல நிகழ்ச்சிக்குப் பின்னர்—1908 முதல் அவர் காங்கிரஸ் மாநாடுகளுக்குச் சென்று வந்தார்; காங்கிரஸ் மாநாடுகள் பலவற்றை நடத்தக் காரணமாக இருந்தார்; டாக்டர் டி. எம். நாயர் தலைமையில் நடந்த காங்கிரஸ் மாநாட்டை அவரே முன்னின்று நடத்தினார். ஆயினும், 1919-இல் தான் காங்கிரசில் உறுப்பினரானார்.

அக் காலகட்டத்தில் சென்னை மாகாணத்தில் நிலவிய அரசியல், சமுதாயச் சூழ் நிலைகளைக் காண்டல் இங்குப் பொருத்தமாக அமையும்.

1912 இல் 'சென்னை மாகாண திராவிடர் சங்கம்' என்ற அமைப்புத் தோன்றித் 'திராவிடர்' என்ற இன உணர்வுக்குக் கால்கோள் அமைத்தது. இவ் வுணர்ச்சி காலூன்றத் தலைப்பட்ட பின்னர் 20-11-1916-இல் 'தென்னிந்திய நல உரிமைச் சங்கம்' (South Indian Liberal Federation) என்ற பெயரில் பார்ப்பனரல்லாதார் அமைப்பு சென்னையில் உருவாக்கப்பட்டது. அந்த அமைப்பின் மூலநோக்கம் பார்ப்பனரல்லாத மக்களுக்குக் கல்வித் துறையிலும்; அரசியல் உத்தியோகம், பதவிகளிலும் உரிமைகளையும் பதவிகளையும் பெற்றுத் தருவதாகும்.

அவ்வமைப்பு தென்னிந்தியப் பார்ப்பனரல்லாதாரிடையே ஒரு பெரும் விழிப்புணர்ச்சியையும், எழுச்சியையும் உண்டாக்கிற்று. அவ்வமைப்பின் நிறுவனர்களாக விளங்கியவர்கள் அதுகாறும் தேசிய காங்கிரசில் முன்னணியில் நின்ற சர். பி. தியாகராயச் செட்டியார், டாக்டர் டி. எம். நாயர் (தர்வாடு, மாதவன் நாயர்) ஆகிய பெருமக்களேயாவர்.

அவ் வியக்கம் படித்த பார்ப்பனரல்லாதாரிடையே பெருமளவில் செல்வாக்குப் பெற்றது; தென்னாட்டு மேடைகள் தோறும் காங்கிரஸ் கொள்கைகளும், பார்ப்பனர் ஆதிக்கமும் வலிமையாகத் தாக்கப்படும் அளவுக்குப் பெருஞ் செல்வாக்குடன் வளர்ந்தது. காங்கிரஸ் மேடைகளில் எத்துணைப் பெரிய செல்வாக்குப்பெற்ற பார்ப்பனரையும் கொள்கை விளக்கம் கூறுவதற்கு மக்கள் அனுமதிக்க முடியாத அளவுக்குப் பலமான காங்கிரஸ் எதிர்ப்பு உணர்ச்சி தோற்றுவிக்கப்பட்டிருந்தது.

இக்கட்டான இந் நிலைக்கு ஆளாக்கப்பட்ட காங்கிரசினைக் காப்பாற்ற, பெரியார் அவர்களைப் போன்ற—செல்வாக்கும், நாவன்மையும், வாதத்திறனும், தியாக உள்ளமும், நாணயமான ஒழுக்கமும், ஓயாத உழைப்பும் படைத்த பார்ப்பனரல்லாதார் ஒருவரின் தலைமை காங்கிரசுக்கு இன்றியமையாது வேண்டியதாயிற்று.

அச் சூழ்நிலையில்தான் திரு. சி. இராசகோபாலாச்சாரியார் பெரியார் அவர்களைக் கொண்டு காங்கிரஸ் இயக்கத்தின் பலத்தைப் பெருக்க வேண்டி, காங்கிரஸ் இயக்கத்தில் அவரை உறுப்பினராக்கினார்.

அவ்வாறு காங்கிரசில் உறுப்பினராக நேர்ந்தபோது—பார்ப்பனரல்லாதார் இயக்கத்தின் உயிர்க் கொள்கையான வகுப்புரிமையைக் காங்கிரஸ் ஏற்றுக்கொண்டிருப்பதாகவும்; பதவி—உத்தியோகங்களில் 100-க்கு 50 வீதம் பார்ப்பனரல்லாதாருக்கு ஒதுக்கி அளிக்கப் படும் எனவும்; பொதுத் தேர்தலில் போட்டியிடும் எண்ணம் காங்கிரசுக்கு இல்லை எனவும் பெரியாரவர்களிடம் காங்கிரசார் கூறினர்.

அவ் உறுதிப்பாட்டினை மனமார நம்பிய நிலையில்—காங்கிரசிலிருந்து கொண்டே 1919 முதல் 1925 வரை தொடர்ந்து காங்கிரஸ் மாநாடுகளிலும், கமிட்டிக் கூட்டங்களிலும் வகுப்புரிமைக்காகப் போராடி வந்தார். தமிழ்நாடு காங்கிரசின் தலைவராகவும், செயலாளராகவும், தீவிர பிரசாரகராகவும் திகழ்ந்த அன்னாரின் வகுப்புரிமைக் கோரிக்கையை

1919 (திருச்சி), 1920 (திருநெல்வேலி), 1921 (தஞ்சை), 1922 (திருப்பூர்), 1923 (மதுரை, திருச்சி, சேலம்), 1924 (திருவண்ணாமலை) ஆண்டுகளில் காங்கிரஸ் புறக்கணித்தது.

பின்னர் 22-11-1925-இல் காஞ்சிபுரத்தில் நடைபெற்ற, 'தமிழ்நாடு மாகாண காங்கிரஸ் மாநாட்டில்' வகுப்புரிமைத் தீர்மானத்தைக் கொணர்ந்தார். அத் தீர்மானம், 'வகுப்பு வாதத் தீர்மானம்' எனப் பெயர் சூட்டப்பட்டு ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ளப்படாமலே (disallowed) ஒதுக்கப்பட்டது. இதனால், அம் மாநாட்டில் பார்ப்பனர்–பார்ப்பனரல்லாதார் உணர்ச்சி குமுறி எழுந்தது. மாநாட்டுப் பந்தலிலேயே, 'காங்கிரசால் பார்ப்பனரல்லாதார் நன்மை பெற முடியாது; காங்கிரசை ஒழிப்பதே இனி என் வேலை' எனச் சூளுரைத்து அன்றே காங்கிரசிலிருந்து நண்பர்கள் பலருடன் வெளியேறினார்.

இந் நிகழ்ச்சிக்கு முன்னர் 1924 ஏப்ரலில் மலையாள நாட்டில் ஈழவர் எனப்படும் நாடார், தீயர், புலையர் முதலானோர்க்கு இழைக்கப்பட்ட தீண்டாமைக் கொடுமையை ஒழிக்க, வைக்கம் என்ற இடத்தில் மகாதேவர் கோவில் முன் நடந்த இழிவு ஒழிப்புப் போருக்குத் தலைமை தாங்கி, தம் துணைவியாரையும் தங்கையையும் போரில் ஈடுபடச் செய்து, இந்தியாவிலேயே முதன் முதலாகத் தீண்டாமை ஒழிப்புக் கிளர்ச்சி வெற்றி பெறச் செய்தார். பெரியார் அத்தகைய புரட்சிப் போரில் ஈடுபட்டு மத அனுஷ்டானத்தை உடைத்து வெற்றி கண்டதை அறிந்து அஞ்சிய தமிழ்நாட்டுப் பார்ப்பனர், அக் கிளர்ச்சியைப் பற்றிய உண்மைகளை இருட்டடிப்புச் செய்து, தமிழகத்திலும் அந்நிலைமை தோன்றிவிடாமலிருக்க முயற்சித்தனர். ஆயினும், இருளைக் கிழித்து எழும் காலைப் பரிதி போல்—பெரியாரின் சமுதாய இழிவு ஒழிப்புக் கிளர்ச்சி தென்னாடெங்கும் உள்ள பல கோவில்களில் விரைந்து பரவி இழிவெனும் இருளை அகற்றத் தொடங்கிற்று. சுசீந்திரம் போன்ற இடங்களில் 4-2-1926-இல் தீண்டப்படாதார் கோவிலில் நுழையும் கிளர்ச்சி நடைபெற்றது ('குடிஅரசு' 14-2-1926).

அதேபோல், 1924–1925-இல், காங்கிரஸ் கொள்கையான தேசியத்தினைப் பரப்ப வேண்டி, சேரமாதேவி என்ற இடத்தில்—பால பாரதி, தமிழ்க் குருகுலம், பரத்துவாஜ ஆசிரமம் என்ற பெயர்களில்–'தேசீய வீரர்கள் பயிற்சிக் கூடம்' ஒன்றை வ. வெ. சு. அய்யர் நடத்திவந்தார். காங்கிரஸ் இயக்கத்தின் நிதியும், தமிழ் மக்களின் நன்கொடையும் இந்தக் குருகுல நடப்புக்குப் பயன்பட்டன. அங்கு பார்ப்பனரல்லாதார் பிள்ளைகளை இழிவாக நடத்தி, உணவில் பேதமும்; உணவு உண்ணும் இடத்திலும், பாத்திரங்களிலும் பேதமும் காட்டியதால்—பார்ப்பனரல்லாதாரிடையே பெருங் கொதிப்பை ஊட்ட ஒரு முக்கிய களனாக அது அமைந்தது.

அந் நிகழ்ச்சி, 'பார்ப்பனர்கள், தீண்டாமை விலக்குப்பற்றிப் பேசுவது போலிப் பேச்சு; அவர்கள் தேசீயத்தைப் பற்றிப் பேசுவது பார்ப்பனீயத்தை வளர்ப்பதன்றி வேறல்ல' என்ற எண்ணத்தைப் பார்ப்பனரல்லாத காங்கிரஸ் தலைவர்களிடத்திலும், பொது மக்களிடத்திலும் உண்டாக்கிவிட்டது.

காங்கிரசில் பார்ப்பனர் ஆதிக்கம் ஓங்கி, பார்ப்பனரல்லாதார் நலன் புறக்கணிக்கப் படுவதை மேற்கண்ட நிகழ்ச்சிகள் பளிச்சென எடுத்துக் காட்டின. இவை நிற்க.

1891 முதல் தம் உள்ளத்தில் தலை தூக்கி நின்ற நாத்திகக் கொள்கைகளையும், இராமாயண, பாரத, மனுநீதி ஒழிப்புக் கோட்பாடுகளையும் காங்கிரஸ் மேடைகளிலேயே எடுத்தியம்பி வந்த பெரியார்—அக் கொள்கைகளுக்கு ஓர் உருவம் கொடுத்து அவற்றை மக்களிடையே பரப்ப வலிவான பிரசார முறையையும் மேற்கொள்ள விரும்பினார்.

அன்றியும், 1900–'20 காலக் கட்டத்தில் தமிழகமெங்கும் வருணாசிரம பாதுகாப்புச் சங்கம், சனாதன தர்ம சங்கம், சனாதன சங்கம் என்ற பெயர்களில் கிராமங்கள் மட்டத்தில் இந்து மதச் சங்கங்கள் தோற்றுவிக்கப்பட்டன.

இந்து மதத்தின் பெயரால் நிலைபெற்றுள்ள பார்ப்பனர், சூத்திரர், பஞ்சமர் என்ற உயர்வு–தாழ்வுப் பிரிவுகளைக் காப்பதும், வேத, ஆகம, இதிகாச, புராணங்களின் பேரால் மூடப் பழக்கங்களையும், விழாக்களையும், பண்டிகைகள், சடங்குகள், விரதங்கள் ஆகிய அனைத்தையும் தொடர்ந்து இருக்கச் செய்யும் வகையில் பக்திப் பிரசாரம் செய்வதும் இச் சங்கங்களின் நோக்கங்களாகும்.

இந்தப் பழைய ஏற்பாடுகளை ஒழிக்கவேண்டும் என்ற எண்ணம் அரசியல் இயக்கத்தார் எவருக்கும் தோன்றவில்லை.

பெரியார் அவர்கள் இந்தப் பழைய ஏற்பாடுகளை அழிப்பதையே தலையான கொள்கையாகக் கொண்ட விளக்க ஏடு ஒன்றைத் தொடங்க வேண்டுமென அவர் காங்கிரசிலிருந்தபோதே விருப்புற்றார்.

1922-ல் காங்கிரஸ் கிளர்ச்சியில் ஈடுபட்ட அவர், கோவைச் சிறையில் வைக்கப்பட்டார். அவருடன் சிறையிலிருந்த அவரது நண்பர் தங்கப்பெருமாள் பிள்ளையுடன் அங்கேயே கலந்து பேசி, 'குடி அரசு' என்ற பெயரில் ஒரு ஏட்டைத் துவக்க முடிவு செய்தார். இதுபற்றி அவரே குறிப்பிட்டுள்ள பின்வரும் செய்தி அதனைப் புலப்படுத்தும்.

'நமது நாட்டு மக்களுக்குள் சுயமரியாதையையும், சமத்துவத்தையும், சகோதரத்துவத்தையும் உண்டாக்க 'குடி அரசு' என்னும் ஒரு பத்திரிகையை ஆரம்பிக்க வேண்டும் என்பதாக முதல் முதல் நானும் எனது நண்பர் ஸ்ரீமான் தங்கப்பெருமாள் பிள்ளையும் 1922-ல் கோயமுத்தூர் ஜெயிலில் சிறைவாசம் செய்யும்போதே நினைத்தோம்.'

'அதுபோலவே வெளியில் வந்த கொஞ்ச நாட்களுக்குள், 'குடி அரசு' என்று ஒரு வாரப் பத்திரிகையும்; 'கொங்கு நாடு' என்று ஒரு மாதாந்திரமும் நடத்தப் போவதாய் 19-1-1923 தேதியில் சர்க்காரில் ரிஜிஸ்டர் செய்யப்பட்டது.' ['குடிஅரசு' –தலையங்கம்—1-5-1927]

'குடி அரசு' ஏட்டின் கொள்கைக் குறிப்பாகத் தலையங்கப் பகுதியின் தலைப்பில்,

'அனைத்துயிர் ஒன்றென் றெண்ணி
அரும்பசி எவர்க்கும் ஆற்றி
மனத்துளே பேதா பேதம்
வஞ்சம், பொய், களவு, சூது
சினத்தையும் தவிர்ப்பா யாகில்
செய்தவம் வேறொன் றுண்டோ
உனக் கிது உறுதியான
உபதேசம் ஆகுந் தானே'

என்ற பாடலை வெளியிட்டார்.

இப் பாடல் சமயச் சார்புள்ளது போலத் தோன்றினும், 'மக்கள் அனைவரும் சமம்' என்ற அவரது கோட்பாட்டை ஓரளவு வலியுறுத்துகின்ற அளவுக்கே இது அவருக்குப் பயன்பட்டது. பிற்காலத்தில் 8-5-1927 'குடி அரசு' இதழிலிருந்து சிறிது காலம் இப் பாடல் வெளியிடப்பெறவில்லை; 1925 முதல் மேற்கண்ட பாடலுக்கு மேல் (தலைப்பில்), ராட்டினத்தின் படம் வெளியிடப்பட்டு வந்தது. 1927 முதல் இவற்றை நீக்குவதும், பின்னர் வெளியிடுவதுமாகச் செய்தார்; 1931 முற்பகுதியில் இரண்டினையும் அகற்றி விட்டார். முகப்பு அட்டையின் தலைப்பில் 1925 முதல் 18-12-1927 வரை பாரத மாதா, காந்தி நெசவு நெய்வது, தொழிலாளர் தொழில் புரிவது முதலான படங்கள் வெளியிடப்பட்டன.

அவர் மேற்கொண்ட கொள்கைகளை, 'குடிஅரசு' மாலை 1, மலர் 1-ல் தலையங்கப் பகுதியில் வெளியிடப்பட்டவாறு, பிற்காலத்தில் 9-4-1933 தேதியிட்ட மலரில் பிறரால் எடுத்தாளப் பட்டுள்ள பின்வரும் பகுதியைக் கொண்டு நன்கு உணரலாம்.

'இந்த இயக்கத்தின் கருத்துகளைப் பற்றியும், கொள்கைகளைப் பற்றியும் 'குடி அரசு' முதலாவது தொகுதியின் தலையங்கத்தில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்:— 'மனித சமூகத்தில் சுயமரியாதை உணர்ச்சியும், சகோதரத்துவமும் தோன்றவேண்டும். ஒருவன் உயர்ந்தவன், ஒருவன் தாழ்ந்தவன் என்ற எண்ணம் அகலவேண்டும். உலகுயிர் அனைத்தும் ஒன்றெனும் எண்ணம் உதிக்க வேண்டும். வகுப்புச் சண்டைகள் மறைய வேண்டும். மேற்சொன்ன கொள்கைகளைப் பரவச் செய்வதற்காக நாம் உழைக்குங் காலத்தில், நம்மைத் தாக்குபவர்களுடைய வார்த்தைகளையாவது, செய்கைகளையாவது நாம் சிறிதளவும் பயமின்றி—சிநேகிதர், விரோதி என்ற வித்தியாசமில்லாமல் யாவரையும் கண்டிக்க நாம் பயப்படப்போவதில்லை.'

மேற்கண்ட பகுதியில் 1925-ல் அவர் உலகுக்கு அறிவித்த கொள்கைகள் உலக மானிட சமூகத்தைத் தழுவியவை. அக் கொள்கைகளைத் தம் வாழ்நாள் முழுதும், எந்த அச்சத்திற்கும் ஆளாகாமல் நாடெங்கும் பரப்பினார்.

அடுத்தடுத்து வந்த 'குடி அரசு' மலர்களில் முற்றிலும் நாத்திகக் கருத்துகளை வலியுறுத்தியே கட்டுரைகளும், தலையங்கங்களும் எழுதி வரலானார். அவரது சொற் பொழிவுகளிலும் பெரும் பகுதி நேரத்தை நாத்திகக் கொள்கை விளக்கத்திற்கே பயன் படுத்தினார்.

இவ்வாறாக, தம்முடைய முழுமுயற்சியையும் சுயமரியாதைக் கொள்கைப் பிரசாரத் திற்கே செலவிட்டாரெனினும், அய்யா அவர்கள் 1927 வரை காந்தியாரின் நிர்மாணத் திட்டங்களில் ஓரளவு மதிப்பும் நம்பிக்கையும் கொண்டிருந்தார்.

இங்கு மனித இயல்பு பற்றிய ஓர் பொது உண்மையை நாம் அறிதல் தகும். ஒவ்வொரு மனிதனுக்கும் தனிப்பட்ட ஓர் இயல்பு (Nature) நிலைத்து விடுவதை நாம் அறிவோம். இதனை ஒவ்வொரு மனிதனுக்கும் உள்ள பலவீனம்-(Weakness) என்பதாக அய்யா அவர்கள் அடிக்கடி குறிப்பிட்டுள்ளார். இவ்வகையில் தம்முடைய இலட்சியத்தை நிறைவேற்ற ஏற்ற வழி என்பதாக மனமார எந்த ஒன்றை ஏற்றுக்கொண்டாலும் அந்த நெறிக்குத் தன்னை முழுவதுமாக ஒப்படைத்துக்கொள்ளும் சிறந்த இயல்பை உடையவர்—பெரியார். பணத்தைச் சேர்த்துவைக்கும் பழக்கம் தம்மிடம் இருந்ததைக் குறிப்பிட்டு, அது தமது மனத்தின் பலவீனம் எனக்கொண்டு இந்த பலவீனம் (Weakness) என்பது பற்றி அடிக்கடி அவர் கூறிவந்ததும் உண்டு. நிற்க.

மேலே குறிப்பிட்ட மன இயல்பு காரணமாகத்தான் தமிழகத்தின் பட்டி தொட்டிகளில் கதர்மூட்டையைச் சுமந்து விற்றுப் பாமர மக்களும் கதர்ப்பற்று உள்ளவர்களாக ஆகும் அளவுக்குக் கால் நடையாகவும் கட்டை வண்டியிலும் பயணம் மேற்கொண்டார்.

அதேபோல், பழங்காலந்தொட்டு மனிதன் கைக் கொண்டிருந்த மதுக் குடியை எதிர்த்து 1921-ல் கள்ளுக்கடை மறியல் செய்து சிறைப்பட்டார்; சேலம் தாதம்பட்டியில் தமக்குச் சொந்தமாக இருந்த 500 தென்னைகளை வெட்டி வீழ்த்தினார்.

அவர் காங்கிரஸ் இயக்கத்தை விட்டு 1925-லேயே வெளியேறி விட்டாலும் 1927 வரையில் காங்கிரஸ் இயக்கம் தனி என்றும், காந்தியாரின் நிர்மாணத் திட்டங்கள் தனி என்றும் கருதிவந்தார். 6-2-1927-இல் அவர் எழுதியுள்ள 'குடி அரசு' தலையங்கப் பகுதி இதனை நமக்கு உணர்த்துகிறது. அப் பகுதியாவது : 'நாம் மகாத்மாவின் நிர்மாணத் திட்டம் முழுவதையும் நிறைவேற்றி வைக்கவேண்டிய பொறுப்புடையவர்களாக இருக் கிறோம்' என்பதாகும்.

மேலும், 18-4-1926 மலரிலிருந்து, 'குடி அரசு' முதற் பக்கத் தலைப்பில், 'மகாத்மா காந்தி வாழ்க !' என்றும் ; 20-11-1927 மலரிலிருந்து, 'குடி அரசு' தலைப்பில் 'கதர் வாழ்க!' என்றும் பெரியார் குறித்துவந்துள்ளார் ; 25-12-1927 மலரிலிருந்து இவ்விரண்டனுள் எந்த ஒன்றும் குறிக்கப்படாமலே வெளியிட்டுள்ளார். இதுவும் மேற்குறித்த உண்மையைப் புலப்படுத்தும்.

அன்றியும், சுயமரியாதை இயக்கத் துவக்க காலத்தில் கொடியேற்றத்தின் போதும், ஊர்வலத்தின் போதும் எழுப்பப்பட்ட கொள்கை முழக்க ஒலிகள்—பெரியாரின் கொள்கைப் பிரசாரம் பரிணமித்த முறையை ஓரளவு விளக்குந் தன்மையவாம்.

1927இல் முழக்கப்பட்ட ஒலிகள் (கோஷங்கள்)–'மகாத்மா வாழ்க !'; 'ஈ.வெ. ராமசாமி நாயக்கர் வாழ்க !'; 'பனகால் ராஜா வாழ்க !'; 'சுயமரியாதைக்கு ஜே !'; 'குடி அரசுக்கு ஜே !' என்பனவாம் ('குடி அரசு' 30-1-1927).

1927-க்குப் பின்னர் காந்தியாரின் நிர்மாணத் திட்டங்களைப் பெரியார் படிப்படியாக எதிர்க்கத் தொடங்கினார். அதனைப் பிரதிபலிக்கும் தன்மையில், 1929-ல், 'சுயமரியாதைக்கு ஜே !'; 'வைக்கம் வீரருக்கு ஜே !' என்ற தன்மையில் மட்டும் முழக்கங்கள் அமைந்தன. ('குடி அரசு', 20-7-1929).

அவ்வாறெல்லாம் காந்தியாரின் நிர்மாணத் திட்டங்களில் 1927 வரை பெரும் அளவுக்கு மதிப்பு வைத்திருந்தாலும், 1926 முதலே காந்தியாரின் சமுதாயக் கொள்கைகளை அவர் வன்மையாக எதிர்த்து வந்தார்.

வருணாசிரமக் கொள்கையை ஆதரிப்பதே தமது இலட்சியமென்றும் ; தீண்டாமை ஒழிப்பே தமது கொள்கையாகுமென்றும், சாதி ஒழிப்பு அல்லவென்றும் ; வகுப்புவாரி உரிமைக் கொள்கை தமக்கு முற்றிலும் எதிரானது என்றும் 1925-க்குப் பின்னர், காந்தியார் வெளிப்படையாகப் பேசியும் எழுதியும் வரலானார்.

சாதி ஒழிய வேண்டுமானால் சாதிக்கு ஆதாரமான வருணாசிரம அமைப்பும், சாதியை நிலைநாட்டும் சாதித் தொழிலும் ஒழியவேண்டும் என்பதோடு—வகுப்புரிமை மக்கள் எண்ணிக்கையின் விகிதாசாரப்படி அளிக்கப்படவேண்டும் என்பதில் உறுதியும் பிடிப்பும் கொண்டிருந்த பெரியார் அவர்கள்—1928 முதல் காந்தியாரின் நிர்மாணத் திட்டங்களின் போலித் தன்மையை எடுத்துக் காட்டி வன்மையாகக் கண்டித்தார்.

மேற்கண்ட நிலை உருவாவதற்கு உடனடிக் காரணங்களாக சில நிகழ்ச்சிகள் அமைந்தன.

காந்தியார் தமது 'யங்–இந்தியா–Young India' ஏட்டில் எழுதிய (22-1-1925 இதழ், 5-2-1925 இதழ்) வருணாசிரம ஆதரிப்பு—வகுப்பு வாரி உரிமை எதிர்ப்புக் கட்டுரைகளும் ; 1927 இறுதியில் பெங்களூரில் நடைபெற்ற காந்தியார்—பெரியார் சந்திப்பும் ஆகிய இவை போன்றவை அம் முக்கிய நிகழ்ச்சிகளுள் சிலவாம்.

மேலும், காந்தியார் தென்னாட்டுப் பார்ப்பனரின் வழிப்பட்டார் என்பது அவருடைய செயல்கள் பலவற்றின் மூலம் வெளிப்பட்டது. எடுத்துக்காட்டாக, பெரியார் வைக்கத்தில் மேற்கொண்ட தீண்டாமை ஒழிப்புக் கிளர்ச்சியினை, பார்ப்பனரைப் போன்றே—காந்தியாரும் இருட்டடிப்புச் செய்ததோடு, அக் கிளர்ச்சியில் பெரியார் ஏற்றிருந்த பங்கினைக் குறித்து எங்கும் ஏதும் குறிப்பிடாது மறைத்துவிட்டார். இதனைப் பின்வரும் ஆதாரங்கள் எண்பிக்கும். அவை யாவன :

1. வைக்கம் சத்தியாக்கிரகம் பற்றிக் குறிப்பிட்டு 24-4-1924 முதல் 11-1-1926 வரை தமது, '(Young India)' பத்திரிகையில் சுமார் 48 பக்கங்களில் பல கட்டுரைகள் எழுதி, அங்கு நடந்த பல நிகழ்ச்சிகளை விவரித்துள்ள காந்தியார், 'ஈ. வெ. ராமசாமி' என்ற பெயர் எந்த இடத்திலும் குறிக்கப்படாமலே இருக்கும்படி விழிப்போடு மறைத்துள்ளார்.

வைக்கம் சத்தியாக்கிரக வரலாற்றின் நாயகராக விளங்கி இருமுறை சிறைப்பட்ட பெரியாரின் பங்கு குறித்து ஒரு சொல்லைக்கூட அவர் பயன்படுத்தவில்லை.

2. கோவில் பிரகாரத்தில் மட்டும் தீண்டப்படாதாரை அனுமதிப்பது என்ற முடிவை அறிவிக்க திருவாங்கூர் ராணியார் விரும்பினார். அவ்வாறு அறிவித்த பின்னர் கோவில் நுழைவுக்கும் ஈ. வெ. ரா. போராடுவார் என்பதாக எண்ணிய ராணியார்—தம் அறிவிப்பிற்கு, ஈ. வெ. ரா. வின் ஒப்புதலைப் பெற விரும்பினார். அதற்கென்று காந்தியாரைத் தூது அனுப்பி ஈ. வெ. ரா. வின் ஒப்புதலைப் பெற, ராணியார் முயன்றார். காந்தியார், பயணர் விடுதியில் தங்கியிருந்த ஈ. வெ. ரா. வைச் சந்தித்தார். (இந்நூல் பக்கம் 92) இந்த உண்மையைக் காந்தியார் எதிலும் வெளிப்படுத்தவே இல்லை.

3. 1927 இறுதியில் பெங்களூரில் காந்தியாரோடு பெரியார் மேற்கொண்ட விவாதத்தின் மூலம்—தாம் ஒரு பார்ப்பன ஆதரவாளர் என்பதையும், வருணாசிரமக் கொள்கைக்காரர் என்பதையும் காந்தியார் வெளிப்படையாகக் காட்டிக்கொண்டார். (இந்நூல் பக்கம் 1005–1008.)

துவக்கத்தில்—தம்மைப் போன்றே சமுதாய சமத்துவ உணர்வு உள்ளவராகவும், பார்ப்பனரின் சூழ்ச்சிக்கு ஆட்படாத பார்ப்பனரல்லாதார் தலைவராகவும் விளங்குவார் என்று காந்தியாரைப் பற்றிப் பெரியார் எண்ணியிருந்தார். ஆனால், முன்னர்க் காட்டப் பட்டவாறு இந்த நம்பிக்கைக்கு நேர் மாறான தன்மையினராகச் செயல்பட்டு—காந்தியார் தமது போலித் தன்மையை வெளிப் படுத்திவிட்டார். எனவே அவருடைய நிர்மாணத் திட்டங்களைப் படிப்படியாகப் பெரியார் எதிர்த்தார்.

பெரியார் அவர்களிடத்துக் காணப்படும் 'நிர்மாணத் திட்ட ஆதரிப்பும்—எதிர்ப்பும்' என்கிற முரண்பாட்டுத் தோற்றத்திற்கு மேற்கண்ட விவரங்கள் நல்ல விளக்கம் அளிக்கப் போதியவையாம்.

அடுத்து, பெரியார் மேற்கொண்ட காங்கிரஸ் எதிர்ப்பு பற்றி அறிதல் நன்றாகும்.

1920இலும், 1923இலும் நடந்த இந்தியப் பொதுத் தேர்தல்களில் காங்கிரஸ் ஈடுபட வில்லை; ஆயினும் 1926இல் நடைபெறவிருந்த பொதுத் தேர்தலில் ஈடுபடுவதென 1925இல் காங்கிரஸ் தீர்மானித்தது.

தேர்தலில் ஈடுபடுவதில்லை என்பதே காங்கிரசின் கொள்கை என்றும்; பதவிக்கு வர நேரிட்டால் வகுப்புரிமை வழங்குவதாகவும் 1919இல் பெரியாரிடம் வாக்குறுதி தந்தே, அவரைக் காங்கிரசில் உறுப்பினராக்கினர்.

எனவே 1926 தேர்தலில் வெற்றி பெற்றுப் பதவிக்கு வந்தால் வகுப்புரிமையைச் செயற்படுத்த வேண்டுமெனக் கோரி—25-11-1925 காங்கிரஸ் மாநாட்டில் பெரியார் தீர்மானம் கொண்டு சென்றார். அது புறக்கணிக்கப்பட்டதை ஏற்கனவே கண்டுள்ளோம்.

ஆதலின் காங்கிரசை எதிர்த்து ஒழிக்கத் தலைப்பட்டார்; காந்தியாரின் நிர்மாணத் திட்டங்களின் பொருந்தாமையை விளக்கிக் காட்டினார். 5-6-1927 'குடி அரசு' தலையங்கத் திலும்; 19-6-1927-ல் நடைபெற்ற கோவில்பட்டி திராவிடர் கழக 18-ஆவது ஆண்டுவிழா தலைமை உரையிலும்; 7-8-1927 'குடி அரசு' தலையங்கத்திலும்; 1927 ஆகஸ்டில் விருதுப்பட்டியில் நிகழ்த்திய சொற்பொழிவிலும் ('குடி அரசு' 28-8-1927) இதற்கான காரணங்களைத் தெளிவுபட விளக்கியுள்ளார். இங்கு கோவில்பட்டியில் 'திராவிடர் கழகம்' என்ற பெயரில் அக் காலத்திலேயே ஓர் அமைப்பு இருந்திருப்பது நோக்கத் தக்கது. இதேபோல் திருவாரூரில் 'திராவிட சங்கம்' என்ற ஓர் அமைப்பு 1927-இல் செயல்பட்டது. ('குடி அரசு' 22-5-1927) நிற்க.

எனவேதான் இந்தி கற்பிக்கப்படுவதற்கென 1922-இல் தமது கட்டடத்தில் இந்திப் பாடசாலையை நிறுவிய பெரியார், 1926 முதல் இந்தியை வன்மையாக எதிர்த்தார்.

தமிழ்நாட்டில் முதன்முதலாக திருச்செங்கோடு புதுப்பாளையத்தில் கதர் ஆசிரமத்தைத் (இதனை, 1945-இல் நான் பார்த்து வர நேர்ந்தது) திறந்துவைத்த பெரியார், 1931 முதல் கதர்த் திட்டத்தின் பொருந்தாத் தன்மையை ஆதாரங்களுடன்—பொருளாதாரக் கண்ணோட்டத்தில் விளக்கிக் காட்டினார். 8-6-1931, 14-6-1931, 28-6-1931 'குடி அரசு' மலர்களிலுள்ள விவரங்கள் இதனை நன்கு உணர்த்துகின்றன.

பின்னர் 1937–38-இல் முதன் முதலாக சேலம் மாவட்டத்தில் மது ஒழிக்கப்பட்ட போது, மது ஒழிப்பினால் மாகாண அரசுக்கு ஏற்பட்ட வருவாய் இழப்பை ஒரு சாக்காகக் காட்டி, அவ் இழப்பை ஈடு செய்வதற்காகவென்று கூறிக் கல்வித்துறை மானியத்தைக் குறைத்து, சுமார் 2200 துவக்கப் பள்ளிகளை மூடிவிட திரு. சி. இராசகோபாலாச்சாரியார் ஆணையிட்டார். அதிலுள்ள சூழ்ச்சியினைப் புரிந்துகொண்ட பெரியார்—1920 முதல் 1936 வரை ஆட்சிபுரிந்த நீதிக் கட்சியினர் கிராமப்புற மக்கள் கல்விபெறுவதற்காகச் செய்திருந்த புதிய வாய்ப்புகளை ஒழிப்பதற்காகவே—மேற்கண்ட மதுவிலக்கைக் காங்கிரசார் அமுல்படுத்தினர் என்பதை மக்கட்கு உணர்த்தினார்.

மேலே குறிப்பிட்டவைகளைக் கொண்டு, பெரியாரிடத்தே கொள்கை முரண்பாடுகள் இருந்தன எனக் கருதத் தோன்றலாம்; அவர் நிலைத்து ஒரு கொள்கையைப் பின்பற்றிச் செல்லாதவர் எனச் சிலர் கருதவும் இடமேற்படலாம். ஆனால், உண்மையோ அவ்வாறு கொள்வதற்கு நேர்மாறானதாகும்.

எந்த ஒரு நிலையை (stand) அவர் மேற்கொள்ள விரும்பினாலும் அதற்கு அவர் கொண்டிருந்த உரைகல் ஒன்றேயாகும்.

அதாவது, சுயமரியாதைக் கொள்கைக்கு ஆக்கமும்; பார்ப்பனரல்லாத மக்களின் சமுதாய இழிவு ஒழிப்புக்கும், நல்வாழ்வுக்கும் ஆதரவும் ஒரு இம்மி அளவு அதிகமாகக் கிடைக்க வாய்ப்பு இருப்பதாக அவருக்கு எப்போது தோன்றினாலும்—அதற்கு முன்னிடம் (Top Priority) கொடுத்து எந்த நிலையையும் மாற்றிக்கொள்வார்; எந்தப் புதிய நிலையையும் மேற்கொள்வார். நிற்க.

1920-ல் சென்னை மாகாண ஆட்சிப் பொறுப்புக்கு வந்த தென்னிந்திய நல உரிமைச் சங்கத்தவரான நீதிக் கட்சியினரின் ஆட்சியானது, திராவிட இனமக்களுக்கு நலன் விளைக்கும் பல அருஞ் செயல்களைச் செய்தது. 1921 முதல் 1930 வரை அவர்கள் செய்த சட்டப் பாதுகாப்பு ஏற்பாடுகள் திராவிடரின் அறியாமையையும், சமூக இழிவையும் ஒழிக்க நேரிடையாக உதவுபவையாக அமைந்தன. எடுத்துக்காட்டாக:—

1. கிராமப் புறங்களில் ஆயிரக்கணக்கில் துவக்கப் பள்ளிகளை நிறுவியமை;

2. ஆதித் திராவிடரின் குழந்தைகளைக் கட்டடத்திற்குள் அனுமதிக்காத பொதுப் பள்ளிகளுக்கு அரசு மானியம் அளிக்காது என 1923-ல் ஆணை பிறப்பித்தமை (G. O. 87—Education, dated 16-1-1923);

3. வகுப்புவாரி உரிமையை அரசின் கொள்கையாக ஏற்று, 1921 ஆம் ஆண்டு செப்டம்பர் 16-ஆம் நாள் (M. R. O.—Public Ordinary Service G. O. 613) என்ற முதல் கம்யூனல் ஜி. ஓ., பிறப்பித்தமை; 1922 ஆகஸ்டு 15-ஆம் நாள் (M. R. O.—Public Ordinary Service G. O. 658) என்ற இரண்டாவது கம்யூனல் ஜி. ஓ. பிறப்பித்தமை; 1924 பிப்ரவரி 6-ஆம் நாள் (M. R. O.—Public Ordinary Service G. O. 761) என்ற மூன்றாவது கம்யூனல் ஜி. ஓ. பிறப்பித்தமை.

4. இந்துக் கோவில் நிர்வாகங்களின்பேரில் அரசு கண்காணிப்பு மேற்கொள்ள ஏற்ற வகையில், இந்து அறநிலையப் பாதுகாப்புச் சட்டம் இயற்றியமை (Hindu Religious Endowments Act, 1924);

5. இன இழிவை அகற்றும் தன்மையில், தேவதாசிகள் ஒழிப்புச் சட்டம் (1930) உருவாக்கியமை ஆகிய அரிய செயல்களைக் குறிப்பிடலாம்.

இச் செயல்கள் நேரடியாகத் திராவிட மக்கட்கு நலன் விளைவிப்பனவாகவும்; சாதி ஆதிக்கத்தையும், பார்ப்பன ஆதிக்கத்தையும் தகர்க்க ஏற்றனவாகவும் திகழ்ந்தன.

அக் காரணங்கொண்டு வைதிகப் பார்ப்பனர்களும், அரசியல் பார்ப்பனர்களும், காங்கிரசில் ஆதிக்கங் கொண்டிருந்த பார்ப்பனர்களும் மேற்சொன்ன சட்ட ஏற்பாடுகளை வன்மையாக எதிர்த்தனர்.

இனநலனையே முக்கிய குறிக்கோளாகக் கொண்ட பெரியார் அவர்கள் நீதிக் கட்சியினரின் அருஞ் செயல்களைப் பத்திரிகைகள் வாயிலாகவும், சொற்பொழிவுகள் மூலமாகவும் வலியச் சென்று ஆதரித்தார். அன்னாரது பேராதரவின் காரணமாக—1936 வரை நீதிக்கட்சி அமைச்சு என்ற பேராலும், சுயேச்சை அமைச்சு என்ற பேராலும் ஆட்சி புரிந்த பார்ப்பனரல்லாதார், திராவிட மக்கட்குத் தொடர்ந்து மிகப் பல நலன்களைச் செய்தனர்.

சுயமரியாதை இயக்கப் பணியினையும், பார்ப்பனரல்லாதார் ஆட்சிப் பாது காப்பினையும் இரு கண்களெனக் கொண்டு பெரியார் அவர்களும், சுயமரியாதை இயக்கத் தோழர்கள் பலரும் அரும்பணியாற்றினர். சுயமரியாதை இயக்கத்தின் செயல்முறைகளும், நீதிக் கட்சியினரின் அரசுக் கொள்கைகளும் மிக நெருக்கமாக அமைந்த நிலையில், 17-2-1929, 18-2-1929 தேதிகளில், செங்கற்பட்டில், 'சென்னை மாகாண சுயமரியாதை முதல் மாநாடு' என்ற பெயரால் வரலாற்றுச் சிறப்புமிக்க நம் இயக்க முதல் மாநாடு நடைபெற்றது.

அம் மாநாட்டில் சுயமரியாதை இயக்கத் தோழர்களும், நீதிக் கட்சித் தலைவர்களும் இரண்டறக் கலந்து, திராவிட மக்களின் எதிர்கால நல் வாழ்வுக்கான அரிய முடிவுகளை எடுத்தனர். அம் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட பல தீர்மானங்கள் திராவிடருக்குச் சமுதாய சமத்துவத்தையும், பொருளாதார சமதர்மத்தையும் அமைத்தளிக்கவல்ல சாசனத் தன்மை உடையனவாம்.

அம் மாகாண மாநாடு, நம் 'சுயமரியாதை இயக்க வரலாற்றுக்குத் தோற்றுவாய்' அளித்த மாநாடாகும்.

அம் மாநாட்டில்தான், (1) 'சுயமரியாதை இயக்கம் 1925-ல் தோன்றியது' என்பதும்; (2) '1925 முதல் ஈ. வெ. ராமசாமி சகாப்தம் பிறந்தது' என்பதும்; (3) 'நம் தலைவர் ஈ. வெ. ராமசாமிப் பெரியார்' என்பதும்; (4) 'சுயமரியாதை இயக்கத் தந்தை ஈ. வெ. ராமசாமிப் பெரியார்' என்பதும் வரலாற்றுக்குட்பட்ட பேருண்மைகளாகப் பலராலும் அறிவிக்கப்பட்டன. இவற்றுக்குரிய ஆதாரங்கள் சென்னையிலிருந்து வெளிவந்த 'திராவிடன்' என்ற தமிழ் நாளேட்டின் 21-2-1929, 22-2-1929 இதழ்களிலும்; 28-7-1929, 16-2-1930 'குடிஅரசு' மலர்களிலும் தெளிவாகக் கிடைக்கின்றன.

இங்கு ஈ. வெ. ரா. அவர்கள் 'பெரியார்' என வழங்கப்படுவதுபற்றிச் சிறிது விளக்கம் காண்டல் பொருந்தும்.

'ஈ. வெ. ராமசாமி அவர்கள் 1938 முதல், 'பெரியார்' என அன்புடன் அழைக்கப் பட்டார்' என்பதாக இதுகாறும் வெளிவந்துள்ள வரலாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன. ஆயினும் இது குறித்த உண்மை வேறாகும்.

தமிழகத்தில், ஒருவரின் சொந்தப் பெயரின் பின்னால் அவரது சாதிப் பெயரைக் குறிக்கும் பட்டச் சொல் (Caste title) இணைக்கப்பட்டே அழைக்கப்படுவது ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக உள்ள பழக்கமாகும். இது அப் பெயரை உடையவருக்கு உரிமையாகவும், பிறருக்கு நீங்காக் கடமையாகவும்; சாதி வழக்கச் சம்பிரதாயங்களின்படிப் பெருமை சேர்ப்பதாகவும் இன்றும் கருதப்பட்டு வருகிறது.

இச் சம்பிரதாயத்தை உடைத்து வழிகாட்ட விரும்பிய ஈ. வெ. ரா., 18-12-1927 'குடிஅரசு' மலர் வரையில், 'ஆசிரியர் ஈ. வெ. ராமசாமி நாயக்கர்' எனக் குறிப்பிட்டு வந்ததை மாற்றி, 25-12-1927 'குடிஅரசு' மலர் முதல், 'ஆசிரியர்: ஈ. வெ. ராமசாமி' என்று மட்டும் குறிப்பிட்டு, 'நாயக்கர்' என்பதை நறுக்கிவிட்டார்.

அவ்வாறாக, 'நாயக்கர்' என்ற பட்டச் சொல்லை அவருடைய பெயருக்குப் பின்னால் இருந்து நீக்கிவிட்ட நிலையில், 'நாயக்கர்' என்ற பட்டச் சொல் இல்லாமல் அவரது பெயரைக் குறிப்பிடுவதானது, அவருக்கு உரிய பெருமையைக் குறைத்துவிடுமோ என நம் இனப் பெருமக்கள் பலர் அஞ்சினர்.

அங்ஙனம் அஞ்சிய பலருள் 'நாயக்கர்' என்ற சொல் இருந்த இடத்தில் 'பெரியார்' என்ற சொல்லை முதன் முதலாகச் சேர்த்து—'ஈ. வெ. ராமசாமிப் பெரியார்' என அழைத்தவர் நாகர்கோவில் வழக்கறிஞர் திரு. பி. சிதம்பரம் பிள்ளையே ஆவார்.

இந்த விளக்கத்தினை 21-5-1973-ல் திருச்சியில் தந்தை பெரியார் அவர்கள் எங்கட்கு உணர்த்தினார்.

மற்றும், இராமநாதபுரம் மாவட்ட இரண்டாவது சுயமரியாதை மாநாட்டில் நம் அறிஞர்கள் பலரும், 'ஈ. வெ. ரா. பெரியார்' என்றே குறிக்கலாயினர்.

20, 21-7-1929-ல் நடைபெற்ற திருநெல்வேலி ஜில்லா இரண்டாவது சுயமரியாதை மாநாட்டில் திருவாளர்கள் எஸ். குமாரசாமி ரெட்டியார், நீதிபதி எம். கோவிந்தன், டி. கே. சிதம்பரநாத முதலியார் ஆகியோரும் 'பெரியார்' எனக் குறிக்கலாயினர்.

1930-ல் திருச்சி மருத்துவ குல சங்கத்தார் அளித்த உபசாரத்தில் 'பெரியார் ஈ. வெ. ராமசாமி' என்றும் (சென்னை, 'திராவிடன்', 5-9-1930); 22-10-1932-ல் கொழும்பு நகரில் ஆதித் திராவிட சங்கத்தார் அளித்த வரவேற்பில், 'பெரியார் இராமசாமி' ('குடிஅரசு' 6-11-1932) என்றும் நெஞ்சாரப் போற்றிப் 'பெரியார்' என அழைக்கலாயினர்.

இவ்வாறாக, 1928 முதல் 'பெரியார்' என அன்புடன் அழைக்கப்பட்ட அன்னார், 1938 முதல் பெருவழக்காக அவ்வாறு அழைக்கப்பட்டார்.

12, 13-11-1938-ல், 'தமிழ்நாட்டுப் பெண்கள் மாநாடு', சென்னை ஒற்றைவாடைத் தியேட்டரில் நடைபெற்றது. தமிழ்நாட்டுப் பெண்கள் விடுதலைக்குப் பெரியார் ஆற்றியுள்ள தொண்டுக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தை, முதல் தீர்மானமாக அம் மாநாட்டில் நிறைவேற்றினர். அத் தீர்மானமாவது:

'இந்தியாவில் இதுவரையும் தோன்றின சீர்திருத்தத் தலைவர்கள் செய்ய வியலாமற் போன வேலைகளை இன்று நமது தலைவர் ஈ. வெ. ராமசாமி அவர்கள் செய்துவருவதாலும்; தென்னாட்டில் அவருக்கு மேலாகவும் சமமாகவும் நினைப்பதற்கு வேறொருவர் இல்லாமையாலும்—அவர் பெயரைச் சொல்லிலும் எழுத்திலும் வழங்கும்போதெல்லாம், 'பெரியார்' என்ற சிறப்புப் பெயரையே வழங்குதல் வேண்டுமென இம் மாநாடு எல்லோரையும் கேட்டுக்கொள்கிறது.' ['விடுதலை'—16-11-1938]

அந்த அறிவிப்பு சம்பிரதாயப்படி வேண்டுகோள் தன்மையிலும், ஏற்கனவே வழக்கத்தில் இருந்த பெயரை விளம்பரப்படுத்தும் தன்மையிலும் அமைந்தது.

அடுத்து, 'குடிஅரசு' தோற்றம் பற்றிய விவரமும் இங்குக் குறிக்கப்படுதல் பொருந்தும்.

இன்று வரை நமக்குக் கிடைத்துள்ள 'குடிஅரசு' ஏடுகளுள் மிகப் பழமையானது 11-10-1925, ஞாயிறு என நாளிடப்பட்ட மலரேயாகும். இது 'குடிஅரசு' மாலை 1-ன் 23ஆவது மலர் எனக் கண்டுள்ளது. 'குடிஅரசு' 23ஆவது மலர் 11-10-1925-ல் வெளியிடப் பட்டிருப்பதைக் கொண்டு பின்னோக்கிக் கணித்துச் சென்றால், 'குடி அரசு' முதல் மலர் 3-5-1925 அன்று வெளிவந்திருக்க வேண்டுமென ஆகிறது.

'குடிஅரசு' முதல் மாலையின் 22 மலர்கள் கிடைத்தில. இப் பழைய ஏடுகள் இல்லாத நிலையில் பிற்காலத்தில் 'தமிழர் தலைவர்' (பதிப்பு, 1971) என்ற நூலில், பக்கம் 77-ல், '2-5-1925-ல், குடிஅரசு' என்னும் பேரால் ஈ. வெ. ரா. ஒரு வாரப் பத்திரிகையை ஈரோட்டில் தொடங்கினார்' எனக் குறிக்கப்பட்டுள்ளது; அன்றியும் 1939-ல் இந்த நூல் வெளிவருவதற்கு முன்னரே தொடங்கி—21-4-1935 'குடிஅரசு' மலரிலிருந்து, அதன் முகப்பில் '1924-ல் ஸ்தாபிக்கப்பட்டது'; 'Established 1924' என்பதாக—சுமார் 1946 வரை குறிக்கப்படலாயிற்று. ['குடிஅரசு'—8-6-1946]

ஆனால், 'குடிஅரசு' மாலை 2, மலர் 1-ன் தலையங்கத்தில் 2-5-1926-ல், பெரியார் அவர்கள், 'குடிஅரசு ஆரம்பமாகி ஒரு வருஷம் முடிந்து, இரண்டாம் வருஷம் ஆரம்பமாகி விட்டது' எனக் குறித்துள்ளார். இதைக்கொண்டு 2-5-1925 என்ற தேதி நிலை பெற்றாலும் இன்னொரு சிக்கல் உள்ளது. 2-5-1925 என்பது சனிக்கிழமை ஆவதாலும், 'குடிஅரசு' ஞாயிறுதோறும் வெளிவந்ததாக உறுதிப்படுவதாலும் 2-5-1925 என்பது தவறு என ஆகிறது.

எனவே, இத்துணை விவரங்களையும் கொண்டு பார்க்குமிடத்து, திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் சுவாமிகள் என்னும் பெரியவரைக் கொண்டு, 2-5-1925 சனி அன்று, 'குடிஅரசு' வெளியீட்டு விழா நடந்திருக்கவேண்டும் என்பதும்; 'குடிஅரசு' முதல் மலர் 3-5-1925 ஞாயிறு தேதியிட்டு, அதற்கு முதல் நாளே வெளியிடப்பட்டது என்பதும் முடிந்த முடிபாம். 1928-ல் துவக்கப்பட்ட 'ரிவோல்ட்' ஏட்டின் துவக்க விழா 6-11-1928-ல் நடத்தப்பட்டதும், முதல் இதழ் 7-11-1928 தேதியிட்டு வெளியாகியுள்ளதும் இங்கு அறியத் தக்கது. இந்த முறையானது பத்திரிகைத் துறையில் கையாளப்படுவதை இன்றும் நாம் பார்க்கிறோம்.

அடுத்து, சுயமரியாதை இயக்கத் தோற்றம் பற்றிக் குறிப்பிட்டுள்ள பல அறிஞர் களும்—1924, 1925, 1926 என வெவ்வேறு ஆண்டினைக் குறிக்கும் தன்மையில் கருத்து வெளியிட்டுள்ளனர். சான்றாக, 16-2-1930, 1-5-1932, 9-4-1933 'குடிஅரசு' மலர்களில் அவ்வாறு பலராலும் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆயினும் நம் இயக்கத் தந்தை பெரியார் அவர்கள் தந்துள்ள குறிப்பே பொருத்தமானதாக அமைந்துள்ளது.

அஃதாவது: 'சுயமரியாதை இயக்கம் என்பதாக ஒன்று தோன்றி 4, 5 வருஷ கால மானாலும், அது ஒருவிதமாக அதாவது சாதகமாகவோ அன்றிப் பாதகமாகவோ எப்படியோ ஒருவிதத்தில் பொதுமக்களின் கவனத்தை இழுத்து எங்குப் பார்த்தாலும் இயக் கத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கும்படியான நிலையைப் பெற்றுவிட்டது' (குடிஅரசு' 16-2-1930) என்பதாகும்.

1930இல் அவ்வாறு அவர் குறித்துள்ளதால், சுயமரியாதை இயக்கம் அதற்கு 5 ஆண்டுகட்கு முன்னர்—1925ல் தோன்றியதாக ஆகிறது. எனவே, 'குடி அரசு தோன்றிய நாளே—சுயமரியாதை இயக்கம் தோன்றிய நாள்' என நாம் உறுதிப்படுத்த வேண்டியவர்களாயுள்ளோம்.

மேற்கண்ட முறைகளில், 'பெரியார்'; 'குடி அரசு'; 'சுயமரியாதை இயக்கம்' இவைபற்றிய விவரங்கள் அளிக்கப்பட்டதற்குச் சில காரணங்கள் உண்டு.

தந்தை பெரியார் அவர்களின் அரிய ஆலோசனைகளைப் பெற்றுக்கொள்ள வாய்ப் புள்ள காலத்திலேயே இவ்வாறு உறுதி செய்து கொள்வதானது, பிற்காலத்தில் நம் இயக்கம் பற்றிய ஆராய்ச்சியை மேற்கொள்வோருக்குப் பெரிதும் உதவியாக அமையும் என்பது ஒன்று.

அடுத்து இன்னொன்று; சுயமரியாதை இயக்கமானது—காங்கிரஸ் இயக்கம், சென்னைமாகாண திராவிடர் சங்கம், தென்னிந்திய நல உரிமைச் சங்கம் முதலானவை தோற்றுவிக்கப்பட்ட முறையில், குறிப்பிட்ட ஓரிடத்தில், சிலரைக் கூடச் செய்து—தோற்று விக்கப்பட்ட ஒன்றன்று.

அதற்கு மாறாக, 'மானிடத்தின் கவலையற்ற நல்வாழ்வுக்கும், திராவிடரின் தன்மான வாழ்வுக்கும் சுயமரியாதைக் கொள்கை இன்றியமையாதது' என்ற எண்ணத்தின் கர்த்தாவும், அதனை உலகுக்கு அறிவித்தவரும் அதற்கென ஓர் இயக்கத்தைத் தோற்று வித்தவரும் தனியொரு மாந்தரான பெரியார் அவர்களே ஆவார். ஆதலின் அன்னாரின் விளக்கங்களைப் பெற்று இவ்வாறு உறுதிசெய்து கொள்வது நமது நீங்காக் கடமையாயிற்று.

இங்கு, முன்னர்க் குறிக்கப்பட்டுள்ள செங்கற்பட்டு, 'சென்னை மாகாண சுயமரியாதை இயக்கக் கமிட்டிக்கு'த் தேர்தல் நடைபெற்ற பின்னர், அக் கமிட்டியில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களும், அவை பற்றிய செய்திக் குறிப்பும் நம் கவனத்திற்கு உரியவையாம்.

அவையாவன : பிறகு, சுயமரியாதை இயக்கத் தந்தை திரு. ஈ. வெ. ராமசாமிப் பெரியாருக்கு நன்றி பாராட்டுவதற்கும், மத விஷயத்தில் சர்க்கார் தலையிடுவதில்லை என்ற கொள்கையினால் சமூக முன்னேற்றம் தடைப்படுவதை எடுத்துக்காட்டிக் கண்டிப் பதற்கும் கீழ்க்கண்ட இரு தீர்மானங்களும் மாநாட்டுத் தலைவர் திரு. சவுந்தரபாண்டியன் அவர்களால் பிரேரேபிக்கப்பட்டு, ஏகமனதாக நிறைவேறின' :—

(1) 'சமூக முன்னேற்றத்திற்கும், சமூக விடுதலைக்கும் சுயமரியாதை இயக்கக் கர்த்தாவாகிய திரு. ஈ. வெ. ராமசாமிப் பெரியார் அவர்கள் ஆற்றியுள்ள பெரும் பணிக்கு நன்றி பாராட்டுவதுடன், அவர்கள் இவ்வியக்கத்தில் தலைமை வகித்து நடத்துவதில் அவர்கள்பால் தங்களுக்குப் பூர்ண நம்பிக்கை உண்டென்றும் இம் மாநாடு தீர்மானிக்கிறது'.

(2) 'மத விஷயத்தில் அரசாங்கத்தார் தலையிடக்கூடாதென்று நடுநிலைமை வகிப் பதினால் பெரும்பான்மையான மக்களின் சமூகச் சம உரிமை பாதிக்கப்பட்டு முன்னேற்றம் தடைப்பட்டிருப்பதால், அரசாங்கத்தாரே மக்களின் சமூகச் சம உரிமைக்கும் முன்னேற்றத் திற்குமான சட்டங்களைச் செய்யவேண்டுமென்று இம் மாநாடு கேட்டுக்கொள்கின்றது'

['திராவிடன்' 21-2-1929]

அதே போன்று, அம் மாநாட்டில் நிறைவேற்றப்பட்டதாக முன்னர்க் குறிக்கப்பட்ட தீர்மானங்களுள் சிலவும் காணத்தகும்.

(1) தீண்டாமை என்பதை ஒழித்து, எல்லாப் பொது ரஸ்தாக்கள், குளங்கள், கிணறுகள், பாடசாலைகள், சத்திரங்கள், தண்ணீர்ப் பந்தல்கள், முதலிய பொது ஸ்தாபனங் களைத் தட்டுத் தடங்கலின்றி எல்லோரும் அனுபவிக்க சம உரிமை கொடுக்க வேண்டும் என்று தீர்மானிக்கிறது. —தீர்மானம் எண் 7.

(2) மேலே காணப்பட்ட சம உரிமைக்கொள்கைகளுக்கான பிரசாரம் இருப்பது மட்டுமல்லாமல், ஆட்சியாளரும் சட்டம் செய்து அமுல் நடத்த வேண்டும்.

—தீர்மானம் எண் 8.

(3) பதினாறு வயதுக்கு மேற்பட்ட பெண்களுக்கே மணம் செய்விக்கப்படவேண்டும்; பெண்களுக்கு மண விலக்கு உரிமை, விதவைகளுக்கு மறுமண உரிமை தேவை.

—தீர்மானம் எண் 11.

(4) பள்ளிக்குப் போகத்தக்க சிறுவர் சிறுமிகளுக்கு ஆரம்பக் கட்டாயக் கல்வி கண்டிப்பாகத் தரப்படவேண்டும். —தீர்மானம் எண் 13.

(5) ஏழைப் பிள்ளைகளுக்குப் புத்தகம், உடை, உணவு இலவசமாக அளிக்க வேண்டும். —தீர்மானம் எண் 15.

(6) சர்க்கார் புறம்போக்கு நிலங்களைத் தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் மற்றும் நிலமில்லாத ஏழை விவசாய மக்களுக்கும் கொடுத்துப் பயிர் செய்வதற்கான பண உதவியும் செய்யவேண்டும். —தீர்மானம் எண் 20.

(7) தீண்டாதார் எனப்படுவோருக்கு சர்க்காரில் காலியாகும் உத்தியோகங்களில் முதல் உரிமை கொடுக்கவேண்டும். —தீர்மானம் எண் 21.

(8) பெண்களுக்கும் ஆண்களைப்போலவே சொத்துரிமை—வாரிசு உரிமை; ஆண் களைப் போலவே எந்தத் தொழிலையும் மேற்கொண்டு நடத்துவதற்கான சம உரிமைகள் அனைத்தும் தரப்படவேண்டும். —தீர்மானம் எண் 24.

(9) பள்ளியாசிரியர்கள் வேலைக்குப் பெண்களை அதிகமாக நியமிக்க வேண்டு வதோடு, ஆரம்பக் கல்வி ஆசிரியர்கள் வேலை முழுமைக்கும் பெண்களையே நியமிக்க வேண்டும். —தீர்மானம் எண் 25.

(10) இரயில்வே உணவு விடுதிகளில் எவ்விதமான சாதிப் பாகுபாடுகளும் தலைநீட்டக் கூடாது. —தீர்மானம் எண் 28.

வரலாற்றுச் சிறப்புக்குரிய இத் தீர்மானங்கள்—'சுயமரியாதை இயக்கக் கர்த்தா பெரியார்' என்பதையும், 'சுயமரியாதை இயக்கம் சமூக விடுதலை இயக்கம்' என்பதையும், திராவிடப் பெருந் தலைவர்கள் ஒன்றுகூடி உலகுக்கு அறிவிக்கக் கருவியாக அமைந்தன.

தமிழகத்தில் சுயமரியாதைக் கொள்கைகளை இடையறாது பரப்பி வந்த பெரியார் அவர்கள், 1929 இறுதியில் மலேயா நாட்டில் ஈப்போ நகரில் நடைபெற்ற, 'தமிழர் சீர் திருத்தச் சங்க மாநாட்டிற்கு' அழைக்கப்பட்டார். 15-12-1929-ல் ஈ. வெ. ரா. நாகம்மையா ருடனும் மற்றும் தோழர்களுடனும் மலேயா நாட்டுக்குப் பயணமானார்.

மலேயாவில், 'தமிழர் சீர்திருத்தச் சங்க மாநாடு' (ஈப்போ); 'மலேயா இந்திய சங்க மாநாடு' (சிங்கப்பூர்) இவற்றில் பேருரைகள் ஆற்றி அங்கு வதிந்த தமிழர்கள், முஸ்லிம்கள், மலையாளிகள், தெலுங்கர்கள், யாழ்ப்பாணத் தமிழர்கள் ஆகியோரைத் தன்மான உணர்வு பெறச்செய்தார்.

மலேயாவில் 20-12-1929 முதல் 11-1-1930 முடிய உள்ள காலத்தில் பினாங்கு, கோலா லம்பூர், தைப்பிங், மூவார், ஜோகூர்பார், பத்துபகார், மலாக்கா, தம்பின், கோலப்பிறை, கோலாகுபு, தஞ்சமாலிம், சுங்கை குருட், தெலுக்கான்சர், கம்மார், கோலாகஞ்சார், சுங்கப் பட்டாணி முதலான சுமார் 71 இடங்களில் சுமார் 39 சொற்பொழிவுகளும், 34 வரவேற்பு நிகழ்ச்சிகளில் உரைகளும் ஆற்றி மிகப்பெரிய விழிப்பினை அவர் உண்டாக்கினார்.

பினாங்கிலிருந்து 11-1-1930-ல் கப்பலேறிய அவர் 16-1-1930-ல் நாகையை வந்தடைந் தார்; மிகச் சிறப்புடன் வரவேற்கப்பட்டார். அக் கப்பல் பயணத்தின்போதுதான், எதிர்பாராதவிதமாக, அவர் தாடி வளர்க்க நேரிட்டது. அது வேடிக்கையானதோர் நிகழ்ச்சியாகும்.

கப்பல் பயணத்தின்போது அவர் முகச் சவரம் செய்துகொள்ள விரும்பினார்; தாம் இருந்த அறையில் பயணிகளுக்குச் சவரம் செய்து கொண்டிருந்த தொழிலாளியை இரண்டு,

மூன்று தடவைகள் அழைத்தார்; அத் தொழிலாளி வேறு இரண்டு, மூன்று பெயர்கட்கு முடி திருத்திய பிறகு மிகவும் தாமதித்துத் தம்மிடம் வந்தார். அச் சமயம் வேறு சிந்தனையில் ஈடுபட்டிருந்த பெரியார், தாமதித்துத் தம்மிடம் வந்த தொழிலாளியிடம், ‘ நீ எனக்குச் சவரம் செய்யவேண்டாம், போ’ எனச் சிறிது கடிந்துகூறி, முகச் சவரம் செய்துகொள்ளாமலே விட்டுவிட்டார். கப்பல் பயணத்தின்போது முகத்தில் முளைத்த மயிர் அப்படியே விடப்பட்டு வளர்ந்து வெண் தாடியாக மாறி—தங்கமேனி படைத்த அவருக்குச் சிங்கத் தோற்றத்தை அளித்துக் கொண்டிருந்தது.

தாடி இல்லாத நிலையில் இருந்து மலேயாவில், அன்னார், ஒரு பெருங் கூட்டத்தில் சொற்பொழிவாற்றியதைக் காட்டும் நிழற்படம் ஒன்றைக் கழகக் குழுவினர் 17-5-1973-ல் அவரிடம் நேரில் பெற்றபோது மேற்கண்ட விவரங்களைத் தாமே கூறினார். இவை இவ்வாறிருக்க.

ஈரோட்டினின்று வெளிவந்து கொண்டிருந்த ‘குடி அரசு’, ‘ரிவோல்ட்’ வார ஏடுகள் 16-6-1929 முதல் சென்னையிலிருந்து வெளிவர ஏற்பாடு செய்திருந்த அவர், மலேயாவிலிருந்து திரும்பியவுடன் மீண்டும் அவற்றை ஈரோட்டிலிருந்தே வெளியிடலானார்.

நாடெங்கும் சுயமரியாதைக் கொள்கைகளை முழக்கிய அவர் 1927 முதல் புத்தர் கொள்கைப் பிரசாரத்திலும், திருக்குறள் பிரசாரத்திலும் நாட்டம் கொண்டார்.

[‘குடி அரசு’—3-7-1927, 25-9-1927]

1930 முதல், இவற்றை மக்கட்கு நன்கு விளக்க முற்பட்டார்.

[‘குடி அரசு’—20-4-1930]

பெண்ணுரிமை கோருவதில் உலகத்திலேயே தலை சிறந்த முன்னோடியாக விளங்கிய அவர் பெண்களை அடிமைப்படுத்த ஏதுவாக இருந்த பிள்ளைப் பேற்றினைக் கட்டுப்படுத்தும் கொள்கையை 1928 முதலே எடுத்தியம்பினார். பின்வரும் அவர்தம் விளக்கம் இதனை நன்கு உணர்த்தும்.

‘கர்ப்பத் தடை என்பதுபற்றிச் சுமார் 2 வருஷங்களுக்குமுன் நாம் எழுதியது அனேகருக்குத் திடுக்கிடும்படியான சேதியாயிருந்தது’ என்பதே அப் பகுதியாம்.

[‘குடி அரசு’—6-4-1930]

இவ்வாறாக, தமிழகத்திலும், அண்டைய அயல்நாடுகளிலும் சுயமரியாதைக் கொள்கைகளைத் தீவிரமாகப் பரப்பிய பெரியார், 1931 முதல் சமயம் நேர்ந்தபோதெல்லாம், பொருளாதார சமதர்மக் கொள்கைகளையும் எடுத்துச் சொன்னார். சோவியத்து நாட்டில் புதியதாக மலர்ந்திருந்த பொதுவுடைமை ஆட்சிக்கொள்கையும் அன்னாரது சிந்தனைக்கு விருந்தாக அமைந்தது.

எனவே, சமதர்மக் கொள்கைகள் ரஷ்யாவில் ஆட்சிமூலம் செயல்படுத்தப்படுவதை நேரிற்கண்டறியவும், வாய்ப்பு நேர்ந்தால் அங்கேயே தங்கிவிடவும் பெரிதும் விருப்பங் கொண்ட அவர், 1931 டிசம்பர் 13-ல், மேலைநாடுகட்குப் பயணமானார்.

அவர் பயணம் சென்ற வழியில் எகிப்து நாட்டிலிருந்து ‘குடி அரசு’க்கு எழுதி அனுப்பிய பயண வருணனைக் கட்டுரைகள் அவர்தம் கூர்த்த மதியையும், சொல்லாற்றலையும் நன்கு புலப்படுத்துவனவாக உள்ளன.

[இந்நூல் பக்கம் 1180-1186]

சோவியத்து நாட்டில் மிகப் பல இடங்களில் நாத்திகச் சங்கங்களாலும், இளைஞர் சங்கங்களாலும், தொழிற்சாலை நிர்வாகத்தினராலும் அவரும், அவர்தம் குழுவினரும் பெருமதிப்புடன் வரவேற்கப்பட்டனர்.

13-2-1932 முதல் 19-5-1932 வரை அவர் சோவியத்து நாட்டில் தங்கிச் சுற்றுப் பயணம் மேற்கொண்டபோது, ரஷ்ய நாத்திகச் சங்கங்களின் தலைவர்களும், செயலாளர்

களும், மொழிபெயர்ப்பாளர்களும் அவருடன் இருந்து பேருதவி புரிந்தனர். அங்குப் பயணம் மேற்கொண்ட மூன்று மாதத்தில் சோவியத்தின் பெரிய தொழிற்சாலைகள், கல்வி நிலையங்கள், நூல் நிலையங்கள், படிப்பகங்கள், நாடக அரங்குகள், விவசாயப் பண்ணைகள், பொது உண்டிச்சாலைகள், தொழிலாளர் சங்கங்கள் முதலான பல அமைப்பு களையும்; லெனின் சவம், லெனின் மியூசியம் முதலானவற்றையும் நேரில் பார்வை யிட்டார். பலவிடங்களில் சங்கங்களின் சார்பிலும், பொதுக்கூட்டங்களிலும் வரவேற்புகள் அளிக்கப்பட்டார்.

அவ்வமயம் ஸ்டாலின் முன்னிலையில் அங்கு நடந்த மே தின விழாவில், பெரியார் கலந்துகொண்டார்; 'இந்தியாவிலிருந்து வந்துள்ள நாத்திகத் தலைவர்' என அவர் அவையினருக்கு அறிமுகப்படுத்தப்பட்டு, ஸ்டாலின் அளித்த மரியாதையையும் பெற்றார்.

ஸ்டாலின் அவர்களை 29-5-1932-ல் பேட்டி காணப் பெரியார் ஒப்புதல் பெற்றிருந்தார். ஆயினும் அன்னாருடன் சென்றிருந்த திரு. எஸ். இராமநாதன் எம்.ஏ., பி.எல்., அவர் களின் நடவடிக்கைகள் சோவியத்து அரசின் கண்காணிப்புக்கு உள்ளாக வேண்டிய நிலைமைக்கு ஆளானபடியால், அதைக் காரணங்காட்டி, '19-5-1932-ல் சோவியத்து நாட்டை விட்டு, பெரியார் குழுவினர் வெளியேறிவிட வேண்டும்' என ஆணையிடப் பட்டது. அதன் விளைவாக, ஸ்டாலின் சந்திப்புக்கு வாய்ப்பு நேராமலேயே சோவியத்து நாட்டினின்று திரும்பினார்.

அப் பயணத்தில் ஆப்பிரிக்கா, கிரீஸ், துருக்கி, ஜெர்மனி, ஸ்பெயின், பிரான்சு, போர்ச்சுகல், இங்கிலாந்து முதலிய நாடுகளுக்கும் சென்று பல இடங்களையும், பல நாட்கள் சுற்றிப் பார்த்தார். ஜெர்மனியில் பெர்லின் நகரத்திலும், ஸ்பெயினில் மாட்ரிட் நகரத்திலும், பிரான்சில் பாரிசிலும் பல நாட்கள் தங்கியிருந்து, ஆங்காங்கிருந்த தொழிற்சாலைகளையும், சங்கங்களையும் பார்வையிட்டார். ஜெர்மனியில் பல இடங்களில் இருந்த நிர்வாணச் சங்கங்களுக்கும் (Nude Societies) சென்றார்.

இங்கிலாந்து நாட்டில் கம்யூனிஸ்ட் தலைவர் திரு. சக்லத்வாலாவைக் கண்டு பேசினார்; பிரிட்டிஷ் தொழிற்கட்சித் தலைவர் திரு. லான்ஸ்பரியைக் கண்டு பேசினார்.

அயல் நாடுகளில் அவர் ஆற்றிய சொற்பொழிவுகளில் இங்கிலாந்தில் மேக்ஸ்பரோ— 'லேக் பார்க்' என்ற இடத்தில் 20-6-1932-ல் ஆற்றிய பேருரை அன்னாரின் சுய சிந்தனைப் போக்குக்கும், அஞ்சா நெஞ்சத்துக்கும் பொருத்தமான காட்டாக விளங்குகிறது. (இந் நூல் பக்கம் 1191–1192). அக் கூட்டத்திலிருந்த சுமார் 50 ஆயிரம் மக்களும் அவருடைய நேரியமதியைப் பாராட்டினர்.

அப் பயணம் பற்றிக் கிடைத்துள்ள குறிப்புகளிலிருந்து அவர்தம் பயணம் பின்வரும் தன்மையில் அமைந்ததாகக் கொள்ளலாம்.

24-12-1931 முதல் 29-12-1931 வரை ஆப்பிரிக்காவிலும்; 1932 ஜனவரி 6 முதல் 16 வரை எகிப்திலும்; 1932 ஜனவரி 19 முதல் பிப்ரவரி 7 வரை கிரீஸ், துருக்கி நாடு களிலும்; 1932 பிப்ரவரி 13 முதல் மே 19 வரை சோவியத்திலும்; 1932 ஜூன் முதல் 1932 அக்டோபர் முதல் வாரம் வரை இங்கிலாந்து, ஸ்பெயின், ஜெர்மனி, போர்ச்சுகல், பிரான்சு முதலான நாடுகளிலும்; 17-10-1932 முதல் 6-11-1932 வரை இலங்கையிலும் அவர் தங்கியிருந்ததாகக் கொள்ளலாம்; இடைப்பட்ட நாட்கள் பயணம் செய்த நாட்களாகும்.

இவ்வாறு ரஷ்ய – அய்ரோப்பிய – இலங்கைச் சுற்றுப் பயணத்தை 11 மாத காலம் மேற்கொண்ட அவர், இலங்கையில் பல இடங்களில் சொற்பெருக்காற்றினார். அவர்தம் இலங்கைச் சொற்பொழிவுகள் சுயமரியாதைக் கொள்கைக்குத் தெளிவான விளக்கங்க ளாகவும், சமதர்மக் கொள்கைக்குச் சிறந்த பால பாடங்களாகவும் திகழ்வனவாம். அச் சொற்பொழிவுகள், 'ஈ. வெ. ரா. இலங்கை உபந்யாசம்' என்ற பெயரில் சிறு தொகுப்பாக

வெளிவந்தபோது, தமிழ் மக்களும் கடல்கடந்த தமிழரும் அதனை விரும்பி ஏற்றுப் பாராட்டினர். இலங்கைச் செலவு முடிந்தபின் 8-11-1932-ல் தூத்துக்குடி சேர்ந்து, 11-11-1932-ல் ஈரோட்டை அடைந்தார்.

அயல்நாடுகள் பயணத்திற்குப் பின்னர் அவர் முதன்முதலாக விடுத்த வேண்டுகோள் குறிப்பில், 'தோழர் என விளியுங்கள்' என அனைத்து மக்களையும் கேட்டுக்கொண்டார். ('குடி அரசு' 13-11-1932). அத் தேதிக்கு முன்னரே 'குடி அரசு' ஏட்டில் 'தோழர்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆயினும், அவ் வேண்டுகோளுக்குப் பின்னர் தான், 'தோழர் ஈ. வெ. ராமசாமி'; 'தோழர் ஈ. வெ. நா. நாகம்மாள்' என இருபாலாரையும் அழைப்பது பெருவழக்கில் வந்தது. பின்னர், பெண்களைத் 'தோழியர்' எனக் குறிக்கலாயினர்.

அடுத்து, இலண்டனில் அவருக்கு அன்பளிப்பாகக் கிடைத்த சோவியத்தின் ஐந்தாண்டுத் திட்ட ஆங்கிலநூலைத் தமிழில் முதன் முதலாக மொழி பெயர்த்து வெளியிட்டார்.

தொடர்ந்து ஈரோட்டில் சென்னை மாகாண சுயமரியாதைத் தொண்டர்கள் பலரையும் அழைத்து—28, 29-12-1932-ல் அன்னாரின் புதிய சமதர்மத் திட்டத்தினை விளக்கினார்; மறைந்த திரு. எம். சிங்காரவேலு பி.ஏ., பி.எல்., அவருடனிருந்து விளக்கம் தந்தார். அத் திட்டத்தினை விளக்கி மாவட்ட மாநாடுகள் பல நடைபெற்றன. எழுத்திலும் பேச்சிலும் அதி தீவிரப் பொருளாதாரப் புரட்சிக் கருத்துகளைப் பெரியார் வெளியிடலானார்.

அது சமயம் காங்கிரசார், பெரியாரின் பிரசாரத்தைக் குறித்துத் தவறான செய்திகளைப் பொதுமக்களிடம் பரப்பினர். 'சுயமரியாதை இயக்கம், பொதுவுடைமை இயக்கமாகிவிட்டது; ரஷ்ய அரசாங்கத்தின் தூண்டுதலினாலேயே இந்த நிலைமை ஏற்பட்டு விட்டது' என்பதே காங்கிரசாரின் தவறான பிரசாரமாகும். இது சிறிதும் பொருந்தாக் குற்றச்சாட்டாகும்.

ஏனெனில், பெரியார் அவர்கள் ரஷ்யப் புரட்சி வெடிப்பதற்கு (1917) முன்னரே தொழிலாளர் முன்னேற்றத்தில் அக்கறை கொண்டு தமக்கென ஒரு நெறியை வகுத்திருந்தவர் ஆவார். அதன்படி, 'தொழிலாளர்கள் என்பவர்கள்—தொழிலில் பங்குதாரர்களாக ஆக்கப்படவேண்டும்' என்பதை அவரே செயற்படுத்திக் காட்டியுள்ளார். இவ் விவரத்தைப் பின்வரும் அவர்தம் சொற்பொழிவு நமக்கு நன்கு உணர்த்தும்.

'தொழிலாளர்களைத் தொழிலில் பங்குதாரராக ஆக்க வேண்டும் என்ற கொள்கையை என் வியாபாரத்தில் 1900-ல்—அதாவது 73 ஆண்டுகளுக்கு முன் அனுசரித்தேன். என் கடையில் இருந்த மூன்று பேர்களைக் கஷ்டக் கூட்டாளிகளாக ஆக்கினேன். அவர்களுக்கு மாதம் தலா ரூ. 10, 8, 7 சம்பளமாகும். வியாபாரத்திற்கு முதல் ரூபாய் பத்தாயிரம்'.

'இலாபத்தில் முதலாளி என்கிற எனக்கு ஒரு பாகம்; என் முதலுக்கு ஒரு பாகம்; கஷ்டக் கூட்டாளிகள் மூவருக்கும் ஒரு பாகம் என்று அமுல் படுத்தினேன். அதாவது, என் கடையில் வரும் லாபத்தை 49 பாகமாகப் போட்டு ஒரு பாகம் சாமி கணக்குக்கும்; 16 பாகம் எனக்கு—பணப் பொறுப்புக்காகவும்; 16 பாகம் முதலீட்டுப் பணத்திற்காகவும்; மீதி 16 பாகம் கஷ்டக் கூட்டாளிகளுக்கு என்றும் பிரித்துக் கொடுத்தேன். தொழிலாளர் பிரச்சினை தீர இதுவே சிறந்த வழி என அப்போது முதல் கூறி வருகிறேன்'.

[உடையார்பாளையம் பருக்கலில், 3-6-1973-ல் சொற்பொழிவு, என் கைக் குறிப்பு]

அன்றியும் அவர் தொழிலாளர் நலனில் ஆர்வம் கொண்டு, 20-6-1926-ல் ஆலப்புழையில், தொழிலாளர் மாநாட்டுக்குத் தலைமை தாங்கியும் ('குடி அரசு' 23-6-1926); 25-6-1926-ல் நாகையில் தொழிலாளர் சங்க மாநாட்டில் பங்கு கொண்டும்;

அடுத்து நாகையில் 1927-ல் நடந்த இரயில்வே தொழிலாளர் கிளர்ச்சியில் பங்கேற்றும்—தொழிலாளர் உரிமைக்குப் போராடியவர் ஆவார்.

ஆதலின், அவர் மேற்கொண்ட தீவிர சமதர்மப் பிரசாரத்திற்கு ரஷ்யாவின் தூண்டுதல் காரணம் அல்ல என்பது அறியக் கிடக்கிறது.

அவர்தம் தீவிர சமதர்மப் பிரசாரத்தின் விளைவாக 1933-ல் தமிழ் நாட்டில் சுமார் 460 சமதர்மச் சங்கங்கள் செயல்பட்டு அவரை ஆதரித்து நின்றன.

அன்னார் தீவிர சமதர்மப் பிரசாரம் செய்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டு, 30-12-1933-ல் கைது செய்யப்பட்டார். 'இன்றைய ஆட்சிமுறை ஏன் ஒழியவேண்டும்?' என்ற தலைப்பில் 'குடி அரசு' ஏட்டில் தலையங்கம் வெளிப்படுத்தியது ராஜ துவேஷம் என்பதே அவர்பேரில் சாட்டப்பட்ட குற்றமாகும். அக் குற்றச்சாட்டின் பேரில் தண்டிக்கப்பட்டு, கோவைச் சிறைக்கு அனுப்பப்பட்டார். அப்போது அச் சிறையில் திரு. இராசகோபாலாச்சாரியாரும் சிறை வைக்கப்பட்டிருந்தார். அவர் எவ்வகையிலேனும் மீண்டும், பெரியாரைக் காங்கிரசுக்கு அழைத்துக்கொள்ள வேண்டுமெனத் திட்டமிட்டு ராஜி பேசலானார்; ராஜியின்படி, சில நிபந்தனைகளைப் பெரியாரிடம் எழுதி வாங்கினார்.

அவற்றுள் மிக முக்கியமானவை:

1. கடவுள்—மத எதிர்ப்பு விஷயங்களை அவரவர் தனிப்பட்ட விஷயமாக வைத்துக் கொள்ளவேண்டும்; பொது மேடையில் பிரசாரம் செய்வதில்லை.

2. அரசாங்கப் பதவி, உத்தியோகங்களில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவத்தை அமுல்படுத்த வேண்டும் என்பவையாம்.

இந்த நிபந்தனைகளுக்குக் காந்தியாரிடம் ஒப்புதல் பெறுவதாகப் பெரியாரிடம் ஆச்சாரியார் உறுதி கூறினார்.

அது சமயம் 1934-ல் தமிழ் நாட்டுக்கு வந்திருந்த காந்தியார் கோவையில் சர். ஆர். கே. சண்முகம் செட்டியார் வீட்டில் தங்கியிருந்தார். அவரிடம் பெரியாருடைய ராஜி நிபந்தனைகளைக் காட்டிய ஆச்சாரியார்—'வகுப்புரிமையை ஒப்புக்கொள்ளக் கூடாது' என காந்தியாருக்கு துர்போதனை செய்து அவர் ஒப்புக் கொள்ளாதபடிச் செய்து விட்டார். காந்தியார் ஒப்புக் கொள்ளாததால்—காங்கிரஸ் ஒப்புக் கொள்ளவில்லை என ஆகிவிட்டது. அத்துடன், 'காங்கிரஸ்–பெரியார் ராஜி பிரச்சினை' தீர்ந்து போயிற்று.

அது சமயம் இன்னொரு நிகழ்ச்சியும் நடந்தது. கோவை சர். ஆர். கே. சண்முகம் செட்டியாரிடம் அவர்தம் வீட்டில், காந்தியார் ஒரு வினாவை எழுப்பினார். 'நீங்கள் கூறும் சுயமரியாதைக் கொள்கைக்கு உங்களின் ஞானப்பிதா யார்? (Who is your god-father?) என்பதே அவ் வினாவாகும். அதற்கு, சர். ஆர். கே. சண்முகம், 'இந்தக் கொள்கைகள் என் மனதிற்குத் தோன்றியவை; இதில் முறைக்காக எனக்கு ஒரு தலைவர் உண்டு என்றால், அவர் ஈ. வெ. ராமசாமிதான்' எனப் பதில் மொழிந்தார். இந் நிலையில் தமிழகத்தில் பலவிடங்களுக்கும் சென்ற காந்தியாரை, ஆங்காங்கு சுயமரியாதைத் தொண்டர்கள் சந்தித்து வினாத்தொடுத்து உரையாடினர். காந்தியார் சுயமரியாதைக் கொள்கைகளைத் தாம் ஒப்புக் கொள்வதாகவும் கூற நேரிட்டது.

முன்னர் குறிக்கப்பட்ட, 'பெரியார்—ஆச்சாரியார் ராஜி நிபந்தனை'களை காங்கிரஸ் ஒப்பவில்லை எனக் கண்டோம். அதே சமயத்தில் நீதிக் கட்சிக்குப் பெரியார் அனுப்பிய வேலைத் திட்டம், 1934-ல் சென்னையில் நடந்த நீதிக் கட்சி மாநாட்டில் ஏற்றுக்கொள்ளப் பட்டு, அவற்றைச் செயற்படுத்த ஒரு குழுவும் அமைக்கப்பட்டது; அவர் தந்த 15 திட்டங்களை, 14-11-1935-ல் நீதிக் கட்சி ஏற்றுக்கொண்டது. பெரியார் மிகத் தீவிரமாக நீதிக் கட்சியை ஆதரித்து வந்தார். நிற்க.

அவர் அயல்நாடுகள் பயணம் முடிந்து திரும்பிய ஆறு மாத காலத்தில், 11-5-1933-ல் துணைவியார் நாகம்மையார் மறைந்தார். சுயமரியாதைத் தொண்டர் உலகம் கண்ணீர் வடித்தது; பெரியார் எழுதிய, 'நாகம்மாள் மறைவு' என்ற இரங்கல் தலையங்கம் சாகா இலக்கியமாக அமைந்தது. (இந்நூல் பக்கம் 1917–1918)

இதற்கிடையில் சுயமரியாதைக் கொள்கைகளையும் சமதர்மக் கொள்கைகளையும் அதி தீவிரமாகப் பிரசாரம் செய்ய விரும்பிய அவர், Revolt—ரிவோல்ட் ஆங்கில வார ஏடு (1928—30), 'புரட்சி' வார ஏடு (1933), 'பகுத்தறிவு' வார ஏடு (1934), 'பகுத்தறிவு' நாள் ஏடு (1934), 'பகுத்தறிவு' மாத ஏடு (1935) என மிகப் பல ஏடுகளைத் துவக்கி நடத்தினார்.

அவர்தம் தீவிர எண்ணத்தை மொழித் துறையிலும் புகுத்தினார். தம் வாழ்நாள் முழுதும் 'உயர் எண்ணங்கள் மலரும் சோலை' என்த் திகழ்ந்த பெரியார், தமிழ் நெடுங் கணக்கில் கையாளப்பட்டுவந்த எழுத்து முறைகளில் பலவற்றை மாற்றி அமைத்து, அதனை உலகுக்கு அறிவித்தார் ('பகுத்தறிவு' 30-12-1934).

அவ்வாறு செய்யப்பட்ட மாற்றங்கள் ஞ, ரு, ஞ என்ற எழுத்துக்களை ணா, றா, னா, எனவும்; ணை, லை, ளை, னை என்பவற்றை ணை, லை, ளை, னை எனவும்; பின்னர் ணொ, றொ, னொ என்பவற்றை ணொ, றொ, னொ எனவும் மாற்றி எழுதத் தொடங்கிய வையேயாம்.

தமிழ் எழுத்து முறை பல்வேறு காலங்களில் பல மாற்றங்களை அடைந்துள்ளது. எனினும், அச்சுக் கலையும், தட்டச்சுக் கலையும் வளரத் தலைப்பட்டபின்—அத் துறையில் முதன் முதல் மாற்றத்தை விளைத்தவர் பெரியாரே ஆவார். தமிழ் எழுத்துக் களின் மொத்த எண்ணிக்கையைக் குறைப்பதன் மூலம் அம்மொழியை எளிதில் கற்றுக் கொள்ளவும்; அச்சுக் கோப்பதிலும், தட்டச்சு (Typewriting) செய்வதிலும் எளிமையைப் புகுத்தவும் முடியும் என்பதை விளக்கிக் கூறினார். இம் மாற்றத்தை 13-1-1935 முதல் 'குடி அரசு' ஏட்டிலும் அறிவிப்புச் செய்து கையாண்ட அவர், தம் காலம் முழுதும் அப் புது முறையையே கையாண்டுவந்தார். அவர்தம் இயக்க ஏடுகள், நூல்கள் அனைத்தும் இன்றும் அம் முறையையே கைக்கொண்டுள்ளன; இயக்கத் தோழர்கள் பலரும் அவ்வாறு எழுதுவதையே பழக்கமாகக் கொண்டுள்ளனர். சமுதாய இழிவு ஒழிப்பின் ஒரு பகுதியாக, இரயில்வே நிலைய உணவு விடுதிகளில் 'பிராமணாள்'; 'இதராள்' எனப் பிரித்து உண்ணுமிடம் இருப்பதை எதிர்த்து 1938-ல் போராடி வெற்றி பெற்றார். இவை இருக்க.

1936–37 பொதுத் தேர்தலில் நீதிக் கட்சி படுதோல்வி அடைந்தது. அத் தேர்தலில் பல மாகாணங்களில் காங்கிரஸ் வெற்றி பெற்று, பல மாதங்கள் கழித்துப் பதவியேற்றது.

சென்னை மாகாணத்தில் ஆச்சாரியார் தலைமையில் அமைச்சரவை அமைக்கப் பெற்றது. அவரது அமைச்சரவையின் சாதனைகள் திராவிட மக்கட்கு வேதனை விளைவிப்பனவாக இருந்தன. அவ் வேதனை தரும் திட்டங்களைச் சாடி நாடெங்கும் எதிர்ப்புக் குரல் எழுப்பினார் பெரியார்.

அவர் 1940 வரை இடையறாது எதிர்த்துப் போராடிய அக் கொடுமைகள் யாவை என்பதைப் பின்வரும் அவரது பம்பாய்ச் சொற்பொழிவு நன்கு உணர்த்தும். அக் கொடுமை களாவன: (1) எட்டு அமைச்சர்கள், ஒரு மேலவைத் தலைவர், ஒரு சட்டமன்றத் தலைவர் ஆக பத்து அமைச்சுப் பதவிகளில் நூற்றுக்கு மூன்றுபேருள்ள பார்ப்பனருக்கு ஆறு இடங்கள் அளிக்கப்பட்டன; பார்ப்பனரல்லாதாருக்கு 4 இடங்களே தரப்பட்டன. (2) நீதிக் கட்சியினரால் கிராமப் புறங்களில் தோற்றுவிக்கப்பட்டிருந்த பள்ளிகளில் 2200-யை, போதிய பணவசதியில்லை என்ற போலிக் காரணம் காட்டி மூடிவிட்டனர்; ஆனால், அதே சமயம் பார்ப்பனர்களுக்காக 12 இலட்ச ரூபாய் செலவில் வேதபாடசாலை ஒன்றைப் புதிதாகத்

துவக்கினர்; அப் பாடசாலையிலிருந்த பெரிதும் பார்ப்பனரான ஆசிரியர்கட்கு மாதம் ரூபாய் 200 முதல் 600 வரை சம்பளம் அளித்தனர். (3) பொற்கொல்லர், கருமார் போன்றோர் அரசாங்கத்தில் பத்திரப் பதிவுக்கு வரும்போது, அவர்கள் 'ஆச்சாரி' எனக் கையொப்பமிட்டால், பதிவு செய்யக்கூடாது எனத் தனி அரசாங்க அறிவிப்பைச் செய்தனர்.

இவையன்றி, உயர்ந்த உத்தியோகங்களில் பார்ப்பனருக்குப் பெருவாரியாக இடங்கள் அளிக்கப்பட்டன. அப்போது சென்னை மாகாணத்திலிருந்த சுமார் 81 நகராட்சிகளில் 24 ஊர்களில் தலைவர்களாகவும், 16 நகரங்களில் துணைத் தலைவர்களாகவும் பார்ப்பனர் பதவி வகித்தனர்.

(Caste and Outcaste—by J. E. Sanjana, Bombay, 1946, pp 52–53.)

சமுதாயத்திலும், அரசியலிலும் காங்கிரஸ் ஆட்சியினால் இழைக்கப்பட்ட இக் கொடுமைகளை எதிர்த்து எவரும் போர்தொடுத்தாரல்லர்; பெரியாரவர்களே வன்மையாக எதிர்த்தார். அவற்றுள் தென்னாட்டையே கலக்கியதும், தமிழரிடையே ஒற்றுமை உணர்வையும் தமிழ் உணர்வையும் ஊட்டியதும் ஆகிய ஒன்று இந்தித் திணிப்பை எதிர்த்து பெரியார் தலைமையில் நடந்த மொழிப் போரேயாகும்.

ஆச்சாரியார், இந்தியாவிலேயே முதன் முதலாக, தென்னாட்டில் குறிப்பிட்ட சில பள்ளிகளில் இந்திமொழி கட்டாய பாடமாகக் கற்பிக்கப்பட வேண்டும் என ஆணையிட்டார்.

இந்தியைக் கட்டாயமாகத் திணிப்பது இந்துமதக் கலாசாரத்திற்குத் தொடர்ந்து ஆக்கம் தரும் என்றும்; வடவரின் அரசியல் ஆதிக்கம் இங்கு நிலைபெற வழிவகுக்கும் என்றும் தக்க ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டி இந்தியைப் பெரியார் எதிர்த்தார்.

அன்னாரின் தலைமையை ஏற்றுப் பேராசிரியர்கள், புலவர்கள், மக்கள் தலைவர்கள், அரசியல் விழிப்புள்ளவர்கள், தமிழ்ப் பெருமக்கள், மாணவர்கள் ஆகிய அனைத்துத் தரப்பினரும் அணிவகுத்து இந்தியை எதிர்த்துக் களம் புகுந்தனர். அனைத்துத் தமிழரும் ஈடுபட்ட அப் பெருங் கிளர்ச்சியில் 3-6-1938 முதல் தொடர்ந்து பலர் கைதாயினர்; தாய்மார்கள், குழந்தைகள் உட்பட 1269 பேர் சிறைப்படுத்தப்பட்டனர். சிறைக் கொடுமையின் விளைவாகச் சிறையிலேயே 1939 சனவரியில் தாளமுத்து, நடராசன் ஆகிய இளைஞர்கள் உயிர்நீத்தனர்; தமிழகமே கொந்தளித்தது.

இந்தியை எதிர்த்துப் புறப்பட்ட தமிழர் பெரும்படை, தமிழகத்தில் எங்கும் உணர்ச்சித் தீயை மூட்டிக்கொண்டே சென்றது; 11-9-1938-ல் சென்னை திருவல்லிக்கேணிக் கடற்கரையை முட்டிற்று. அப் பெரும் படையை அங்கு வரவேற்ற தமிழ்மக்கள் கடல் அலையோசையைப் புறங்காணும் தன்மையில், 'தமிழ் வாழ்க!'; 'இந்தி ஒழிக!' என முழக்கினர். அங்கேதான், முதன் முதலாகத் 'தமிழ்நாடு தமிழருக்கே!' என்ற தனித் தமிழ்நாடு உரிமைக் குரலைப் பெரியார் எழுப்பினார்.

இந்தியத் துணைக்கண்டத்தில் தனிச் சுதந்தர நாடு கோரி முதலில் குரல் கொடுத்தவர் பெரியாரே ஆவார். இந்த முழக்கத்தின் தோற்றுவாய் அவரைப் பொறுத்த வரையில் 1930-லேயே அமைந்ததாகும். 1930 மே திங்களில் சேலத்தில் நடைபெற்ற 'வன்னியர் மாநாடு' என்ற நிகழ்ச்சியில், 'இந்தியா ஒரு நாடா?' என்ற வினாவைத் தொடுத்தார் (இந்நூல் பக்கம் 649). அப்போது கருக்கொண்ட எண்ணம்தான் படிப்படியாக வளர்ந்து 1938-ல் 'தமிழ்நாடு தமிழருக்கே!' என முகிழ்த்தது.

இது கண்டு அஞ்சிய பார்ப்பனர் இக் கோரிக்கையை எதிர்க்க முடியாத நிலையில்—இதனை இழித்துப் பேசமுந்தி, 'தமிழ்நாடு தமிழருக்கே'—'எலிவளை எலிகளுக்கே!' என எழுதத் தலைப்பட்டனர். இது தமிழர் நெஞ்சங்களில் வெந்த புண்ணில் வேல் பாய்ச்சியதுபோல் ஆயிற்று.

வெந்த புண்ணில் வேல் பாய்ந்த சூழலில், 6-12-1938-ல் தந்தை பெரியார் இந்தி எதிர்ப்புக் காரணமாய் 2 ஆண்டு தண்டனையும் 2000 ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டார். பெரியார் பெல்லாரியில் சிறைவைக்கப்பட்டு, அச் சிறையில் நோய்ப்பட்டுத் துன்புறுவதை அறிந்த அனைத்துத் தமிழரும் உணர்ச்சிப் பிழம்புகளாயினர்.

பெரியார் சிறைக் காவலில் இருந்தபோதே 29-12-1938-ல் நீதிக் கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 29, 30-12-1938 தேதிகளில் நடைபெற்ற தென்னிந்திய நல உரிமைச் சங்க மாநாட்டுக்கு அவர் தலைவராவார். சிறையிலிருந்த வண்ணம் அவர் அனுப்பி வைத்த தலைமை உரையினை சர். ஏ. டி. பன்னீர்ச்செல்வம் பார்-அட்-லா அவர்கள் உணர்ச்சி ததும்ப மாநாட்டினர் முன் வைத்தார். அந்தத் தலைமை உரையிலும் 'தமிழ்நாடு தமிழருக்கே!' என்ற உரிமை முழக்கத்தினைப் பெரியார் கிளத்தினார்.

சிறையினின்று மீண்ட அவர், தென்னாட்டுத் திராவிடர் (தமிழர், கன்னடர், தெலுங்கர், கேரளர்) அனைவர்க்கும் சமுதாய விடுதலையும் அரசியல் உரிமையும் அளிக்கும் தன்மையில் 'திராவிடநாடு திராவிடருக்கே!' என்ற முழக்கத்தை இன அடிப்படையில் 1939-ல் எழுப்பினார் ('குடிஅரசு' 17-12-1939). இம் முழக்கம் வடவர் ஆதிக்கம் அடியோடு தகர்க்கப்பட வேண்டும் என்ற எண்ணத்தைத் திராவிடர் நெஞ்சங்களில்—குறிப்பாகத் தமிழர் நெஞ்சங்களில் நிலைநாட்டிற்று.

இச் சூழ்நிலையில் 5-1-1940-ல் வடநாட்டுச் சுற்றுப் பயணத்தை மேற்கொண்ட பெரியார், 8-1-1940-ல் பம்பாயில் அகில இந்திய முஸ்லிம் லீக் தலைவர் ஜனாப். முகமது அலி ஜின்னா அவர்களை அன்னாரது இல்லத்தில் சந்தித்தார்; அவரிடம் தாம் மேற்கொண்டுள்ள தனிநாடு தத்துவம் பற்றி விளக்கிக் கூறினார். வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த அச் சந்திப்பின்போது டாக்டர் பி. ஆர். அம்பேத்கார், பி. பாலசுப்ரமணியம், டி. ஏ. வி. நாதன் ஆகியோரும் உடனிருந்தனர். அச் சந்திப்புதான் 'அனைத்து இந்தியா—அல்லது ஒரே இந்தியா' என்ற தத்துவம் நொறுங்குவதற்கு மூலகாரணமாக அமைந்தது.

எவ்வாறெனின், 1940 பிப்ரவரி வரையில் இஸ்லாமிய கலாசாரப் பாதுகாப்பு இயக்கமாகவும்; இஸ்லாமியருக்கு அரசியல் பதவிகளிலும் உத்தியோகங்களிலும் விகிதாசாரப் பங்கு பெறும் அரசியல் கட்சியாகவும் விளங்கிய முஸ்லிம் லீக், 1940 மார்ச்சுத் திங்களில்தான், 'இஸ்லாமியர்களுக்குத் தனிநாடு வேண்டும்' எனக் கோரத் தீர்மானித்தது.

பிற்காலத்தில் இந்திய அரசியல் நிர்ணய சபையில் கூறப்பட்ட, இது தொடர்பான கீழ்க்கண்ட விவரம், இதனை ஒருவாறாக நமக்குப் புலப்படுத்துகிறது.

அதாவது: 'பாகிஸ்தான் என்பது குறித்து 1940 மார்ச்சில், முஸ்லிம் லீக் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. அவ்வாறு தீர்மானம் நிறைவேற்றப்படுகிற வரையில், அந்த அரசியல் ஸ்தாபனமானது—இந்த நாட்டுக்கு ஒரு அரசியல் நிர்ணயசபை அமைக்கப் படுவதானது பொருத்தமானதும் தக்கதுமான ஒரு நடைமுறையாகும் என ஒப்புக் கொள்ளவில்லை. அவ்வாறு அந்தத் தீர்மானத்தை நிறைவேற்றிய பின்னர், ஒருவகையில், முஸ்லிம் லீகின் போக்கில் ஒரு மாற்றம் விளைந்தது. அம் மாற்றம் அரசியல் நிர்ணயசபை வேண்டும் என்பதற்கு ஆதரவாக அமைந்தது; ஆயினும் தனி முஸ்லிம் நாடு என்பதாக—முஸ்லிம் லீகினர் கோரிய பிரதேசத்தைக் கொண்ட பகுதிக்கு ஒரு அரசியல் நிர்ணய சபையும், மீதிப் பிரதேசத்தைக் கொண்ட இந்தியாவுக்கு வேறொரு அரசியல் நிர்ணய சபையும் வேண்டும் என்றே முஸ்லிம் லீக் கோரியது' என்பதேயாம். [இந்திய அரசியல் நிர்ணயசபைத் தலைவர் டாக்டர் எஸ். சின்ஹாவின் துவக்க உரை, 9-12-1946; 'இந்திய அரசியல் சட்ட ஆவணங்கள்'—முன்ஷி தொகுப்பு, தொகுதி 2, பக்கம் 84; முதற் பதிப்பு (ஆங்கிலம்) 1967].

'But until the adoption of the resolution on Pakistan, in March 1940, by the Muslim League, that political organization had not favoured the

idea of a Constituent Assembly as a proper and suitable method for framing a Constitution for this country. After the adoption of that resolution, however, the attitude of the Muslim League seems to have undergone a change in favour of the idea of a Constituent Assembly, one for the areas claimed by the League for a separate Muslim State, and the other for the rest of India' (Inaugural address of the Chairman Dr. S. Sinha, on 9-12-1946, Indian Constituent Assembly—'Indian Constitutional Documents, Munshi Papers, Volume II, page 84, Edition 1967).

இதுகாறும் கண்டவாறு, 1925 முதல் 1938 வரையில் தமிழகமெங்கும் சுயமரியாதைச் சங்கம், சுயமரியாதை வாலிபர் சங்கம், பார்ப்பனரல்லாதார் சங்கம், பார்ப்பனரல்லாத வாலிபர் சங்கம் என்ற பெயர்களிலும்; சமதர்மச் சங்கம், உண்மை நாடுவோர் சங்கம், தாராள சிந்தனையாளர் கழகம், பகுத்தறிவாளர் கழகம், தமிழர் கழகம் என்ற பெயர்களிலும் ஆயிரக்கணக்கான சங்கங்கள் தோன்ற மூல காரணராக இருந்த பெரியார், 1939-க்குப் பின்னர், 'பார்ப்பனரல்லாதார்' என்ற பேரால் திராவிட இன மக்களைக் குறிப்பது பொருந்தாதது என்பதை எடுத்துக் காட்டினார்.

மிகச் சிறுபான்மையினராக உள்ள பார்ப்பனரைக் குறிப்பிட்டு, அவர்களை முன் வைத்து—மிகப் பெரும்பான்மையினராக உள்ள நம் இன மக்கட்குப் பெயரிடுவது அவமானம் என்பதை விளக்கினார்.

பார்ப்பனரல்லாதார் அமைப்புக்கு, 'திராவிடர் கழகம்' என்று பெயரிடுதல் இன உணர்வினை ஊட்டவல்லது என எடுத்தியம்பினார். ஆரியர்–திராவிடர்; பார்ப்பனர்–திராவிடர் என்ற தன்மையில் வாழ்வின் அனைத்துத் துறைகளையும் நோக்கும் பான்மையை வலியுறுத்தினார்.

இதன் விளைவாக 'திராவிடர்' என்ற இன உணர்வு முன்னிலும் தீவிரமாக சென்னை மாகாணம் முழுவதிலும் பரவலாயிற்று. 1941 முதல் தென்னிந்திய நல உரிமைச் சங்கம் என்பது போன்ற பெயர்களிலிருந்த அமைப்புகள், 'திராவிடர் கழகம்' எனப் பெயர்களை மாற்றி அமைக்கத் தலைப்பட்டன.

அதுசமயம், 13-2-1944-ல் சென்னையில் திரு. சி. என். அண்ணாதுரை தலைமையில் நீதிக் கட்சி மாநாடு நடந்தது. அம் மாநாட்டில், 'தென்னிந்திய நல உரிமைச் சங்கம் என்பதை—'சென்னை மாகாண திராவிடர் கட்சி' என்று மாற்றுமாறு, சேலத்தில் நடைபெறப்போகும் மாகாண மாநாட்டிற்கு இம் மாநாடு தெரிவித்துக்கொள்கிறது' என ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. [தீர்மானம் 1; 'குடிஅரசு'—26-2-1944]

சேலத்தில் நடைபெறவிருந்த மாநாட்டின் மூலம் பெரியார் அவர்களின் தலைமையை மாற்றிவிடவேண்டும் என முக்கிய தலைவர்கள் பலரும் முயன்றனர். ஆயினும் தஞ்சை, திருச்சி மாவட்டங்களைச் சார்ந்த சுயமரியாதைத் தொண்டர்களும், மாகாணம் முழுவதிலுமிருந்து சென்ற இயக்கத்தினரும் சேலத்தில் பெரியாருக்குத் தோற்றுவிக்கப்பட இருந்த எதிர்ப்பைத் தூசாக ஊதிவிட்டனர்.

27-8-1944-ல் சேலத்தில் நடைபெற்ற அம் மாநாட்டில், 'தென்னிந்திய நல உரிமைச் சங்கம்' என்ற பெயர் அதிகார பூர்வமாக, 'திராவிடர் கழகம்' என மாற்றப்பெற்றது. அத் தீர்மானம் 'அண்ணாதுரை தீர்மானம்' என்று பெயரிடப்பட்டது.

அச் சமயம் 27-12-1944-ல் கல்கத்தாவில் நடைபெற்ற திரு. எம். என். ராயின் ரேடிகல் டெமாக்ரடிக் கட்சி மாநாட்டிலும், 29-12-1944-ல் கான்பூரில் நடைபெற்ற பார்ப்பனரல்லாத பிற்பட்ட வகுப்பினர் மாநாட்டிலும் கலந்துகொண்டு வடநாட்டிலும் பிரசாரப் பணி புரிந்து, 1-1-1945-ல் தமிழகம் வந்தடைந்தார், பெரியார்.

29, 30-9-1945-ல் திருச்சியில் நடைபெற்ற மாகாண மாநாட்டில், சேலம் மாநாட்டுத் தீர்மானங்கள் ஏற்கப்பட்டதுடன், மாகாண திராவிட விடுதலைப் படையாகக் 'கறுப்புச் சட்டைத் தொண்டர் படை' ஒன்று அமைக்கவும் முடிவெடுக்கப்பட்டது.

அம் மாநாட்டிற்குப் பின்னர்தான் கறுப்பு—மையத்தில் சிவப்பு வட்டம் உள்ள கொடி உருவாக்கப்பட்டது. 'கொடி' பற்றிய விளக்கம் இங்குக் காணப்படுதல் நலந்தரும்.

சுயமரியாதை இயக்கம் தோற்றுவிக்கப்பட்ட பின்னர் பல மாநாடுகளில் கொடி ஏற்றம் நடைபெற்றுள்ளது. ஆனால், அக் கொடியின் அமைப்பு குறித்து ஏதும் அறிய முடியவில்லை. இது வருந்தத்தக்கதேயாகும்.

17-2-1929-ல் செங்கற்பட்டு மாநாட்டில் 'சுயமரியாதைக் கொடி' என்ற பெயரால் ஏற்றப்பட்ட கொடி பெரியாரின் சுயமரியாதைக் கொள்கையை இலட்சியமாகக் கொண்டதன்று; அது திரு. ஜெ. எஸ். கண்ணப்பரால் உருவகப்படுத்தப்பட்டது; ஆயினும் அந் நிகழ்ச்சியில் அது இடம் பெற்றது. இதனைப் பெரியார் எனக்கு உணர்த்தினார்.

தென்னிந்திய நல உரிமைச் சங்கத்தின் தராசுக் கொடி சமநீதிக் கோரிக்கையைக் குறிப்பதாகும். பெரியார் அவர்கள் 1938-ல் நீதிக் கட்சியின் தலைவரானவுடன் அதுவே நம் இயக்கக் கொடி ஆயிற்று.

'தென்னிந்திய நல உரிமைச் சங்கம்', திராவிடர் கழகம் எனப் பெயர் மாற்றம் பெற்ற பின்னர் 1946-ல் உருவாக்கப்பட்டதே இன்றைய திராவிடர் கழகக் கொடியாகும். இக் கொடியின் அளவு மூன்றுக்கு இரண்டு என்ற விகிதத்தில் அமைந்தது; நடுவில் வட்டமான சிவப்பும், மீதிப் பாகம் முழுவதும் கறுப்புமாக அமைந்தது.

கறுப்பு—திராவிடரைக் கவ்வியுள்ள இழிவினைக் குறிப்பது; சிவப்பு—இழிவு நீங்கிப் புரட்சி மலருவதைக் குறிப்பது.

உலகப் புரட்சி இயக்கங்களுக்கு ஒப்பாகக் கொள்கைகள்—கொடி–தொண்டர் உடை முதலானவற்றை அமைத்து எழுச்சியுடன் திராவிடர் கழகம் செயல்பட முனைந்தது. தமிழகத்தின் எல்லா மாவட்டங்களிலும் திராவிடர் கழக மாநாடுகள் நடத்தப்பெற்றன. திராவிட மாணவர் கழகம், திராவிட இளைஞர் கழகம், திராவிட நடிகர் கழகம் என்ற இனக் குறி கொண்ட பெயர்களில் நாடோறும் கிளைகள் முகிழ்த்தன.

அன்றியும், பெரியார் அவர்களின் இந்தி எதிர்ப்பின் பயனாக விளைந்த தமிழ் மொழி உணர்வு—ஆரிய மொழி, ஆரியர் எதிர்ப்பு உணர்வாகவும்; ஆரிய கலாச்சார எதிர்ப்பு, வட மொழி இசை எதிர்ப்பு, ஆரியக் கலைஞர்கள் எதிர்ப்பு உணர்வாகவும் பரிணமித்தது. ஆங்காங்கு தமிழர் கழகம், தமிழ் இசைச் சங்கம், தமிழர் ஆராய்ச்சிக் கழகம், தமிழர் நல்வாழ்க்கைக் கழகம் முதலியன விரைந்து தோன்றிச் செயல்பட்டன.

இத்துணை எழுச்சிக்கும் அடித்தளமாக அமைந்தது, சுமார் 20 ஆண்டு காலம் பெரியார் மேற்கொண்ட சுயமரியாதைப் பிரசாரத்தால் விளைந்த—ஆரிய எதிர்ப்பு, ஆரிய கலாச்சார அழிப்பு; மூடநம்பிக்கை ஒழிப்பு, சமுதாய இழிவுக்குக் காரணமான இழி வழக்கங்கள் ஆகியவற்றை அழித்தல்—முதலான தன்மான உணர்வு வளர்ச்சி எனும் செயற்கரும் செயலே ஆகும்.

இங்கு 1940-க்குப் பின் உருவான அரசியல் நிலையும் கருதத் தக்கதாகும்.

இரண்டாம் உலகப் போர் 1939 செப்டம்பர் 3-ல் மூண்டது. உலக நாடுகள் அச்சு நாடுகள், நேச நாடுகள் என இரு கூறாகப் பிரிந்தன. இந்தியாவில், பார்ப்பனரும்—இந்தியக் காங்கிரசாரும் இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி பிரிட்டிஷ் ஆட்சியை ஒழித்து ஜப்பான் ஆட்சியையோ, ஜெர்மன் ஆட்சியையோ கொணர அல்லும் பகலும் முயன்றனர்.

6

சென்னை மாகாணத்தில் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவச் சட்டம், சமூக இழிவு நீக்கச் சட்டங்கள் ஆகியவற்றைத் துணிவுடன் இயற்றிய நீதிக் கட்சியின் வலிவு ஓய்ந்து, திராவிடர் கழகமாக உருவாகிக்கொண்டிருந்த சமயம். இச் சமயத்தில் தோன்றிய இந்தி எதிர்ப்பும், காங்கிரசின் சாதனைகள் கண்டனமும் பெரியாரின் இயக்கத்திற்கும், தலைமைக்கும் மகத்தான வலிவையும் பொலிவையும் ஊட்டின. ஆச்சாரியார் செல்லும் இடங்களில் வெளியில் அவர் தைரியமாக நடமாட முடியாத நிலையைத் தமிழ் மக்கள் உருவாக்கினர்.

ஏற்கனவே, நீதிக் கட்சியின் சாதனைகட்குப் பிரிட்டிஷ் ஆட்சி பெரிதும் துணை நின்றது. இதனைக் குறிப்பிட்டு, நீதிக் கட்சியினர் பிரிட்டிஷாரின் வால்பிடிப்பவர்கள் என்றும், காங்கிரஸ் கோரிய சுதந்தரத்திற்கு எதிர்ப்பானவர்கள் என்றும் கூறி வெறுப் பூட்டும் பிரசாரத்தில் காங்கிரஸ் ஈடுபட்டது.

இத்தகைய சூழல்களில் கணமேனும் ஆட்சியில் நீடிக்க இயலாத நிலைக்கு ஆச்சாரியார் ஆளானார்.

'உலகப் போரில், இந்திய மக்களின் அபிப்பிராயத்தைப் பெறாமலே இந்தியரை ஈடுபடுத்தியதாகக்' கூறி, காங்கிரஸ், இந்தியா முழுவதிலும் ஆட்சியைக் கைவிட்டு வெளியேறியது. இங்கும் ஆச்சாரியார், 27-10-1939-ல் பதவியை விட்டு விலகினார்.

'இனி இந்திப் போரை நிறுத்தி வையுங்கள்' என, 31-10-1939-ல் தமிழ்ப்பெரு மக்கட்குப் பெரியார் வேண்டுகோள் விடுத்தார்; போர் அன்றே நிறுத்திவைக்கப்பட்டது.

அன்றையப் பிரதான எதிர்க் கட்சித் தலைவர் பெரியார் அவர்களே ஆவார். அவரது வடநாட்டுப் பயணம் 1940 சனவரியில் முடிந்து திரும்பியவுடன், இந்தியை அகற்றக் கோரி அரசுக்குப் பல எச்சரிக்கைகள் விடுத்தார். 21-2-1940-ல், கவர்னர் ஆணையினால் கட்டாய இந்தி அகற்றப்பட்டது.

திராவிடர் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தனர். திரு. ஜின்னா போன்றோரும் பெரியாரைப் பாராட்டினர்.

பெரியாரவர்களின் பெருஞ் செல்வாக்கைக் கண்ட பிரிட்டிஷ் அரசு 1940-லும், 1942-லும்—இருமுறை கவர்னர் ஜெனரல்களையும், கவர்னர்களையும் அனுப்பி சென்னை மாகாண ஆட்சிப் பொறுப்பை ஏற்கும்படி அவரை வேண்டிற்று. ஆச்சாரியாரே நேரில் வந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்குமாறு பெரியாரைக் கேட்டுக் கொண்டார்.

எனினும், தாம் மேற்கொண்டுள்ள சமூக இழிவு ஒழிப்புப் பணிக்கு—பதவி ஏற்பு என்பது இடையூறாக அமையும் என்பதைக்கூறி, பதவியைப் பெரியார் புறக்கணித்து விட்டார்.

இந்தியாவெங்கும், காங்கிரஸ், பிரிட்டிஷாருக்குப் போருக்கான உதவிகள் செய்யக் கூடாது எனக்கூறிச் செயல்பட்டது. தென்னாட்டில் நீதிக் கட்சித் தலைவர் பெரியாரும், வடநாட்டில் ரேடிகல் டெமாக்ரடிக் கட்சித் தலைவர் அறிஞர் எம். என். ராய் ஆகியோரும் போர் ஆயுத்தங்களில் பிரிட்டிஷாருக்கு மிக உதவியாக நின்றனர். திரு. எம். என். ராய் 1941 பிப்ரவரியில் சென்னையில் பெரியாரைச் சந்தித்து அகில இந்திய அளவில் காங்கிரசல்லாத கட்சிகளை ஒன்று திரட்ட முயற்சித்தார்.

இரண்டாம் உலகப் போரில் நாசிச இயக்கம் தோல்வி கண்டது.

உலகப் போர் துவக்கத்தில் பிரிட்டிஷார் தங்கள் காலனி நாடுகளுக்கு அளித்த வாக்குறுதியை மதித்து, காலனி நாடுகளை விட்டு வெளியேறுவதென, போர் முடிந்த பின்னர் பிரிட்டிஷ் பாராளுமன்றம் தீர்மானித்தது; இந்தியாவை விட்டு வெளியேறவும் முடிவு செய்தது. அது சமயம் இந்தியப் பொதுத் தேர்தல், 1946-ல் நடந்து முடிந்திருந்தது.

அவ்வாறு பிரிட்டிஷார் வெளியேறுங்கால் தங்கள் தங்கள் நாடுகளை அவரவர் வசம் ஒப்படைக்க வேண்டுமெனக் காங்கிரசாரும், முஸ்லிம் லீக்கினரும், சீக்கியரும், பெரியாரும் கோரியிருந்தனர். ஏற்கனவே 1939-ல் பெரியார் அவர்கள் சர் ஸ்டாபோர்டு கிரிப்ஸை நேரில் சந்தித்து, திராவிட நாடு பிரிவினையை வலியுறுத்தி யிருந்தார்.

ஆயினும், பிரிட்டிஷார் 1935ஆம் ஆண்டைய இந்திய அரசு ஆக்ட்டின் அடிப் படையில் இந்திய மக்களை: (1) சாதி இந்துக்கள் (2) இஸ்லாமியர்கள் (3) சீக்கியர்கள் (4) தாழ்த்தப்பட்டவர்கள் (5) அய்ரோப்பியர் என்ற பிரிவுகளின்படியே அரசியல் காரியங் களுக்கு ஒப்புக்கொள்வதாக அறிவித்தனர். இதனை லார்ட் வேவல் 14-6-1945-ல் வானொலிப் பேச்சில் வெளிப்படையாக அறிவித்தார்.

இறுதியில், இந்தியாவை மத அடிப்படையில் இந்துக்கள் நாடு, முஸ்லிம்கள் நாடு எனக்கொண்டு—இந்தியாவின் பெரும்பகுதியை, ‘இந்துக்கள் நாடு’ எனக் கொள்ளத்தக்க வண்ணம் காங்கிரசார் வசம் ஒப்படைத்துவிட்டு வெள்ளையர் வெளியேறினர். இங்கு பெரியாருக்கு வெள்ளையர் அளித்திருந்த வாக்குறுதியைக் காப்பாற்றத் தவறிவிட்டனர் என்பது கண்கூடு.

வெள்ளையர் 15-8-1947-ல் வெளியேறினர். ஆயினும் அவர்கள் விடுதலைப் பிரகடனம் அளிப்பதற்கு வெகு நாட்கட்கு முன்னரே, 1946 டிசம்பர் 9 அன்றே—‘இந்திய அரசியல் நிர்ணயசபை’ என்ற பேரால்—ஏற்கனவே தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த சட்டசபை உறுப்பினர்களைக் கொண்டு பொறுக்கி எடுக்கப்பட்ட அங்கத்தினர்களைக் கொண்டு, அரசியல் சட்டம் இயற்றக் காங்கிரசார் தலைப்பட்டனர்.

அந்த ஏற்பாடு மோசடியானது என உணர்ந்த பெரியார் 1946 முதலே அதனை வன்மையாக எதிர்த்து வந்தார். அன்றியும், ‘வெள்ளையர் வெளியேறிய நாள்—திராவிட ருக்கு விடுதலை நாள் அல்லவென்றும், துக்கநாளே ஆகும் என்றும்; வெள்ளிப் பூண் பூட்டிய பழைய அடிமை விலங்கு மாற்றப்பட்டு, தங்கப் பூண் பூட்டிய புது விலங்கு பூட்டப் பட்ட நாளே அதுவாகும்’ என்றும் விளக்கிக் கூறி, ‘15-8-1947—திராவிடருக்குத் துக்க நாள்’ என அறிக்கை விடுத்தார்.

இதன் விளைவாக, திராவிடர் இயக்கத்தில் ஒரு சலசலப்புத் தோன்றியது. இதன் பின்னணியைச் சிறிது காண்பது நலம்.

திராவிடர் இயக்கம் 1940 ஆகஸ்டில் திருவாரூரில் நடைபெற்ற மாகாண 15-வது ஜஸ்டிஸ் மாநாட்டுக்குப் பின்னர், ‘திராவிடநாடு திராவிடருக்கே!’ என்ற கோரிக்கையை மிகத் தீவிரமாகப் பரப்பி வந்தது.

1944 சேலம் மாநாடு, 1945 திருச்சி மாநாடுகளுக்குப் பின்னர் ‘திராவிடர் கழகம்’; ‘கறுஞ் சட்டைத் தொண்டர் படை’ இவை அபரிமிதமான செல்வாக்குப் பெற்றன.

11-5-1946-ல் மதுரையில் நடைபெற்ற கறுஞ் சட்டைப் படை மாநாட்டின் பந்தல் எதிரிகளின் தீயிடுதலுக்கு உள்ளாக்கப்பட்டது; அக் கோர நிகழ்ச்சி திராவிடர் கழகத் தாரிடையே ஒரு புத்துணர்ச்சியைத் தோற்றுவித்தது.

அடுத்து, கடலூரில் நடைபெற்ற ‘திராவிடர் மாநாடு’ அனைத்துத் திராவிடர்க்கும் நாட்டுப் பிரிவினையில் ஒரு பேரார்வத்தை ஊட்டியது.

இத் தகைய பெருஞ் செல்வாக்குடன் இயக்கம் வளர்ந்த நிலையில், 1944 முதல் பெரியா ரிடம் கருத்து வேறுபாடு கொண்ட திரு. சி. என். அண்ணாதுரை, 1947 ஆகஸ்டில் வெள்ளையர் வெளியேறிய பிரச்சினை குறித்து—பெரியார் தலைவர் என்ற முறையில் எடுத்த முடிவுக்கு மாறாகக் கருத்து வெளியிட்டார். இதனால் கழகத்தவரிடையே தோன்றிய சலசலப்பு பெரியாரின் நிலைக்கு எந்தக் கேட்டையும் விளைக்கவில்லை.

பின்னர் 8, 9-5-1948-ல் தூத்துக்குடியில் நடைபெற்ற மாகாண மாநாடு இயக்க வரலாற்றில் என்றுமே நடந்திராத—மக்கள் வெள்ளம் பெருக்கெடுத்த மாபெரும் நிகழ்ச்சியாகத் திகழ்ந்து, காங்கிரஸ் திராவிடரிடையே ஒரு கலக்கத்தையும், பொது மக்களிடையே பெருவிழிப்பையும் உண்டாக்கியது.

இம் மாநாட்டுக்கு முன்னர் 2-3-1948-ல் கறுஞ் சட்டைத் தொண்டர் படையை அரசு தடைசெய்தது; நூற்றுக்கணக்கான ஊர்களில் கழகப் பணிமனைகள் சோதனையிடப் பட்டன; கழகப் பொறுப்பாளர்கள் வீடுகள் சோதனைக்குள்ளாயின.

'சுதந்தரம் வந்தது' என்ற பேரால், 1948-ல் காங்கிரஸ் ஆட்சி இந்தியை மீண்டும் திணித்தது. இதனை எதிர்க்கும் வகையில், 144 தடை உத்தரவைமீறி, கும்பகோணத்தில், திரு. சி. என். அண்ணாதுரையை முதல் தளபதியாகக் கொண்டு பெருங் கிளர்ச்சியைப் பெரியார் நடத்தினார்.

ஈரோட்டில் 1949-ல் நடைபெற்ற மாநாடு, திரு. சி. என். அண்ணாதுரை கலந்து கொண்ட முக்கிய மாநாடாகும்.

மேற்கண்ட மாநாட்டு நிகழ்ச்சிகள், அரசின் அடக்கு முறைகள், எதிரிகளின் நாச வேலைகள் இவை அத்துணையும் திராவிடரிடையே—குறிப்பாகக் கழகத்தாரிடையே வலுவான இன உணர்ச்சியையும், நாட்டுப் பிரிவினை எண்ணத்தையும், காங்கிரஸ் எதிர்ப்பு உணர்ச்சியையும் நிலைப்படுத்தி உச்சக் கட்டத்தில் கொண்டு நிறுத்தியிருந்தன.

இன உணர்வினை முழு அளவில் ஊட்டவிரும்பிய பெரியார்—அவ்வக் காலக் கட்டங் களில் அதற்கெனச் சில உத்திகளைக் கையாண்டார்.

சங்க காலந்தொட்டுப் புலவர்களின் சொத்தாக இருந்த திருக்குறள் நூலைப் பாமர மக்கள் பார்வையில் கொணர்ந்து நிறுத்தினார்.

இராமாயணம், பாரதம், கீதை முதலிய இதிகாசங்களைப் போற்றிய தமிழ்மக்கள் அவற்றைப் புறக்கணிக்க ஏதுவாக—1927 முதலே எழுத்து வாயிலாகவும், சொற்பொழிவுகள் மூலமாகவும் புத்தர் கொள்கைகளையும், திருக்குறளையும் மக்கள் முன் வைத்த அவர், 1948-ல் திருக்குறள் மாநாடு கூட்டினார்; 'திருக்குறள் நாள்' கொண்டாடச் செய்தார். தமிழ் மக்களை ஆரியப் பிடிப்பிலிருந்து விடுவிக்க அவர் கையாண்ட உத்திகள் பலவாம்; அவற்றுள் இதுவும் ஒன்றாகும்.

இதன் விளைவாகத் தமிழகப் பள்ளிகளிலும், மேடைகளிலும், பத்திரிகைகளிலும், நூல்களிலும் 'திருக்குறள்' சிறந்த செல்வாக்குப் பெற்றது; ஆரிய இதிகாச நூல்கள் ஓரளவு வெறுத்து ஒதுக்கப்பட்டன.

இவ்வாறாக, 1938-க்கும் 1948-க்கும் இடைப்பட்ட அந்தப் பத்தாண்டுகளில் ஓங்கி வளர்ந்த இன உணர்ச்சி—நாட்டுப் பிரிவினை உணர்ச்சி—ஆரிய எதிர்ப்புணர்வு—வடமொழி எதிர்ப்புணர்ச்சி—வடவர் ஆதிக்க எதிர்ப்பு உணர்வு முதலான இவை திராவிட இளைஞர் களிடையே நன்கு வேரூன்றி நின்றன.

இந்நிலையில், இயக்கப் பாதுகாப்புக்கு ஒரு ஏற்பாடு செய்கிற முறையில், 9-7-1949-ல், திரு. மணியம்மையை, பெரியார் திருமணம் செய்து கொண்டார். இச் சம்பவத்தை முன்னிறுத்தி இயக்கத்தின் முன்னணித் தோழர்களைத் துணையாகக்கொண்டு, திரு. சி. என். அண்ணாதுரை 17-9-1949-ல், 'திராவிட முன்னேற்றக் கழகம்' என்ற ஓர் தனி அமைப்பை ஏற்படுத்தினார். அவ் அமைப்பு பிற்காலத்தில் தேர்தலில் ஈடுபாடு கொண்டு, தமிழக ஆட்சியைக் கைக்கொண்டது; இன்று ஆட்சிப் பொறுப்பில் உள்ளது.

பெரியார் அவர்கள் தம் திருமணம் பற்றிய நிலையை விளக்கி 19-6-1949, 28-6-1949 தேதிகளிலும்; பின்னர் 2-7-1949, 31-7-1949, 1-8-1949, 5-8-1949, 18-9-1949 தேதிகளிலும்

'விடுதலை', 'குடிஅரசு' ஏடுகளில் அறிக்கைகளிட்டார்; இயக்கம் பாதுகாப்புடன் தொடர்ந்து பணியாற்றியது. தம்மால் நிறுவப்பட்ட சுயமரியாதை இயக்கத்தைப் பதிவு செய்யப் பல தடவைகள் விரும்பி முயற்சித்த பெரியார், 27-1-1945 'குடிஅரசு' மலரில் அதற்கான விவரங்களை அறிவித்தார். பின்னர் 23-9-1952-ல், 'பெரியார் சுயமரியாதைப் பிரசார நிறுவனம்' (Periyar Self-respect Propaganda Institution) எனப் பெயர் தந்து, அந் நிறுவனத்திற்கு முறைப்படி பொதுக் குழு, நிர்வாக சபை அங்கத்தினர்கள், டிரஸ்டிகள் என்ற அங்கங்களை அமைத்து, திருச்சியில் பதிவு செய்தார். இவை நிற்க.

இனி முன்னர்ச் சுட்டப்பட்ட இந்திய அரசியல் நிர்ணயச் சட்டம் பற்றியும், அதற்குத் தந்தை பெரியாரின் எதிர்ப்பு குறித்தும் தொடர்ந்து காண்போம். 1946-ல் செயல்படத் துவங்கிய அரசியல் நிர்ணய சபை அமைப்பையும், அதனால் உருவாக்கப்பட்ட சட்டங் களையும் நியாய பூர்வமான பல காரணங்களைக் காட்டிப் பெரியார் எதிர்த்தார். அவற்றுள் மிக முதன்மையான காரணம் ஒன்றுண்டு.

அதாவது, 'இந்தியா சுதந்தரம் பெற்றவுடன், வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை அளித்து அவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை அங்கத்தினர்களைக் கொண்டு—வெளியார் தலையீடின்றி, சுதந்தர இந்தியாவின் அரசியல் நிர்ணயச் சட்டம் உருவாக்கப் படும்' என இந்திய காங்கிரஸ் 1936 முதல் அதிகார பூர்வமாகக் கூறி வந்தது. திரு. ஜவஹர்லால் நேரு இந்த உறுதி மொழியைப் பல தடவைகள் கூறியுள்ளார்.

இதனைப் பின்வரும் சான்று உறுதிப்படுத்தும். அரசியல் நிர்ணயசபையைத் துவக்கிவைத்து 9-12-1946-ல் உரையாற்றிய சபைத் தலைவர் டாக்டர் எஸ். சின்ஹா குறிப்பிட்டுள்ளவாறு அதனை இங்குக் காண்போம்.

அச் சான்றாவது: 'முன்னர் நான் எடுத்துக்காட்டியுள்ள அத் தீர்மானங்களில், (1939 நவம்பரில் காங்கிரஸ் செயற்குழு நிறைவேற்றியதும், 1936-ல் பைஸ்பூர் காங்கிரஸ் மாநாடு நிறைவேற்றியதும்)—அரசியல் நிர்ணய சபையானது, வயது வந்தவர்களுக்கு வாக்குரிமை அளித்து அந்த அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படும் என (காங்கிரஸ்) பிரகடனம் செய்துள்ளது.' என்பதாகும்.

**'I may add that in the resolutions from which I have quoted above (those adopted at the Congress Working Committee of November 1939, and at the Faizpur Session of the Congress of 1936) it was declared that the Constituent Assembly should be elected on the basis of adult suffrage.'**

**(Inaugural address of the Chairman Dr. S. Sinha, in the Constituent Assembly—Indian Constitutional Documents, Volume II, Page 84).**

அவ்வாறு ஏற்கனவே காங்கிரசினால் அளிக்கப்பட்டிருந்த வாக்குறுதி முதல் கட்டத்தி லேயே மீறப்பட்டது. அன்றியும், இந்தியாவில் 100-க்கு 10 பேர்களுக்கே வாக்களிக்கப்பட் டிருந்த காலத்தில்—1945-46-ல் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களைக் கொண்டு, 1946 டிசம்பரி லேயே அரசியல் நிர்ணய சபையைக் கூட்டியது பெரிய அரசியல் மோசடியாகும் என்பதைப் பெரியார் எடுத்துக் காட்டினார்.

'அத் தன்மையில் உருவாக்கப்படும் அரசியல் சட்டம் திராவிட மக்களைக் கட்டுப் படுத்தாது' என அரசுக்கு எச்சரிக்கை விடுத்தார், பெரியார்.

மேற்காட்டிய தன்மையில் சுமார் 1082 நாட்களில் உருவாக்கப்பட்ட அச் சட்டத்தை ஒவ்வொரு நாளும் எதிர்த்தவர்—இந்தியா முழுவதிலும் பெரியார் ஒருவரேயாவார்.

அச் சட்டம் செய்து முடிக்கப்பட்டு 26-11-1949-ல் நிறைவேற்றப்பட்டது; 26-1-1950-ல் அது அமுலுக்கு வந்தது. அச் சட்டம் மோசடியானது எனவும், திராவிடர்க்குக் கேடு

சூழ்வது எனவும் பெரியார் 1946-லேயே எடுத்துக் காட்டியவண்ணம்—1950 சூனிலேயே அம் மோசடித்தன்மை தானே வெளிப்பட்டது.

1950 சூனில் சென்னை மாகாணத்தில் மருத்துவக் கல்லூரி, பொறியியல் கல்லூரிச் சேர்க்கைகளில் இடம் பெறாத இருவர், சென்னை உயர் நீதி மன்றத்தில் வழக்குத் தொடுத்தனர். சென்னை உயர் நீதி மன்றம், 'சென்னை மாகாண அரசு அமுல்படுத்தி வரும் வகுப்புவாரி உத்தரவு இந்திய அரசியல் சட்டத்திற்கு முரணானது' என 1950 சூலையில் தீர்ப்பு வழங்கியது.

1921-ல் உருவாக்கப்பட்டு, 1922, 1924-ல் உறுதி செய்யப்பட்டு, 1929 முதல் சென்னை மாகாணக் கல்வித் துறையிலும், உத்தியோகத் துறையிலும் அமுலில் இருந்த வகுப்புவாரி உத்தரவு—அந்த ஒரு தீர்ப்பின் மூலம் செல்லாததாக ஆக்கப்பட்டது.

திராவிடரின் உரிமைச் சாசனமான கம்யூனல் ஜி. ஓ. செல்லாது என்ற அத் தீர்ப்பை, பெரியார் வன்மையாக எதிர்த்தார்; சென்னை மாகாண ஆட்சியும் எதிர்த்தது. அத் தீர்ப்பை எதிர்த்து ஆட்சித் தரப்பில், டில்லி சுப்ரீம் கோர்ட்டுக்கு மேல் முறையீடு செய்யப்பட்டது.

இது சம்பந்தமான வழக்கில்—அரசியல் சட்ட வரைவுக் குழுவினருள் ஒருவராக இருந்த சர். அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் என்ற தென்னாட்டுப் பார்ப்பனர், சென்னை மாகாண அரசுத் தரப்புக்கு எதிராக, மனுதார் சார்பில் நின்று, அரசியல் சட்டப்படி வகுப்புரிமை உத்தரவு செல்லாது என வாதாடினார். அன்றியும், அவரால் பாதுகாக்கப் பட்ட இருவருள் ஒருவர், எழுத்து மூலமாக சென்னை அய்க்கோர்ட்டில் மனு தாக்கல் செய்ய வில்லை என்ற பெரிய மோசடி, பின்னர் சுப்ரீம் கோர்ட்டில், மாகாண ஆட்சித் தரப்பினரால் எடுத்துக் காட்டப்பட்டது.

பார்ப்பனரின் சூது மதியை விளக்க இவை போதிய சான்றுகளாம்.

எனவே, இக் கேடுகள் அத்துணையையும் எதிர்த்து, '14-8-1950-ல் நாடெங்கும் வகுப்புரிமை நாள் கொண்டாடுக !' என 8-8-1950-ல் வேண்டுகோள் விடுத்தார், பெரியார்.

பெரியாரின் வேண்டுகோளை ஏற்றுத் தமிழகமே திரண்டெழுந்தது. மாணவர்களும், பொது மக்களும்—கட்சிச் சார்பின்றி, 'அரசியல் சட்டம் ஒழிக' !; 'வகுப்புரிமை வேண்டும் !' என நாடெங்கும்—ஊர்தோறும் முழங்கினர்.

டில்லி சுப்ரீம் கோர்ட்டின் தீர்ப்பும் வகுப்புரிமைக்கு எதிராக அமைந்தது. அதனைத் துணையாகக் கொண்டு, 'வகுப்புவாரி உத்தரவை அமுல்படுத்துவது அரசியல் சட்டத் திற்கு முரணானது ஆதலின், அதனை நடைமுறைப் படுத்தக்கூடாது' என, மத்திய அரசு, 1950 செப்டம்பரில், மாகாண அரசுகளுக்குச் சுற்றறிக்கை விடுத்தது.

இப் பெருங் கேடு இழைக்கப்பட்ட நிலையில் பெரியார் மேலும் வீறுகொண்டு, '14-12-1950 அன்று வகுப்புரிமை நாள் கொண்டாடுக !' என 14-11-1950-ல் வேண்டுகோள் விடுத்தார். பார்ப்பனரல்லாதார் அனைவரும்—குறிப்பாக இளைஞர்கள் பெரியாருக்கு ஆதரவாகப் போர்க் கொடி உயர்த்தினர்.

அனைத்துக் கட்சித் திராவிடர்களையும் அழைத்து, திருச்சியில், 3-12-1950-ல் 'வகுப் புரிமை மாநாடு' ஒன்றைப் பெரிய அளவில் நடத்திப் பல முக்கிய தீர்மானங்களை நிறைவேற்றினார்.

வடநாட்டார் ஆதிக்கத்தை வீழ்த்தும் வகையில் வடநாட்டார் உணவுக் கடை, துணிக் கடை முன் மறியல் நடத்தி, வடநாட்டார் சுரண்டலைத் தடுக்க வேண்டுமென 1950 அக்டோபரில் அறிவித்தார். மத்திய அமைச்சர்கள் சென்னை மாகாணத்திற்கு வரும்போது கறுப்புக் கொடி காட்டி நம் வெறுப்பை உணர்த்தவேண்டும் எனக் கோரினார்.

அதுசமயம் தென்னாட்டுக்கு வந்த திரு. சர்தார் வல்லபாய் படேல் இங்கிருந்த கொந்தளிப்பைக் குறித்துத் தக்கார் மூலம் அறிந்து, தாமும் ஒரு பார்ப்பனரல்லாதார் என்பதை நினைவு கூர்ந்து, மத்திய அமைச்சரவையிலும், பாராளுமன்றத்திலும் பெரியாரின் கோரிக்கைக்கு வலுவுண்டாக்கி, இந்திய அரசியல் சட்டத்தின் விதி 15-ல், 4-வது உட்பிரிவாக ஒரு புதுப் பிரிவைத் திருத்தமாகக் கொணரச் செய்தார்.

அத் திருத்தமாவது :

விதி (15) (4) : 'குடி மக்களுள் சமூகத்திலும் கல்வியிலும் பின் தங்கியுள்ள எந்த வகுப்பினருக்கும்; அல்லது தாழ்த்தப்பட்ட மக்களுக்கும், பழங் குடியினருக்கும் அவர்களின் முன்னேற்றங் கருதி அரசு எந்தத் தனி ஏற்பாட்டினைச் செய்வதையும் இந்த விதியின் ஒரு பிரிவோ அல்லது விதி 29-ன் 2ஆவது உட்பிரிவோ தடை செய்யாது' என்பதாகும்.

**Article (15) (4): Nothing in this article or in clause (2) of article 29 shall prevent the State from making any special provision for the advancement of any socially and educationally backward classes of citizens or for the Scheduled castes and the Scheduled tribes.**

(Added by the Constitution First Amendment Act, 1951, s. 2; The Constitution of India, page 8, 1-3-1963 Edition)

இந்திய அரசியல் சட்டம் அமுல் செய்யப்பட்ட ஓராண்டு காலத்தில், 1951 பிப்ரவரியில் நிறைவேற்றப்பட்ட இந்தத் திருத்தமே—அரசியல் சட்டத்தில் செய்யப்பட்ட முதல் திருத்தம் ஆகும் என்பது இங்கு நினைவில் வைக்கத்தக்கது.

பெரியார் குவித்த இப் பெரு வெற்றிக்குப் பின்னர், வயது வந்தோருக்கு வாக்களித்து நடந்த முதல் பொதுத் தேர்தல், இந்தியாவில், 1952-ல் நடைபெற்றது.

தென்னாடு முழுதும் தந்தை பெரியாரின் அணியில் நின்று காங்கிரசை எதிர்த்தது. காங்கிரசை எதிர்த்த கட்சிகள், அய்க்கிய முன்னணி என்ற ஓர் அமைப்பை 21-10-1951-ல் தோற்றுவித்துச் செயல்பட்டன. சென்னை மாகாணத்திற்குரிய 375 சட்டசபை இடங்களில், காங்கிரசல்லாதார் 223 இடங்களையும், காங்கிரசார் 152 இடங்களையும் பெற்றனர்.

எனினும், பெரியாரின் வகுப்புரிமைக் கொள்கையை அமுல் படுத்துவது பற்றி, அய்க்கிய முன்னணியினரிடையே கருத்து வேறுபாடு உண்டானமையால், காங்கிரசல்லாதார் பிரிவினைப்பட்டனர். இப் பிரச்சினையில் இந்த நாட்டுப் பொதுவுடைமைக் கட்சியினரே பெருங்கேடு சூழ்ந்தனர்; அவர்கள் வேளாண்மைத் தொழிலாளரிடையேயும் தவறான செயல்முறைகளைப் புகுத்தி நாட்டின் அமைதிக்குக் கேடு தேடினர்.

இச் சூழ்நிலையில் ஆச்சாரியார் தலைமையில் சிறுபான்மையான காங்கிரஸ் கட்சி ஆட்சிக்கு வந்தது.

1952-ல் ஆட்சிக்கு வந்த ஆச்சாரியார்—1938-ல் செய்தது போன்றே, திராவிடரின் கல்வித்துறை வளர்ச்சியைப் பாழ்படுத்தும் வண்ணம் 6000 கிராமப் புறப் பள்ளிகளை மூடினார். மீதியிருந்த பள்ளிகளில் அரைநேரம் படிப்பு கற்பிக்கவேண்டுமெனவும்; மீதி அரைநேரம் அவரவர் சாதித் தொழிலைச் செய்யும் வண்ணம் ஆசிரியர்கள் கண்காணிக்க வேண்டுமெனவும் ஆணையிட்டார்.

தமிழகமெங்கும்—கட்சி வேறுபாடு கருதாமல் மக்கள் தலைவர்களும், ஆடவரும், பெண்டிரும் அந்த அரைநேர—குலக் கல்வித் திட்டத்தை ஒழிக்கக் கொதித்தெழுமாறு செய்தார், பெரியார். அக் கல்வித் திட்டத்தைக் காமராசரும் எதிர்த்தார்; பார்ப்பனரல்லாதார் காங்கிரஸ் ஏடுகளும் எதிர்த்தன.

ஊர்தோறும் கண்டனக் கூட்டங்கள் ; வட்டந்தோறும் எதிர்ப்பு மாநாடுகள் ; ஏடுகள் அனைத்திலும் கண்டனக் கணைகள் என நாடே ஒரு முகமாக ஆச்சாரியார் ஆட்சியை எதிர்த்து நின்றது ; அவரது கல்வித் திட்டத்தைக் கைவிடக் கோரி சட்டமன்றம் தீர்மானித்தது ; ஆச்சாரியார் எதற்கும் அசைந்தாரல்லர்.

சேலம் ஆத்தூரில் 10-10-1953, 11-10-1953-ல் நடைபெற்ற கழக மாநாடுகளில், 'கழக ஆண், பெண் அனைவரும் கத்தி வைத்துக் கொள்ளுங்கள்!' என வேண்டுகோள் விடுத்து, தீர்மானம் அறிவித்தார், பெரியார்.

எதற்கும் அஞ்சாத பார்ப்பனர் அம்முடிவு கண்டு அஞ்சினர் ; ஆச்சாரியாரைத் தஞ்சம் புகுந்தனர் ; அரைநேரக் குலக் கல்வியை ஒழித்தாவது தங்களை அபயம் காக்கும்படி அவரை வேண்டினர்.

தம் இன மக்கள் கலங்கி நின்றதைக் கண்ட ஆச்சாரியார், 1939-ல் வெளியேறியது போன்றே, 'உடல் நலமில்லை' எனப் போலிக் காரணங்காட்டி 1954 மார்ச்சில் வெளியேறினார். பார்ப்பனர் தோற்றனர் ; திராவிடர் வென்றனர். திராவிடர் பெற்ற வெற்றி நிலைத்த வெற்றியாக ஆக்கப்பட வேண்டுமெனப் பெரியார் முடிவெடுத்தார்.

ஆச்சாரியார் தம் சார்புள்ளவரையே முதலமைச்சராக்க முயன்றார். அதை அனுமதிக்க விரும்பாத திரு. கு. காமராசர், பெரியாரை அணுகினார் ; தம் விருப்பத்தைத் தெரிவித்தார் ; கல்வியிலும், அரசியல் பதவிகள் உத்தியோகங்களிலும் வகுப்புரிமையை அமுல்படுத்தத் தாம் விருப்பப்படுவதாகக் கூறினார் ; சட்டசபைக் காங்கிரஸ் கட்சித் தலைவராக அவர் ஆவதற்கு முன்னரே இந்த நிலைமை ஏற்பட்டது.

எனவே, தம் வாழ்நாளில் 25-11-1925 முதல் 12-4-1954 வரை சுமார் 29 ஆண்டு காலம் முழு மூச்சாகக் காங்கிரசை எதிர்த்த தந்தை பெரியார், காமராசரின் விருப்பத்தை மதித்து, அவருடைய ஆட்சிக்கு ஆதரவு அளிப்பதாக, அவர் பதவியேற்ற 13-4-1954-ல் பேரம்பலூரில், (என் தலைமையில் நடைபெற்ற) கல்வித்திட்ட எதிர்ப்பு மாநாட்டில் முதன் முதலாக அறிவித்தார்.

காஞ்சிபுரத்தில் 1925-ல் புறக்கணிக்கப்பட்ட பெரியாரின் தீர்மானம்—13-4-1954-ல் காங்கிரசினால் வலுவில் ஏற்றுக் கொள்ளப்படலாயிற்று. வகுப்புரிமைக் கோரிக்கையில் பெரியார் வென்றார் ; காங்கிரஸ் பணிந்தது.

இங்கு இன்னொரு விவரம் காணப்படவேண்டியதாகும்.

1952 பொதுத் தேர்தலில் அபரிமிதமான செல்வாக்குப்பெற்று மத்திய ஆட்சியை அமைத்த காங்கிரஸ், இந்தி மொழியைத் தென்னாட்டில் பரப்புவதில் முனைப்புக் காட்டியது. இரயில்வே நிலையங்கள், அஞ்சல் நிலையங்கள் போன்ற மத்திய அரசு அலுவலகங்களில் பெயர்ப் பலகைகளில் இந்திக்கு முதலிடம் தரப்பட்டது.

இக் கேட்டினை, மக்கட்கு விளக்கும் வண்ணம் 1952 ஆகஸ்டு 1, 1953 ஆகஸ்டு 1, 1954 ஆகஸ்டு 1 ஆகிய மூன்று தடவைகளிலும் தமிழகமெங்கும் உள்ள இரயில் நிலையப் பெயர்ப் பலகைகளில் உள்ள இந்திப் பெயரைத் தார்கொண்டு அழிக்கும் கிளர்ச்சியினைப் பெரியார் நடத்தினார். ஒவ்வொரு ஆண்டும் பல்லாயிரக்கணக்கான கறுஞ்சட்டை வீரர்கள் அமைதியான முறையில் இக் கிளர்ச்சியினை மேற்கொண்டு, தென்னாட்டு மக்கட்கு இந்தி ஆதிக்கத்தின் கொடுமையை விளக்கினர். இக் கிளர்ச்சியினைப் பலம் பெறாமல் தடுக்கும் வண்ணம்—1952, 1953-ல் எந்த நடவடிக்கையும் எடுக்காமல் ஆச்சாரியார் விடலானார் ; 1954-ல் காமராசரும் அவ்வாறே விடுத்தார்.

1953இல் தமிழகத்தின் முக்கிய தலைநகரங்களில் பிள்ளையார் உருவப் பொம்மை உடைப்புக் கிளர்ச்சியினையும் பெரியார் மேற்கொண்டார். இக் கிளர்ச்சிக்கு விளம்பரம்

வரக்கூடாது எனக் கருதி, அப்போதும் நடவடிக்கை ஏதும் தேவை இல்லை எனக் கூறி விட்டு, வாளாவிருந்தார் ஆச்சாரியார்.

இப் பெருங் கிளர்ச்சிகளுக்கிடையே—இந்தி ஆதிக்கத்தையும், வடவரின் ஆதிக்கத் தையும் ஒருசேர எதிர்க்கும் தன்மையில்—இந்த ஆதிக்கங்களுக்கு ஆதாரமான 'இந்திய அரசியல் சட்டத்தை எரிப்பேன்' என 1952-லேயே பெரியார் குறுணைத்தார் ('விடுதலை' 7–8–1952, 10–8–1952). கல்லூரி காணாத அப் பெருந்தகை முழக்கிய அக் கோட்பாட்டை—அதே தன்மையில் 1953-ல் டாக்டர் பி. ஆர். அம்பேத்கார் முழங்கினார்.

'அரசியல் சட்டத்தைக் கொளுத்தவும், நான் முதன்மையானவனாக இருப்பேன்' என 3–9–1953-ல், டில்லி ராஜ்ய சபையில் டாக்டர் அம்பேத்கார் அறிவித்தார். இந்திய அரசியல் சட்ட வரைவுக் குழுவின் தலைவராக இருந்து, அரசியல் சட்டத்தை உருவாக்கிய முக்கிய கர்த்தாவான டாக்டர் அம்பேத்கார் போன்ற மேதைகட்கும் முன்னோடியாக இத் துறையில் தந்தை பெரியார் விளங்கினார் எனின்—அவர்தம் சிந்தனை எத்துணைத் தூர நோக்கம் வாய்ந்தது என்பது நாம் அறியத்தக்கது. இவை இருக்க.

1954-ல் ஆட்சிக்கு வந்த காமராசர் 18–5–1954-ல் அரை நேரக் குலக் கல்வித் திட்டத்தை ஒழித்தார். தமிழர்கட்குக் கல்வித் துறையிலும் உத்தியோகத் துறையிலும் வகுப்புரிமை செம்மையாக அமுல்படுமாறு காத்து வந்தார். தமிழகம், கல்வித் துறையில் என்றுமில்லாத வேகத்தில் முன்னேற்றம் கண்டது.

முன்னர்ச் சுட்டப்பட்டவாறு, இந் நாட்டுப் பொதுவுடைமைக்காரர்களின் தவறான போக்கினால் இங்கு விளையக்கூடிய கேடுகளைக் களைய இரண்டு முக்கிய முடிவுகளைப் பெரியார் மேற்கொண்டார்.

இங்கு தொழிலாளர்கள்—விவசாயிகள் எனப்படுவோர் திராவிடரே என்பதை எடுத்துக்காட்டி—ஆதலின் எல்லாத் துறைகளிலும் 'திராவிட ஸ்தாபனங்களே' அமைய வேண்டும் என அறிவித்தார். 1952-ல் தமிழக மெங்கணும் திராவிட விவசாயிகள் சங்கம், திராவிட விவசாயத் தொழிலாளர்கள் சங்கம் எனஅமைத்தார். இவை வெறும் போட்டி அமைப்புகளாக இல்லாமல் உரிமை கோரும் அமைப்புகளாகச் செயல்பட்டன.

அவர்தம் இலட்சியமான, 'தொழிலாளிகட்குக் கூலி உயர்வு என்பது, தொழிலாளி என்ற இழிவை நிலைக்கச் செய்வதே ஆகும். விவசாயத் தொழிலாளிகள்—விவசாயத்தில் பங்குதாரர்களாக ஆக்கப்பட வேண்டும்' என்பதைக் கொள்கையாக அறிவித்தார். அவ் வாறு உரிமை வழங்கிச் சட்டங்களை இயற்றுமாறு அரசை வற்புறுத்தினார். அதன் விளைவாக, 'விவசாயத்தில், கண்டுமுதலில் விவசாயத் தொழிலாளிக்கு 60 பங்கும், நில உரிமையாளருக்கு 40 பங்கும் உரிமையாகும் எனவும்; விவசாயத் தொழிலாளியைக் காரணமின்றி நில உடைமையாளர் வெளியேற்றல்கூடாது' எனவும் சட்டம் இயற்றப்படக் காரணராக விளங்கினார்.

அதேபோல், மத்திய அரசுத் துறையிலும், இரயில்வே தொழிலாளர்களை இன அடிப்படையில் ஒன்று திரட்டி, 'தென் பகுதி இரயில்வே மென் யூனியன்' (Southern Railway Men Union) என்ற அமைப்பை உருவாக்கி, அத் துறையிலிருந்த சுய மரியாதைக்காரர்களும், ஏனையத் திராவிடரும் ஒன்றுபட வழிவகுத்தார். இந்த இரு அமைப்புகளின் மூலம், தமிழகத்தில் தொழிலாளரிடையே பொதுவுடைமைக்காரருக்கு இருந்த செல்வாக்கு இடுப்பொடியும் அளவுக்குச் சரிந்தது.

இரண்டாவதாக 1954-ல் நடைபெற்ற மாவட்ட மன்றத் தேர்தலில், 'வகுப்புரிமைக்கு எதிரானவர்களை திராவிடர் கழகம் ஆதரிக்காது' என்ற தீர்மானத்தைக் கழகத்தினருக்கு அறிவுரையாக விதித்து (பெரம்பலூர் மாநாடு 13–4–1954), அதனால் பொதுவுடைமையினர் புறக்கணிக்கப்பட வழிகண்டார்.

7

தமிழகத்தில் என்றும் இருந்திராத அளவுக்கு அமைதிச் சூழ்நிலையைப் பெரியார் உருவாக்கினார்.

இந் நிலையில் தூங்கும் புலியை இடறுவது போல், 1954-க்குப் பின், வடவர், இந்தி ஆதிக்க உணர்வினராய்ச் செயல்பட்டனர்; இந்தித் திணிப்புக்கு உரிய ஆணைகளைப் பிறப்பித்தனர். இதனைத் தடுத்து நிறுத்த காமராசராலோ, காங்கிரசாலோ இயலாது என்பது கண்கூடாயிற்று.

எனவே, வடவரின் முயற்சிக்குச் சம்மட்டி அடிதர விரும்பிய பெரியார், '1-8-1955-இல் இந்திய (அரசாங்க) தேசியக் கொடியை எரியுங்கள்' எனக் கழகத்தினருக்கு வேண்டுகோள் விடுத்தார். ஏறத்தாழப் பத்தாயிரம் கழகத்தினர் இடமும் காலமும் குறித்து—கொடி எரிப்புப் போருக்குப் பெயர்தந்து போராட்டத்துக்கு முன்வந்தனர்.

30-7-1955 வரையில், கொடி கொளுத்தும் தொண்டர்கள் ஊர் ஊராகச் சென்று மக்கள் ஆதரவைத் திரட்டி நின்றனர்.

எனினும், 'மத்திய—மாநில அரசுகளின் சார்பில்—இந்தி, தேர்வுக்குரிய பாடமாக இனி இராது' என, திரு. காமராசர் உறுதி அளித்ததன் பேரில், கொடி எரிப்புப் போராட்டத்தினைத் தற்காலிகமாக ஒத்திவைத்தார், பெரியார். களத்தில் நின்ற கறுஞ் சட்டை வீரர்கள் தலைவரின் ஆணைக்குத் தலைவணங்கி, களத்தினின்று அமைதியாக மீண்டனர். 'இந்தி'யைப் பொறுத்து 1967 மார்ச்சு வரையில் இந்த நிலையே தமிழகத்தில் நீடித்தது.

இதற்கிடையில் அறிவுப் பிரசாரத்துறையில் மேலும் ஒரு புதுத் திருப்பத்தை உண்டாக்க விரும்பிய பெரியார், 1927 முதல் 'குடி அரசு' மூலம் (3-7-1927) பரப்பிவந்த புத்தர் அறிவுக் கொள்கைக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து, அவற்றை மக்களிடையே பிரசாரம் செய்யத் திட்டமிட்டார்.

23-1-1954-ல் ஈரோட்டில் மிகப் பெரிய அளவில் புத்தர் கொள்கைப் பிரசார மாநாட்டினை நடத்தினார்; உலக பவுத்த சங்கத் தலைவரான டாக்டர் மல்லல சேகரா போன்றோரையும், பிற அறிஞர்களையும் அழைத்து, அறிவுக்கொள்கைப் பிரசாரத்துக்கு மேலும் புது முறுக்கு ஊட்டினார்.

இந்திய மண்ணில் அதுவரை மங்கிக் கிடந்த புத்தர்கொள்கைக்கு, அதன்பின்னரே, இந்திய அரசு ஏற்றங் கொடுத்தது; புத்தரின் 2500-ஆவது பிறந்தநாள் கொண்டாடப்படச் செய்தது.

புத்தர் கொள்கைக்கு இந்திய மண்ணில் செல்வாக்கு உண்டாக்கிய தந்தை பெரியார், மலேயாவுக்கு வருகைதருமாறு 1954 நவம்பரில் அழைக்கப்பட்டார்.

இரண்டாம் முறையாக மலேயாவுக்குச் சென்ற அவர், 3-12-1954-ல் பர்மாவில், ரங்கூனில் நடைபெற்ற உலக பவுத்த மாநாட்டில் சொற்பெருக்காற்றினார்; பல நாடுகளிலிருந்து வந்திருந்த பவுத்தத் தலைவர்களுடன் உரையாடினார்.

அங்கு 5-12-1954-ல் டாக்டர் அம்பேத்கார்—மதமாற்றம் செய்தாவது சமூக இழிவை ஒழித்துக்கொள்ள விரும்புவதாகவும்; தாம் பவுத்தராக மாறிவிட விரும்புவதாகவும்; பெரியாரும் பவுத்தராகவேண்டும் எனவும் தம் விருப்பத்தினைப் பெரியாரிடம் தெரிவித்தார்.

எனினும், பெரியார் மதமாற்றத்திற்கு உடன்பட்டாரல்லர். ஆயினும், டாக்டர் அம்பேத்காரிடம், 'நீங்கள் பவுத்த மதத்திற்கு மாறுவதானால், கணிசமான எண்ணிக்கையில் மக்களை உங்கள் வழியில் திருப்பி, பின்னர் சேருங்கள்' எனப் பெரியார் கேட்டுக் கொண்டார்.

இவ்வாறாக, தமிழகத்திலும், இந்தியாவிலும், அயல்நாடுகளிலும் அறிவியக்கம் வளர அவர் தொடர்ந்து அருந்தொண்டாற்றினார்.

அன்றியும், 1953-ல் தமிழர்க்கு நலன் தருவதான இன்னொரு பெரும் பணியினை ஆற்றினார்.

1953-ல் சென்னை மாகாணத்திலிருந்து, மொழி அடிப்படையில் ஆந்திர மாநிலம் பிரிந்தது. சென்னை நகரம் தமிழரிடத்திலிருந்து பறிபோகும் நிலை ஏற்பட்டது. பெரியாரின் துணிவான பணியும், மற்றப் பெருந் தலைவர்களின் முயற்சியும் தமிழர்க்கு சென்னை நகரம் தொடர்ந்து தக்கும் வாய்ப்பு ஏற்படச் செய்தன.

மொழிவாரியாக மாநிலங்கள் பிரிக்கப்படுவதைப் பெரியார் ஆதரித்தார். மொழிவாரி மாநிலங்கள் பிரிவினைக்குப் பின், 'திராவிடநாடு,' கோரிக்கையைப் புறக்கணித்து 'தனித் தமிழ்நாடு' கோரிக்கையை வற்புறுத்தினார்.

மொழிவாரி மாநிலங்கள் பிரிவினையால் பிரதேச உணர்ச்சி வளருவதாகக் கருதி, தென் மாநிலங்கள் நான்கினையும் இணைத்து, 'தட்சணப் பிரதேசம்' என ஒரு அமைப்பை ஏற்படுத்த மத்திய அரசு முயற்சி செய்தது. இந்த ஏற்பாடு காரணமாக ஆந்திரர், கன்னடர், கேரளர் ஆகியோரின் ஆதிக்கத்துக்குத் தமிழகம் அடிமைப்படும் என எடுத்துக் காட்டி இதனை வன்மையாக எதிர்த்தார், பெரியார்.

தட்சணப் பிரதேசம் குறித்து, இறுதி முடிவெடுக்க நடந்த மேல் மட்டக் காங்கிரஸ் தலைவர்கள் கூட்டம் பெங்களூரில் 1956 பிப்ரவரியில் நடந்துகொண்டிருந்தபோது, பின்வரும் தந்திச் செய்தியை திரு. காமராசருக்கும், திரு. நேருவுக்கும் அனுப்பினார், பெரியார்.

'தட்சணப் பிரதேச அமைப்பைத் தமிழர்கள்பேரில் சுமத்துவதானது—தமிழர்க்கும், தமிழ்நாட்டுக்கும், தற்கொலைக்கு ஒப்பானதாகும்' என்பதே அத் தந்திச் செய்தியின் சாரமாகும்.

அத் தந்தியின் விளைவாக, அந்த ஆலோசனைக் கூட்டத்திலேயே 'தட்சணப் பிரதேசம்' அமைக்கும் திட்டம் கைவிடப்பட்டது; தமிழர்க்கு நேர இருந்த பேரிடையூறு தவிர்க்கப்பட்டது.

அச் சமயம் முதற்கொண்டு 'தனித் தமிழ்நாடு' கோரிக்கையில் அதிகத் தீவிரம் கொண்டார், பெரியார்.

அன்றியும், இராமன் கடவுள் என்பதையும், இராமாயணம் நீதிநூல் என்பதையும் புரட்டுகள் என்பதைப் பல்லாண்டு காலம் கூறிவந்த அவர் 1956-ல் எல்லா முக்கிய ஊர்களிலும் இராமன் படத்தை எரிக்கச் செய்தார்.

அரசியல் உத்தியோகத் துறையில் பார்ப்பன அதிகாரிகளும் பார்ப்பன நீதிபதிகளும், பார்ப்பனப் பத்திரிகையாளர்களும் திராவிட மக்கட்கு இழைத்த கேடுகளைக் களைந்தார்.

இவ் வகையில் உயர் நீதிமன்றத் தீர்ப்பைத் துச்சமெனஎண்ணி, மக்கள் மன்றத்தில் அதனை விமர்சித்து, பாதிக்கப்பட்டவர்க்குப் பாதுகாப்பாக நின்ற சிறப்பான செயல்—இந்திய வரலாற்றில், 1956-ல் பெரியார் அவர்களால்தான் நிகழ்த்தப்பட்டது.

திராவிட அய். ஏ. எஸ். அதிகாரி ஒருவரைப் பழிவாங்கத் துணிந்த பார்ப்பன நீதிபதிகளின் இன அடிப்படையிலான உள்நோக்கத்தைக் கண்டு, அதை எடுத்துப் பிரசாரம் செய்தமைக்காக கோர்ட்டு அவமதிப்புக் குற்றம் சுமத்தப்பட்டு 1957-ல் பெரியார் தண்டிக்கப் பட்டார். அது தொடர்பாக சென்னை உயர்நீதிமன்றத்தில் அவர் தாக்கல் செய்த வாக்குமூலம்-இந்திய நீதித்துறை வரலாற்றில் முன்மாதிரி இருந்திராத ஒன்றாகும்; மேலும்,

சட்ட நுணுக்கம் நிறைந்ததும், பார்ப்பனரின் இனவெறியை வெளிப்படுத்துவதும், திராவிடரின் உரிமைகளைக் கோடிட்டுக் காட்டுவதும் ஆகும். [இந்நூல் பக்கம் 270–280]

அடுத்து 5-10-1957-ல் குளித்தலையிலும், 13-10-1957-ல் பசுபதிபாளையத்திலும், 20-10-1957-ல் திருச்சியிலும் பெரியார் ஆற்றிய சொற்பொழிவுகளில், 'பார்ப்பனரைக் குத்தச் சொன்னார்; வெட்டச் சொன்னார்' என மூன்று குற்றங்கள் சாட்டி ஒன்றறை ஆண்டு தண்டனை விதிக்கப்பட்டு, ஏககாலத்தில் 6 மாதம் அனுபவிக்கும்படி திருச்சி செஷன்ஸ் கோர்ட்டில் 14-12-1957-ல் தீர்ப்பளிக்கப்பட்டது.

இத் தீர்ப்பு அளிக்கப்படுவதற்கு முன்னால் 9-12-1957-ல் திருச்சிக்கு வந்த திரு. நேரு, பெரியாரவர்கள் 26-11-1957-ல் நிகழ்த்திய அரசியல் சட்ட எரிப்பைக் கண்டித்து, 'சட்டத்தை எரிப்பவர்கள் அறிவிலிகள் (Nonsense); சட்டம் பிடிக்கவில்லை என்பவர்கள் மூட்டை முடிச்சுகளுடன் நாட்டைவிட்டு வெளியேறட்டும்' என முழக்கி, மறைமுகமாக, பெரியார் தண்டிக்கப்படக் காரணரானார்.

திரு. நேரு சென்னைக்கு வந்தபோது, 'Nonsense Nehru, Go back!' 'முட்டாள் நேருவே, திரும்பிப் போ' என—தமிழ் மக்கள் திரண்டெழுந்து முழங்கி, அவரைத் திணற அடித்தனர்.

பெரியார் 13-5-1958-ல் விடுதலையானார்.

இத்துணைத் துன்பங்கட்கிடையேயும் சாதி ஒழிப்புக் கொள்கையினைத் தீவிரமாகச் செயற்படுத்த விரும்பினார் பெரியார்; சாதிக்குப் பாதுகாப்பாக உள்ள அடிப்படையையே பெயர்க்க விரும்பினார்; சாதிக்குப் பாதுகாப்பாக இந்திய அரசியல் சட்டம் உள்ளது என்பதை நாடெங்கும் எடுத்தியம்பினார்.

தமிழக வரலாற்றில் சிறப்புடையதாக—3-11-1957-ல் தஞ்சையில் பெரியாருக்கு எடைக்கு எடை வெள்ளி ரூபாய் அன்பளிப்பாக வழங்கப்பட்டது. அங்கு திரண்டிருந்த பல இலட்சம் திராவிட மக்களிடையே, சாதி ஒழிப்புக்கு அரியதொரு போராட்டத் திட்டத்தினைப் பெரியார் அறிவித்தார்.

'சாதிக்குப் பாதுகாப்பளிக்கும் இந்திய அரசியல் சட்டப் பகுதியை, அச் சட்டம் நிறைவேற்றப்பட்ட நவம்பர் 26-ல் எரிப்பது' என்பதே அப் போராட்டத் திட்டமாகும்.

அத் திட்டத்தினை ஏற்று, தமிழகம் முழுவதிலும் 26-11-1957-ல் சுமார் பத்தாயிரம் திராவிடர் கழகத்தினர்—ஆடவர், பெண்டிர், சிறுவர் உட்பட—அரசியல் சட்டத்தைக் கொளுத்தினர்.

அப் போராட்டம் அறிவிக்கப்பட்ட பின்னர், மாநில அரசு, 'தேசிய மரியாதை அவமதிப்புத் தடுப்புச் சட்டம்' (Prevention of Insult to National Honour Act, 1957) என்ற கொடுஞ் சட்டத்தை நிறைவேற்றி, கடுந் தண்டனை விதிக்க ஆயத்தம் செய்து கொண்டது. இந்தியாவில் குற்ற இயல் சட்டத்தில், இவ் வகையான காரியங்களுக்கு என்ன தண்டனை என்பது பற்றிய பேச்சுக்கே அன்றுவரை இடமில்லாதிருந்தது. அத்தன்மை கண்டு அரசே வெட்கப்பட்டது; 'தேசியத்தார்' தலை குனிந்தனர்.

இதனையெல்லாம் அறிந்த நிலையில்தான் 10 ஆயிரம் பேர் சட்டத்தைக் கொளுத்தினர். அவ்வாறு எரித்தவர்களுள் 2884 பேர் கைது செய்யப்பட்டதாக, டில்லி பாராளுமன்றத்தில் 4-12-1957-ல் அறிவிக்கப்பட்டது. ['விடுதலை'—5-12-1957]

இவர்கள் அனைவரும் இரண்டு மாதம் முதல் மூன்றாண்டுகள்வரை தண்டனை விதிக்கப்பட்டுச் சிறை ஏகினர். சிறையிலேயே இருவர் உயிர் துறந்தனர்; நோயுடன் விடுதலையான சின்னாட்கட்குள் சுமார் 20 பேர் உயிரிழந்தனர்; நீண்டகாலத் தண்டனைக்

குள்ளான பலர் வாழ்வில் நலிவுற்றனர். எனினும், எதற்கும் துவளாமல், தொடர்ந்து இயக்கப் பணிகளை மேற்கொண்டனர்.

இவ்வகையில், உலக வரலாற்றில், ஒரு நாட்டின் அரசியல் சட்டத்தை எரிப்பது என்கிற போராட்டத்தை மாபெரும் மக்கள் இயக்கமாக முதன்முதல் நிகழ்த்தியவர்—பெரியார் ஒருவரேயாவார்.

தென்னாட்டுத் திராவிடரிடையே சாதி ஒழிப்பு உணர்வை ஊட்டிய பெரியார், 1959 துவக்கத்தில் வடநாட்டுக்குச் சென்று லக்னோ, கான்பூர் முதலான பல இடங்களிலும் பொதுக் கூட்டங்கள், மாநாடுகள், கல்லூரி நிகழ்ச்சிகள் முதலானவற்றில் பேருரையாற்றி, இராமாயண எதிர்ப்பு, பார்ப்பன எதிர்ப்பு உணர்ச்சியை ஊட்டினார். அடுத்து நடைபெற விருந்த தேசப்பட எரிப்புபற்றியும், நாட்டுப் பிரிவினை பற்றியும், பார்ப்பனர் விலக்கம் (பகிஷ்காரம்) பற்றியும் அந் நாட்டு மக்களுக்கு இருந்த அய்யங்கட்கு விளக்கமளித்தார்.

[இந்நூல் பக்கம் 1616-1620]

தொடர்ந்து, 'சாதி ஒழிப்புக்கு ஒரேவழி நாட்டுப் பிரிவினைதான்' என அறிவித்து, அதனை மத்திய ஆட்சிக்கு உணர்த்தும் வண்ணம், 'தமிழ்நாடு நீங்கிய இந்திய தேசப்பட எரிப்பு'க் கிளர்ச்சியை 1960-ல் நடத்தினார். அக் கிளர்ச்சியில் சுமார் 2000 தோழர்கள் பங்கு கொண்டனர்.

1961-க்குப் பின்னர் சமதர்மப் பிரசாரத்திற்கு முதலிடம் கொடுத்து, ஆங்காங்கே சமதர்ம மாநாடுகள் கூட்டி மக்கட்கு விளக்கம் தந்தார். இந்த நாட்டு மக்களில், நில மற்றோராக உள்ள திராவிடர்க்கு நில உடைமை கிடைக்கும் வகையில், 'நில உச்சவரம்புச் சட்டத்தை' காமராசர் ஆட்சி நிறைவேற்றிடத் தூண்டினார். காமராசர் ஆட்சி அதற்கான சட்டம் இயற்றியது.

அச் சட்டத்தினால் பயன்பெறுவோர் பெரிதும் ஆதித் திராவிட மக்களும், பிற்படுத்தப் பட்ட மக்களுமேயாவர்; அதனால் சிறிது உரிமை இழப்போர் பார்ப்பனரும், மேல் சாதித் திராவிடர் சிலரும், கோவில்—மடங்கள் முதலான நிறுவனங்களுமேயாம்.

எனவே, மேற்கண்டவர்கள் நில உச்சவரம்புச் சட்டத்தை எதிர்த்து, சுப்ரீம் கோர்ட்டில் வழக்குத் தொடுத்தனர். தமிழ்நாடு அரசு இயற்றிய அச் சட்டம் செல்லாதென 1964 துவக்கத்தில் சுப்ரீம் கோர்ட்டு தீர்ப்பளித்தது.

அதன் விளைவாக நிலமற்ற ஏழைகள் நிலம் பெறுவதற்கான வாய்ப்பு தடுக்கப்பட்டதையும், இந்து அவிபக்த குடும்ப முறை காப்பாற்றப்பட்டதையும் மக்கட்கு எடுத்தியம்பி, '29-3-1964 சுப்ரீம் கோர்ட் கண்டன நாள்' எனப் பிரகடனம் செய்தார்; 15-3-1964 முதல் 5-4-1964 முடிய தமிழகத்தின் முக்கிய நகரங்களில் கண்டன முழக்கம் செய்தார்.

இதற்கிடையில் தமிழ் நாட்டு ஆட்சிப் பொறுப்பில் ஒரு பெரிய மாற்றம் நிகழ்ந்தது.

1954-ல் ஆட்சிப் பொறுப்புக்கு வந்த திரு. காமராசர் 1963-ல் முதலமைச்சர் பொறுப்பைவிட்டு விலகத் தீர்மானித்தார். இதனை முன்கூட்டி உணர நேர்ந்த பெரியார், திரு. காமராசரின் தீர்மானம் சரியானதல்லவென்பதை உணர்த்திப் பின்வரும் அறிவுரையைத் தந்திமூலம் அனுப்பினார்.

'தாங்களாகவோ பிறர் ஆலோசனையின் பேரிலோ தமிழ் நாட்டின் முதலமைச்சர் பதவியைத் தாங்கள் ராஜிநாமா செய்வதானது தமிழர்களுக்கும், தமிழ் நாட்டிற்கும், தங்களுக்கும் தற்கொலைக்கு ஒப்பானதாகும்'.

**(Either of your own accord or on the advice of others, your resignation of Chief Ministership will be suicidal to Tamilians, Tamil Nadu and yourself)** என்பதே அத் தந்திச் செய்தியாகும்.

1967-ல் இது நூற்றுக்கு நூறு உண்மையாக ஆனது.

'காமராசர் ஆதரிப்பு' என்பது இனநலக் கண்ணோட்டத்துடன் பெரியார் அவர்களால் மேற்கொள்ளப்பட்டதாகும்; திரு. காமராசர் இன்றேல் இனநலம் தேக்கப்படும் என்று கருதியே மேற்கண்ட அனுபவரீதியான அறிவுரையை அவர் வழங்கினார். நிற்க.

1954 முதல் காமராசர் ஆட்சி ஆதரவுப் பிரசாரத்தைப் பெரிதாக மேற்கொண்ட காரணத்தால்—சுயமரியாதைக் கொள்கைப் பிரசாரம் சுணங்கி இருந்தது; 1962 தேர்தலுக்குப்பின்னர் இந்த நிலை சிறிது அதிகமாகியது.

அன்றியும், 1962, 1967 பொதுத் தேர்தல்கள் கழகத்தினரின் உழைப்பிலும் சிந்தனையிலும் பெரும் பகுதியைக் கொள்ளை கொண்டன.

இந் நிலையினை ஓர்ந்து சுயமரியாதைப் பிரசாரப் பயிற்சியினை ஆங்காங்கே உள்ளவர்கட்கு அளிக்க முனைந்தார்.

திருச்சி (1964 ஜூன்); திருச்சி மாவட்டத்தின் வட்டத் தலைநகர்கள் (1965 ஜூன், ஜூலை); விழுப்புரம் (1966 மே); விடயபுரம் (1967 மே); நாகையை அடுத்த வேளாங்கண்ணி (1972 மார்ச்சு); மத்தூர் தாதம்பட்டி (1972 மே) எனப் பலவிடங்களிலும், சுயமரியாதைக் கொள்கையில் ஆர்வமுள்ள இளைஞர்கட்குத் தாமே நேரில் கொள்கை விளக்கம் அளித்து அருந்தொண்டாற்றினார். அப் பயிற்சிக்கூடங்கள் அனைத்திலும் நானும் அவருக்கு முக்கிய உதவியாளனாக இருக்க நேர்ந்தது, பல விவரங்களை அறிந்துகொள்ளவும், இத் தகு சீரிய தொகுப்புப் பணியினைத் துணிந்து மேற்கொள்ளவும் பேருதவியாக அமைந்தது.

பெரியார் அவர்கள், தம் உள்ளத்தில் 1891 முதல் வளர்ந்திருந்த கடவுள் மறுப்புக் கொள்கைக்கு ஓர் இறுதி வடிவம் அமைத்து—கடவுள் மறுப்பு வாசகங்களை—விடயபுரம் பயிற்சிக்கூடத்தில்தான் உலகுக்கு அறிவித்தார். அவ் வாசகங்களைக் கழக நிகழ்ச்சி ஒவ்வொன்றிலும் முழங்க வேண்டுமென 14-6-1967-ல் அறிவிப்புச் செய்தார். இவை நிற்க.

1964-க்குப் பின் தமிழ்நாட்டு ஆட்சி பார்ப்பனர் நலனுக்கு ஓரளவு அரணாக அமைந்தது. அந்த நிலையினைக் கண்டனம் செய்யும் வகையில், 'ஆட்சிக் கண்டன நாள்' எனத் தமிழக மெங்கும் கொண்டாடப்பட வேண்டுமென அறிவித்தார்.

மேலும், அன்னாரின் இராமாயண ஒழிப்புப் பிரசாரத்தினை முன்னிலும் தீவிரமாக்கினார்.

1965-ல், 'ராமநவமி அன்று கம்ப இராமாயணத்தைக் கொளுத்துக!' எனக் கழகத்தினருக்கு அறிவித்தார். 10-4-1965-ல் நாடெங்கும் இராமாயணம் எரிக்கப்பட்டது.

அதேபோல் சென்னையிலும் மற்ற இடங்களிலும் 11-8-1966-ல் இராமாயணம் கொளுத்தப்பட்டது.

'இந்தி எதிர்ப்பு' என்ற பேரால் 1965-ல் நடந்த கலவரங்களை ஒடுக்க அவர் ஒருவரே முன்வந்தார். தமிழக ஆட்சி பதுங்கியது; இராணுவம் செயலற்று நின்றது.

அக் கலவரத்தின் பின்னணி பார்ப்பனர் தூண்டுதலே எனக் கண்டு, 'பார்ப்பனர் வீடுகளை அடையாளம் கண்டு கொள்ளுங்கள்' எனக் கழகத்தினருக்கும், பொது மக்களுக்கும் வேண்டுகோள் விடுத்தார்; 'தற்காப்புக்குக் கத்தி வைத்துக் கொள்ளுங்கள்' என அறிவுறுத்தினார். கலவர சக்திகள் தாமே பெட்டிப் பாம்பென ஒடுங்கின.

எனினும் அக் கலவரம்—விவரமறியாதவர்கட்கு விளைத்த உற்சாகமும்; காங்கிரஸ் ஆட்சியின் ஆணவப் போக்கும், யார் தடுத்தும் தேக்க இயலாமல்—1967 தேர்தலில் காங்கிரஸ் ஆட்சி கவிழக் காரணமாயின.

1967 தேர்தலில் திரு. காமராசர் அணி படுதோல்வி கண்டது; திரு. அண்ணாதுரை அணி பெருவெற்றி குவித்தது.

எனினும் பெரியார் அவர்கள் இடைவிடாது கூறிவந்ததற்கொப்ப—திரு. அண்ணாதுரை பெற்ற ஆட்சி வாய்ப்பைத் தம் வயப்படுத்த ஆச்சாரியார் முயன்றார்; பார்ப்பனர் காத்திருந்தனர்.

திராவிடரைச் சூழ இருந்த அந்தப் பெருங் கேட்டினைத் தவிர்க்க எண்ணிய அறிஞர் சி. என். அண்ணாதுரை தந்தை பெரியாரை 1967 மார்ச்சில் அணுகினார். இவ் அரிய சந்திப்பு திரு. அண்ணாதுரை அவர்களின் இனப் பற்றுக்கும், இராச தந்திரத் துக்கும் முத்தாய்ப்பு வைத்த பெரு நிகழ்ச்சியாகும்.

தம் வாழ்நாள் முழுதும் 'இனநலம்' என்ற அளவுகோலை வைத்தே அரசியல் நிலையினை (Political stand) மேற்கொண்டவர் பெரியார். ஆதலின் மேற்கண்ட நிலைமை வந்துசேரும் என்பதை அவர் 5 ஆண்டுகட்கு முன்னரே நமக்கு உணர்த்தி யிருந்தார்.

அதாவது, 'இனி, கண்ணீர்த் துளிக் கட்சி, தேர்தலுக்குப் பிறகு இந்த நாட்டில் உலவவேண்டுமானால், பார்ப்பன வெறுப்புச் சாதனத்தைத்தான் கைத் தடியாகப் பிடித்துக் கொள்ள வேண்டியவர்கள் ஆவார்கள்! இந்தக் காரியத்துக்கு என்னை அணுகலாம்; நானும் ஆதரவளிக்கலாம்.' (இந்நூல் : பக்கம் 45)

இத்துணை முன்யோசனையுடன் பெரியார் குறித்துள்ளதுதான், எழுத்துக்கு எழுத்து உண்மையாக—1967-ல் நடந்த 'அண்ணாதுரை—பெரியார் சந்திப்பு' ஆகும்.

இச் சந்திப்பின் விளைவாக 1967 மார்ச்சு முதல் தம் வாழ்நாள் இறுதிவரை திராவிட முன்னேற்றக் கழக ஆட்சியைக் காத்து, திராவிடர்க்கு நலம் பெருக்குவதையே குறியாகக் கொண்டு விளங்கினார் பெரியார்.

அறிஞர் சி. என். அண்ணாதுரை ஆட்சிக் காலத்தில் திராவிடர் பெற்ற நலன்கள் பலவாம்.

1967-ஆம் ஆண்டில் அவரால் சட்டமாக்கப்பட்ட—1967-ஆம் ஆண்டைய இந்து திருமண (தமிழ்நாடு திருத்த) மசோதா (28-11-1967) திராவிடருக்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகக் கிட்டாதிருந்த பெரு வாய்ப்பை அளித்தது. அதாவது, சுயமரியாதைத் திருமணம் அனைத்தும் செல்லுபடியாவதற்கு அச் சட்டம் வழிவகுத்தது; அதனால், பார்ப் பனரின் மத குருதன்மை அகற்றப்படவும்; மூடச் சடங்குகளை எளிதில் கைவிடவும் சட்டப் படிக்கான உரிமையை அது வழங்கியது.

அடுத்து, தமிழர் வாழும் நாட்டுக்கு 'மதராஸ்', 'சென்னை' என வழங்கப்பட்ட பெயரைத் 'தமிழ் நாடு' என மாற்றிய அரிய செயலாகும்.

இவ்வாறு ஆட்சி ஆதரிப்புக் காரணமாகப் புதுநிலையை மேற்கொள்ள வேண்டி நேரிட்டபோதும், பெரியாரின் பணி நாட்டுப் பிரிவினையில் அதிக நாட்டம் கொண்டது. நாட்டுப் பிரிவினைக் கிளர்ச்சியையே முழுப் பொறுப்பாக்கிக் கொண்டு செயல்படத் தக்க வகையில், 'தமிழ் நாடு சுதந்தர ஸ்தாபனம்' என ஒன்றை ஏற்படுத்தவேண்டும் என 1967-ல் அறிவித்தார் ('விடுதலை' 23-9-1967). அக் கோரிக்கையைத் தீவிரப்படுத்தும் வகையில், கீழ்ச் சாதி என்ற இழிவினை ஒழிக்கப் பூரண சுதந்தரம் வேண்டும் என அறிக்கையிட்டு, தமிழகமெங்கும் 14-4-1968-ல் 'டில்லி ஆதிக்கக் கண்டன நாள்' அனுசரிக்கச் செய்தார்.

1968-ல் லக்னோவில் நடைபெற்ற மாநாடுகளுக்கு அழைக்கப்பட்டார். அங்கு 12, 13-10-1968 தேதிகளில் நடைபெற்ற மாநாடுகளில் பேருரையாற்றினார்.

அவர்தம் நெடிய வாழ்நாளில் 1969-க்கும் 1973-க்கும் இடைப்பட்ட நான்காண்டு காலம், இன இழிவின் கடைசிப் புகலிடமாக உள்ள கோவிலில்—கர்ப்பக் கிரகத்தில் (கருவறையில்) அனுசரிக்கப்படும் தீண்டாமையையும் சாதி இழிவினையும் நீக்குகின்ற சீரிய பணிக்கே செலவிடப்பட்டது.

சென்னையில் 20-4-1969-ல் நடைபெற்ற சமுதாய சீர்திருத்த மாநாடு, தமிழர்க்கு உள்ள சமூக இழிவினைக் கோடிட்டுக் காட்டியது.

கோவில் கர்ப்பக் கிரக இழிவுநீக்கம் பற்றிய கிளர்ச்சியினை அறிவித்து, 1969 அக்டோபரில் அறிக்கைகளிட்டார், பெரியார். அதைத் தொடர்ந்து திருச்சியில் 16-11-1969-ல் நடைபெற்ற மத்திய திராவிடர் கழகக் கமிட்டி, '26-1-1970 கர்ப்பக் கிரகக் கிளர்ச்சி நாள்' எனத் தீர்மானித்தது.

இத் தீர்மான நிறைவேற்றத்தையொட்டி கிளர்ச்சிக்கான செயல்கள் மேற்கொள்ளப் பட்டன. இதுசமயம் தமிழக முதலமைச்சர் திரு. மு. கருணாநிதி அளித்த உறுதியின்படி, 18-1-1970-ல் கும்பகோணத்தில் 'நடந்த மாநாட்டில், கர்ப்பக் கிரகக் கிளர்ச்சியை ஒத்தி வைப்பதெனத் தீர்மானிக்கப்பட்டது.

பின்னர் மாயூரத்தில் 11, 12-4-1970-ல் நடைபெற்ற மாநாடுகளில் கிளர்ச்சியின் அவசியம் குறித்து விரிவுரைகள் நிகழ்த்தப்பட்டன.

இவற்றுக்கிடையில், படித்த இளைஞர்கட்கும், அரசு அலுவலர்கட்கும் சுயமரியாதை உணர்வு ஊட்டத்தக்க வகையிலும்—பல கட்சிகளிலுமுள்ள சுயமரியாதைக்காரர்களையும் ஒன்று திரட்டி நாத்திகப் பிரசாரத்தை வலுப்படுத்தும் வகையிலும்—1930–1939 காலக் கட்டத்தில் செய்தது போன்றே—பல பெயர்களில் தமிழ்நாடெங்கும் நாத்திகக் கழகங்களைத் துவக்கிவைத்தார், அய்யா அவர்கள்.

இவ்வகையில் முதலாவதாக 7-3-1970-ல் அன்னாரால் திருச்சியில் துவக்கிவைக்கப் பட்ட அமைப்பே, இப்பெரு நூலை வெளியிடும் அரிய பொறுப்பினை வகிக்கின்ற சிந்தனையாளர் கழகம் ஆகும். இதனைத் தொடர்ந்து நாடெங்கும் சிந்தனையாளர் கழகம், பகுத்தறிவாளர் கழகம், நாத்திகர் கழகம், கடவுளிலார் கழகம் என்ற பெயர்களால் நூற்றுக் கணக்கான தனித்தனி அமைப்புகள் தோன்றித் தன்னிச்சையாகச் செயல்பட்டு வருகின்றன.

அடுத்து, முன்னர்க் குறிப்பிட்ட மாயூரம் மாநாடுகளுக்குப் பின்னர், உணவு விடுதிகளில் பிராமணாள் பெயர் அழிப்புக் கிளர்ச்சியினை மேற்கொள்ளும்படி வேண்டுகோள் விடுத்தார். தமிழகமெங்கும் 14-10-1970-ல் இக் கிளர்ச்சி பெரிய அளவில் மேற்கொள்ளப் பட்டு வெற்றிகிட்டியது.

1970 நவம்பர் இறுதியில் வடநாட்டில் பம்பாய் முதலான இடங்கட்குச் சென்று சுயமரியாதைக் கொள்கைகளைப் பிரசாரம் செய்து, டிசம்பரில் மீண்டார்.

பெரியாரின் கோரிக்கையிலுள்ள மனித உரிமைக் கோட்பாட்டினை நன்கு புரிந்து கொண்ட தமிழக முதலமைச்சர் டாக்டர் திரு. மு. கருணாநிதி, பெரியாரின் இன இழிவு நீக்க இலட்சியம் நிறைவேறும் வகையில், அனைத்துச் சாதியினரும் அர்ச்சகராக ஆவதற் கேற்றவகை செய்து, 12-1-1971-ல் சட்டமன்றத்தில் மசோதா ஒன்றை நிறைவேற்றினார். சட்டமன்றத்தினரால் ஒருமனதாக இம் மசோதா நிறைவேற்றப்பட்டது.

இந்த அரிய ஏற்பாடானது, கோவில்—கடவுள் வணக்கத் துறையில் திராவிட மக்களுக்கு நீண்டகாலமாக இருந்துவந்த இன இழிவினை நீக்குவதாக அமைந்தது.

இம் மசோதாவினால் தங்கள் சாதி உயர்வு அழிக்கப்படுவதாக எண்ணிய பார்ப்பனர் —இம் மசோதா அரசியல் சட்டத்திற்கு முரணானதென்றும், தங்கட்குள்ள அடிப்படை உரிமையைப் பாதிப்பது என்றும் கூறி, நேரே சுப்ரீம் கோர்ட்டில் வழக்குத் தொடுத்தனர்.

இடையில் இந்தியா முழுவதிலும் நாடாளுமன்றத் தேர்தலும், தமிழகத்தில் பொதுத் தேர்தலும், 1971-ல் நடைபெற்றன.

இத் தேர்தலுக்குச் சின்னாட்கள் முன்னர், 1971 சனவரி 23, 24 தேதிகளில் சேலத்தில் நடைபெற்ற மூடநம்பிக்கை ஒழிப்பு மாநாட்டில், இந்தியாவையே கலக்கிய புரட்சிச் செயல்கள் நிகழ்ந்தன.

அம் மாநாட்டு ஊர்வலத்தில் கடவுளர் பிறப்புப் படங்கள் எடுத்துச் செல்லப்பட்டன. இராமன் உருவப் பொம்மைக்குச் செருப்புமாலை போடப்பட்டது; இராமன் உருவப் பொம்மை இலட்சக்கணக்கான மக்களறிய செருப்பாலும், துடைப்பத்தாலும் அடிக்கப்பட்டு அவமானப்படுத்தப்பட்டது; இறுதியில் நெருப்பிட்டுக் கொளுத்தப்பட்டது.

1927-ல் மனுநீதியைக் கொளுத்திய அய்யா அவர்கள்—படிப்பறிவற்ற மக்கள் நிறைந்த இந்நாட்டில்—தொடர்ந்து, பிள்ளையார் உருவப் பொம்மை உடைப்பு, இராமன் பட எரிப்பு, இராமாயண எரிப்பு, இராமன் படத்திற்கு ஊர்தோறும் செருப்படி (1971)—எனப் பல்வேறு கடவுள் நம்பிக்கை ஒழிப்பு—சிலை உடைப்புக் கிளர்ச்சிகளை மேற்கொண்டு, இந்தியாவின் ஈடு இணையற்ற 'கடவுள் சிலை உடைப்பாளர்—(Iconoclast)' என்ற பெரும் போற்றுதலுக்கு உரியவராகவும், அஞ்சாத தீரராகவும் விளங்கினார்.

பிற உலகநாடுகளில் சிலைவணக்கம் என்பதன் கடைசி அடையாளங்கள் பெரிதும் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டோடு ஒழிந்துவிட்டதை நாம் அறிந்தால், பெரியார் மேற்கொண்ட இக் கிளர்ச்சிகளின் அரிய அறிவு விளக்கத்தன்மை விளங்கும்.

சேலம் மாநாட்டுக்குப் பின்னர் தமிழகத்தில் தேர்தல் நடந்தது. சேலத்தில் நடந்த நிகழ்ச்சிகளை மக்களிடம் பெரிதுபடுத்தி, பார்ப்பனரும் காங்கிரசாரும்—திராவிடர்கழகத்தினருக்கும், திராவிடமுன்னேற்றக் கழகத்தினருக்கும், தேர்தலை ஒரு பெருஞ் சோதனையாக்கினர். அச் சோதனையில், மக்களின் பேராதரவுடன்—தி. மு. க. பெரு வெற்றி பெற்றது; திராவிடர் மனம் மகிழ்வுற்றது.

தேர்தலுக்குப் பின் 16, 17-5-1971-ல் திருவாரூரில் நடைபெற்ற மாநாடுகளில் மூட நம்பிக்கை ஒழிப்புப் பணியைத் தீவிரப்படுத்தவேண்டிய அவசியத்தைப் பெரியார் விளக்கினார். தொடர்ந்து இன இழிவுக் கிளர்ச்சியின் தன்மையினை விளக்கிப் பல இடங்களிலும் பெரியார் உரை நிகழ்த்தினார்.

1972 மார்ச்சு 13, 14, 15-ல் நாகையை அடுத்த வேளாங்கண்ணியில் சுயமரியாதைப் பயிற்சி வகுப்பு நடைபெற்றது. அது சமயம், சுப்ரீம் கோர்ட்டில், அர்ச்சகர் மசோதா பற்றித் தொடுத்திருந்த வழக்கில் 14-3-1972-ல், தீர்ப்பு வழங்கப்பட்டது.

அத் தீர்ப்பு திராவிடர்க்குப் பேரிடியாக வந்தது. அதிற்கண்டபடி (1) அர்ச்சகப் பார்ப்பனர் மகன் அர்ச்சகராகலாம் என்ற பரம்பரைப் பாத்திய முறை ஒழிக்கப்பட்டதாகவும் (2) தமிழக அரசு நிறைவேற்றிய மசோதா அரசியல் சட்டத்திற்கு முரணானது என்றும்; ஏனெனில் கோவில்—சாமி காரியங்களைப் பொறுத்தவரையில் பார்ப்பனர் மட்டுமே அர்ச்சகராக உரிமை உண்டென ஆகம விதிகள் கூறுவதாகவும்; மற்ற சத்திரிய, வைசிய, சூத்திர வகுப்பினர் கர்ப்பக் கிரகத்திற்குள் நுழைவதால் சாமி தீட்டுப்பட்டுவிடுமென்றும்—எனவே அனைத்துச் சாதியினரும் அர்ச்சகர் ஆகலாம் என்ற—தமிழக அரசின் மசோதா செல்லாது என்றும் கூறப்பட்டுவிட்டது.

அத் தீர்ப்பு வெளிவந்த மறுநாள் நாகப்பட்டினத்தில் நடைபெற்ற மாபெரும் பொதுக் கூட்டத்தில், சுப்ரீம் கோர்ட்டுத் தீர்ப்பினை எதிர்த்துப் போர் முரசு கொட்டினார், பெரியார். அன்று முரசு முழக்கிய அப் பெருந்தகை—தம் இறுதிச் சொற்பொழிவாக அமைந்த 19-12-1973 சொற்பெருக்குவரை பொங்கி எழும் கடலென இழிவினை எதிர்த்து ஆர்ப்பரித்தார்.

மேற்கண்ட தீர்ப்பினை முறியடிக்க ஒரே வழி, 'இந்து மதத்தைவிட்டுத் திராவிடர் வெளியேறுவதேயாகும்' எனப் பறைசாற்றினார். இப் பிரச்சினைகளைப்பற்றி 1973 ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் அன்னாருடன் உரையாடும் வாய்ப்பு எனக்குக் கிட்டியதை நான் என் வாழ்நாளில் என்றும் மறத்தல் இயலாது.

1973 செப்டம்பரில் இன இழிவு ஒழிப்புக்குத் தடையாக உள்ள சட்ட ஆதாரங்களை எடுத்தெழுதினார் ; ஊர்தோறும் விளக்கிக் கூறினார்.

'இன இழிவை–சூத்திரப் பட்டத்தை நிலைநாட்டும் தத்துவத்தைக் காக்கும் அரசியல் சட்டம் திருத்தப்பட வேண்டும் ; அச் சட்டம் திருத்தப்பட முடியாது என்றால்—இன இழிவு நீங்க—சாதி ஒழிய ஒரே பரிகாரம் நாட்டுப் பிரிவினையே' என முழக்கினார்.

அப் பேரறிவாளர் தம் இறுதிக் காலத்தில் 19–8–1973 தஞ்சை 'வேன்' (van) அளிப்பு விழா ; 16, 17–9–1973 சென்னை பிறந்த நாள் விழா ; 30–9–1973 மதுரை கறுஞ்சட்டைப் படை மாநாடு, சிலை திறப்பு விழா ; 4–11–1973 திருச்சி சிந்தனையாளர் கழக விருந்து—பிறந்த நாள் விழா ; 18–11–1973 முதல் 28–11–1973 வரை இழிவு நீக்கக் கிளர்ச்சிக்கான தமிழகச் சுற்றுப் பயணம் ; 8, 9–12–1973 சென்னை மாநாடுகள் ; 19–12–1973 சென்னை தியாகராயநகர் கடைசிப் பொதுக் கூட்டம் என முக்கிய நிகழ்ச்சிகள் உட்பட சுமார் 42 நிகழ்ச்சிகளில் பங்கேற்று விரிவுரையும் அறிவுரையும் மாரி என வாரி வழங்கி—இறுதி வரை ஓய்வறியாத் தானைத் தலைவராய்த் திகழ்ந்து, 24–12–1973-இல் மீளா விடை பெற்றார்.

# மானிட உரிமைக் காவலர்

உலக மானிடத்தை முன்வைத்துப் பல கருத்துகளை வழங்கியுள்ள பெரியார் அவர்கள் 'சாதி ஒழிய வேண்டும்' என்றும்—அதே நேரத்தில், 'வகுப்புவாரியாக உரிமை வேண்டும்' என்றும் கோரியுள்ளார்.

'பேதநிலை ஒழிய வேண்டும்' எனவும்—அதே சமயம், 'பார்ப்பனர்-பார்ப்பன ரல்லாதார்' என்ற கண்ணோட்டத்துடன் பிரச்சினைகளை அணுகவேண்டும் எனவும்; 'தமிழ்நாடு தமிழருக்கே!' எனவும்—அதேபோது, 'உலக மானிடம் ஒன்றாக வேண்டும்' எனவும் முழக்கியுள்ளார்.

இவை ஒன்றுக்கொன்று முரண்பாடு கொண்டவை எனத் தோற்றமளிக்கலாம்.

முதலாவதாக, சாதி ஒழிய வேண்டும் என்பது குறித்துக் காண்போம்.

இங்கு, சாதி அமைப்புக்கு இந்துமதம், சாஸ்திரம், ஆகமம் ஆகியவை அங்கீகாரம் அளித்துள்ளன; சாதி வழக்கம், பிரதேச வழக்கம் என்ற பேரால் இவை நிலைப்படுத்தப் பட்டுள்ளன. அம் மட்டோடு நில்லாமல், இந்த ஏற்பாட்டுக்கு இந்துச் சட்டம், இந்திய அரசியல் சட்டம் என்பவையும், இச் சட்டங்களை அமுல்படுத்தும் எல்லாக் கோர்ட்டுகளும் இன்றுவரை ஆதரவும் ஆக்கமும் அளித்து வருகின்றன. இந்துச் சட்டம், அரசியல் சட்டம் இவற்றில் 'சூத்திரன்' என்ற சொல் இன்று இல்லையே எனச் சட்ட நிபுணர்கள் கூறுவர். சுப்ரீம் கோர்ட்டு, 'பிராமணன், சத்திரியன், வைசியன், சூத்திரன் என்ற வேறுபாடு உண்டு' என 1972 மார்ச்சில் தீர்ப்பு அளித்துள்ளது; எனவே, இதிலுள்ள தத்துவத்திற்கு இச் சட்டங்கள் இன்றும் பாதுகாப்பு அளிக்கின்றன என்பதை அன்னார் உணர்தல் நன்றாகும்.

இந்த இழிநிலை பிற மதத்தினருக்கோ, பிற நாட்டினருக்கோ இல்லை. அதாவது, பிற மதத்தினரிடையே தங்கள் மதத்தைச் சார்ந்தவர்களை 'இழி சாதி', 'கீழ்ச் சாதி' என்றும்; 'உயர் சாதி', 'மேல் சாதி' என்றும் பிறவி அடிப்படையில் பிரித்து வைக்கும் தன்மை இல்லை; அப்படிப்பட்ட தன்மைக்கு அவர்களின் மதநூல்களும், சாஸ்திரங்களும் வழிவகுக்கவும் இல்லை; ஆதலின், அங்கெல்லாம் அவ் அடிப்படையில் உரிமைகள் வழங்கப் பெறவும் இல்லை.

சான்றாக, நீக்ரோக்கள் வாழும் அமெரிக்க நாட்டிலும், ஆப்பிரிக்க நாட்டிலும் 'சமூகப் பழக்கம்' என்ற பெயரால் நிலைத்திருந்த 'இன ஒதுக்கல்' (Apartheid) கொள்கைக்கு கிறிஸ்துவ மதமோ, பைபிள் நூலோ அங்கீகாரம் அளிக்கவில்லை; அதனால், அங்குள்ள கோர்ட்டுகளும் 'சமூகப் பழக்கம்' என்ற பேரால் அங்கிருந்த அந்த இழிவுக்குத் தொடர்ந்து ஆக்கம் தர இயலவில்லை. இக் காரணங்களால் அங்கு கறுப்பர்-வெள்ளையர் என்ற இன வேறுபாடு கடந்த ஒரு நூற்றாண்டுக் காலத்திலேயே அடியற்றுப்போக வாய்ப்பு நேரிட்டது.

இங்குள்ள சாதி அமைப்பு அத் தன்மையில் இல்லை. மிகச் சிறுபான்மையினராக உள்ள (Microscopic minority) பார்ப்பனர்—மிகப் பெரும்பான்மையினராக உள்ள திராவிடரை மத அங்கீகாரம்—சாஸ்திர அனுமதி கொண்டு இழிசாதியினராய் ஆக்கிவைத் திருப்பதே இங்குள்ள மனிதத் தன்மைக்கு எதிரான நிலையாகும்.

இவ் வகையால், 'சமுதாய உயர்வு' பெற்ற பார்ப்பனர், இதே காரணத்தால் 'அரசியல் ஆதிக்கம்'; 'பொருளுடைமை ஆதிக்கம்' பெற்றவர்களாகவும் ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகத் திகழ்கின்றனர்.

ஆனால், மிகப் பெரும்பான்மையினரான திராவிட மக்கள் மேற்குறித்த எல்லாத் துறைகளிலும் கீழ்நிலையிலேயே நெடுங்காலமாக வைக்கப்பட்டுவிட்டனர்.

ஆதலின், இங்கு சாதி ஒழிக்கப்படும் வரையில்—மிகச் சிறுபான்மை மக்கள் மிகப் பெரும்பான்மையினர் பேரில் ஆதிக்கம் செலுத்துவது நிற்காது என, அதை அழிக்க வேண்டியே—பெரியார் 55 ஆண்டு காலம் வகுப்புரிமைக்குப் போராடலானார்.

சமுதாயக் கொள்கைகளைப் பொறுத்துத் தீவிரவாதம் பேசுவதாகக் கருதுகின்ற சிலர், 'வகுப்புரிமை கோருவது என்பது, சாதி எண்ணத்தை வளர்ப்பது ஆகும்' என உரத்துக் கூறுவர். இங்கு இந்துச் சட்ட பூர்வமாகவும், இந்திய அரசியல் சட்ட பூர்வமாகவும், 'சாதி அகற்றப்பட்டுவிட்டது' என்ற நிலை இனித் தோன்றிவிட்டாலுங்கூட, அதற்குப் பின்னரும் நீண்டகாலம் சிறுபான்மையினர் ஆதிக்கமே நீடிக்கக் கூடிய அந்த அளவுக்கு—பெரும் பான்மையினர் என்போர் உரிமை அற்றவர்களாக நெடுங்காலம் வைக்கப்பட்டுவிட்டனர் என்பதை அன்னார் அறிதல் வேண்டும்.

இங்கு சமூக அந்தஸ்து—உரிமை வசதி—உடைமை வசதி—அனுபவிப்பு வாய்ப்பு இவை அனைத்தும் 1974ஆம் ஆண்டிலும் சாதி அமைப்பின்படியே அமைந்துள்ளன என்பதையும் பிரத்தியட்ச உணர்வோடு நோக்கும் எவரும் அறிதல் கூடும்.

இங்கு, சமூகத்தில் பெரும்பான்மை கருதி நீதியும், உரிமையும் வழங்கப்படாமல்—சிறுபான்மையினரின் பாதுகாப்பையும், உயர்வையும் மையமாகவும் இலட்சியமாகவும் கொண்டு நீதியும் உரிமையும் அரண் செய்யப்பட்டிருப்பதானது, 'மானிட உரிமைகள்' (Human Rights) கோட்பாட்டுக்கு முற்றிலும் விரோதமானதாகும்; அதுவும், 'ஜனநாயகக் குடிஅரசு' அமைப்பில் அது இரட்டிப்புக் கேடுள்ளதாகவே அமையும் என்பது உணரத் தக்கது.

இவற்றை நடுநிலையிலிருந்து காண்போர், பெரியாரின் வகுப்புரிமைக் கொள்கையிலுள்ள மானிட உரிமைக் கோட்பாட்டை நன்கு உணர இயலும்.

அடுத்து, 'பேதநிலை ஒழிய வேண்டும்' எனக் கோரிய அவர், 'பார்ப்பனர்—பார்ப்பனரல்லாதார்' எனப் பிரித்துக் காட்டியுள்ளது பற்றியும் காண்போம்.

இங்கு, பேதநிலை என்பது பிறவியோடு பிணைக்கப்பட்டுள்ளது; பிறந்தது முதல் சாகும் வரை—ஒருவர் பிறக்க நேர்ந்த இடத்தை அல்லது பிறப்பு வழியை (Womb) ஆதாரமாக வைத்துப் பேதம்நிலைக்க எல்லா வகைகளிலும் வழி செய்யப்பட்டுள்ளது; அதாவது, பார்ப்பனத்தியின் வயிற்றில் பிறந்தாலன்றி—வேறு எக் காரணங்கொண்டும்—எவரும் பார்ப்பனராக ஆக இயலாது என்பதே அதுவாகும்.

இது, 2000 ஆண்டு காலத்திற்கு முற்பட்ட மனுநீதியில் விதிக்கப்பட்டவாறு, 'பிராமண சாதி ஸ்திரீயினிடத்தில் பிறந்தவனே பிராமணன் ஆவான்' (மனுநீதி, அத்தியாயம் 10, சுலோகம் 74) என்ற தத்துவம் இன்றும் சட்டங்களின்படியும், கோர்ட்டு நீதிப்படியும் நிலைப்படுத்தப்பட்டுள்ளது என்பதையும், நமக்கு வாழ்க்கை நியதியாகவே அது ஆக்கப்பட்டுவிட்டது என்பதையும் உணர்த்தும். இத் தன்மை உலகின் வேறு எப் பகுதியிலும் என்றும் இருந்திராத இழிதன்மையதாகும்.

இவ்வாறு உள்ள இப் பேதநிலையினை இங்குக் கற்பித்தவர் பார்ப்பனர்; இதனை இன்றும் காத்து நிலைக்கச் செய்ய இமாலய முயற்சி செய்பவரும் பார்ப்பனர். இத் தன்மையுடைய இவர்கள் தங்களை மாற்றிக்கொண்டு பேதம் பாராட்டாத மனிதராகக் கூடி வாழ விரும்பினால்—அதை என்றும் வெறுத்தவரல்லர் பெரியார்; அத் தன்மையை விருப்புடன் வரவேற்றுள்ளவரே அவர் என்பது அறியத்தகும்.

ஆயினும், வரலாற்றுக்குட்பட்ட கடந்த 2000 ஆண்டுகளில் அவ்வாறு முன்வந்த பார்ப்பனர் ஒருவருமிலர்.

எனவே, பார்ப்பனரின் சூழ்ச்சிக்கு ஆட்பட்டுப் பேதநிலையைச் சுமந்து வாழும் திராவிடர் அச் சூழ்ச்சிப் பிடியினின்றும் தங்களை விடுவித்துக்கொள்ள வேண்டும் என்பதால்—பார்ப்பனரை ஒதுக்கி, பேதநிலையை அகற்றிக்கொள்ள விரும்புகின்றனர்.

எத் துறையிலும் பேதநிலை இல்லாத இடமே மனித சமூகம் இன்பமாக வாழ ஏற்ற இடமாகும் என்பதே பெரியார்தம் உறுதியான கொள்கையாகும்.

எனவேதான், இங்கு பிறவி காரணமாக உள்ள பேதநிலையை அகற்ற அருந்தொண்டாற்றி, அதற்கெனவே இறுதி மூச்சுவரை உழைத்த அவர், பார்ப்பனர்—பார்ப்பனரல்லாதார் என்ற உணர்வை வளர்த்து, பேதநிலை ஒழிய வழி வகுத்தார்.

பார்ப்பனருக்கு உள்ள இன உணர்வு திராவிடர்க்கும் உண்டாவதற்குத் தடையாக நிற்பது அவரிடையே உள்ள உட்சாதிப் பிரிவுகளாகும் (sub-castes); 1946-க்குப் பின்னர், சட்டத்தின் முன்னால் இவை இல்லை எனினும், கொள்வினை கொடுப்பினையில் இன்றும் நிலைபெற்றுள்ளவையாம். அன்றியும், திராவிடர், தம் சொந்த வாழ்வின் முன்னேற்றங் கருதி மட்டும் தத்தம் உட்சாதி உணர்வுள்ளவராக விளங்குகின்றனர்; பார்ப்பனரைப்போல் சமூக முன்னேற்றங் கருதி உட்சாதி உணர்வை உதறிவிட்டு, இன உணர்வு கொள்ள முன் வந்தாரிலர். இதனை, 'A Non-brahmin is individually communal and a Brahmin is communally communal' என இன்னொரு வகையிலும், ஆங்கிலத்தில் எடுத்துக் கூறுவார், பெரியார். மேலும், அரசியல் காரணம் கொண்டும் பிரிந்து கிடப்பவராவர், திராவிடர்.

இத் தன்மைகளை மறந்து திராவிடர் ஒன்றுபட வேண்டுமென அய்யா அவர்கள் அயராது பணியாற்றினார். அரசியல் தலைவர்களும், மக்கள் தலைவர்களும் இவற்றுக்கு ஆவன செய்யக் கடமைப்பட்டவராவர்.

அடுத்தது 'நாட்டுப் பிரிவினை'பற்றிய அவர்தம் கருத்தாகும்.

பெரியாரவர்களின் நாட்டுப் பிரிவினைக் கோரிக்கை, எவரையும் அடிமை கொண்டு ஆளவேண்டும் என்ற கருத்தைக் கொண்டதன்று.

இங்கு வாழும் நான்கு கோடித் திராவிடர்களும் தங்களுக்கு எத்துறையிலும் சிறிதும் உரிமை அளிக்காத நிலையில், நெடுந்தொலைவிலுள்ள மக்களுக்கு ஆட்பட்டு, 'ஒருமைப் பாடு காப்பதற்காக' உரிமைகளை இழந்து வாழ்வது, மனித சுதந்தரத்துக்கு நேர் மாறானது என்பதனாலேயே பெரியார் தனிநாடு கோரினார்.

சமுதாய உரிமையிலும், அரசியல் உரிமையிலும், அனுபவிப்பு வாய்ப்பிலும் சம சந்தர்ப்பம் பெற்றவர்களாக இருந்து—பல்வேறு மொழியினரும், நாட்டினரும் ஓர் குடைக் கீழ் வாழ வகையில்லாதபோது—உரிமை வேட்கையுடையோர் நாட்டுப் பிரிவினை கோருவது தவிர்க்க இயலாத ஒன்றாகும்.

ஒற்றுமை அல்லது ஒருமைப்பாடு என்பது எல்லா வகையிலும் சம நிலையிலுள்ள—தன்னாதிபத்தியம் கொண்ட இரண்டு அல்லது பல அமைப்புக்களிடையேதான் அமைய முடியும்; சமநிலை பெற்றிராத—தன்னாதிபத்தியம் (Sovereignty) இழந்த அமைப்புக்களிடையே ஒருமைப்பாடு தோன்றாது, வளராது; அதற்கு மாறாக வேறுபாடும் பகையுமே வளரும்.

'மானிட உரிமை நாள்' (Human Rights Day), 'உலக ஒருமைப்பாடு' இவை பற்றி நாள்தோறும் முயற்சி மேற்கொண்டு செயல்பட்டு வரும் அய்க்கிய நாடுகள் பெரு மன்றம் (United Nations Organisation)—சில இலட்சக்கணக்கான மக்கள் தொகை உள்ள சின்னஞ்சிறு நாடுகளை, நூற்றுக்கணக்கில் உள்ளவற்றை—தன்னாதிபத்திய தனிச் சுதந்தர நாடுகளாக (Sovereign Independent Countries) ஏற்று மதித்து வருவது அனைவரும் உன்னற்பாலது.

ஏதேனும் ஒருவகையில் சுதந்தரம் பறிக்கப்படுவதை ஒருப்படாத நிலையில்தான்—தத்தம் சுதந்தரத்தைக் காத்துக்கொள்ள வேண்டி, அத் துணைச் சின்னஞ் சிறு நாடுகளும் சுதந்தரம் கோரிப் பெற்றனவேயன்றி, இன்னொரு சாரரின் சுதந்தரத்தைப் பறிப்பதற் கன்று. இது உலகம் அறிந்த உண்மை.

சின்னஞ் சிறு நாடுகளாயினும் சுதந்தர நாடுகளாக நின்று நிலவுவதனால்தான்—நெடுங்காலத்துக்கு முன்னரே மூன்றாம் உலகப் பெரும் போர் தோன்றி உலகம் அழிக்கப் படுவதினின்றும் தடுத்து நிறுத்த—சம நிலையுள்ளவராக உலக நாட்டினர் ஒன்றுகூடி உலக அமைதியைக் காத்திட இயன்றது. இது உலக ஒருமைப்பாட்டுக்கு ஒரு படிக்கட்டாக அமைந்துள்ளது காணத்தக்கது.

எனவே, பெரியார் அவர்கள் கிளத்திய தனி நாடு கோரிக்கை திராவிடரின் சுதந் தரத்தைக் காப்பதை—இங்கு மனித சுதந்தரம் காக்கப்பட வேண்டும் என்பதை இலட்சிய மாகக் கொண்டதேயன்றி, உலக மானிட ஒருமைப்பாட்டுக்கு எதிரானதன்று.

# ஓய்வறியாத போர் வீரர்

உலக மக்களுள் பெரும்பாலோராலும், அறிஞர்கள் எனப்படுவோருள் பலராலும் வெறுக்கப்படும் கொள்கைகளையே தம் வாழ்நாள் முழுதும் பேசியும், எழுதியும், கிளர்ச்சிகளின் மூலமும் பரப்பி—வெற்றிகள் பலவற்றைப் பெரியார் அவர்கள் குவிக்க முடிந்ததற்கு அநேக காரணங்கள் உள.

அவற்றுள் சிலவற்றை ஈண்டுக் காணுதல் பயன் தருவதாகும்.

1. தாம் ஏற்றுக்கொண்ட இலட்சியத்திற்குத் தம்மை முழுவதுமாக ஒப்படைத்துக் கொண்டார். கொள்கையின் கர்த்தாவாக விளங்கிய அவர் கொள்கையைப் பரப்புநராகவும் இயக்கத்தின் முழு நேரத் தொண்டராகவும் தம்மை ஆக்கிக்கொண்டார்.

2. தம் அறிவுக்குச் சரியென்று பட்ட கருத்துகளை இடம், பொருள், ஏவல் கருதாமல், தாம் உணர்ந்தவாறே—அக் கருத்தின் நிர்வாணத் தன்மையை அப்படியே எடுத்துக் கூறினார்.

3. தாம் ஒத்துக்கொண்ட எந்தச் சிறு பணியாயினும், நிகழ்ச்சியாயினும் ஒரு சிறிதும் காலந் தவறாது சென்று அதனை நிறைவேற்றி வைத்து, தமிழகத்திலேயே—ஏன் இந்தியாவிலேயே—இத் தன்மைக்கு ஒப்பற்ற எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தார்.

4. சமுதாயப் பொதுநலத் தொண்டு ஆற்ற முன்வரும் எவரும் மானம் கருதக் கூடாது என உலகுக்கு அறிவித்துத் தாமே அதற்குச் சான்றாக விளங்கினார்.

5. தாம் மேற்கொண்டிருப்பது நன்றிக் கடன் பாராட்டாத பணி (Thankless job) என்பதை விநாடிதோறும் எண்ணிச் செயல்பட்டார்.

6. கல்வியறிவு அற்ற மக்கள் நிரம்பிய நாட்டில் கசப்பான கொள்கைகளைப் பரப்ப முனைந்த அவர், பாமரர் மொழியில்—கவுதம புத்தரைப்போல், தம் கருத்துகளை எடுத்துச் சொல்லிப் பரப்பினார். தர்க்கரீதியாகத் தம் கருத்துகளைச் சொல்வதிலும், எழுதுவதிலும் நிகரற்றவராக விளங்கி—மாற்றுக் கருத்தினரையும் ஈர்க்கும் தன்மையில் அனைவர் நெஞ்சங்களையும் பிணித்துச் சிந்திக்க வைத்தார்.

7. மேடைச் சொற்பொழிவுகளில், உரையாடலில் அல்லது விவாதத்தில் அவர் முன்னால் வைக்கப்பட்ட வினாக்களுக்குச் சிறிதும் தயக்கமின்றி அனைத்துக்கும் பதிலுரைத்து அய்யம் போக்குவதில் அவருக்கு நிகர் அவராகவே விளங்கினார்.

8. கொள்கைகள் பற்றிய விவாதத்தை எவரிடத்து மேற்கொண்டாலும், தமது நிலை(Position)யைப் பற்றிய எண்ணத்தை ஒதுக்கி வைத்துவிட்டு, மனந் திறந்து விவாதித்து, அறிவுக்குச் சரியென்று பட்ட முடிவைத் தயங்காது ஏற்றுக்கொள்ளும் சான்றோராக விளங்கினார்.

9. ஆண்டு, அறிவு, கொள்கை என்ற தன்மைகளை அறவே மறந்து மனிதத் தன்மைக்கு மதிப்புக் கொடுத்து, எவரையும் எங்கும் மரியாதையாகவும் அன்பாகவும் அழைப்பது, நடத்துவது என்ற உயர்ந்த மனிதப் பண்புக்கு அவரே ஓர் உறைவிடமாகத் திகழ்ந்தார்.

10. முன்னோர்கள், பெரியோர்கள், ஞானிகள் ஆகியோர் சொன்னவை என்பதற்காக எல்லாக் காலத்துக்கும் அவை பொருந்தும் என நம்புவது மூடத்தனம் என ஓங்கி உரைத்த அவர்—அறிவு வளர வளரப் பழங்காலக் கருத்துகள் வீழும் எனவும்; தாம் சொல்லியுள்ள கருத்துகளுள் சிலவும் வருங்கால மக்களால் ஒதுக்கப்பட நேரிடலாம் எனவும், அது தவறல்ல எனவும் கூறி, கட்டற்ற சிந்தனையாளருக்குரிய தன்மைக்கு அவரே முழு இலக்கணமாகத் திகழ்ந்தார்.

11. தாமே பதவிகளைப்பெற முடியும் என்ற நிலை இருந்தபோதும்—அதிகார பூர்வமாகத் தம்பேரில் பதவி திணிக்கப்பட்டபோதும் பதவிகளைத் துச்சமென எண்ணிச் செயல்பட்டார்.

12. தம் முடிவுகளுக்கும் கருத்துகளுக்கும் எத் தன்மைவாய்ந்த ஒருவரையும் முன் மாதிரிக்காகவோ (Precedent), மேற்கோளுக்காகவோ எடுத்தாளாத சீரிய சுயசிந்தனை யாளராக இலங்கினார்.

13. அனுபவப் பழமாகத் திகழ்ந்த அவர் நெடுந்தூர நோக்குடன் வருங்கால வளர்ச்சிபற்றியவற்றைத் திட்டவட்டமாகக் கூறி—அறிவியக்க வளர்ச்சியின் கடைசி எல்லைக்கோட்டை உலகுக்கு அடையாளம் காட்டிய வல்லவராகத் திகழ்ந்தார்.

14. பெரியார் ஈ. வெ. ரா. என்றால் நாணயம் என்பது பொருள் என வழங்கும் தன்மையில் பொது வாழ்விலும், சொந்த வாழ்விலும் அவர் திகழ்ந்தார்.

இத்துணைத் தனிச் சிறப்பியல்புகளுக்கும், மற்றும் பல அரிய குணங்கட்கும் உறை விடமாகத் திகழ்ந்த அவர்; தமக்கு வினாத் தெரிந்த காலந்தொட்டு ஓய்வறியாத போர் வீரராகத் திகழ்ந்தார்.

1927-ல் பெரியாரின் வயது 48.

1925 முதல் பட்டிதொட்டியெல்லாம் சென்று தம்மையே நம்பிச் சூறாவளி வேகத்தில் சுயமரியாதைப் பிரசாரம் செய்துவந்த அவரை அன்றையக் கண்ணோட்டப்படி வயது முதிர்ந்தவர் எனக் கருதி, அவர் ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டுமென நேரிலும் கடிதம் வாயிலாகவும் பலர் வேண்டுகோள் விடுத்தனர்.

'ஓய்வு கொள்வது, துருவை ஏற்பது' (To rest is to rust) என மார்ட்டின் லூதர் என்ற சீர்திருத்தக்காரர் கூறியிருப்பதாக எனக்கு நினைவு. அன்னாரைக் காட்டிலும் மிகத் தீவிரமாக, 'ஓய்வு கொள்வது, காலத்தைக் கொல்வது' என்றே கருதித் தம் வாழ் நாளெல்லாம் செயல்பட்டார் பெரியார்.

ஓய்வு என்பதை ஒருபோதும் வேண்டாத அவர் மேற்கண்ட தன்மையுள்ள வேண்டு கோளை 1927 முதலே புறக்கணித்தார். பின்வரும் அவரது விளக்கம் இதனை நமக்கு உணர்த்துகிறது.

'முக்கிய நண்பர்களில் பலர் உடல் நிலையைக் கவனிக்கும்படிக்கும், ஓய்வெடுத்துக் கொள்ளும்படிக்கும் எழுதிவருகிறார்கள்.'

'ஓய்வெடுத்துக்கொள்ள வேண்டிய சமயம் நமக்குத் தெரியும். அதாவது, நமது தொண்டு நாட்டிற்கு உதவாது என்றாவது, நமது தொண்டை நாட்டார் ஏற்பதில்லை என்றாவது நமக்குத் தெரிந்தால் யாரிடமும் சொல்லாமல் நாமே ஓய்வெடுத்துக்கொள்வோம். அதுவரை எடுத்துக்கொள்ளும் ஓய்வு உண்மையான ஓய்வாகாது.'

['குடி அரசு'-தலையங்கம்—17-7-1927]

நாட்டார் அவர்தம் தொண்டை ஏற்காத நாளில்லை; ஏற்காத துறையில்லை; எனவே என்றும் அவருக்கு ஓய்வு கிட்டவில்லை.

ஓயாத உழைப்பே அவருக்கு ஓய்வை அளித்தது.

அன்னாரது நெடிய பொது வாழ்வில் பொதுக்கூட்டங்கள், மாநாடுகள், திருமணம் போன்ற நிகழ்ச்சிகளில் பேருரை ஆற்றாமலும்; சந்திக்கும் இயக்கத் தோழர்கள், முக்கிய நண்பர்கள், பொதுமக்களிடத்தில் உரையாடல் செய்யாமலும்; படிப்பது, ஆராய்ச்சி செய்வது, கட்டுரை தீட்டுவது என்பவற்றை மேற்கொள்ளாமலும் அவர் கழித்த நேரம் மிகக் கொஞ்சமேயாம்.

மருத்துவ மனைகளில் ஓய்வுபெற்ற காலத்தும் உரையாடல்-படிப்பு-கட்டுரை தீட்டுதல் அனைத்தையும் மேற்கொண்டே திகழ்ந்தார்.

தமிழகம், வடஇந்தியா, தூர அயல்நாடுகள் எனப் பல்வேறிடங்கட்கும் அவர் பயணம் மேற்கொள்ளாது ஓரிடத்தில் தங்கியிருந்த நாட்கள் சிலவேயாம்.

குறிப்பாக 31-7-1969-ல் வேலூர் C. M. C. மருத்துவ மனையில் அறுவை சிகிச்சை செய்து கொண்டபோது சிலமணி நேரம் மருந்து மயக்கத்திற்கு ஆட்பட்டிருந்தார். 1973 டிசம்பர் 19 நள்ளிரவு முதல் 23 முன்னிரவுவரை கொள்கைபற்றி உரையாட இயலாத அளவுக்கு நோயால் துன்புற்றுக் கொண்டிருந்தார்; 23-12-1973 இரவு சுமார் 12 மணி முதல் 24-12-1973காலை 7-40 மணிக்கு அன்னாரின் மூச்சு அடங்கிய வரையில் மட்டுமே—உணர் விழந்து வாய் பேச முடியாத நிலையில் ஓய்ந்து இருந்தார்.

இச் சிலமணி நேரத்தோடு, உணவும் துயிலும் கொள்ள அவர் எடுத்துக்கொண்ட நேரமும் சேர்த்து அவ்வளவு காலம்தான்—பொது வாழ்வுக் காலம் முழுவதிலும், கொள்கை பற்றிப் பேசாத நிலையில் அவர் பெற்றிருந்த ஓய்வு நேரமாகும்.

மீதி நேரமெல்லாம் உரையாடல், சொற்பொழிவு; பயணம், கிளர்ச்சி, சிறைவாசம்; படிப்பு, ஆராய்ச்சி, எழுத்து என 95ஆம் வயதுவரை ஓய்வு என்பதை மருந்துக்கும் பெற்றிராத நெடும் பயணமாக அவர்தம் வாழ்க்கை அமைந்திருந்தது.

அவர் வாழ்வு 67ஆம் வயதில் முடிந்துவிடும் என அவரின் பெற்றோர்கள் கருதியிருந்தனர். அந்தக் கால நிலையில் 60 ஆண்டு வாழ்வதே முழு நிறைவான வாழ்வு எனவும், நூறாண்டு வாழ்வது பெறற்கரிய பேறு எனவும் கருதப்பட்டிருந்தது. அக் காலச் சோதிடர்களும் இதனை மனதிற்கொண்டே பெரியாரின் வயது 67 என அறுதியிட்டனர். இது குறித்து, அவர்தம் பேச்சின் பின்வரும் பகுதி சிந்தனைக்கு உரியதாகும்.

'என் சோதிடத்தில் எனக்கு 67 வயது என்று குறித்து என் பெற்றோர்கள் அச்சுப் போட்டிருக்கிறார்கள்; ஆனால் நான் இன்று 94 வயதில் சவுக்கியமாக இருக்கிறேன்; என் சோதிடம் இன்னமும் இருக்கிறது; ஆனால், அது பொய்யாகிவிட்டது. அந்தக் காலத்தில் 100 வயது இருப்பது என்பது அதிகம் என்று கருதி, எனக்கு 67 வயது என்று சோதிடன் கணித்தான். அப்போது சராசரி வயது 10—அதனால் 67 என்று எழுதினான்; இப்போது சராசரி வயது 52—இப்போது அப்படி எழுதமாட்டான்.'

[பெரம்பலூர் வட்டம், ஒகளூரில் சொற்பொழிவு—13-7-1973, என் கைக் குறிப்பு]

(ஒரு சமயம், அவர் சோதிடத்தில் 60 வயது குறித்துள்ளதாகவும் வெளியாகியுள்ளது.)

அன்னாரின் சுயமரியாதைக் கொள்கைகளுள் ஒன்றான சோதிட மூட நம்பிக்கை ஒழிப்புக்கு அவரே பெருஞ்சான்றாக விளங்கினார். இம் மூட நம்பிக்கை விதித்த வரம்பைத் தாண்டி மேலும் 28 ஆண்டுகள் வாழ்ந்த பெரியார், வருத்தும் நோய்கள் பலவற்றுக்கு இருப்பிடமாக இருந்தார்.

1945 பிப்ரவரியில் அவரது நாக்கில் கொப்புளங்கள் கண்டன; வாய் நாற்றமெடுத்தது; சித்த வைத்தியம்—நோயைக் குணப்படுத்தவில்லை. எனவே, சென்னை தலைமை மருத்துவ மனைக்குச் சென்றார். அவர் நாக்கில் புற்றுநோய் கண்டிருப்பது அங்குக் கண்டு பிடிக்கப் பட்டது. 16-3-1945 முதல் சில நாட்கள் கதிரியக்கச் சிகிச்சை அளித்தபின் குணமாயிற்று. ('குடி அரசு' 1945 பிப்ரவரி 24; மார்ச்சு 17, 24, 31). 'நாத்திகம் பேசி, நாப் புற்றுப் பெற்றார்' எனச் சமயக் கொள்கையினர் பிரசாரம் செய்து, நாத்திகத்தைச் சாட அவர்கட்கு வாய்ப்பில்லாது போயிற்று.

அன்னாரை வருத்திய நோய்களுள் வயதால் மூத்ததும் இறுதிவரை துன்பம் தந்ததும் குடலிறக்க (Hernia) நோயாகும். 95 வயது அடைந்த அவரை இக் குடலிறக்க

நோய் அவரது 11ஆம் வயதில் பற்றிற்று. இந் நோய் கண்ட பத்தாண்டுகளில் கும்பகோணத்தில் அறுவை செய்துகொள்ள விரும்பினார்; எனினும் அவ்வாறு செய்து கொள்ளவில்லை. சிறிது காலம் கச்சை (belt) கட்டிக்கொண்டிருந்தார்; பின்னர் அவ்வப்போது வைத்தியம் செய்துகொண்டு, முற்றிய இந் நோயுடனேயே பம்பரமெனச் சுழன்று பணியாற்றினார். 1956-லும், பின்னர் 1967, 1969, 1972ஆம் ஆண்டுகளிலும் இந் நோய்த் தொல்லை அதிகமாகிப் பல நாட்கள் வைத்தியம் செய்துகொள்ள நேர்ந்தது.

இந் நோய் ஒருபக்கம் வருத்த, சிறு நீர்க்கால் அடைப்பு நோய் (urinal trouble) இன்னொரு பக்கம் மிகக் கொடுமையாக வருத்திற்று. இந் நோய், அண்மைக் காலமாக—ஒவ்வொரு நாளும் அவரை வருத்திற்று.

அன்னார் படித்துக்கொண்டும், எழுதிக்கொண்டும், உரையாடிக்கொண்டும், சொற்பொழிவாற்றிக்கொண்டும், பயணம் செய்து கொண்டும் இருக்கும்போது திடுமென இந் நோய் அவரைத் தாக்கும். நோய் தாக்கியவுடன் முணகுவார்; கால்களை மெத்தையின்மீது அடித்துக்கொள்வார்; தலையணைகளை அணைத்துக்கொண்டு துடிதுடிப்பார்; எல்லாம் 5 கன்னல்களில் மறைந்துவிடும்—உடனே அவர் செய்துகொண்டிருந்த பணியை விட்ட இடத்திலிருந்து முன்னினும் வேகமாகத் தொடருவார். அதைக் கண்ணுற்ற பின்னரே அன்னார் துடிப்பதைப் பார்த்து வருந்திய நெஞ்சங்கள் ஆறுதல் பெறும். நோயால் நலிவு தோன்றித் துன்பப்பட்டவராகத் தோற்றமளிக்காமல்—விட்ட பணியை வேகத்துடன் தொடரும் அந்த நெஞ்சுரம் அவரிடத்து மட்டுமே காணத்தகும் எனின் அது மிகையன்று.

இத்தகைய வருத்தும் நோய்கள் அவரைப் பல்லாண்டுகள் துன்புறுத்திக்கொண்டிருந்த நிலையிலும், அவர்தம் உறுப்புகள் சமீபகாலம் வரை சோர்வுறவில்லை. வலப்புறக் காது மட்டும் சிறிது மந்தப்பட்டிருந்தது. இது குறித்து அவர் குறிப்பிட்டுள்ளதாவது:

'ஒரு சமயம் என் காதுகளில் அதிக வலி இருந்தது. நாட்டு வைத்திய முறையில், காய்ச்சிய நல்லெண்ணெயை என் காதுகளில் ஊற்றியவர்கள்—வலது காதில் கடுஞ்சூடான எண்ணெயை ஊற்றிவிட்டார்கள்; அந்தக் காதின் ஒலிப்பறை சேதப்பட்டது. அன்று முதல் அக் காது சிறிது மந்தமாகக் கேட்கும் தன்மை அடைந்தது. என்னுடைய மற்ற புலன்கள் வயதாலோ, உழைப்பாலோ சோர்வுறவில்லை.'

[அரியலூர் வட்டம், குமிளியத்தில் சொற்பொழிவு—17-10-1972, என் கைக் குறிப்பு]

அம் மேதையின் அன்றாடப் பழக்க வழக்கங்கள் மிகவும் எளிமையானவை.

இரவு எந்த நேரத்தில் படுத்தாலும் காலை 6 முதல் 7 மணிக்குள் எழுந்து விடுவார்; காலையில் ஒரு கிண்ணம் காஃபி அருந்துவார்; காலை 8 மணிக்குள் இரண்டு அல்லது மூன்று இட்டலி உண்பார்.

காலை 9 மணி வரையில் செய்தித் தாள்களைப் படிப்பார்; பின்னர் தம்மைச் சந்திப்போருடன் உரையாடல், விவாதம் மேற்கொள்வார்; நூல்களை ஆராய்வார்; கட்டுரைகள் தீட்டுவார்; கடிதங்களைப் படித்துப் பதில் எழுதுவார்—எழுதச் செய்வார்; மதிய உணவு நேரம் வரை இவை நடைபெறும்.

மதியம் 1 மணிக்குள் உணவு கொள்வார்—மதியத்தில் புலால் இல்லாத உணவைப் பெரிதும் விரும்பமாட்டார்; ஆனால், எல்லா இடங்களிலும் இதை அனுசரிக்கமாட்டார்; உணவுக்குப்பின் சர்க்கரை சேர்த்த ஒரு கிண்ணம் தயிர் சாப்பிடுவார்.

மதியம் உணவுக்குப்பின் சிறிது நேரம் கண்ணயர்வார்; இன்றேல் ஓய்வாக இருப்பார்; பிற்பகல் 4 மணிக்குள் ஒரு குவளை காஃபி அருந்துவார். பசிப்பதுபோல் தோன்றினால் பிஸ்கட் உண்பார்; எப்போதேனும் எள்ளுருண்டை, நெய் முறுக்கு, காட்பரீஸ் இனிப்பு, ஹார்லிக்ஸ் பானம், வடை சாப்பிடுவார். இரவு சுமார் 7 மணி வரை படிப்பு—எழுத்து—உரையாடல் இவற்றில் ஈடுபடுவார்.

மாலை நிகழ்ச்சி இல்லாத நாட்களில் இரவு 8 மணிக்குள் இரண்டு இட்டலி, ஒரு குவளை பால் சாப்பிடுவார்; 9-க்கு மேல் 10 மணிக்குள் உறக்கம் கொள்வார்.

மூன்று வேளைகளிலும் மலை வாழைப்பழம் அவருக்கு மிக விருப்பமான பண்டம்; ஒரு நாளைக்கு ஆறு, ஏழு பழம் உண்பார். நல்ல மாம்பழத்தை விரும்பித் தின்பார்; மாம்பழத்தை அவரே கத்தியினால் குடைந்து தின்னுவது அவருக்கே அமைந்த தனிப் பாங்கு.

நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளும்போது பேச்சின் இடையில் இரண்டொருதடவை சூடான காஃபி சிறிது அருந்துவார். கூட்டம் இரவு 11 மணிக்கு முடிந்தாலும் உடனே 'வேனி'ல் புறப்படுவார்; அவ் வண்டியிலேயே உண்பார்; அதிலேயே உறங்குவார்; பயணம் செல்லும் நாட்களில் 'வேன்' அவருடைய இல்லமாக இலங்கும். பயணத்தில் எங்குவேண்டுமானாலும் தங்கிவிடுவார்.

மாலை நிகழ்ச்சிக்குப் பகல் 2 மணிக்குப் புறப்பட்டால் போதும் என்றாலும், 1 மணிக்கே அனைவரையும் உசுப்பிவிட்டுப் புறப்படுவார்; நிகழ்ச்சி நடத்துவோர் எதிர் நோக்கும்படி வைக்காமல் பலமணி நேரம் முன்னதாகவே சென்றடைவார். இதில் அவர் தப்பியதே இல்லை.

மிகப் பல கிளர்ச்சிகளை நடத்திய அவர், கிளர்ச்சிகளுக்கு ஆதரவு திரட்ட, தமிழகம் முழுதும் புகைவண்டியிலேயே பயணம் மேற்கொண்டார். எல்லாத் தடவைகளிலும் மூன்றாம் வகுப்பிலேயே தொண்டர்குழாத்துடன் பயணம் செய்த எளிய தன்மையினர், அவர்.

மாநாடுகள் காலை 10 மணிக்குத் துவங்கி 2 மணிக்கும், மாலை 4 மணிக்குத் துவங்கி இரவு 10 மணிக்கும் முடியும்—இந்தப் பத்து மணி நேரமும் அயராது அமர்ந்து, சோர்வுறாது செயல்படுவார்.

1973 பிற்பகுதியில், உணவு, அளவில் மிகக் குறைந்தது. காலையில் ஒரு இட்டலி, பகலில் கஞ்சி, மோர் சோறு; ஒரு நாளைக்கு ஒரு மலைப்பழம் எனக் குறைவதும் —பின்னர் பழைய அளவுக்கு வருவதுமாக இருந்தது.

அன்னாரின் உடைகள் மிக எளிமையானவை. அய்ந்து முழ வெள்ளை அல்லது வண்ணக் கைலி; ஒரு அரைக்கை பனியன்; முக்கால் கை கறுப்புச் சட்டை; துடைப் பதற்குப் பெரிய துண்டு. சட்டைப் பைகளில் நாட்குறிப்பு, முக்கிய கடிதங்கள், கண்ணாடிக் கூடு, மொத்தமான பேனா, படிக்கப் பயன்படும் லென்ஸ் இவை பிதுங்கிக்கொண்டு இருக்கும். பனியன் பையில் பணப் பை (Purse) கிடக்கும்—அதை நீண்ட ஊக்குகள் காக்கும். பணத்தை அடிக்கடி எண்ணிப் பார்த்து உற்சாகம் கொள்வார்; செலவைச் சுருக்கிச் சேமிப்புச் செய்வது அவருடன் பிறந்த ஒரு பழக்கம் (habit). குளிர் நாட்களில் ஒரு கம்பளிப் போர்வை; எப்போதும் நீண்ட கைத் தடி வைத்திருப்பார்.

குளிப்பது—அவருக்கு ஒரு பெரிய தொல்லை. உடலில் அழுக்கு வாடை தோன்றினாலன்றிக் குளிக்க விரும்பமாட்டார்; பெரிதும் வற்புறுத்தலின் பேரில்—வாரத் திற்கு ஒரு தடவை குளிப்பார். இது அவரால் மட்டுமே முடிந்தது. குளித்தவுடன்— பனியன் போடாத அவரது மேனியைப் பார்க்கப் பார்க்க ஆசையாக இருக்கும்; தங்க ரேக் எனப் பளிச்சிடும்.

நிழற்படம் எத்தனை தடவை எடுக்கப்பட்டாலும் தடவைக்கு ஒருவிதப் புன்னகை தவழும் அழகு முகம் அவருடையது.

தமக்குத் தெரிந்த பழைய நண்பர்கள்—இயக்கத்தினர் குடும்பத்தார் சந்திக்க நேர்ந்தால், குறிப்புத் தெரிந்தவுடனே அவர்களின் குடும்ப வரலாற்றையே மளமள வெனக்

கூறிச் சுவைபட உரையாடுவார். அத்தகு அனுபவமும், நினைவாற்றலும் ஒருங்கே அமையப் பெற்றவர் அவர். நண்பர்களிடமும் இயக்கப் பிரமுகர்களிடமும் உரையாடுங்கால் கிண்டல் பேசி—அதிலும் பகுத்தறிவு விளங்கச் செய்வதில் அவருக்கு நிகர் அவரே ஆவார்.

நிகழ்ச்சிகளுக்குச் செல்லுமிடங்களில் உணவு நேரங்களில் உடன் வந்த அனைவரும் உண்கின்றனரா என்பதை முதலில் கவனிப்பார்; உணவுப் பண்டம் வீணாக்கப்படுவதைப் பொறுக்கமாட்டார்; தம்முடன் வருவோர் தம் பார்வையை விட்டு அகலாது இருக்க வேண்டு மென விரும்புவார்.

சில வேளைகளில் முற்பகல் அல்லது பிற்பகல் ஓய்வில், அல்லது பயணத்தில்—தம் வாய்க்குள்ளேயே ஏதோ ராகத்துடன் அவர் பாடும் தமிழ்ப் பாட்டு காதுக்கு இனிமை தரும்.

அகன்ற நெற்றி—வெள்ளிக் கம்பியொத்த தலைமயிர்—மயிரடர்ந்த எடுப்பான புருவங்கள்—நீண்டு வளைந்த அகன்ற மூக்கு—கூர்த்த அறிவும் ஆளுமையும் கொண்ட பார்வை—புன்னகை தவழும் உதடுகள்—உதடுகளிடையே குத்தும் மீசை—பரந்து மடிந்த காதுகள்—அகன்ற தாடைகள்—பல்லினும் வலிய எயிறு—தூய வெண்ணிறத் தாடி—திமில் போன்ற பிடரி—குன்றனைய தோள்கள்—விரிந்த மார்பு—முன்னுக்குத் தள்ளிய வயிறு—திண்ணிய இடுப்பு—தொங்கும் குடலிறக்கத் தசைத் திரள்—சுமை தாங்காது தடுமாறும் கால்கள்—பெருவிரல் வளைந்த நீண்ட பாதங்கள்—இவை அவருடைய அங்க அழகுகள்.

இவர் தாம் பெரியார்!

இத்தகு உருவத்தில், உடையில், உடலழகுகளில்—பழக்கங்களில்—நாம் கண்ட அந்த அறிவுலக மேதை, குடலிறக்கத் தசைத் திரளையும் வேட்டியையும் மூத்திரக் குழாயையும் தொடைகளால் இடுக்கிக்கொண்டும், உதவியாளரின் தோளில் கை போட்டுக்கொண்டும்—கையைப் பற்றிக்கொண்டும் முக்கி முணகிக்கொண்டு 'வேனி'ல் ஏறுவதும், இறங்குவதும்; மேடைமீதேறி அரிமாவென அமர்ந்து வெண்கலக் குரலில்—வெஞ் சமரில் வாள் சுழற்றும் வீரனைப்போல் கையைச் சுழற்றியும், சுட்டியும்—அன்னார் ஆற்றும் வீர உரைகளை நாளெல்லாம், இரவெல்லாம், ஆண்டெல்லாம் அலுப்புச் சலிப்பின்றிக் கேட்டுக்கொண்டே இருக்கலாம்.

அத் தன்மையில் பல்லாண்டுகள் மேடைதோறும் அவரைப் பார்த்த நாம் இனி என்றும் காண்டல் இயலாது.

அத்தகு வீர உரைகளாலும், தர்க்கரீதியான எழுத்தாலும், தொல்லை விளைக்காத கிளர்ச்சி முறைகளாலும் அவர் பெற்றுத் தந்த பயன்கள் எண்ணிறந்தவை.

மதக் கோட்பாட்டுக்கு அடிமைப்பட்ட இப் பேருலகில் எந்த மாற்றம் காண விரும்பியவரும் கத்தியைக் காட்டி, இரத்தத்தைச் சிந்தியே மாற்றங்களை விளைத்துள்ளனர்.

1792-ல் பிரெஞ்சு நாட்டில் எழுந்த தொழிற் புரட்சியில் 4000 தலைகளுக்கு மேல் உருண்டன.

உலகப் புகழ் பெற்ற 1917 அக்டோபர் புரட்சியில்—ரஷ்யாவில், தொழிலாளர்களும்—ஆளும் வர்க்கத்தினரும் ஆயிரக்கணக்கில் உயிரிழந்தனர். சோவியத் மண்ணில் இரத்தத்தை நீராகப் பாய்ச்சித்தான் பொதுவுடைமை விதை தெளிக்கப்பட்டது. இதன் எதிரொலியாக அமெரிக்க அய்க்கிய நாட்டிலிருந்த ரஷ்யர் பலர் 1917-ல் கொல்லப்பட்டனர்.

அரசியல் சட்ட ரீதியாக சிறு மாற்றம் வேண்டிய அய்ரிஷ் மக்களைப்—பல்லாயிரவரைப் படுகொலை செய்தது, பிரிட்டிஷ் ஆட்சி—1920-ல்.

இத்தாலி நாட்டில் 1920-க்குப் பின்னர் வெடித்த தொழிற் புரட்சியின் பேரால் ஆயிரக்கணக்கானோர் கொல்லப்பட்டனர்.

'கத்தியின்றி ரத்தமின்றி யுத்தம் ஒன்று வருகுது' என அகிம்சை பேசிய இந்திய தேசிய வாதிகள் வெள்ளையரைச் சுட்டனர்; தண்டவாளத்தைப் பெயர்த்தனர்; பாலங் களைத் தகர்த்தனர்; அஞ்சலகங்களைக் கொளுத்தினர். வெள்ளையரும் பறவைகளைச் சுடுவது போல் இந்தியரைச் சுட்டனர். 'சுதந்தரப் போர்' என்ற பேரால் இவை நடந்தன.

மத உணர்ச்சிக்கும்–வெறிக்கும் ஆட்பட்ட இந்தியாவில்—இந்துக்களும், முஸ்லிம் களும்–தனி நாடு கோருவதன் பேரால்—இலட்சக்கணக்கானோர் 1947-ல் நவகாளியில் கோரக் கொலை புரிந்து கொண்டனர்.

மதத்தால் ஒருவரே எனினும்—இனத்தாலும், மொழியாலும் வேறுபட்டவர்கள் எனக் கூறிச் சுதந்தரம் வேண்டிய வங்காள மக்கள்—பல இலட்சம் பேரைப் பலி கொடுத்துத்தான் 1970-ல் பங்களாதேஷ் கண்டனர்.

இந்தக் கோர சம்பவங்கள் உலக வரலாற்றின் பக்கங்களில் இரத்தக் கறையைப் படிய வைத்துள்ளன.

ஆனால், இரத்தம் சிந்தாமல்—கத்தியைப் பயன்படுத்தாமல்—பிறர் எவருக்கும் தீங்கு விளைவிக்காமல்—ஆட்சியைக் கைப்பற்றாமல்—தம் தொண்டர்கட்கு உடல் வருத்தம் மட்டுமே விளைவிப்பதன் மூலம்—49 ஆண்டு காலத்தில்—2000 ஆண்டு கால சமூக அடிமை நிலையை மவுனப் புரட்சி மூலம் (Silent Revolution) பெரிய அளவுக்கு மாற்றிய ஒரே தலைவர், உலக வரலாற்றில் பெரியார் அவர்களே ஆவார்.

# உலகத் தலைவர்

பெரியார் ஓர் உலகத் தலைவர்.

மனித அறிவின் ஆற்றல் எல்லையற்றது; நாடோறும் புதுப் புது எண்ணங்களைத் தரவல்லது. அத்தகைய அறிவைத் தங்கு தடையின்றிப் பயன்படுத்திச் சிந்தித்தல் வேண்டும்; அவ்வாறு சிந்தித்துக் கண்ட முடிவைத் துணிந்து செயற்படுத்த வேண்டும்.

தாராள சிந்தனைக்குத் தடையாக உள்ள கடவுள், மதம் போன்ற அனைத்தும் மனிதனால் கற்பிக்கப்பட்டவை. அவற்றை அழித்தொழிப்பது மானிடத்தின் நல்வாழ்வுக்கு இன்றியமையாதது. சுயமரியாதைக் கொள்கையின் அடிப்படை இதுவேயாம்.

இக் கொள்கையின் கர்த்தாவும், உரைகாரரும், விளக்குநரும், செயற்படுத்துநரும், பிரசாரகருமாகத் திகழ்ந்தவர்—கடந்த 2500 ஆண்டு கால உலக வரலாற்றில் பெரியார் ஒருவரேயாவார்.

கிரேக்க நாட்டில் தோன்றிய சாக்ரடீஸ், 'ஏன்? எப்படி? எனக் கேளுங்கள்!' என இளைஞர்கட்குப் போதித்தார். அதற்காக மதவாதிகளால் நஞ்சூட்டப்பட்டு மறைந்தார். வரலாறு தந்த ஆராய்ச்சியாளர் (Inquirer) அவர்.

இந்தியப் பெருங் கண்டத்தில் 2520 ஆண்டுகட்கு முன்னர் தோன்றிய புத்தர், 'முன்னோர் சொன்னவை என்பதற்காக எதையும் நம்பி ஏற்காதீர்கள்; புத்தியைக் கொண்டு சிந்தியுங்கள்!' எனக் கூறி அனைவரையும் சிந்திக்க வைத்தார். பல இடங்கட்கும் நேரில் சென்று மக்களைக் கண்டு பாமரருக்கும் புரியும் மொழியில் பேசித் தம் கொள்கைகளைப் பிரசாரம் செய்தார், புத்தர்.

உலகத்தில் நம்பிக்கை வாதத்தைத் தகர்த்த (Agnostic) முதல் பேரறிஞர் அவர்.

அவர் காலத்தில் இருளினும் இருண்ட காடுகள்—உயிரைக் குடிக்கும் விலங்குகளும் பிராணிகளும் அண்டிக் கிடந்த, போக்குவரவு வசதியற்ற பிரதேசங்கள்—அத்தகைய வசதிக் குறைவான நாளில் தம் அறிவுப் பிரசாரத்தைப் புத்தரால் எவ்வாறு ஆற்ற முடிந்தது எனப் பலரையும் நான் வினவ நேர்ந்த போது, பெரியார் ஒருவரே அதற்குப் பதிலளித்தார்.

'எதற்கும் துணிந்த—விசுவாசமுள்ள சிலர் புத்தரின் தொண்டர்களாக இருந்து அவர் கொள்கையினைப் பரப்பக் கருவியாக அமைந்தனர். புத்தரின் வெற்றிக்கு அதுதான் காரணம்' என—18-6-1965-ல், திருச்சி மாவட்டத்தில் சுயமரியாதைப் பயிற்சி அளிப்பதற்கான சுற்றுப் பயணத்தினை மேற்கொண்டபோது எனக்குக் கூறினார்.

இத் தன்மையில் புத்தரும், பெரியாரும் ஈடு இணையற்ற உலக அறிவியக்கத் தலைவர்களாக—வரலாற்றுச் சான்றாகத் திகழ்கின்றனர்.

அண்மைக் காலத்தில் மேலை நாடுகளில் அறிஞர்கள் ஆர். ஜி. இங்கர்சால், சார்லஸ் பிராட்லா, பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் முதலான நாத்திகவாதிகள் தலை சிறந்த அறிவியக்கப் பேராசிரியர்களாகத் திகழ்ந்தனர்.

அறிஞர் இங்கர்சால் 19 ஆம் நூற்றாண்டில் அமெரிக்காவையும், கானடாவையும், பிற மேலைநாடுகளையும் கலக்கிய மிகப்பெரு நாத்திகராவார்.

அவர் கிறித்துவ மதக் கொடுமைகளையும், அறிவுக்குப் பொருந்தாத நம்பிக்கைகளையும் இளமை முதல் எதிர்த்தவராவார்.

1833-ல் பிறந்த அவர் 1856 முதல் மதக் கொடுமையை எதிர்த்துப் பிரசாரம் மேற்கொண்டார்; 1860-ல் இலினாய்ஸ் மாகாணத்தில் பீகின் (Pekin)னில் மூடநம்பிக்கையை எதிர்த்து, நம்பிக்கை வாதத்தைத் தகர்க்கும் (Agnostic) பிரசாரத்தை முதலாவதாகத் தொடங்கினார். அப்போது முதல் தொடர்ந்து கடவுள், பேய்கள், மூடநம்பிக்கை, வைதிக மனப்பான்மை, பைபிள், நம்பிக்கைவாதம் எனப் பலவற்றையும் வெகுண்டு எதிர்த்துத் தாக்கி—நம்பிக்கைவாதத் தகர்ப்பாளராகவும், நாத்திகராகவும் (Agnostic and Atheist) திகழ்ந்தார். அன்னாரின் கவர்ச்சி மிக்க சொற்பொழிவுகள் இளைஞர்களைப் பெரிதும் கவர்ந்தன; அவர் வீசிய ஆற்றல்மிக்க தர்க்க ரீதியான வாதங்கள் நம்பிக்கைவாதிகளை வாயடைக்கச் செய்தன.

அவர் பேச்சு நிகழ்த்தப்படாத பெருநகரம் அமெரிக்காவில் இல்லை எனக் கூறத்தக்க அளவுக்கு, அவர் இறுதிக் காலமான 1899 வரையில் 39 ஆண்டுகாலம் பிரசாரப் பணியாற்றினார்.

அங்கு அவருடைய பிரசாரத்தைக் கேட்கப் படித்த இளைஞர்களும், பெண்களும் பேரார்வத்துடன் திரண்டனர்.

ஒரு சொற்பொழிவுக்கு அக் காலத்தில் குறைந்த பட்சம் 300 டாலர் அளித்து அவரை அழைக்கலாயினர். (The Life and Letters of Robert G. Ingersoll, By Eva Ingersoll Wakefield, Watts & Co., London 1952).

அங்கு அத்தகு மேதையின் உழைப்பால் விளைந்த பெரும் பயன்—படித்தவர்கள், பிரபுக்கள், பெரிய மனிதர்கள் எனப்படுவோர் இன்று நாத்திகர்களாகத் திகழ்கின்றனர் என்பதாம். அன்னாரின் ஆணித்தரமான நாத்திகக் கருத்துகள் உலகின் பல பகுதிகளிலும் படித்தவர்கள் மட்டத்தில் பரவி நிற்கின்றனவெனக் கொண்டால் அது தவறாகாது.

அண்மையில் 1970-ல் மறைந்த பேரறிஞர் பெர்ட்ரண்ட் ரஸ்ஸல்—1883 முதல் நாத்திகம் பற்றிப் பேசியும், எழுதியும்-படித்தவர்களிடையே பெரும்புரட்சியை விளைவித்தவராவார்.

தலை சிறந்த கணிதமேதையான அவர் எழுதியுள்ள சுமார் 80 நூல்களுள் கணிதம் பவுதிகம் போன்ற விஞ்ஞான ஆராய்ச்சி நூல்கள் மிக அதிகம். நாத்திகம் பரவத் துணை புரியும் தத்துவ விளக்கங்கள் கொண்ட நூல்கள் சுமார் 25-க்கு மேற்பட்டவை. 1890-ல் நாத்திகம் பற்றிச் சொற்பெருக்காற்றத் தொடங்கிய அவர்—சுமார் 1955 வரையில் கணிதம், பவுதிகம், உலக அமைதி, நாத்திகம் இவைபற்றிச் சொற்பொழிவாற்றும் பணியை மேற்கொண்டும், பின்னர் வாழ்ந்த 15 ஆண்டுக் காலம் ஓர் இடத்திலிருந்தே எழுத்துப் பணியையே முக்கியமாகக் கொண்டும் தொண்டாற்றியவராவார்.

1899-ல் இலண்டனில் பகுத்தறிவு நூற்பதிப்புக் கழகம், (Rationalist Press Association) தோன்ற மூலகாரணராக விளங்கிய அவர், அங்கு பிரபுக்களும், பேராசிரியர்களும், படித்தவர்களும் பகுத்தறிவுக் கொள்கையாளர்களாக விளங்க வழிவகுத்துச் சென்றவராவார்.

97 ஆண்டு வாழ்ந்த அவர்தம் சிந்தனையைக் கொள்ளை கொண்டவை விஞ்ஞான ஆய்வு, நாத்திகப் பிரசாரம், உலக அமைதிக் காப்பு எனப் பல்வேறுபட்ட செயல் முறைகளாம்.

[செய்திக் குறிப்புகள், பிப்ரவரி, 1970]

தலைவர் தந்தை பெரியார் அவர்கள், 1891 முதல் நாத்திக எண்ணங்கொண்டு, 1900 முதல் நாத்திகம் பேசி, 1919 தொட்டு பொதுத் தொண்டினை—பிரசாரப் பணியினை ஏற்றவராவார்.

1920-க்குப் பிற்பட்ட காலத்தில்—பெரியார் மேற்கொண்ட தொழில் யாது? என்ற வினாவுக்கு—அவர் ஒரு வணிகர்; வேளாண்மைக்காரர்; ஆலை அதிபர்; இதழ் ஆசிரியர் என்ற தன்மையில் எந்த ஒன்றையும் குறிப்பிட்டுச் சொல்லும் அளவுக்குத் தம்மை அவர் இலக்காக்கிக் கொள்ளவில்லை. ஆனால், அத் துணைக்கும் இலக்காகித் திகழ முழுத் தகுதியும் வாய்ப்பும் என்றும் அவருக்கு இருந்தது. ஆயினும், அவரைப்பற்றி இவற்றுள் எதைக் குறிப்பிட்டுச் சொல்ல இயலும்? எதையும் சொல்ல இயலாது.

'பெரியார் 1925 முதல் 48 ஆண்டுக் காலம் ஒரு முழுநேர அறிவியக்கப் பிரசாரத் தொண்டராகத் திகழ்ந்தார்' எனக் கூறுவதுமட்டுமே சாலப் பொருந்தும். சுயமரியாதை இயக்கத்தைத் தோற்றுவித்த 1925ஆம் ஆண்டு முதல் அன்னாரின் இறுதி மூச்சு அடங்கும் வரை அவர்தம் சிந்தனையை—சொற்பொழிவை—எழுத்தை—செயல் திட்டங்களை ஆட்கொண்டு நிலவியது முற்றிலும் நாத்திகப் பிரசாரமேயாகும். அதன்மூலம் கோடிக்கணக்கான மக்கட்குத் தன்மான உணர்வையும், சிந்திக்கும் திறனையும் ஊட்டினார்.

இத் தன்மையினராக இயங்க அவரால் எங்ஙனம் முடிந்தது?

நாம் பிறிதோரிடத்தில் குறிப்பிட்டுள்ளவாறு, எந்தக் கொள்கையினை அறிவு பூர்வமாக ஏற்றுக்கொள்கிறாரோ அக் கொள்கைக்கே தம்மை முழுவதுமாக ஒப்படைத்துக் கொண்டு, முழுநேரத்தையும் அப் பணிக்கே பயன்படுத்தும் இயல்பினர் பெரியார்.

'தம்மம் சரணம் கச்சாமி'–'கொள்கை வழி நடப்போம்' என்ற நெறிக்கு நிகரில்லாத எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தவர் அவர்.

தாம் மேற்கொண்ட பணிக்குத் தம் பொருட் செலவிலேயே திட்டங்கள் தீட்டியும் செயற்படுத்தியும் சிலகாலம் பணியாற்றும் அளவுக்குப் பொருள்வசதி படைத்தவராகத் திகழ்ந்தார்.

கொஞ்ச காலத்திற்குப் பின்னர் பொது மக்கள் தாமே விரும்பி அழைத்துச் செயல் படும் அளவுக்குப் பாமர மக்கள் இயக்கமாக–சுயமரியாதை இயக்கத்தை வளர்த்தார்; நாடெங்கும் எண்ணற்ற தொண்டர்களையும், எதற்கும் துணிந்த இலட்சிய சகாக்களையும் கொண்டிலங்கினார்; அச் சூழலிலும் தாமே ஓயாது செயல்படுவதெனத் துணிந்து துடிக்கும் காளைப் பருவத்தினரும் நாணும் தன்மையில்—தம் உயிர் போமளவும் சுழன்று சுழன்று பணியாற்றினார்.

ஓர் ஆண்டின் பெரும்பகுதி நாட்கள்—நூற்றுக்கணக்கான மைல் தொலைவுக்கு அன்றாடம் பயணம் செய்து வெளியிடங்கட்குச் சென்று சொற்பொழிவு நிகழ்த்தியும்; எழுதியும், கிளர்ச்சியை மேற்கொண்டும் பிரசாரப் பணிபுரிந்த 95 வயது மனிதர், உலகத்தில் பெரியார் ஒருவரே ஆவார் எனின் அது மிகையன்று.

தம் 90ஆம் வயதில் அவர் பயணம் செய்த நாட்கள் 141—சொற்பொழிவாற்றிய நிகழ்ச்சிகள் 180; தம் 91ஆம் ஆண்டில் பயணம் புரிந்த நாட்கள் 131—பேசிய நிகழ்ச்சிகள் 150; 92ஆம் வயதில் பயணம் புரிந்த நாட்கள் 175—அறிவுரை வழங்கிய நிகழ்ச்சிகள் 244, 93ஆம் வயதில் பயண நாட்கள் 183—பேருரையாற்றிய நிகழ்ச்சிகள் 249; 94 ஆம் ஆண்டில் பயணம் செய்த நாட்கள் 177—உரை நிகழ்த்திய நிகழ்ச்சிகள் 229; 95ஆம் ஆண்டில் அவர் வாழ்ந்த 98 நாட்களில், பயணம் புரிந்த நாட்கள் 35; விளக்க உரை ஆற்றிய நிகழ்ச்சிகள் 42. அம்மம்ம! எழுதவே கை நடுங்கும் இந்தச் சூறாவளிப் பயணத்தை எந்த நாத்திகரும், அல்லது தலைவரும் என்றும் எங்கும் 90 வயதுக்குப் பின் மேற்கொண்டதாகச் சான்றே இல்லை; இன்றளவும் இல்லை.

தம் வாழ்நாளின் இறுதிக் காலத்தில், தமது உயிர்க் கொள்கையான சமுதாய இழிவு ஒழிப்புக்கென மேற்கொண்ட புயல் வேகப் பயணத்தில் 18-11-1973 முதல் 28-11-1973 வரை திருச்சி, மதுரை, காரைக்குடி, திருநெல்வேலி, தஞ்சாவூர், சென்னை, வேலூர் (வ. ஆ.),

கடலூர், தருமபுரி, சேலம், கோவை என நாள்தோறும் ஒவ்வொரு ஊராக, 200, 300 கல் தொலைவுக்கு—சிறியதான 'அம்பாசடர்' காரில்—ஓய்வு கொள்ளாது, உறக்கமின்றி—குளிரின் கொடுமையையும், மழையின் தொல்லையையும் துச்சமெனக் கொண்டு பயணம் மேற்கொண்ட நெஞ்சைக் குலுக்கும் அப் பதினோரு நாள் சுற்றுப் பயணத்தை அஞ்சாது நிகழ்த்திய ஆற்றல் மறவர் அவர்.

உலகின் பல பகுதிகளில் நூறு வயதுக்கு மேற்பட்ட பல்லாயிரக்கணக்கான மக்கள் இன்றும் வாழ்ந்து வருகிறார்கள். அவ்வாறு வாழ்வோர் பரம்பரையாகத் தாங்கள் புரிந்த தொழில்களை மேற்கொண்டு ஓரிடத்திலேயே நிலையாக வாழ்ந்து வருபவர்களாவார்கள்.

இந்த நூற்றாண்டில் இந்தியாவில் வாழ்ந்த வயது முதிர்ந்த பெருந் தலைவர்களாகத் திகழ்ந்த காந்தியார், திரு. சி. இராசகோபாலாச்சாரியார் போன்றோர் பெரிதும் இருந்த இடத்திலிருந்தே, நீரோடும் போக்கில் செல்வதான தங்களின் கருத்துகளை எழுதிக் குவித்தவர்களாவர்—பயணம் மேற்கொண்டு கருத்துப் பிரசாரம் செய்வதை மிக அரிதாக மேற்கொண்டவர்களே ஆவர்.

தந்தை பெரியார் அவர்களோ மேற்சொன்ன இத் துணைத் தலைவர்களிடத்தும் அமைந்திருந்த சிறப்பியல்புகளை விஞ்சியவராக நின்று—முழுநேர நாத்திகப் பிரசாரகராக—நாத்திக இயக்கத்தைப் பாமர மக்கள் இயக்கமாக உருவாக்கித் தம் வாழ்நாளிலேயே வெற்றி குவித்தவராக—90 வயதுக்குப் பின்னும் சுழன்றுலவிப் புயல்வேக நாத்திகப் பிரசாரம் புரிந்தவராக—உலக வரலாற்றில் தனியொருவராக நிற்கும் சிறப்பிடத்தைப் பெற்றவராவார்.

இத் தன்மை வாய்ந்த சிறப்பியல்புகள் மட்டுமே அவரை 'உலகத் தலைவர்' என உயர்த்திவிடவில்லை. 1900 முதல் அவர் தம் சிந்தனையில் சுரந்த—உலக மானிடம் தழுவிய கருத்துகள் எண்ணிறந்தவை. அவற்றுள் சிலவற்றை நிரல்படுத்திக் காண்டல் அவர்தம் தனித் தன்மையைக் காணத் துணை நிற்கும்.

மானிடத்தின் கவலைக்கும் பேதநிலை வாழ்வுக்கும் கடவுள்—மத நம்பிக்கைகள் மூலகாரணமாக உள்ளனவாதலின், அவை ஒழிக்கப்பட்ட இடமே மானிடம் பேதநிலையற்று வாழத்தக்க இடமாகும் என்ற அவர்தம் சுயமரியாதைத் தத்துவத்தை 1900-லேயே அவர் ஊட்டமாக உணர்ந்தார்; உணர்ந்தவாறு உரைத்தார்.

அவ்வாறே உலகப் பெருஞ் சிந்தனையாளர் பலரைத் திகைக்க வைத்த மக்கள் பெருக்கக் கோட்பாடும், மக்கள் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தும் பிரச்சினையும் குறித்த அவர்தம் அறிவுரை உலக மானிடத்திற்கு உற்ற பெருங்கேட்டுக்குச் சிறந்த பரிகாரம் அளிப்பதாகும்.

இப் பிரச்சினையைக் குறித்து முதன் முதல் துணிவாகத் தம் கருத்துகளை உலகுக்கு அளித்தவர் அறிஞர் இராபர்ட் மால்தஸ் (Robert Malthus) என்பவராவார். அவர் 1798-ல், 'மக்கள் பெருக்கக் கோட்பாடும்—சமூகத்தின் வருங்கால முன்னேற்றத்தை அது பாதிக்கும் விதமும்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரையை வெளியிட்டார். அதனையே மேலும் விரித்தெழுதி 1803-ல் வெளிப்படுத்தினார்.

மால்தசின் கொள்கைப்படி, மக்கள் தொகைப் பெருக்கம் பரப்பியல் விகிதத்தில் (Geometric Progression—1, 2, 4, 8, 16, 32) பெருகுவதாகவும்; உணவுப் பெருக்கம் கூட்டெண் விகிதத்தில் (Arithmetic Progression—1, 2, 3, 4, 5, 6) பெருகுவதாகவும் கருதப்பட்டது.

அவ்வாறு நேரிடுவதால் வருங்கால சமுதாயம் உணவுப் பற்றாக்குறையினால் மிகப் பெரிய பாதகம் அடையும் எனவும், எனவே மக்கட் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டுமெனவும் குறிப்பிட்டார். இந்நிலை குறித்து மிகப் பல வழிகளை அறிஞர்கள் குறிப்பிடுவாராயினர்.

1910-ல் எட்மண்ட் ரைகார்டு (Edmund Ricard) என்பவர், வயது முதிர்ந்தவர்களையும், சமூகத்திற்குப் பயன்படாதவர்களையும், அவர்களின் உறவினர்கள் கொன்று விடுவது இதற்கு ஒரு பரிகாரமாகலாம் எனக் கூறினார்.

வேறு பலர் இல்லற வாழ்வில் ஆணும் பெண்ணும் சம்போக உணர்வைக் கட்டுப்படுத்துவதன் மூலமோ, நீண்ட இடைவெளிக்குப் பின் சம்போகம் கொள்வதன் மூலமோ பிள்ளைப் பேற்றைக் குறைக்க முடியும் எனக் கருதினர்.

அறிவியல் துறையில் விரைந்து முன்னேறிய மேலை நாட்டினர் கருத்தடை முறைகளை மேற்கொள்வதன் மூலம், மக்கள் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த முயன்றனர்.

மேற்கண்ட கருத்துகள் பரவத் தொடங்கியவுடன் உலகெங்கிலுமுள்ள மதத் தலைவர்கள் வன்மையாக இவற்றை எதிர்த்தனர். 'மனிதனால் உயிரை ஆக்க முடியாது; ஆதலால் கருவைத் தடுப்பது அல்லது வளரும் கருவை மனிதன் சிதைப்பது கடவுள் கட்டளைக்கு எதிரானது' என அவர்கள் உரத்துக் கூறினர். இவ்வகையில் கிறிஸ்தவர், இஸ்லாமியர், இந்து முதலான எல்லா மதவாதிகளும்—மருத்துவர்கள் என்போருங் கூட ஒரே அணியில் நின்று எதிர்த்தனர்.

இந்தியாவில் இந்துமதம் விளைத்த கேடுகளுள் மிகவும் வெறுக்கத்தக்கது ஒன்றுண்டு. அதாவது, 'புத்' என்னும் நரகம் உண்டெனக் கற்பனை செய்து, அதில் விழாமல் தடுத்துக் கொள்ள, 'புத்திரன்' பெற்றெடுப்பது மதக் கடமை என விதிக்கப்பட்டதேயாம். இதனை நம்பிய ஒவ்வொருவரும் பல பெண் குழந்தைகள் பெற்றிருப்பினும்—ஒரு ஆண் குழந்தை பிறக்கும் வரையில் குழந்தை பெறுவதை நிறுத்துவது பாவம் எனக் கொண்டனர். மேலும், 'பிள்ளை என்பது ஆண்டவன் கொடுப்பது' எனவும் நம்பினர்.

அன்றியும், ஒரு மனைவிக்கு ஆண் குழந்தை இல்லையெனின், பல பெண்களை மணந்தேனும் ஆண்பிள்ளை பெறுவது தர்மம் எனக் கருதிச் செய்தனர். சில வகுப்பினரின் பெண்டிர், தன் கணவன் மூலம் ஆண் குழந்தை பெறமுடியாது என நம்பிவிட்டால், பிற ஆண்கள் மூலமாவது ஒரு ஆண் குழந்தையைப் பெறவேண்டும் எனக் கருதினர். இப் பழக்கங்களுள் பலதார மணம் என்பது 1955-க்குப் பின்னர் சட்டப்படித் தடுக்கப்பட்டது. இத்தகைய சட்டத்தினை ஆக்கவேண்டுமென 1909 முதல் பெரியார் போராடினார் என்பது நினைவு கூரத்தக்கது. நிற்க.

மேற்கண்ட மவுடீகத் தன்மைகளைக் கூர்ந்து கவனித்த பெரியாரவர்கள், ஈரோட்டில் தமது 'குடிஅரசு' அலுவலகத்துக்கு எதிர் வீட்டுக் குடும்பத்தினரின் சண்டையைத் தீர்த்து வைக்க நேர்ந்த சம்பவம் முதற்கொண்டு, 'பிள்ளை என்பது—பெண்களை ஆண்களுக்கு அடிமையாக்குவது; ஆணுக்கும் பெண்ணுக்கும் தொல்லை தருவது; மனிதனைச் சமுதாயத் தொண்டுக்குப் பயன்படாதவனாக ஆக்குவது' என்ற முடிவுக்கு வந்தார்.

எனவே, 1928 முதல் கர்ப்பத் தடைபற்றி மிக ஓங்கிய குரலில், நாடெங்கும் எடுத்துரைத்தார். 1930-ல் 'கர்ப்ப ஆட்சி அல்லது கர்ப்பத் தடை' என்ற தொகுப்பு நூலை வெளிப்படுத்தினார்.

காந்தியார் இதுபற்றிக் குழப்பமான எண்ணங்களை 1928-ல் வெளியிடலானார். அவர், தம் 'Young India-யங் இந்தியா' ஏட்டில் 26-4-1928-ல் குறித்துள்ளதாவது:

'பிறப்பைக் கட்டுப்படுத்துவது குறித்து இருவிதக் கருத்துகள் இருக்க முடியாது. ஆனால், பழங்காலந்தொட்டுப் பாரம்பரியமாக அதற்கென உள்ள முறையானது, சம்போக உணர்வைக் கட்டுப்படுத்திக்கொள்வது அல்லது பிரம்மசரியத்தை அனுசரிப்பது என்பது தான். இது பிழைநேர முடியாத—மிகச் சக்திவாய்ந்த பரிகார முறையாகும்; இதனை அனுசரிப்பவர்களுக்கு நன்மை தர வல்லதாகும். சம்போகம் என்பது போக இன்பம் பெறுவ

தற்காக உள்ளதன்று; பிள்ளை பெறுவதற்காக மட்டுமே சம்போகம் கொள்ளத்தக்க தாகும்' என்பதாம்.

('There can be no two opinions about the necessity of birth control. But the only method handed down from ages past is self-control or brahmacharya. It is an infallible sovereign remedy doing good to them who practise it. The union is meant not for pleasure but for bringing forth progeny'—Population and Planned Parenthood in India, by Dr. S. Chandrasekar, 1955, pp, 50-51.)

காந்தியாரின் மேற்சொன்ன அறிவுரை எந்த மனிதனுக்கும் காரிய சாத்தியமானதல்ல எனவும், சமூகத்திற்குப் பொதுவிதியாக ஆக்கப்பட முடியாதது எனவும் அறிஞர்கள் அவ்வப்போது குறிப்பிட்டுள்ளனர்.

சான்றாக, திரு. ஜவஹர்லால் நேரு அவர்கள், தம் சுயசரிதையில், காந்தியாரின் மேற்கண்ட கருத்தைக் கண்டித்து, 1936-ல் எழுதினார். (An Auto-biography—London, 1936). இத் துறைபற்றி இதற்குமுன் திரு. நேரு சிந்தித்துக் கருத்து அறிவித்த தாகத் தெரியவில்லை.

பெரியார் அவர்கள் வருங் காலத்தை மிகவும் உன்னிப்பாகக் கணித்து, 6-4-1930 'குடி அரசு' தலையங்கத்தில் கிடைத்தற்கரிய—பின்கண்ட அறிவுரைகளை வழங்கினார்.

'மதுவிலக்குப் பிரசாரத்தைவிட, தொத்து வியாதிகளை ஒழிக்கும் பிரசாரத்தைவிட, இந்தக் கர்ப்பத் தடைப் பிரசாரம் மிகவும் முக்கியமானதென்பதே நமது அபிப்பிராயம். ஆதலால், இந்தக் கர்ப்பத் தடைக்கு நமது நாட்டில் ஒரு ஸ்தாபனம் ஏற்படுத்தி அதன் மூலம் பிரசாரம் செய்யப் பொதுமக்களில் சிலராவது இது சமயம் முன்வர வேண்டுமென வேண்டிக்கொள்கிறேன்' என்பது அவர்தம் அறிவுரையாகும். (இந் நூல் பக்கம் 156)

இவ்வாறு, கர்ப்பத் தடையே ஏற்ற பரிகாரம் என்பதை, இதிற் கண்டவாறே—1928 முதலே பெரியார் உலகுக்கு உணர்த்திவந்தார்.

இதனை ஏற்று அன்று தொடங்கிச் செயல்பட்டவர்கள் இந்தியத் துணைக் கண்டத்தில், பெரியாரும் அவர்தம் இயக்கத் தொண்டர்களுமேயாவர். 'சுயமரியாதை ஸ்தாபனம் என்பது, கர்ப்பத் தடைப் பிரசார ஸ்தாபனம்' எனக் கருதப்படும் அளவுக்கு, தென்னகத்தில் பெரியார் இத் துறையில் ஆற்றியுள்ள பணி—இந்திய மக்களாலும், அரசினராலும், உலகத்தினராலும் பாராட்டப்பட வேண்டியதாகும்.

அகில இந்திய அளவில் மக்கள் தலைவர்கள் என்போர், 1951-ல்தான் பம்பாயில் முதன்முதலாக, 'அகில இந்திய மக்கள் தொகை—குடும்பநலத் திட்ட முதல் மாநாடு' எனக் கூட்டி இத் துறைபற்றிச் சிந்திக்கலாயினர் என்பதும் அறியத்தக்கது.

எனவே, இத் துறையில், பெரியார் அவர்களின் வேண்டுகோளை அவ்வண்ணமே ஏற்றுச் செயல்படுவது போல்—1951-க்குப் பின் செயல்படுத்தப்பட்ட நான்கு ஐந்தாண்டுத் திட்டங்களின் வாயிலாக ஆயிரக்கணக்கான கோடி ரூபாய்களை இந்திய அரசும்—மாநில அரசுகளும் வாரி வழங்கிச் செயல்படுகின்றன. தென்னகத்தார் இதனை வரவேற்று ஏற்கத் தக்க பக்குவம் உள்ளவர்களாகத் திகழ மூலகாரணமானவர் பெரியார் ஒருவரே ஆவார்.

அன்றியும், ஐக்கிய நாடுகள் பெரு மன்றமும் (U. N. O.), உலக பாங்கு நிறுவனமும் உலக மக்கள் தொகை 1974-ல் 390 கோடியாக வளர்ந்துள்ளது கண்டு அஞ்சி, இப் பிரச்சினைக்குச் சரியான தீர்வுகாண முனைந்து செயல்படத் துவங்கியுள்ளதும் உலகோர் அறிந்த ஒன்றாகும்.

இவ்வாறாக, உலகத்தைச் சூழ்ந்துள்ள ஒரு பெருஞ் சவாலுக்கு—1928-லேயே சிறந்த பரிகாரம் கூறிய மேதையாவார், பெரியார். இத்துறை பற்றிய அவர்தம் இலட்சியம் பெண் ணடிமையை விலக்குவதும், மனித வாழ்வு துன்பமும் தொல்லையும் இன்றி அமைய வழி வகுப்பதுமேயாம்.

அடுத்து, பெண்ணுரிமை பற்றி அவரையொத்த தீவிர முற்போக்கு எண்ணம் கொண்டோர் உலக வரலாற்றில் பலருளர்; இந்திய வரலாற்றில் இல்லையென்றே சொல்ல லாம்; பிற்காலத்தில் திரு. நேரு போன்றோர் இதுபற்றிச் சிந்திக்கலாயினர் என்பது கண்கூடு.

இந்திய மண்ணில் இராசாராம் மோகன்ராய், பெண்கட்கு இழைக்கப்பட்ட கோரக் கொடுமைகளை(cruelties)க் கண்டு மனம் வெதும்பி அவற்றை ஒழிக்க முயற்சித்து வெற்றி கண்டார். ஆனால், பெண்கள் மதத்தின் பேரால் உரிமையற்றவர்களாக ஆக்கப் பட்டு—இழிபிறவிகளாக நடத்தப்படுவதைப்பற்றி இந்தியர் எவரும் பெரியாரையொப்பச் சிந்தித்திலர்.

பெண்ணுரிமையினை நிலைநாட்டும் செயலை 1909-லேயே அவர் மேற்கொண்டார்.

1909-ல் அவருடைய மூத்த தங்கையின் மகள் 10 வயதில் கைம் பெண்ணாக நேர்ந்தது. தம் சமுதாயத்தாரின் எதிர்ப்புக்கும், புறக்கணிப்புக்கும் அஞ்சாமல் அப் பெண்ணுக்கு உடனே மறுமணம் செய்வித்தார். மனைவியை இழந்த கணவன் மறுமணம் செய்து கொள்ள உரிமை இருப்பது போன்றே—கணவனை இழந்த மனைவியும் மறுமணம் பெற உரிமையுண்டு என்பதை அதன் வாயிலாக நிலை நாட்டினார்.

பெண்கள் ஆண்களுக்கு அடிமையாக உள்ள நிலையினை மாற்ற—பெண்களுக்குச் சொத்துரிமை கோரினார்; பலதார மணத்தடை வேண்டினார். இவ்வுரிமைகள் அவரால் கோரப்பட்டு, செல்வாக்குப் பெற்று மக்கள் ஏற்றுக்கொள்ளும் மனப் பக்குவம் வந்த நிலையில் —1956-ல் இவ்வுரிமைகளை வழங்கும் சட்டங்கள் வந்தன.

அஃதே போன்று இந்திய மண்ணில் அனைவருக்கும் முன்னோடியாக, பெண் ணுரிமை காக்கும் அரிய சுய சிந்தனைக் கருத்தொன்றை இந்திய அரசுக்கு வழங்கியவர், பெரியாரே ஆவார்.

'அரசியல் உத்தியோகங்களில் பெண்களுக்கு 50 சதவிகிதம், ஆண்களுக்கு 50 சத விகிதம் என ஒதுக்கப்படுவது—பெண்களுக்குச் சம உரிமை அளிப்பதாகவும், பெண்ணடி மையை ஒழிக்க உதவுவதாகவும் அமையும்' என்ற அவர்தம் சுய சிந்தனையில் விளைந்த யோசனையை (Original Suggestion)—இந்திய அரசின் துணை அமைச்சர் டாக்டர் எஸ். சந்திரசேகரிடம், தம்மைப் பேட்டி கண்டபோது, 1970 மார்ச்சில் வெளியிட்டார். இப்பேட்டி 8-3-1970-ல் சென்னை வானொலியில் ஒலி பரப்பப்பட்டது.

இவ் அரிய யோசனையை அப்படியே வரவேற்கும் தன்மையில் இந்தியக் குடி அரசுத் தலைவர் திரு. வி. வி. கிரி—இதே யோசனையை 14-2-1974-ல் வெளியிடலானார்.

['தினமணி' மதுரை—16-2-1974]

அடுத்து, பெண்ணுரிமை கோரியுள்ள அறிஞர் ரஸ்கின் (1819–1900) என்பார் நாத்திகரல்லர்; சீர்திருத்தக்காரர். அவருடைய கருத்துகள் தந்தை பெரியாரவர்களின் கருத்துகளுக்கு ஓரளவு ஒப்புமை உடையவை.

1864-ல் அவர் கூறியுள்ளதாவது: 'பெண்களின் இலட்சியம் என்றும், உரிமை என்றும் பேசப்படுவதை நாம் கேள்விப்படுகிறோம். பெண்ணின் இலட்சியமும், உரிமையும் வேறு; ஆணின் இலட்சியமும் உரிமையும் வேறு என இருப்பது போல் கருதியே இவ்வாறு பேசப்படுகிறது. மற்றும், பெண்ணும் அவளது கணவனும் வெவ்வேறு வகை உயிரினங்கள்

என்றும், ஒரே விதமான உரிமைகளைப் பெற முடியாதவர்கள் என்றும் கருதியே இவ்வாறு பேசப்படுகிறது. இது தவறானதாகும்.'

(We hear of the mission and of the rights of Woman, as if these could be separate from the mission and the rights of Man; as if she and her lord were creatures of independent kind and of irreconcilable claim. This, at least, is wrong. John Ruskin's: Sesame and Lilies, Lecture II, Queens' Gardens—1864)

இவ்வாறாக ஆண், பெண் உரிமைகளில் வேறுபாடு இல்லை என ரஸ்கின் கருதினார்.

சமுதாயத்தில் முற்போக்கடைந்துள்ள நாடுகளில்கூட பெண்ணுரிமை பற்றி நீண்ட காலம் வரையில் பெரியாருக்கு ஒப்பாக எவரும் சிந்திக்கத் துணியவில்லை என்பதை இது நமக்கு உணர்த்துகிறது.

ஆண் பெண் உரிமைகள் பற்றித் தந்தை பெரியார் அவர்கள் 1928-ல் ஆற்றிய சொற்பொழிவில் தெளிவுபடத் தம் கருத்தை வலியுறுத்தியுள்ளார்.

அதாவது: 'நாம் சுதந்தரமுள்ள மக்களாக வாழ வேண்டுமானால், நம் ஆண்களுக்கு அளிக்கப்பட்டுள்ள அனைத்துச் சுதந்தரத்தையும் சலுகைகளையும் நம் பெண் மக்களுக்கு வழங்கி அவர்கட்கு அவசியம் விடுதலை அளித்தல் வேண்டும்' என்பதே அதுவாம்.

(If we are to be free, we must free our women who must be allowed the same liberty and the privileges as our men—Periyar E. V. R's speech, on 26-11-1928, reported in 'Revolt' 12-12-1928)

பெண்ணுரிமை கோருவதில் ரஸ்கின் அவர்களை விஞ்சியவர்களாகவும்; பெரியாருக்கு ஒப்பானவர்களாகவும் அறிஞர்கள் இங்கர்சால், ரஸ்ஸல் முதலானோர் திகழ்ந்தது ஈண்டு நினைவில் நிறுத்தற்கு உரியது. விரிக்கிற் பெருகும்.

அடுத்து இன்னொரு பேருண்மை இங்குக் குறிக்கத் தகும்.

1943ஆம் ஆண்டில் பெரியார் அவர்கள் திருமண நிகழ்ச்சி யொன்றில் சொற்பொழி வாற்றினார். அந் நிகழ்ச்சியில் அவரோடு உரையாற்றிய திரு. சி. என். அண்ணாதுரை, பெரியாரின் சொற்பொழிவு முழுவதையும் குறிப்பெடுத்து, பின்னர் தெளிவுபட அதை எழுதிப் பெரியாரிடம் காண்பித்து, தமது 'திராவிட நாடு' ஏட்டில் 'இனிவரும் உலகம்' என்ற தலைப்பிட்டு, பெரியார் எழுதுவது என்ற குறிப்புடன், 21–3–1943, 28–3–1943 தேதிகளில் வெளியிட்டார்.

அன்றையச் சொற்பொழிவில் பெரியார் வெளியிட்ட கருத்துகள் அக் காலத்தில் அறிஞர் எவருக்கும் தட்டுப்படாதவையாகும்.

அவற்றுள் ஒன்றைப் பின்வரும் பகுதியில் காணலாம்.

அதாவது: 'மனிதனுடைய ஆயுள் நூறு வருஷமென்பது இரட்டிப்பு ஆனாலும் ஆகலாம்; இன்னும் மேலே போனாலும் போகலாம். பிரஜா உற்பத்திக்கு ஆண் பெண் சேர்க்கை என்பது நீக்கப்பட்டுவிடும். நல்ல திரேக திடனும், புத்தி நுட்பமும், அழகும், காத்திரமும் உள்ள பிரஜைகள் ஏற்படும்படியாகப் பொலி காளைகள்போல் பொலி மக்கள் வளர்க்கப்பட்டு, அவர்களது வீரியத்தை இன்சக்ஷன் மூலம் பெண்கள் சரீரத்தில் விட்டு, நல்ல குழந்தைகளைப் பிறக்கச் செய்யப்படும். ஆண் பெண் சேர்க்கைக்கும், குழந்தை பெறுவதற்கும் சம்பந்தமில்லாமல் செய்யப்பட்டுவிடும்'.

இக் கருத்துகளை 1943-ல் வெளியிட்ட அவர் ஓர் உடலியல் அறிஞராகவோ (Physiologist), உயிர்நூல் வல்லுநராகவோ (Biologist), மானிட இயல் ஆராய்ச்சியாள

ராகவோ (Anthropologist) இருந்து—அத் தகுதி காரணமாக அவற்றை ஊகித்து உணர்ந்தவரல்லர். மனிதனின் அறிவுக்கு உள்ள ஆற்றல் எல்லையற்றது என எப்போதும் கருதிய அவர், அறிவின் வளர்ச்சி காரணமாக எப்படிப்பட்ட நிலைகள் உருவாகக்கூடும் என்பதைச் சுய சிந்தனையாளர் (Original Thinker) என்ற முறையில் தாமாகவே சிந்தித்துக் கண்ட முடிவையே அவர் உலகுக்கு அறிவித்தார்.

அக் கருத்துகளைத் திரட்டி, 'இனிவரும் உலகம்' என்ற பெயரில் சிறு நூலாக வெளியிட்ட அய்யா அவர்கள், அந் நூலின் மேலட்டையில் (Wrapper) இரசாயன சோதனைக் குழாயில் (test tube) மனிதக் குழந்தை வளருவதுபோல் ஓவியம் ஒன்றை அப்போதே வெளியிட்டு, பாமரரையும் சிந்திக்க வைத்தார்; அறிஞர் என்போரைத் திணறச் செய்தார்.

அதேபோல், விஞ்ஞான வளர்ச்சியால் நிகழப்போகும் மற்ற பல வியத்தகு சாதனங் களைப்பற்றியும் அடிக்கடி பேசினார்; எழுதினார்.

மேலே குறிப்பிட்ட கருத்தினைப் பொறுத்தவரையில், 1965-க்குப் பின்னர்தான், உலகின் தலைசிறந்த விஞ்ஞானிகள் ஆராய்ச்சிக் கட்டுரைகளை வெளிப்படுத்தி, பெரியார் 1943-ல் வெளியிட்டதேபோல்—'சோதனைக் குழாயில் வளரும் குழந்தை' (Test tube baby) பற்றிய அறிவியல் சாதனையை உலகுக்குப் பறை சாற்றினர்.

அறிவியல் சாதனைகளின் எல்லையையும்—தொலைதூர நோக்குடன் 30 ஆண்டு கட்கு முன்னரே உலகுக்கு உணர்த்திய—கட்டற்ற உலக சிந்தனையாளர் ஆவார் பெரியார்.

அடுத்து, தந்தை பெரியார் ஆற்றியுள்ள நாத்திகப் பணி, உலக நாத்திகர்களுக்கே வழி காட்டியாகத் திகழும் தன்மையது எனக் கொள்ளத்தக்க விதத்தில், உலகஞ் சுற்றிய நாத்திகப் பொதுவுடைமை அறிஞர் குறிப்பிட்டுள்ளது நாம் எண்ணி எண்ணிப் பெருமிதம் கொள்ளத் தக்கதாகும்.

1914-ல் இந்தியாவை விட்டு இரகசியமாகத் தப்பிய அறிஞர் எம்.என். ராய் ஜப்பான், சைனா, சுவிட்சர்லாந்து, பிரான்சு முதலிய நாடுகளில் தங்கி, உலகப் பொதுவுடைமை இயக்கத்தில் ஈடுபாடு கொண்டார். 1920-ல் ரஷ்யாவில் அறிஞர் வி. இ. லெனினைக் கண்டு பேசினார்; அங்கேயே தங்கி மிகப்பெரிய கொள்கை விளக்க அறிஞராக (Theoretician) அவர் விளங்கினார்.

'காலனி நாடுகள் பிரச்சினை'யில் லெனினுடன் கருத்து வேறுபாடுற்று, 1931-ல் இந்தியாவுக்குத் திரும்பினார்; தேசிய காங்கிரசில் சேர்ந்து பணியாற்றினார். 1939ஆம் ஆண்டைய இரண்டாம் உலகப் போரின்போது, பிரிட்டிஷ் ஆட்சிக்கு விரோதமாக காங்கிரஸ் செயல்பட்டது; இதனை எதிர்த்துச் செயல்பட்டதால் காங்கிரசிலிருந்து அவர் வெளியேற்றப்பட்டார். ஆயினும், அரசுக்கு ஆதரவாக இந்தியாவெங்கிலும், தொடர்ந்து உதவி திரட்ட அவர் விரும்பினார்.

(M. N. Roy's Memoirs, Allied Publishers Private Ltd., Madras, 1964)

அதே சமயத்தில், தென்னாட்டில் நீதிக் கட்சித் தலைவராகத் திகழ்ந்த பெரியார், 'நாசிக் கொள்கை வெற்றி பெறாமலிருக்க வேண்டுமானால், பிரிட்டிஷார் வெற்றி பெறுவது அவசியம்' எனக் கூறி ஆட்சிக்கு ஆதரவு திரட்டுவதில் கட்சி ரீதியாகச் செயல்பட்டார்.

இதனை அறிந்த ராய் 'அகில இந்தியக் காங்கிரஸ் எதிர்ப்பு முன்னணி' ஒன்றை உருவாக்கி—எல்லா மாகாணங்களிலும் காங்கிரசல்லாத கட்சிகளின் கூட்டுமந்திரிசபைகளை அமைக்கும் நோக்குடன் 1941 பிப்ரவரியில் சென்னைக்கு வந்தார்; அவரைப் பெரியார் வரவேற்றார்.

இதனை அடுத்து 1944-ல் கல்கத்தாவில் திரு. எம். என். ராய் நடத்திய மாநாட்டுக்குப் பெரியாரை அழைத்தார்.

பெரியார் 21-12-1944-ல் வடநாட்டுக்குப் பயணமானார்; கல்கத்தாவில் எம்.என். ராய் ஏற்பாடு செய்திருந்த ரேடிகல் டெமாக்ரடிக் கட்சி மாநாடு (Radical Democratic Party Conference) 27-12-1944-ல் நடைபெற்றது; அதில் பெரியார் பேருரையாற்றினார்.

[M. N. Roy's Memoirs, page 611-'குடி அரசு'—6-1-1945]

அம் மாநாட்டில் பெரியார் அவர்களை வரவேற்றுப் பாராட்டுரை வழங்கிப் பேசிய திரு. ராய் அவர்கள், 'எனது நாத்திக ஆசான் பெரியார் ஈ. வெ. ரா. அவர்களைப் பாராட்டி வரவேற்கிறேன்' எனக் குறிப்பிட்டார்.

பெரியார், தம்மைப்பற்றி திரு. எம். என். ராய் அவ்வாறு குறிப்பிட்டமைக்குத் தாம் வெட்கப்படுவதாகத் தம் பேருரையில் குறிப்பிட்டார்.

உடனே, திரு. ராய் இடைமறித்து, 'நான் உண்மையைத்தான் சொன்னேன். உலகத்தில் நாத்திகத்தைப்பற்றி இத்தனை நூல்களை எழுதியும், வெளியிட்டும் உள்ள மேதை, யாரும் எனக்குத் தென்படவில்லை. இதற்கு ஆதாரமாக, இதோ அவரது குடி அரசுப் பதிப்பக நூல்களின் பட்டியலை நீங்களே பாருங்கள்!' என அவையோரை நோக்கிக் கூறி, தம் பாராட்டை உறுதிப்படுத்தினார். இவ் விவரத்தை 17-5-1973-ல் அய்யா அவர்கள் எனக்கு உணர்த்தினார்.

உலகஞ் சுற்றிய நாத்திகவாதியான திரு. ராய் போன்ற மேதையினால் 'ஆசான்' எனக் கொள்ளப்பட்ட தந்தை பெரியார்—நாம் முன்னர்க் குறிப்பிட்டவாறு, உலக வரலாற்றில் ஒப்பாரும் மிக்காருமில்லாத—உலக நாத்திக நாயகர் ஆவார்.

இத் துணைத் தனிச் சிறப்பியல்புகளுக்கும் ஓர் உறைவிடமாகவும், தாராள—சுய சிந்தனையாளராகவும், மானிடத்தின் கவலை போக்கவல்ல மாமருந்துகளை வழங்கிய வள்ளலாகவும்—கடந்த 95 ஆண்டுக்காலம் நம்மிடையே வாழ்ந்த தந்தை பெரியார்—ஓயாத உழைப்பால், இடையறாத சிந்தனையால், பழுது பார்க்கவும் முடியாத அளவுக்கு உறுப்பு வலு தேய்ந்து, உடலுரன் ஓய்ந்து, உயிர் மாய்ந்து சாய்ந்தனரெனின்—பேரிடி போன்ற அவ் இழப்பை எண்ணியெண்ணி நாம் கதறி அழுவதா? சிந்தை கலங்கிக் கவலுறுவதா? உளமுடைந்து உறுதி குலைவதா? உடல் சோர்ந்து உட்காருவதா? கூடாது; கூடாது; கூடவே கூடாது!

நாம் ஒவ்வொருவரும் உடலால்—உயிர்ப்பால்—உளத்தால் தந்தை பெரியார் அவர்களின் தன்மான—சுயசிந்தனை நெறி நாளும் வளர ஆவன செய்தலே கடமையாகும்.

வே. ஆனைமுத்து
பதிப்பாசிரியர்.

திருச்சிராப்பள்ளி,
1–5–1974

வெல்க பெரியாரிசம்!

# நன்றியுரை

திருச்சி சிந்தனையாளர் கழகத்தினரால், 'பெரியார் ஈ. வெ. ரா. சிந்தனைகள்' என்ற இந்நூல் பல தொகுதிகளில் வெளியிடப்படப் பதிப்புரிமை நல்கி, ஒப்புதலளித்து, வருத்தம் பாராது கையெழுத்துப் படி முழுவதையும் படித்துப் பார்த்தும், படிக்கக் கேட்டும் இம் முயற்சியை விரைவுபடுத்தி ஊக்கம் அளித்தருளிய, மறைந்த பெருந்தகை—உலகப் பெருஞ் சிந்தனையாளர் தந்தை பெரியார் அவர்கட்கும்; இப் பணிக்கு ஆதரவளித்து நூல்களை விரைவில் வெளிக்கொணரத் தூண்டிய திராவிடர் கழகத் தலைவர் திருமதி ஈ. வெ. ரா. மணியம்மையார் அவர்கட்கும் சிந்தனையாளர் கழகம் மனங்கனிந்த நன்றியினை உரித்தாக்குகின்றது.

இந்நூல் அச்சியற்றப்படுங் காலத்து இதன் தொகுதிகளைக் கண்ணுற்று, தங்கட்கு இருந்த பொறுப்புவாய்ந்த பணிகளினிடையேயும் எங்களின் தாளாண்மையை ஊக்குவித்து உதவிய தமிழக முதலமைச்சர் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி, கல்வி அமைச்சர் டாக்டர் நாவலர் வி. ஆர். நெடுஞ்செழியன், எம். ஏ., ஆகியோர்க்கும் ஏனைய அமைச்சர் பெருமக்கட்கும்; முன்னாள் முதலமைச்சர் கு. காமராசர் ஆகியோர்க்கும் இக் கழகம் இதயம் நிறைந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறது.

இந் நூல் வெளியீட்டு முயற்சி முட்டின்றி முற்றுப் பெற நடுநாயகமாகத் திகழ்ந்த இக் கழகப் புரவலர் அமைச்சர் திரு. அன்பில் பெ. தருமலிங்கம், அமைச்சர் திரு. என். வி. நடராசன், கழகத் தலைவர் திரு. கு. ம. சுப்பிரமணியன், பி. இ., ஆகியோர்க்கும் இக் கழகம் அன்புநிறைந்த நன்றியினை உரித்தாக்குகின்றது.

ஈராட்டைப் பருவத்தில் சிந்தனையாளர் கழகத்தினரால் இப் பெரும்பணி மேற்கொள்ளப்பட்ட நிலையில், இப் பணி துவண்டுவிடாமல்—இளங் குழவியைக் கண்ணயராது காக்கும் தாய்போல் நின்று காத்த திருவாளர்கள் கழகப் பொருளாளர் திருச்சி நோபிள் கு. கோவிந்தராசலு, ச. சோமு, வீரானந்தபுரம் ஆசிரியர் ந. கணபதி ஆகியோர்க்கும்; மெய்வருத்தம் பாராது இந் நூலைத் தொகுத்துப் பதிப்பிக்கும் சீரிய பணியைச் செவ்வனே நிறைவேற்றித் தந்த கழகச் செயலாளர் திருச்சி திரு. வே. ஆனைமுத்து அவர்கட்கும் இக் கழகம் மனமார்ந்த நன்றியறிதலை உரித்தாக்குகின்றது.

இம் முயற்சியினைக் குறித்து அவ்வப்போது உசாவி ஊக்குவித்த திருவாளர்கள் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் நெ. து. சுந்தரவடிவேலு, எம். ஏ., எல். டி., சென்னை கா. திரவியம், அய். ஏ. எஸ்., எம். எம். சந்திரகாசன், பி.ஏ., பி. தங்கராசன் பி.ஏ., ஏ. பி. சனார்த்தனம், எம். ஏ., திருச்சி எல். சுப்பிரமணியம், கோ. முத்துக்கிருஷ்ணன், செயலாளர் து. மா. பெரியசாமி ஆகியோர்க்கும் இக் கழகம் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றது.

இந் நூலுக்கான கையெழுத்துப் படிகளைத் திருச்சியிலும், தில்லையிலும் பார்வையிட்டு நூலுக்கு உரிய பகுதிகளையும் (Parts), தொகுதிகளையும் (Volumes) பிரித்து அமைக்கவும், தொகுதிகளை அழகுற அமைக்கவும் தகுந்த ஆலோசனைகளை வழங்கி உதவிய திருவாளர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் வ. சுப. மாணிக்கம், எம். ஏ., பி. எச்டி., துணைப் பேராசிரியர் மறைந்த சு. இராமாநுசம் எம். ஓ. எல்., எம். இடி., சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் பணியாற்றும் டாக்டர் பொன். கோதண்டராமன், எம். ஏ., பி.எச்டி., ஆகியோர்க்கும்; இப் பணிக்கு உதவி நல்கிய திருவாளர்கள் செம்பியன் எம்.ஏ., மணியன் எம்.ஏ., வி. சுகுமார் எம்.ஏ., குழுவினர்க்கும் உளமார்ந்த நன்றியினை உரித்தாக்குகின்றோம்.

இப் பெருமுயற்சியில் எங்கட்கு உற்றுழி உதவிய திருவாளர்கள் திருச்சி டி. எம். டி. பஸ் அதிபர் பி. நாராயணசாமி, திருச்சி கீதா பிரஸ் அதிபர் வி. எஸ். மணி மறைந்த கே. பரமசாமி பி.ஏ., ஆகியோர்க்கும்; கையெழுத்துப் படிகளைத் தயாரிப்ப தற்கும் சரி பார்ப்பதற்கும் பல மாதங்கள் பதிப்பாசிரியருடன் தங்கிப் பணிபுரிந்த திருவாளர்கள் சின்னபுங்கனேரி ஆசிரியர் வே. காசிநாதன், ந. புகழூர் ஆசிரியர் கி. சுந்தர ராசன், திருச்சி புலவர் சீ. பாலு, ஏ. அரங்கராசன் ஆகியோர் குழுவினர்க்கும் இக் கழகம் நன்றி தெரிவித்துக் கொள்கிறது.

இந் நூலின் தொகுதிகளை அழகுற அச்சிட்டுத் தந்த சென்னை 'கபீர் பிரிண்டிங் ஒர்க்ஸ்' நிறுவனத்தாருக்கும், அலுவலர்களுக்கும்; நூல் அச்சியற்றப்படுங் காலத்து முழுப் பொறுப்புடன் படி திருத்தும் பணியை மேற்கொண்டு உதவிய சென்னை திரு. எஸ். இராமச்சந்திரன் அவர்கட்கும்; தொகுப்புக்கு இன்றியமையாது வேண்டப்பட்ட ஆதாரங்களை அன்புடன் அளித்து உதவிய தலைவர் தந்தை பெரியார் அவர்கட்கும், திருவாளர்கள் நாகூர் பொ. பழனியாண்டி மகன் பொன்னம்பலம், சென்னை 'The Hindu' பத்திரிகை நிறுவனத்தார், சென்னை கே. பரமசிவம் ஆகியோருக்கும்; நூலுக்கு உரிய பிளாக்குகளை அழகுறச் செய்து தந்த சென்னை Rayan & Co.,வினருக்கும்; மற்றும் பல்லாற்றானும் ஆக்கமும் ஊக்கமும் வழங்கிய பெரு மக்கட்கும் திருச்சி சிந்தனையாளர் கழகம் நன்றி பாராட்டுகின்றது.

இக் கழகம் மேற்கொண்ட இந்த மாபெரும் பணிக்கு மனமுவந்து பெரும் பொருட் கொடை வழங்கியருளிய பெருஞ்செல்வர்கள், வணிகர்கள், பொதுமக்கள், இக் கழக உறுப் பினர்கள் ஆகியோர்க்கும்; பொருள் திரட்டித் தந்து உதவிய அறிஞர்கள், நண்பர்கள், இக் கழக உறுப்பினர்கள் ஆகியோர்க்கும்; இந் நூல் வெளியீட்டுத் தொடர்பான 'நூல் வெளி யீட்டு விழா மலர்' வெளியிட விளம்பரம் நல்கியதன் மூலம், நூல் வெளியீட்டு முயற்சியை ஊக்குவித்த ஆலை அதிபர்கள், தொழில் நிறுவனத்தினர், வணிகர்கள் ஆகியோருக்கும் இக் கழகம் பணிவார்ந்த நன்றியினையும், வணக்கத்தினையும் உரித்தாக்குகின்றது.

திருச்சிராப்பள்ளி,
1-5-1974

**சிந்தனையாளர் கழகம்**

# தந்தை பெரியார் ஈ. வெ. ரா. அவர்களின்

# வாழ்க்கைக் குறிப்புகள்

17—9—1879 — ஈரோட்டில் மண்டி வெங்கட்டப்ப நாயக்கர்—சின்னத் தாயம்மை ஆகியோரின் நான்காவது மகவாகவும், இரண்டாவது மகனாகவும் தோன்றினார்.

6 ஆம் வயதில் — திண்ணைப் பள்ளியில் சேர்க்கப்பட்டார்.

9 ஆம் வயதில் — பிரைமரி பள்ளியில் பயில அனுப்பப்பட்டார்.

11 ஆம் வயதில் — பள்ளிப் படிப்பை விட்டு நிறுத்தப்பட்டார்.

12 ஆம் வயதில் — மண்டிக் கடை வாணிபத்தில் ஈடுபடுத்தப்பட்டார்.

19 ஆம் வயதில் — 13 வயது நாகம்மையை (சேலம் தாதம்பட்டி)த் திருமணம் புரிந்தார்.

21 ஆம் வயதில் — ஒரு பெண் மகவுக்குத் தந்தையானார்; அக் குழந்தை 5 மாதத்தில் இறந்தது. பின்னர் குழந்தையே இல்லை.

— தம் வாணிபத்தில் தொழிலாளர்களுக்கு லாபத்தில் பங்கு கொடுத்து அவர்களைப் பங்குதாரர்களாக ஆக்கினார்.

25 ஆம் வயதில் — தந்தையார் கண்டிப்புக்கு அஞ்சித் துறவு பூண்டு, காசி, கல்கத்தா முதலான இடங்களுக்குச்சென்று, பின் தந்தையாரால் அழைத்து வரப்பட்டார்.

'வெங்கட்டப்ப நாயக்கர் மண்டி'—' ஈ. வெ. ராமசாமி நாயக்கர் மண்டி' ஆயிற்று.

1907 — காங்கிரஸ் இயக்கத்தில் நாட்டங்கொண்டார்.

1908 — காங்கிரஸ் மாநாடுகளுக்குச் சென்றுவரத் தொடங்கினார்.

1911 — தந்தையாரை இழந்தார்.

1914—1918 — காங்கிரஸ் மாநாடுகளை முன்னின்று நடத்தத் தொடங்கினார். ஈரோடு நகரமன்றத் தலைவராகப் பல ஆண்டுகள் பதவி வகித்து ஈரோட்டில் குடிநீர், சுகாதார வசதிகளை அமைத்தார்; மற்றும் சுமார் 28 கவுரவப் பதவிகளை வகித்தார்; 1918-ல் சேலத்தில் திரு. சி. இராசகோபாலாச்சாரியார் நகர மன்றத் தலைவர்.

1919 — நகரமன்றத் தலைவர் பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டு, காங்கிரசில் உறுப்பினரானார்; திருச்சியில் காங்கிரசில் வகுப்புரிமைத் தீர்மானம் கொண்டு சென்றார்.

1920 — கவுரவப் பதவிகள் அனைத்தையும் ராஜிநாமா செய்தார்; காங்கிரஸ் ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கு கொண்டார்; நெல்லையில் காங்கிரசில் வகுப்புரிமைத் தீர்மானத்தை முன்வைத்தார்.

1921 — ஈரோட்டில் கள்ளுக் கடை மறியலைத் தலைமை தாங்கி நடத்தினார்; காந்தியின் நிர்மாணத் திட்டத்தை மேற்கொண்டு, தாதம்பட்டியிலிருந்த தமது தென்னைகள் அய்நூறை வெட்டினார்; தீவிரக் கதர் பிரசாரத்தில் ஈடுபட்டார். தஞ்சையில், காங்கிரசில் வகுப்புரிமைத் தீர்மானத்தைக் கொண்டு சென்றார்.

1922 — கள்ளுக் கடை மறியலில் ஈடுபட்டு, கோவைச் சிறையில் காவல் வைக்கப் பட்டார்; 'குடி அரசு' இதழ் தொடங்கச் சிறையிலேயே திட்டமிட்டார். திருப்பூர் காங்கிரஸ் மாநாட்டில் வகுப்புரிமைத் தீர்மானம் கொண்டு சென்றார்; அங்கேயே, 'மனுதர்ம சாஸ்திரத்தையும், இராமாயணத்தையும் தீயிட்டுக் கொளுத்த வேண்டும்' என முழங்கினார் 'இந்தி' கற்பிக்கத் தன் கட்டடத்தில் பள்ளி துவக்கினார்.

1923 — 'குடி அரசு' துவக்க 19-1-1923-ல் அரசாங்கத்தில் பதிவு செய்தார்; மதுரை காங்கிரசில் வகுப்புரிமை கோரினார். தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராகப் பணியாற்றினார்.

1924 — தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராகப் பணிபுரிந்தார். இந்தியாவிலேயே முதன் முதலாகக் கேரளத்தில் வைக்கம் மகாதேவர் கோவில் முன் தீண்டாமை ஒழிப்புச் சத்தியாக்கிரகம் நடத்தி இரு தடவைகள் சிறைப் பட்டார்; தீண்டாமையை ஒழித்து வெற்றி கண்டார்—'வைக்கம் வீரர்' எனப் போற்றப்பட்டார். திருவண்ணாமலை காங்கிரசில் வகுப் புரிமைத் தீர்மானத்தை முன் மொழிந்தார்; சேரமாதேவி குருகுலத்தில் பார்ப்பனரல்லாதாருக்கு இழைக்கப்பட்ட அநீதியைக் கண்டித்தார். நீதிக் கட்சி ஆட்சியின் அறநிலையப் பாதுகாப்புச் சட்டத்தை ஆதரித்தார்.

1925 — 3-5-1925-ல் 'குடி அரசு' (மாலை 1, மலர் 1) வார இதழை ஈரோட்டில் துவக்கினார். காஞ்சிபுரம் காங்கிரஸ் மாநாட்டில் (25-11-1925) வகுப் புரிமைத் தீர்மானத்தை முன் மொழிந்தார்; அது ஏற்கப்படாததால்—மாநாட்டுப் பந்தலிலேயே, 'இனிக் காங்கிரசை ஒழிப்பதே என் வேலை' எனச் சூளுரைத்துக் காங்கிரசிலிருந்து நண்பர்களுடன் வெளி யேறினார்; அப்போது அவர் தமிழ்நாடு காங்கிரஸ் செயலாளர்.

1926 — 'இந்திக் கொள்கை'யைக் கண்டித்து எழுதினார். மதுரையில் டிசம்பரில் பார்ப்பனரல்லாதார் முதல் மாகாண மாநாட்டைக் கூட்டினார்.

1927 — காந்தியாரின் நிர்மாணத் திட்டங்களைக் கண்டிக்கலானார்; பெங்களூரில் காந்தியாரைச் சந்தித்துத் தம் பார்ப்பன எதிர்ப்புக் கொள்கையின் நியாயத்தை விளக்கினார். நாகை இரயில்வே தொழிலாளர் கிளர்ச்சியில் சிறைப்பட்டார். சைமன் கமிஷனை வரவேற்கக் கோரினார். 'திராவிடன்' தினசரியின் ஆசிரியரானார். சூலையில், கோவையில், சர். ஏ. இராமசாமி முதலியாரால் 'தமிழ் நாட்டின் ரூசோ' என அழைக்கப்பட்டார். திருக்குறள், புத்தர் கொள்கைகளை 'குடி அரசு' மூலம் பரப்பலானார். தம் பெயருக்குப் பின்னால் இருந்த 'நாயக்கர்' என்ற சாதிப் பட்டத்தை விலக்கினார்.

1928 — 'ஈ. வெ. ரா. பெரியார்' எனத் திராவிட இனத் தலைவர்களாலும், மக்களாலும் அழைக்கப்படலானார். 'ரிவோல்ட்–Revolt' ஆங்கில வார ஏடு துவக்கினார்.

1929 — செங்கற்பட்டு – சென்னை மாகாண முதலாவது சுயமரியாதை மாநாடு (பிப்ரவரி 17, 18) நடைபெற அடிப்படையாக விளங்கினார். டிசம்பரில் நாகம்மையாருடன் மலேயா நாட்டில் முதலாவதாகச் சுற்றுப் பயணம் செய்து, தீவிர சுயமரியாதைப் பிரசாரம் புரிந்தார். வகுப்புரிமை

உத்தரவு செம்மையாக அமுல் நடத்தப்பட வழிகண்டு வென்றார். பனகால் அரசர் மறைவால் மனமுடைந்த திராவிடரைத் தேற்றினார்.

1930 — மலேயாவிலிருந்து ஜனவரி 11-ல் புறப்பட்டு, 16-ல் நாகை சேர்ந்தார்; அப் பயண நாட்களில் தாடி வளர்க்க நேர்ந்தது. நாடெங்கும் உண்மை நாடுவோர் சங்கம், தாராள சிந்தனையாளர் கழகம், பகுத்தறிவாளர் கழகம் துவக்கினார்.
ஈரோட்டில் மாகாண இரண்டாவது சுயமரியாதை மாநாடு நடத்தினார்.
'ரிவோல்ட்' வார ஏடு நிறுத்தப்பட்டது.
காந்தியாரின் நிர்மாணத் திட்டங்களைப் புறக்கணித்தார். சமதர்ம அறிக்கையை ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம் செய்து வெளியிட்டார்.

1931 — விருதுநகரில் மாகாண மூன்றாவது சுயமரியாதை மாநாடு நடத்தினார். நாடெங்கும் சமதர்மச் சங்கங்கள் நிறுவத் தலைப்பட்டார்.
டிசம்பரில் அயல்நாடுகள் சுற்றுப் பயணம் மேற்கொண்டார்.

1932 — எகிப்து, ருஷியா, கிரீஸ், துருக்கி, ஜெர்மனி, ஸ்பெயின், பிரான்சு, போர்ச்சுகல், இங்கிலாந்து, இலங்கை முதலான அயல் நாடுகளில் 11 மாதம் பயணம் செய்தார்; நவம்பர் 11-ல் ஈரோடு திரும்பினார்; 'தோழர்' என விளியுங்கள் என வேண்டினார்; டிசம்பரில் சமதர்மத் திட்டம் தீட்டினார்.

1933 — 'புரட்சி' வார ஏட்டைத் துவக்கினார், தீவிர சமதர்மப் பிரசாரத்தை மேற்கொண்டார்; அதற்காக டிசம்பரில் தண்டிக்கப்பட்டுச் சிறை வைக்கப்பட்டார்.
11-5-1933-ல் நாகம்மையார் இயற்கை எய்தினார்; எனினும் மறுநாள் திருச்சியில் 144 தடையை மீறித் திருமணம் ஒன்றை நடத்தினார்.
'மே தினம்' முதன்முதலாக, 21-5-1933-ல் கொண்டாடக் கோரினார்.

1934 — சமதர்ம வேலைத் திட்டத்தைக் காங்கிரசுக்கும், நீதிக் கட்சிக்கும் அனுப்பினார். கடனுக்குச் சிறைபிடிக்கும் சட்டத்தை எதிர்த்துச் சிறை சென்றார்.
'பகுத்தறிவு' வார ஏட்டைத் துவக்கினார்; 'பகுத்தறிவு' தினசரி ஏட்டைத் துவக்கிச் சிறிது காலம் வெளியிட்டார். 'பகுத்தறிவு' வார ஏட்டில் டிசம்பரில் முதன்முதலாகத் தமிழ் எழுத்துச் சீர்திருத்தத்தைப் புகுத்தினார். ஜெயப் பிரகாஷ் நாராயண், ஈரோட்டில் பெரியாரைக் கண்டு பேசினார்.

1935 — நீதிக் கட்சி தம்திட்டத்தை ஏற்றுக் கொண்டதால் அக் கட்சிக்குத் தீவிர ஆதரவு அளித்தார். 'பகுத்தறிவு' மாத ஏடு துவக்கினார்.

1936 — நீதிக் கட்சி 1937 தேர்தலில் வெற்றிபெற வேண்டுமென விரும்பி, தீவிரப் பிரசாரத்தில் ஈடுபட்டார். தாயார் சின்னத் தாயம்மாள் 95-ஆம் வயதில் மறைவு.

1937 — தேர்தலில் நீதிக் கட்சி படுதோல்வி கண்டது; காங்கிரஸ் வென்றது.

1938 — இரயில்வே நிலையங்களிலுள்ள உணவு விடுதிகளில் 'பிராமணாள்—இதராள்' சாப்பிடுமிடம் என்றிருந்த இழிவை ஒழித்தார்.
ஆச்சாரியார் திணித்த கட்டாய இந்தியை எதிர்த்தார்; காஞ்சியில் இந்தி எதிர்ப்பு மாநாடு கூட்டிக் கிளர்ச்சித் திட்டம் வகுத்தார்;

கிளர்ச்சியில் 1269 பேர் சிறை சென்றனர்; இந்தியை எதிர்த்து, ஆகஸ்டில், தமிழர் பெரும்படை சென்னைநோக்கி அணிவகுத்துச் சென்று, 11-9-1938-ல் திருவல்லிக்கேணிக் கடற்கரையை அடைந்தது; அன்று அங்கு முதன் முதலாக, 'தமிழ்நாடு தமிழருக்கே!' எனக் குரல் கொடுத்தார் பெரியார்; கிளர்ச்சியில் 2 ஆண்டு தண்டனையும், 2000 ரூபாய் அபராதமும் விதிக்கப் பெற்று, பெல்லாரி சிறையில் வைக்கப் பட்டார்; சிறையில் இருந்தபோதே 29-12-1938-ல் நீதிக் கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 'பெரியார்' என்ற சொல்லால் எப்போதும் அவரைக் குறிப்பிட வேண்டுமெனத் 'தமிழ்நாட்டுப் பெண்கள் மாநாடு' அறிவித்தது.

1939 — சிறையிலிருந்து மீண்டார். சர். ஸ்டாபோர்ட் கிரிப்ஸை சந்தித்து 'திராவிடநாடு பிரிவினை'யை விளக்கி வலியுறுத்தினார்.

1940 — ஜனவரி 8-ல் பம்பாயில் எம். ஏ. ஜின்னாவின் இல்லத்தில் அவரைச் சந்தித்துத் தம் தனிநாடு பிரிவினைத் தத்துவத்தை விளக்கினார், டாக்டர் அம்பேத்கார் உடனிருந்தார். திருவாரூர் மாநாட்டில் திராவிட நாடு பிரிவினையை விளக்கினார். ஏப்ரலில் கவர்னர் ஜெனரலும், கவர்னரும், திரு. இராஜாஜியும் நேரில் வேண்டியும் மந்திரிசபைப் பதவியை ஏற்க மறுத்து விட்டார்.

1941 — 'பார்ப்பனர் அல்லாதார்' என்ற பெயரில் அமைப்புகள் இருப்பதைப் படிப்படியாக மாற்றி, 'திராவிடர் கழகம்' ஆக்கிவரலானார். திரு. எம். என். ராய் சென்னைக்கு வந்தபோது சந்தித்து உரையாடினார்.

1942 — திராவிடநாடு பிரிவினைக் கொள்கையைத் தீவிரமாகப் பிரசாரம் செய்தார். இரண்டாம் முறை கவர்னர் ஜெனரலும், கவர்னரும் வேண்டியும்கூட மந்திரிசபை அமைக்க மறுத்தார்.

1943 — 'சோதனைக் குழாயில் குழந்தை உருவாக்கப்படும்' (Test tube baby) என்ற சுயசிந்தனை முடிவை உலகுக்கு அறிவித்தார்.

1944 — சேலத்தில் ஆகஸ்டு 27-ல் கூடிய நீதிக் கட்சி மாநாட்டுக்குத் தலைமை ஏற்று, 'ஜஸ்டிஸ் கட்சி-தென்னிந்திய நல உரிமைச் சங்கம்' என்ற பெயரை 'திராவிடர் கழகம்' என அதிகார பூர்வமாக மாற்றினார். திருச்சியில் இந்துமகாசபைத் தலைவர் மூஞ்சேயைச் சந்தித்தார். டிசம்பர் 27-ல் கல்கத்தாவில் திரு. எம். என். ராயின் 'ரேடிகல் டெமாக்ரடிக் கட்சி' மாநாட்டுக்கும், 29, 30, 31-ல் கான்பூரில் 'பார்ப்பனரல்லாத பிற்பட்டோர்' மாநாடுகளுக்கும் சென்று அறிவுரை வழங்கினார்.

1945 — செப்டம்பர் 29, 30-ல் திருச்சியில் திராவிடர் கழக மாகாண மாநாடு நடத்தினார்; 'கறுஞ் சட்டைத் தொண்டர் படை' என்ற அமைப்பை உருவாக்கினார்.

1946 — மே 11-ல் மதுரையில் கறுஞ் சட்டைப் படை மாநாடு நடந்தது; பார்ப்பனர் தூண்டுதலால் மாநாட்டுப் பந்தல் எரிக்கப்பட்டு, தோழர்கள் தாக்கப்பட்டனர்—கொதித்தெழுந்த கறுஞ் சட்டையினரை அமைதிப் படுத்தினார், பெரியார். திராவிடர் கழகக் கொடி உருவாக்கப்பட்டது. அரசியல் நிர்ணயசபை உருவாக்கப்பட்ட முறையை வன்மையாக எதிர்த்தார்.

1947 — 'ஆகஸ்டு 15, சுதந்தர நாள்' என உலகமே கூறியபோது, 'ஆகஸ்டு 15, திராவிடருக்குத் துக்க நாள்' எனத் தெளிவாக அறிவித்தார்; வடநாட்டார் கவர்னராக நியமிக்கப்படுவதை எதிர்த்துக் கறுப்புக் கொடி பிடிக்கச் செய்தார். கடலூரில் 'திராவிடர் மாநாடு' கூட்டி, அனைத்துத் திராவிடருக்கும் நாட்டுப் பிரிவினை உணர்ச்சியை ஊட்டினார். 'சூலை 1 திராவிட நாடு பிரிவினை நாள்' என நாடெங்கும் கொண்டாடச் செய்தார்.

1948 — கட்டாய இந்தித் திணிப்பை எதிர்த்து, அனைத்துத் தலைவர்களையும் அழைத்து, சூலை 17-ல் சென்னையில் மாநாடு நடத்தினார்; இந்தியை எதிர்த்துப் பேச்சுரிமையை நிலைநாட்ட 144 தடையை மீறி குடந்தையில் போராட்டம் நடத்தி வெற்றிபெற்றார். கவர்னர்ஜெனரலாக திரு. சி. இராசகோபாலாச்சாரியார் சென்னைக்கு வந்தபோது அவரைப் பகிஷ்கரித்ததற்காகக் கழகத் தோழர்களுடன் சிறைப் பட்டார். மே 8, 9-ல் தூத்துக்குடியில் மாபெரும் மாகாண தி. க. மாநாடு நடத்தினார். 'திருக்குறள் மாநாடு' நடத்திப் பாமரர்க்கும் அந் நூலை அறிமுகப்படுத்தினார்.

1949 — இயக்கத்திற்குப் பாதுகாப்பு கருதி சூலை 9-ல் மணியம்மையைத் திருமணம் செய்துகொண்டார்; இந்த ஏற்பாட்டைக் காரணமாகக் கொண்டு திரு. சி. என். அண்ணாதுரை கழகத்திலிருந்து பிரிந்து, 'திராவிட முன்னேற்றக் கழகம்' என்ற தனி அமைப்பை ஏற்படுத்தினார். அரசியல் சட்டம் நிறைவேற்றப்பட்டதனை வன்மையாக எதிர்த்தார், பெரியார். உடுமலைப்பேட்டையில் 144 தடையுத்தரவை மீறிக் கைதானார்.

1950 — 'சனவரி 26 குடிஅரசு நாள்' என்பதைத் துக்கநாளாகக் கொண்டாடக் கோரினார். 'பொன் மொழிகள்' என்ற நூலுக்காக 6 மாதம் சிறைத் தண்டனை ஏற்றார். வடநாட்டு ஆதிக்கத்தை எதிர்க்கவும், கைத்தறியாளர் துயர் துடைக்கவும், வடநாட்டார் துணிக் கடை, உணவுக் கடை முன் மறியல் நடத்தி உணர்வூட்டினார். வகுப்புரிமை உத்தரவு செல்லாது என அய்க்கோர்ட்டும், சுப்ரீம்கோர்ட்டும் அளித்த தீர்ப்புகளை எதிர்த்து, பார்ப்பனரல்லாத தலைவர்களை அழைத்து, திருச்சியில் டிசம்பர் 3-ல் 'வகுப்புரிமை மாநாடு' நடத்தினார்; 'அரசியல் சட்டம் ஒழிக!' என நாடெங்கும் முழங்கச் செய்தார்; மத்திய அமைச்சர்கட்குக் கறுப்புக் கொடி பிடித்து எதிர்ப்பைத் தெரிவிக்கத் தீர்மானித்தார். தமையனார் ஈ. வெ. கிருஷ்ணசாமி மறைவு.

1951 — இந்திய அரசியல் சட்டத்தை வகுப்புரிமை வழங்கும் வகையில் திருத்தக் கோரினார்; அச் சட்டம் அமுலுக்குவந்த ஓராண்டில் 1951 பிப்ரவரியில் அதன் 15-வது விதியில் புதிதாக 4-வது உட்பிரிவு சேர்க்கப்பட்டு' பிற்பட்டோருக்கும், தாழ்த்தப்பட்டோருக்கும் வகுப்புரிமை வழங்கப் பாதுகாப்புச் செய்யப்பட மூலகாரணரானார்.

1952 — வயது வந்தோருக்கு வாக்குரிமை அளித்து முதலாவதாக நடந்த இந்தியப் பொதுத் தேர்தலில், சென்னை மாகாணத்தில் காங்கிரஸ் படுதோல்வி அடைய மூலகாரணராக விளங்கினார். இந்தியை எதிர்த்து ஆகஸ்டு 1-ல் இரயில் நிலையப் பெயர்ப் பலகைகளில், இந்தியை

அழிக்கும் கிளர்ச்சியை நடத்தினார். 'திராவிட ஸ்தாபனங்களே வேண்டும்' என அறிவித்து, திராவிட விவசாயத் தொழிலாளர் சங்கம், தென் பகுதி இரயில்வே மென் யூனியன் இவற்றைத் துவக்கினார்.

1953 — நாடெங்கும் 'விநாயகர் உருவப் பொம்மை உடைப்புக் கிளர்ச்சி' நடைபெறச் செய்து, உருவ வணக்கப் பித்தலாட்டத்தை அம்பலப் படுத்தினார். ஆகஸ்டு 1-ல் இரயில் நிலையப் பெயர்ப் பலகைகளில், இந்தியை அழிக்கும் கிளர்ச்சியை நடத்தினார்.

1954 — ஈரோட்டில் புத்தர் கொள்கை மாநாடு, குலக் கல்வித் திட்ட எதிர்ப்பு மாநாடு நடத்தினார். ராஜாஜியின் குலக் கல்வித் திட்டத்தை எதிர்த்து நாடு முழுவதும் கொதித்தெழச் செய்தார்; 1925 முதல் மேற்கொண்டு வந்த காங்கிரஸ் எதிர்ப்பைத் தளர்த்தி, ஏப்ரல் 13 முதல் காமராசரை ஆதரிப்பதாக அறிவித்தார்; குடியாத்தம் உபதேர்தலில் காமராசரை ஆதரித்தார்; அரை நேரக் குலக் கல்வித் திட்டத்தை ஒழித்தார். நாகையில் 76-வது பிறந்த நாளில் 76 பவுன் அளிக்கப் பெற்றார். ஆகஸ்டு 1-ல் இரயில் நிலைய போர்டுகளில் இந்தியை அழிக்கச் செய்தார். மணியம்மையாருடன் பர்மாவிற்குச் சென்று டிசம்பர் 3-ல் அங்கு உலக பவுத்தர் மாநாட்டில் கலந்துகொண்டார்; மலேயாவில் 2ஆம் தடவையாகச் சுயமரியாதைப் பிரசாரம் மேற்கொண்டார்.

1955 — இந்தித் திணிப்பை எதிர்த்து அரசாங்கத் தேசியக் கொடியை ஆகஸ்டு 1-ல் எரிப்பது எனத் தீர்மானித்தார். 'இந்தி, தேர்வுக்கான பாடமாக இராது' என மத்திய–மாநில அரசுகள் உறுதியளித்ததன்பேரில் கொடி எரிப்புக் கிளர்ச்சியைத் தற்காலிகமாக சூலை 31-ல் ஒத்தி வைத்தார்.

1956 — நாடெங்கும் இராமன் உருவப் படம் எரிக்கப்படச் செய்தார். 'தட்சணப் பிரதேசம்' என்ற கேடான அமைப்பை எதிர்த்து, அதனை இந்திய அரசு கைவிடச் செய்தார். மொழிவாரி பிரியும் தமிழ்நாடே, தாம் கோரும் 'தனித் திராவிடநாட்டின்' எல்லை என அறிவித்தார்.

1957 — திருச்சியில் வினோபா பாவேயைச் சந்தித்து இராமாயணம் பற்றிய தம் கருத்தை விளக்கினார். தமிழர்—கலெக்டர் திரு. மலையப்பன் விஷயமாகப் பார்ப்பன நீதிபதிகள் அளித்த அநியாயத் தீர்ப்பை எதிர்த்து நாடெங்கும் கண்டனக் குரல் எழுப்பினார். அதற்காக கோர்ட் அவமதிப்பு வழக்குக்கு ஆளாகித் தண்டனை ஏற்றார்; அவ் விசாரணையின்போது வரலாற்றுச் சிறப்புடையதான வாக்குமூலம் ஒன்றை அக்கோர்ட்டில் தாக்கல் செய்தார். தி. க. மத்திய கமிட்டியில் ஆகஸ்டில் காந்தி கண்டனத் தீர்மானம் நிறைவேற்றினார். உணவு விடுதிகளில் 'பிராமணாள்' என்ற பெயரை நீக்கும் கிளர்ச்சி நடத்தி வெற்றி பெற்றார். தமிழகத்தில் எந்தத் தலைவருக்கும் நடந்திராத தன்மையில் அவர்தம் எடைக்கு எடை வெள்ளிருபாய் அன்பளிப்பாக தஞ்சையில் 3-11-1957-ல் அளிக்கப்பெற்றார்; அங்கு, சாதியை ஒழிக்க வேண்டி, 'சாதிக்குப் பாதுகாப்பாக உள்ள அரசியல் சட்டப் பகுதியை எரிப்பது' என முடிவெடுத்தார்; 26-11-1957-ல் நாடெங்கும் சுமார் 10,000 பேர் சட்டத்தைக் கொளுத்தினர், 3000 பேர் தண்டிக்கப் பட்டனர், இருவர் சிறையிலேயே மாண்டனர். 'பார்ப்பனர்களை வெட்டச் சொன்னார், குத்தச் சொன்னார்' எனக் குற்றஞ்சாட்டி

3 செக்ஷன்களின் கீழ் $1\frac{1}{2}$ ஆண்டு தண்டனை விதிக்கப்பெற்று, ஏக காலத்தில் 6 மாதம் அனுபவிக்கத் தீர்ப்பு அளிக்கப்பட்டார், பெரியார் ; தமிழர்கள் கொதித்தெழுந்தனர்.

1958 — சிறையிலிருந்து விடுதலை அடைந்த அவர் மே 13-ல் சென்னையில் மாபெரும் வரவேற்பை ஏற்றார்.

1959 — வடநாட்டுச் சுற்றுப் பயணத்தை மேற்கொண்டு பிப்ரவரியில் கான்பூர், லக்னோ, டில்லி, பம்பாய் முதலான இடங்களில் ரிபப்ளிகன் கட்சிக் கூட்டங்களிலும், கல்லூரிகளிலும் பேருரைகளாற்றினார். தமிழ் மக்கள் அளித்த ரூபாய் ஒன்றரை லட்சம் நிதியைக் கொண்டு சென்னையில் 'எழும்பூர் டிராம் ஷெட்' என்ற இடத்தைக் கழகத்திற்கு வாங்கினார்—அதுவே 'பெரியார் திடல்'—அங்கேதான் நடிகவேள் எம். ஆர். ராதா மன்றத்திற்கு வலப் புறமுள்ள இடத்தில் அய்யா அவர்கள் இன்று மீளாத் துயில் கொள்கிறார்.

1960 — நாடெங்கும், தமிழ்நாடு பிரிவினை கோரி, 'தமிழ்நாடு நீங்கிய இந்திய தேசப் படத்தை' எரிக்கச் செய்தார் ; தடுப்புக் காவல் சட்டப் பிரிவு 151-ன் படி கைது செய்யப்பட்டார்.

1961 — காங்கிரசில் பார்ப்பன ஆதிக்கத்தை ஒழிக்க காமராசர் கையைப் பலப் படுத்தும் பணியைத் தீவிரமாக மேற்கொண்டார் ; சமதர்மப் பிரசாரம் புரிந்தார்.

1962 — பொதுத் தேர்தலில் காமராசருக்கு அபரிமிதமான வெற்றியைத் தேடித் தந்தார்.

1963 — காமராசர் பதவி விலகுவது தமிழருக்கும், தமிழ்நாட்டுக்கும், காமராச ருக்கும் தற்கொலையாக முடியும் என முன் கூட்டித் தந்திமூலம் அவருக்கு அறிவித்தார்.

1964 — 'தமிழ்நாடு நில உச்ச வரம்புச் சட்டம் செல்லாது' என சுப்ரீம் கோர்ட் அளித்த தீர்ப்பை எதிர்த்து நாடெங்கும் கண்டனக் குரல் எழுப்பினார். திருச்சியில் சுயமரியாதைப் பிரசாரப் பயிற்சி வகுப்பை நடத்தி விரிவுரைகளாற்றினார்.
காங்கிரஸ் ஆட்சி பார்ப்பன ஆதிக்கத்துக்கு இடந் தருவதைக் கண்டித் தார்.

1965 — 'இந்தி எதிர்ப்பு' என்ற பெயரால் பார்ப்பனர்கள், பத்திரிகைக்காரர்கள் தூண்டுதலின் பேரில் நடந்த கலவரத்தைக் கண்டனம் செய்து ஒடுக்கினார். நாடெங்கும் 6-4-1965-ல் 'இராமாயணம்' எரிக்கப்படச் செய்தார். திருச்சி மாவட்டத்தில் சுயமரியாதைப் பயிற்சி வகுப்புகள் நடத்தினார்.

1966 — நாடெங்கும் 'இராமாயணம்' எரிக்கப்படச் செய்தார்.
விழுப்புரத்தில் சுயமரியாதைப் பயிற்சி வகுப்பு நடத்தினார்.

1967 — பொதுத் தேர்தலில் காங்கிரஸ் பெற்ற தோல்வி தமது தோல்வி என அறிக்கை யிட்டார் ; தம் 1963-ம் ஆண்டுத் 'தந்தி'யைச் சுட்டிக் காட்டி னார். தேர்தலில் பெரு வெற்றி குவித்த திரு. சி. என். அண்ணாதுரை பார்ப்பனரின் சூழ்ச்சித் திட்டத்துக்கு ஆட்பட விரும்பாமல், மார்ச்சு மாதம் தந்தை பெரியாரைச் சந்தித்தார் ; பெரியார் ஆதரவு நல்கினார்.

தஞ்சை விடயபுரத்தில் சுயமரியாதைப் பயிற்சி வகுப்பு நடத்தினார்; அங்கேதான் கடவுள் மறுப்பு வாசகங்களை உலகுக்கு அறிவித்தார். அச் சமயம் நாகர்கோவில் பயணத்தினால் அவரது உடல்நலம் பாதிப் புற்றது. திருச்சியில், நகர மக்கள் குழு சார்பில், 17-9-67-ல் பெரியார் சிலை தமிழகத்திலேயே முதன் முதலாகத் திறந்து வைக்கப் பெற்றது. அறிஞர் சி. என். அண்ணாதுரை ஆட்சியில் 28-11-1967-ல், சுயமரியா தைத் திருமணம் செல்லுபடியாகும் சட்டம் நிறைவேற்றப்பட்டது. பெரியாருக்கு தி. மு. க. அளித்த முதல் வெற்றிக் கனி, அதுவாகும்.

1968 — தமிழ்நாட்டுக்குப் பூரண சுதந்தரம் கோரி 14-4-1968-ல் நாடெங்கும் 'டில்லி ஆதிக்கக் கண்டனநாள்' அனுசரிக்கச் செய்தார். லக்னோவில் அக்டோபரில் நடந்த மாநாடுகளில் அறிவுரையாற்றினார்.

1969 — இனஇழிவை நீக்க கோவில் கர்ப்பக் கிரகக் கிளர்ச்சிபற்றி அக்டோபரில் அறிக்கையிட்டார்; 16-11-1969-ல் மத்திய தி. க. கமிட்டியில், '26-1-1970-ல் கிளர்ச்சி நாள்' என அறிவித்தார்.

1970 — மார்ச்சு 7-ல் திருச்சி சிந்தனையாளர் கழகத்தையும், செப்டம்பரில் சென்னை பகுத்தறிவாளர் கழகத்தையும் துவக்கி, நாடெங்கும் இவ் வமைப்புகளை நூற்றுக்கணக்கில் தோற்றுவித்தார். குடந்தையில் 18-1-1970 மாநாட்டில் கர்ப்பக் கிரகக் கிளர்ச்சியை ஒத்திவைத்தார். அக்டோபரில் உணவு விடுதிகளில் 'பிராமணாள்' பெயர் அழிப்புக் கிளர்ச்சி நடத்தினார். நவம்பரில் பம்பாயில் சுற்றுப் பயணம் மேற் கொண்டார்.

1971 — கலைஞர் மு. கருணாநிதி ஆட்சியில், 12-1-1971-ல், 'அனைத்துச் சாதியினரும் அர்ச்சகர் ஆகலாம்' என்று சட்டம் நிறைவேற்றப் பட்டு, பெரியார் கோரிக்கை நிறைவேற வழி வகுக்கப்பட்டது. சனவரியில் சேலத்தில் மூடநம்பிக்கை ஒழிப்பு மாநாடு கூட்டினார்; அங்கு இராமன் உருவப் பொம்மை செருப்பாலும், விளக்குமாற்றாலும் அடித்து அவமானப் படுத்தப்பட்டு, தீயிடப்பட்டது. இராமன் படத்தை ஊர்தோறும் செருப்பால் அடிக்கச் செய்தார். இவற்றைக்கண்டு இந்தியாவே பரபரப்படைந்தது. தஞ்சை மன்னார்குடியில் திருச்சி–தஞ்சை தி. க. தொண்டர்கள் கருத்தரங்கில் அறிவுரை வழங்கினார்.

1972 — நாகை வேளாங்கண்ணியில் சுயமரியாதைப் பிரசாரப் பயிற்சி வகுப்பில் அறிவுரைகள் வழங்கினார்; தமிழ்நாடு அரசின் 'அனைத்துச் சாதியினரும் அர்ச்சகர்' ஆக உரிமைதரும் சட்டம் செல்லாதென சுப்ரீம் கோர்ட், அச் சமயம், தீர்ப்பளித்தது; அத் தீர்ப்பின் மூலம் பார்ப்பான், சத்திரியன், வைசியன், சூத்திரன் என்ற பேதம் நிலை நாட்டப்பட்டது. எனவே அத் தீர்ப்பை எதிர்த்து 15-3-1972-ல் நாகையில் போர்க் கொடி உயர்த்தினார்.

1973 — தம் 95ஆம் வயதில், அவர் வாழ்ந்த 98 நாட்களில், 35 நாட்கள் சூறாவளிப் பயணம் செய்தார். 16-9-1973, 17-9-1973 சென்னை பிறந்த நாள் விழா, 30-9-1973 மதுரை மாநாடு, 4-11-1973 திருச்சி சிந்தனை யாளர் கழகவிழா, 18-11-1973 முதல் 28-11-1973 வரை தமிழகச் சுற்றுப் பயணம்; 8, 9-12-1973 சென்னை மாநாடுகள் முக்கிய நிகழ்ச்சிகளாக அமைந்தன; இம் மாநாடுகள் அவர்தம் இன இழிவு நீக்கப் போரின்

கடைசிக் களமாகவும், அவர்தம் வாழ்நாளில் இறுதி மாநாடுகளாகவும் அமைந்து விட்டன. 19-12-1973-ல் சென்னை தியாகராய நகரில் சிந்தனையாளர் மன்றச் சார்பில்—மரண சாசனம் என அமைய நேரிட்ட பேருரையை நிகழ்த்தினார்; அதுவே இறுதிச் சொற்பொழிவாக அமைந்து விட்டது. 20-12-1973 பிற்பகல் 3 மணிக்கு சென்னை அரசினர் தலைமை மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டார்; 21-12-1973 பிற்பகல் வேலூர் C.M.C. மருத்துவ மனைக்குக் கொண்டு செல்லப்பட்டார்; 23-12-1973 மாலை கவலைக்கிடமான நிலையை அடைந்து, இரவு 11 மணிக்குப் பின் நினைவிழந்தார்—நினைவு திரும்பாமலேயே, தமிழகத்தையும், உலகச் சிந்தனையாளர்களையும் தத்தளிக்க விட்டு—24-12-1973 காலை 7-40 மணிக்கு மீளா விடை பெற்றார், தந்தை பெரியார். அவர்தம் 95 ஆண்டைய நெடியவாழ்வு முடிவுற்றது; ஓய்வறியாத அப் பெருந்தகை ஓய்வு பெற்றார். உடல் சென்னைக்கு எடுத்துச் செல்லப்பட்டது; 24-12-1973 பிற்பகல் 4 மணி முதல் 25-12-1973 பிற்பகல் 3 மணி வரை சென்னை இராஜாஜி மண்டபத்தில் அவர்தம் உடல் மக்கள் பார்வைக்கு வைக்கப்பட்டிருந்தது; அன்னாரின் உடலைக் கண்டு லட்சோப லட்சம் மக்கள் 'அய்யா' 'அய்யா!' எனக் கதறி அழுதனர்; 3-10 மணிக்கு அரசு மரியாதையுடன் இறுதி ஊர்வலம் துவங்கிற்று; 4-45 மணிக்குப் 'பெரியார் திடலை' அடைந்தது; அவரது தங்கமேனி தேக்கு மரப்பெட்டியில் வைத்து மூடப்பட்டு, மாலை 5-05 மணிக்குப் புதை குழியில் இறக்கப்பட்டது.

வாழ்க பெரியார் புகழ்!

# தந்தை பெரியார் ஈ. வெ. ரா. அவர்களின்

# நூல்கள்

| | நூலின் பெயர் | வெளிவந்த ஆண்டு | வெளியீட்டாளர் |
|---|---|---|---|
| 1. | வைக்கம் வீரர் சொற்பொழிவு | 1928 | தென்னிந்திய நலஉரிமைச் சங்கம், காரைக்குடி ஜில்லா |
| 2. | இராமாயண ஆபாசம் (முதற் பதிப்பு) | 1929 | திராவிடன் பதிப்பகம், சென்னை |
| 3. | கர்ப்ப ஆட்சி | 1930 | குடிஅரசுப் பதிப்பகம், ஈரோடு |
| 4. | தர்ம பரீட்சை அல்லது புராண ஆபாசம் | 1934 | ,, ,, |
| 5. | பங்கஜம் அல்லது பார்ப்பனக் கொடுமை | 1934 | ,, ,, |
| 6. | ஈ. வெ. ரா. இலங்கை உபந்யாசம் | 1934 | ,, ,, |
| 7. | ஈ. வெ. ரா. சீர்திருத்த மாநாட்டு'உபந்யாசம் | ,, | ,, ,, |
| 8. | சமதர்ம உபந்யாசம் | ,, | ,, ,, |
| 9. | சோஷியலிசம் | ,, | ,, ,, |
| 10. | சோதிடப் புரட்டு | ,, | ,, ,, |
| 11. | பொதுவுடைமைத் தத்துவங்கள் | ,, | ,, ,, |
| 12. | பெண் ஏன் அடிமையானாள்? | ,, | பகுத்தறிவு நூற்பதிப்புக் கழகம், ஈரோடு |
| 13. | பிரகிருதி வாதம் | ,, | ,, ,, |
| 14. | மதம் என்றால் என்ன? | ,, | ,, ,, |
| 15. | குடிஅரசுக் கலம்பகம் (முதற் பாகம்) | ,, | ,, ,, |
| 16. | சோதிட ஆராய்ச்சி | 1936 | குடிஅரசுப் பதிப்பகம், ஈரோடு |
| 17. | தமிழ்நாடு தமிழருக்கே! | 1939 | ,, ,, |
| 18. | திருவாரூர் மாநாட்டுத் தலைமையுரை | 1940 | ,, ,, |
| 19. | பணம் பிடுங்கிப் பார்ப்பனர் | 1942 | ,, ,, |
| 20. | இனிவரும் உலகம் | 1943 | ,, ,, |
| 21. | இதிகாசங்களின் தன்மைகள் | ,, | பகுத்தறிவு வெளியீடு, சென்னை |
| 22. | இராமாயணப் பாத்திரங்கள் | 1944 | ,, ,, |
| 23. | தமிழ் இசை நடிப்புக் கலைகள் | ,, | ,, ,, |
| 24. | கிராமச் சீர்திருத்தம் | ,, | சிந்தனைப் பண்ணை, தஞ்சை |
| 25. | உண்மைத் தொழிலாளி யார்? தொழிலாளியின் இலட்சியம் என்ன? | 1946 | குடி அரசுப் பதிப்பகம், ஈரோடு |
| 26. | இன இழிவு நீங்க இஸ்லாமே நன் மருந்து | 1947 | ,, ,, |
| 27. | தத்துவ விளக்கம் | ,, | நாதன் & கம்பெனி, ஈரோடு |
| 28. | விழாவும் நாமும் | 1948 | ஞாயிறு நூற் பதிப்பகம், சென்னை |
| 29. | தில்லையில் பெரியார் | ,, | திராவிடமணி பதிப்பகம், திருச்சி |

| | | | |
|---|---|---|---|
| 30. | திராவிடர் கழக இலட்சியம் | ,, | குடி அரசுப் பதிப்பகம், ஈரோடு |
| 31. | திராவிடர் ஆரியர் உண்மை | 1948 | ,, ,, |
| 32. | மொழி – எழுத்து | ,, | ,, ,, |
| 33. | தூத்துக்குடி மாகாண மாநாட்டுத் தலைமை உரை | ,, | ,, ,, |
| 34. | இந்திப் போர் முரசு (பெரியார் ஈ. வெ. ரா. மற்றும் தலைவர்கள்) | ,, | விடுதலை வெளியீடு, சென்னை |
| 35. | இந்து மதமும்–காந்தியாரும்–பெரியாரும் | ,, | வள்ளுவர் பதிப்பகம், பவானி |
| 36. | மொழியாராய்ச்சி | ,, | ,, ,, |
| 37. | திருக்குறளும் திராவிடர் கழகமும் | 1949 | ,, ,, |
| 38. | மேல்நாடும் கீழ்நாடும் | — | — — — |
| 39. | பொன்மொழிகள் | 1949 | திராவிடமணி பதிப்பகம், திருச்சி |
| 40. | திருமணம்பற்றிப் பெரியார் பேருரை | 1950 | முல்லை—கி. விசுவநாதன், தம்மம்பட்டி |
| 41. | தென்பகுதி இரயில்வே மென் யூனியன் திறப்புவிழாச் சொற்பொழிவுகள் | 1952 | — — — |
| 42. | புரட்டு, இமாலயப் புரட்டு! | 1953 | பெரியார் தன்மானப் பிரசார நிலையத்தார், திருச்சி |
| 43. | புரட்சிக்கு அழைப்பு | 1954 | தமிழன் அச்சகம், ஈரோடு |
| 44. | ஆசிரியர் பயிற்சிப் பள்ளித் திறப்புவிழாச் சொற்பொழிவு | 1955 | |
| 45. | முதலாளி தொழிலாளி ஒற்றுமைப் பிரச்சினை | 1956 | குடி அரசுப் பதிப்பகம், ஈரோடு |
| 46. | யார் துரோகிகள்? | ,, | பகுத்தறிவு வெளியீடு, சென்னை |
| 47. | சிந்தனைத் திரட்டு | 1957 | சிந்தனைப் பண்ணை, தஞ்சை |
| 48. | பெரியார் பொன்மொழிகள் பேச்சும் எழுத்தும் | 1957 | திராவிடர் கழகம், கல்கத்தா |
| 49. | காந்தியார் படத்தை எரிப்பது ஏன்? | ,, | பகுத்தறிவு வெளியீடு, சென்னை |
| 50. | கடவுள் | ,, | ,, ,, |
| 51. | புராண ஆபாசங்கள் | 1957 | குடி அரசுப் பதிப்பகம், ஈரோடு |
| 52. | பெரியார் தஞ்சை மாநாட்டுத் தலைமை உரை | 1957 | பகுத்தறிவு வெளியீடு, சென்னை |
| 53. | பெரியார் சிறைபுகுமுன் அறிக்கை | ,, | விடுதலை வெளியீடு, சென்னை |
| 54. | அய்க்கோர்ட் அவதூறு வழக்கில் பெரியார் ஸ்டேட்மெண்ட்டும் தீர்ப்பும் | ,, | ,, ,, |
| 55. | சித்திரபுத்திரன் எழுதுகிறார் | | பகுத்தறிவுப் பாசறை, சென்னை |
| 56. | போர்ச் சங்கு | 1958 | விடுதலை வெளியீடு, சென்னை |
| 57. | வெளியேறு! | | கூத்தரசன் பதிப்பகம், G.T., சென்னை |
| 58. | நாடகமும் சினிமாவும் நாட்டை நாசமாக்குகின்றன | | விடுதலை வெளியீடு, சென்னை |

| | | | |
|---|---|---|---|
| 59. | வாழ்க்கை ஒப்பந்தம் | — | — — — |
| 60. | வாழ்க்கைத் துணைநலம் (முதல் பாகம்) | 1958 | கி. வீரமணி—மோகனா, கடலூர் |
| 61. | நீதி கெட்டது யாரால்? | 1959 | பகுத்தறிவு வெளியீடு, சென்னை |
| 62. | சித்திரபுத்திரன் கட்டுரைகள் | ,, | ,, ,, |
| 63. | எந்த ஜாதி காப்பாற்றப்பட வேண்டும்? | — | — — — |
| 64. | The Ramayana, A True Reading | ,, | Rationalist Publication, Madras |
| 65. | Philosophy | ,, | Karnataka Dravidian Association, Bangalore. |
| 66. | ஜனநாயகம் | ,, | பகுத்தறிவு வெளியீடு, சென்னை |
| 67. | கந்தபுராணமும் இராமாயணமும் ஒன்றே (2-ம் பதிப்பு) | 1960 | — — — |
| 68. | பார்ப்பனர் தொல்லை | 1960 | குடிஅரசு வெளியீடு, ஈரோடு |
| 69. | அறிவுச் சுடர் | ,, | ,, ,, |
| 70. | சுதந்தரத் தமிழ்நாடு ஏன்? | ,, | ,, ,, |
| 71. | வாழ்க்கைத் துணைநலம் (2-ம் பாகம்) | ,, | பகுத்தறிவு வெளியீடு, சென்னை |
| 72. | தாய்ப் பால் வைத்தியம் | — | — — — |
| 73. | அய்க்கோர்ட்டின் நீதிப்போக்கு (இரு பாகங்கள்) | 1961 | குடி அரசுப் பதிப்பகம், ஈரோடு |
| 74. | ஆச்சாரியார் ஆட்சியின் கொடுமைகள் | 1961 | ,, ,, |
| 75. | காமராசர் ஆட்சியின் சாதனைகள் | ,, | ,, ,, |
| 76. | தமிழ்நாடா? திராவிடநாடா? | ,, | ,, ,, |
| 77. | மனுநீதி ஒருகுலத்துக்கு ஒருநீதி | — | — — — |
| 78. | பார்ப்பனர்கள் | 1961 | தென்னார்க்காடு மாவட்ட திராவிடர் கழகம், சிதம்பரம் |
| 79. | தீண்டாமையை ஒழித்தது யார்? | ,, | ,, ,, |
| 80. | ஆச்சாரியார் ஆத்திரம் | ,, | ,, ,, |
| 81. | நான் காங்கிரசில் சேர்ந்து விட்டேனா? | ,, | ,, ,, |
| 82. | சமுதாய சீர்திருத்தம்—எனது தொண்டு | 1962 | விடுதலை வெளியீடு, சென்னை |
| 83. | மொழியும் அறிவும் (2-ம் பதிப்பு) | ,, | — — — |
| 84. | கண்ணீர்த் துளிகளுக்கும் கம்யூனிஸ்டுகளுக்கும்—எச்சரிக்கை | ,, | அறிவுக் கடல் பதிப்பகம், மதுரை |
| 85. | மறுத்தலும் பகுத்தறிவும் | — | — — — |
| 86. | கழகமும் துரோகமும் | 1963 | பகுத்தறிவு வெளியீடு, ஈரோடு |
| 87. | புராணம் | ,, | குடி அரசுப் பதிப்பகம், ஈரோடு |
| 88. | மதுவிலக்கின் இரகசியங்கள் | ,, | பகுத்தறிவு வெளியீடு, ஈரோடு |
| 89. | இந்தியும் ஆச்சாரியாரும் (பெரியார் ஈ. வெ. ரா. & கி. வீரமணி) | ,, | குடி அரசுப் பதிப்பகம், ஈரோடு |
| 90. | தமிழருக்குச் சோதனை காலம் | ,, | — — — |
| 91. | இராஜாஜி | — | — — — |
| 92. | பார்ப்பன நீதி | 1964 | பகுத்தறிவு வெளியீடு, சென்னை |

| | | | |
|---|---|---|---|
| 93. | ஏன் இல்லை—எல்லோருக்கும் கல்வி, உணவு, உடை, வீடு ? | — | — — — |
| 94. | இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி | 1965 | உண்மை விளக்கம் பதிப்பகம் சென்னை |
| 95. | Social Reform or Social Revolution? (Translated by A. M. Dharmalingam) | 1965 | Viduthalai Publications, Madras. |
| 96. | கிளர்ச்சிக்குத் தயாராவோம் | ,, | விடுதலை வெளியீடு, சென்னை |
| 97. | இன்றைய ஆட்சி நிலை | ,, | ,, ,, |
| 98. | வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் (பெரியார் ஈ. வெ. ரா. & வே. ஆனைமுத்து | ,, | ,, ,, |
| 99. | அறிவு விருந்து | 1968 | பெரியார் சுயமரியாதைப் பிரசார நிலையம், திருச்சி |
| 100. | அறிவுச் சுடர் | ,, | ,, ,, |
| 101. | மதச் சார்பின்மையும் நமது அரசும் | ,, | ,, ,, |
| 102. | கடவுளும் மனிதனும் | 1969 | சி. பி. சர்வாதிகாரி—பட்டு, இரும்புலிக்குறிச்சி |
| 103. | கடவுள் குழப்பம் | ,, | — — — |
| 104. | வானொலியில் பெரியார் | 1970 | — — — |
| 105. | நமது இன்றைய நிலையும்—பரிகாரமும் | — | — — — |
| 106. | புத்த நெறி (3-ம் பதிப்பு) | 1970 | சிந்தனையாளர் கழகம், திருச்சி-2 |
| 107. | சுயநலம் பிறநலம் | 1971 | — — — |
| 108. | கடவுள் ஒரு கற்பனையே (முதற் பதிப்பு) | 1971 | பெரியார் சுயமரியாதைப் பிரசார நிறுவனம், திருச்சி-17 |
| 109. | பெரியார் பேசுகிறார் | 1972 | அண்ணா சிந்தனைப் பேரவை கோவை |
| 110. | கோயில் பகிஷ்காரம் ஏன் ? | 1972 | பெரியார் சுயமரியாதைப் பிரசார நிறுவனம், திருச்சி-17 |
| 111. | உயர் எண்ணங்கள் I | ,, | ,, ,, |
| 112. | உயர் எண்ணங்கள் II | 1973 | ,, ,, |
| 113. | நவமணிகள் | 1974 | ,, ,, |
| 114. | பெரியாரின் மரண சாசனம் (இறுதிச் சொற்பொழிவு) | 1974 | பெரியார் சுயமரியாதைப் பிரசார நிறுவனம், திருச்சி-17 |

## தந்தை பெரியார் அவர்கள் வெளியிட்ட

# பிற நூல்கள்

1. ஞான சூரியன்
2. இந்தியாவின் குறைபாடுகள்
3. Temple Entry (English)
4. லெனினும் மதமும்
5. கடவுளும் பிரபஞ்சமும்
6. கைவல்யம் அல்லது கலைக்கியானம்
7. இராமாயண ஆராய்ச்சி—பால காண்டம்
8. இராமாயண ஆராய்ச்சி—அயோத்திய காண்டம்
9. இராமாயண ஆராய்ச்சி—ஆரண்ய காண்டம்
10. இராமாயண ஆராய்ச்சி—கிட்கிந்தா காண்டம்
11. பாரத ஆராய்ச்சி—ஆதிபர்வம்
12. மேயோ கூற்று மெய்யா, பொய்யா?
13. இராமலிங்க சுவாமிகள் பாடல் திரட்டு
14. சுயமரியாதைப் பாடல்
15. சுயமரியாதைத் தாலாட்டு
16. பர்னாட்ஷா உபந்யாசம்
17. போல்ஷ்விக் முறை
18. கத்தோலிக்கர் வீண்கூச்சல்
19. முன்னேற்றத்திற்கு மதம் முட்டுக்கட்டை
20. மதம் மக்களுக்குச் செய்த நன்மை என்ன?
21. பாதிரியும், பெண்களும், பாவமன்னிப்பும்
22. Periyar E. V. Ramasami (English—A short biography)
23. மதமும் விஞ்ஞான சாஸ்திரமும்
24. பிரபஞ்ச உற்பத்தி
25. நான் ஏன் கிறிஸ்தவனல்ல?
26. நான் சம்சயவாதி ஆனதேன்?
27. பகுத்தறிவு அல்லது கத்தோலிக்க குருவின் மரண சாசனம் (3 பாகங்கள்)
28. கைவல்ய சுவாமியார் கட்டுரைகள் (2 பாகங்கள்)
29. தமிழர் தலைவர் (பெரியார் வரலாறு)
30. சாதிக் குறி (தமிழ்)
31. Caste Mark 111 (ஆங்கிலம்)
32. Periyar—A Pen Portrait (English)
33. பிர்லா மாளிகை மர்மங்கள்
34. சாதியை ஒழிக்க வழி

35. பலசரக்கு மூட்டை (குத்தூசி தொகுப்பு நூல்கள்–இரு பாகங்கள்)
36. அகத்தியர் ஆராய்ச்சி
37. மெய்ஞானமுறையும் மூடநம்பிக்கையும் (2 பாகங்கள்)
38. பெரிய புராண ஆராய்ச்சி
39. கோயில்கள் தோன்றியது ஏன்?
40. திருக்குறளும்—பெரியாரும்
41. நரகம் எங்கே இருக்கிறது?
42. கடவுள் தோன்றியது எப்படி? (இரண்டு பாகங்கள்)
43. கடவுளர் கதைகள்
44. உண்மை இந்து மதம் எது?
45. பேய்—பூதம்—பிசாசு
46. இரண்டு வழிகள்
47. பெரியார் ராமசாமி அவர்களைப்பற்றி
48. மதப் புரட்சி
49. ஊழல் எங்கே? (நகர்வாலா மோசடி)
50. பகுத்தறிவு மணம்
51. கலியுக சமாதானம்
52. நமது குறிக்கோள்
53. இங்கர்சாலின் ஜீவிய சரித்திரம்
54. இந்தி எதிர்ப்புப் பாடல்கள்
55. கார்ல் மார்க்ஸ்
56. பஞ்சமா பாதகங்கள்
57. காந்தி கண்டனக் கீதம்
58. சமதர்மக் கீதங்கள்
59. வால்டையரின் வாழ்க்கைச் சரிதம்
60. விவாக விடுதலை
61. இந்திய மாதா
62. இங்கர்சால் பொன் மொழிகள்
63. புராண ஆபாசங்கள்
64. கடவுளை நிந்திக்கும் கயவர்கள் யார்?
65. The Superstition of Khadi
66. நமக்கு வேண்டியது எது? சுயராஜ்யமா? சமதர்ம ராஜ்யமா? (மூன்று பாகங்கள்)
67. The Periyar Self Respect Propaganda Institution—Memorandum and Articles of Association
68. பெரியாரும்—இராமலிங்கரும்
69. சட்டசபையில் கண்ணீர்த் துளிகள் சாதித்தது என்ன?
70. பெரியார் ஒரு சகாப்தம்
71. தி. மு. க. ஆட்சியின் சாதனைகள்

[Established 7—3—1970]
Regd. No. 105/70

# THINKERS' FORUM

## MEMORANDUM OF ASSOCIATION

1. The name of the Association is "Thinkers' Forum".

2. The registered office of the Thinkers' Forum will be situate at Tiruchirappalli and the present address of the Forum is T. N. T. C. Building, 112, (Upstairs), Vanappattarai Street, Teppakulam, Tiruchirappalli-2.

3. The aims and objects of the Forum are :

(i) To propagate the Self-Respect principles propounded by Periyar E. V. Ramasami and to impart Atheism among the people.

(ii) To conduct monthly meetings and hold conferences on Free-thinking and allied subjects that will be conducive to diffuse knowledge to the people.

(iii) To arrange for special lectures in commemoration of world renowned atheists and to publish pamphlets and books on the same.

(iv) To influence the climate of educated opinion in favour of rationalism and rationalist principles.

(v) To conduct contests, seminars, exhibitions and symposiums that will help youngsters to imbibe sufficient knowledge on Atheism.

(vi) To establish a Library-cum-Auditorium-cum-Study Centre in the name of Periyar E. V. Ramasami at Tiruchirappalli and to maintain the same.

(vii) To undertake and execute any trusts of the like nature.

(viii) To train up propagandists to impart the principles of the Forum.

(ix) And to undertake such programmes of work that will be useful and helpful for the propagation of the objects and purposes of the Forum in a peaceful manner.

4. The Forum is purely a non-political, social organisation in character.

# திருச்சி சிந்தனையாளர் கழகம்

## கழகக் கொள்கை விளக்கம்

1. இக் கழகத்தின் பெயர் "சிந்தனையாளர் கழகம்" என்பதாகும்.

2. சிந்தனையாளர் கழகத்தின் பதிவு பெற்ற அலுவலகம் திருச்சிராப்பள்ளியில் இடம் பெறுவதாகும். இக் கழகத்தின் தற்போதைய முகவரி:—

T. N. T. C. கட்டடம்

112, (மாடி) வாணப்பட்டறைத் தெரு,

தெப்பக்குளம், திருச்சிராப்பள்ளி-2

என்பதாகும்.

3. இக் கழகத்தின் நோக்கங்களும், குறிக்கோள்களும் பின்வருமாறு. அவை:

(i) பெரியார் ஈ. வெ. ராமசாமி அவர்களால் வழங்கப்பெற்ற சுய மரியாதைக் கொள்கைகளையும், மற்றும் நாத்திகக் கருத்துகளையும் மக்களிடையே பரப்புதல்;

(ii) மக்களின் சிந்தனை அறிவைத் தூண்டும் வகையில் சுயசிந்தனை நெறி குறித்தும், அதனோடு தொடர்புடைய பிற பொருள்கள் பற்றியும் மாதந்தோறும் கூட்டம் நடத்துதல்; மாநாடுகள் நடத்துதல்;

(iii) உலகப் பெயர்பெற்ற நாத்திகர்களின் நினைவாகச் சிறப்புச் சொற்பொழிவுகள் ஏற்பாடு செய்தல்; அச் சொற்பொழிவுகளைத் திரட்டிச் சிறு வெளியீடுகளாகவும், நூல்களாகவும் வெளியிடுதல்;

(iv) படித்தவர்களின் எண்ணப் போக்கைப் பகுத்தறிவுக் கொள்கைகளுக்கு உடன்பட்டதாக உருவாக்குதல்;

(v) இளைஞர்கள் நாத்திகக் கொள்கை பற்றிப் போதிய அறிவுவிளக்கம் பெறத் துணைபுரியும் வகையில் போட்டிகள், ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள், கண்காட்சிகள், கருத்தரங்குகள் ஆகியவற்றை நடத்துதல்;

(vi) திருச்சிராப்பள்ளியில் பெரியார் ஈ. வெ. ராமசாமி அவர்களின் பெயரில் நூல் நிலையம்-பேரரங்கம்-ஆராய்ச்சி மையம் ஆகியவை ஒருங்கிணைந்த ஒரு நிலையத்தை நிறுவுதல்; அதனைத் தொடர்ந்து நிருவகித்தல்;

(vii) இக் கழகத்தின் கொள்கைகளை ஒத்த தன்மை வாய்ந்த வேறு அமைப்புகளை மேற்கொள்ளுதல்; நடாத்துதல்;

(viii) இக் கழகத்தின் கொள்கைகளை மக்களிடையே பரப்புதற்கு உரிய பிரசாரகர்களைப் பயிற்றுவித்தல்;

(xi) மற்றும் இக் கழகத்தின் கொள்கைகளையும், நோக்கங்களையும் அமைதியான முறையில் பரப்புவதற்குத் துணையாகவும், பயன்படத் தக்கதாகவும் உள்ள வேலைத் திட்டங்களை மேற்கொள்ளுதல் என்பனவாகும்.

4. இக் கழகம் முற்றிலும் அரசியல் சார்பற்றதும், சமுதாயப் பணி புரிவதும் ஆன தன்மையதாகும்.



மிக்க மகிழ்ச்சியோடு இந்த சிந்தனையாளர் கழகத்தையும், செயல்முறை களையும், சட்டதிட்டங்களையும் மனமாரப் பாராட்டுகிறேன்.

ரூ. 100 நூறு நன்கொடை தருகிறேன்.

ஈ. வெ. ராமசாமி
2-4-70

ஈ. வெ. ரா

# முதல் தொகுதி

# பொருளடக்கம்



## பகுதி I—சமுதாயம்

### 1. சமுதாயம்



### 2. ஆதித் திராவிடர்

## 3. பெண்ணுரிமை



## 4. வாழ்க்கை ஒப்பந்தம்

## 6. திராவிடர் கழகம்



## 7. நாமும் பிற இயக்கங்களும்

பக்க எண்

# PART III

## Social Reform or Social Revolution

### 1. On Society



### 2. On Movements



### 3. Social Reform or Social Revolution

# 1. சமுதாயம்

## 1. பிறப்புரிமையும் தடைகளும்

அக்கிராசனரவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

"அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது" என்று பெரியோர்கள் சொன்னதாகச் சொல்லுவார்கள். நான் அதை ஒப்புக்கொள்ளாததற்கு நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். "கொடுமை, கொடுமை; மனிதராகப் பிறப்பது மிகக் கொடுமை" என்பதே எனது தாழ்மையான அபிப்பிராயம்.

உலகில் உள்ள ஜீவகோடிகள் எல்லாவற்றினும் மனிதப் பிறப்பே மிகத் தாழ்ந்த பிறப்பு என்பதும், மனிதனைப் போல் அடிமை உலகில் வேறு ஜீவன்கள் இல்லை என்பதும் என் அபிப்பிராயம். மனிதனைத் தவிர மற்ற ஜீவகோடிகள் எவ்வளவோ சந்தோஷத்துடனும் அடிமை உணர்வில்லாமலும் சுதந்திரமாய் வாழ்வதை நாம் பார்க்கிறோம். அவைகளில் சிலவற்றிற்குக் கஷ்டமும், அன்னியரால் கஷ்டப்படுத்தத்தக்க நிலைமையும் ஏற்பட்டு இருந்தாலும், மனிதனைப்போல் உணர்ந்து துக்கிக்கிற சக்தியாகிய கொடுமை அவற்றிற்கு இல்லை.

ஏனெனில், பகுத்தறிவென்கிற ஒரு உபத்திரவம் கொடுக்கத்தக்க குணம், அவைகளுக்கு இல்லாததால்தான். உதாரணமாக, குதிரைகளை ஜட்கா வண்டியில் பூட்டி ஒரு முரட்டு நூல் கயிற்றை மடித்துக்கொண்டு—ஓட, ஓட, அதன் மிக மெல்லியதும், அதிக உபத்திரவம் கொடுக்கத் தக்க இடமுமாகிய மர்மஸ்தானத்தில் அடித்தாலும்; நல்ல வாலிபமுள்ள காளை மாடுகளைக் கட்டித் தள்ளி அதன் விதர்களை மரக்கட்டையின் மேல்வைத்து மரக் கொட்டாப்பிடியினால் தண்ணீர் போலக் கரையும்படி தட்டினாலும்—அவைகளுக்குக் கஷ்டம் மாத்திரம் தோன்றுமேயல்லாது, அதற்குத் தன் பிறப்புரிமை இழந்து இப்படிக் கஷ்டமனுபவிக்கிறோமே என்கிற உணர்ச்சி இருக்காது. தவிரவும், அதற்கு மானம் அவமானம் என்கிற உணர்ச்சியும் இல்லை. இதோடு, நாளைக்கு வேண்டுமே என்கிற கவலையும் இல்லை. எவ்வளவு கிடைத்தாலும் போதாது என்கிற ஆசை என்னும் அடிமைத் தன்மையும் இல்லை. ஆகவே, மனிதன் மற்ற ஜீவராசிகளைவிட மானம் அவமானம் என்கிற உணர்ச்சியும், நாளைக்கு என்ன செய்வது என்கிற தன்னம்பிக்கை அற்ற தன்மையும், எவ்வளவு கிடைத்தாலும் திருப்தியடைய முடியாத ஆசை என்னும் அடிமைத் தன்மையும் உடைத்தாயிருப்பதால், மனிதத் தன்மையானது பிறவியிலேயே மிகுதியும் இழிவானதும், அடிமைத் தன்மை கொண்டதுமானதுமாய் இருக்கிறது என்பது நான் கொண்ட கருத்து.

இப்படிப்பட்ட மனித ஜீவனுக்கு, எல்லாவற்றையும் விட முக்கியமான உணர்ச்சியாக, மான—அவமானம் என்னும் தன்மானமாகிய சுயமரியாதையைத்தான் பிறப்புரிமையாகக் கொள்ள வேண்டியிருக்கின்றது. ஏனெனில், 'மனிதன்', 'மானிடன்' என்ற பதங்களே மானத்தை அடிப்படையாகக்கொண்டு ஏற்பட்ட மொழிகள். ஆதலின், மனிதன் என்பவன் மானமுடையோன். எனவே, மனிதனுக்கு மனிதத் தன்மையைக் காட்டும் உரிமையுடையது மானம்தான். அத் தன்மையாகிய சுயமரியாதையைத்தான் மனிதன் சுயமரியாதையாகக் கொண்டிருக்கிறான்.

இது ஒவ்வொரு மனித ஜீவனுக்கும் உரிமையுடையது. திலகர் பெருமான், "சுயராஜ்யம் எனது பிறப்புரிமை" என்று சொன்னாரென்றால், அவரும் வருணாசிரம பார்ப்பனராதலால், பார்ப்பனர்களுக்குப் பிறரைத் தாழ்மையாகக் கருதுவதே பிறப்புரிமை என்று நினைக்கிற முறையில், பொருளில்லாததும், அனுபவத்தில் பெரிதும் ஏமாற்றமே

பொருளாகக் கொண்ட அரசியல் சம்பந்தமான சுயராஜ்யம் என்னும் வார்த்தையை அவர் பிறப்புரிமைக்கு உபயோகிக்க வேண்டியவரானார். நாம் யாரையும் ஏமாற்றிப்பிழைக்க வேண்டியவர்கள் அல்லோம். உண்மையான மானிடத் தன்மையை அறியவேண்டியவர் களாயிருக்கிறோம். ஆதலால், 'மனிதனுக்குப் பிறப்புரிமை தன்மானந்தான்.'

அதற்கு நம்முன் நிற்கும் தடைகள் என்ன என்பது இரண்டாவது விஷயம். தடைகள் இரண்டு விதம். ஒன்று, இயற்கையாய் ஏற்பட்ட தடை; மற்றொன்று, மற்றவர் களால் ஏற்பட்ட செயற்கைத் தடை.

நாளைக்கு வேண்டும் என்று தேடும் தன்னம்பிக்கையற்ற தன்மையும், எவ்வளவு கிடைத்தாலும் போதாது என்கிற ஆசை அடிமைத் தன்மையும், மனிதனின் பிறப்புரிமை யாகிய தன்மானத்திற்கு இயற்கைத் தடைகள். இத் தடைகளை நீக்குவதென்பது முற்றுந் துறந்த துறவிகளுக்கே முடியக்கூடியது.

ஆதலால், நான் செயற்கைத் தடைகளைப்பற்றிப் பேசப் போகிறேன். இந்தச் செயற்கைத் தடை என்பது ஒவ்வொரு தேசத்திற்கு ஒவ்வொரு மாதிரியாகக் காணப்படு கிறது. நமது நாட்டில் நமது பிறப்புரிமையாகிய சுயமரியாதைக்கு முக்கியமாய் இரண்டு விதமான செயற்கைத் தடைகளைச் சொல்லலாம். ஒன்று, அரசியல் சம்பந்தமான பார்ப்பனர் என்னும் வகுப்பார் நம்மை ஏமாற்றி, நமது சுயமரியாதையைக் கெடுத்திருப்பது. மற்றொன்று, அதே வகுப்பார் பரமார்த்திகத்திற்கு என்று, மதம் என்கிற பெயரால் நம்மை ஏமாற்றி, நிரந்தர அடிமையாக்கி நமது சுயமரியாதையை அடியோடு களைந்து வருவது. ஆகிய இந்த இரண்டு விஷயங்களிலும் நமது மக்கள்—ஏறக்குறைய எல்லோருமே—சிலர் ஏதாவது ஒன்றில், சிலர் இரண்டிலும் மயங்கி, அவ்வகுப்பாருக்கு அடிமையாகி மொத்தத்தில் சுயமரியாதையற்று இருக்கிறோம். அன்றியும், அவ்வகுப்பாரைப் பின்பற்றி நம்மவருட் சிலரும் வயிறுவளர்ப்பதன் மூலம் நமது சுயமரியாதைகளுக்குத் தடையாக இருக்கிறார்கள். ஆயினும், இந்தச் சமயத்தில் அரசியல் என்பதின் மூலமாயுள்ள தடையை விட்டுப் 'பரமார்த்தம்' என்னும் பேரால் உண்டாக்கிய தடைகளைப் பற்றியே இங்கு பேச எண்ணுகிறேன்.

நமது ஆத்மார்த்தத்திற்கென்றும், பரமார்த்திகத்திற்கென்றும் இந்துமதம் என்பதாக ஒரு கற்பனையை இப் பார்ப்பனர்கள் நமது தலையில் சுமத்தியிருக்கிறார்கள். இந்து மதம் என்னும் வார்த்தைக்குப் பொருளே காண இயலவில்லை. இந்து என்பதே தமிழ் வார்த்தை இல்லை என்பதை நீங்கள் முதலில் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். இது பார்ப்பன பாஷை. பார்ப்பன பாஷையிலாவது இந்து என்பதற்குப் பொருளுண்டா என்று பார்த்தால் மதத்திற்குப் பொருத்தமானதாக ஒரு பொருளும் இல்லை. வேறு ஏதாவது பாஷையில் இருக்கிறதா என்று பார்த்தால், பார்சி பாஷையிலோ, அரபி பாஷையிலோ இந்து என்பதற்குத் திருடன் என்கிற பொருள்தான் இருக்கிறது. சிலர் சிந்து நதிக்கரையில் இருந்ததால் சிந்து என்பது இந்து என்பதாக மருவி, அது ஒரு கூட்டத்தினருக்குப் பெய ராகிப் பிறகு மதமாகிவிட்டதாகவும் சொல்லுகிறார்கள். அது எப்படியோ இருக்கட்டும். இந்து மதம் என்றால் என்ன என்பதையாவது கவனிப்போம்.

கிறிஸ்துமதம் என்றால் கிறிஸ்து மஹான் கட்டளையை அடிப்படையாகக் கொண்டது. முகமதியமதம் என்றால் முகமது நபியின் கட்டளைகளை அடிப்படையாகக் கொண்டது. புத்தமதம் என்றால் புத்தருடைய கட்டளையை அடிப்படையாகக் கொண்டது. இதுபோல், 'மதம்' என்று சொல்லக் கூடியவை ஒவ்வொன்றுக்கும், மத கர்த்தா இன்னார்; அவரது கொள்கை-கட்டளை இன்னது; இன்ன காலத்தில் ஏற்பட்டது என்கிற உண்மைகள் உண்டு. அப்படி இந்து மதத்திற்கு யார் கர்த்தா? என்ன கொள்கை? எந்தக் காலம்? என்று சொல்வதற்கு என்ன ஆதாரமிருக்கிறது?

"அநாதிகாலம் தொட்டு இருப்பது வேதம்; அது கடவுள் சொன்னது" என்று சொல்லி ஏய்த்து விடுவதாயிருந்தால் அது பொருத்தமாயிருக்க வேண்டாமா? 'அநாதியாயும்' 'கடவுள் சொன்னதுமாயிருந்தால்' கடவுளால் உண்டாக்கப்பட்ட எல்லாத் தேசங்களுக்கும் எல்லாக் கண்டங்களுக்கும் இதுவே வேதமும் மதமுமாய் அல்லவா இருக்க வேண்டும்? பல்வேறு மதங்கள் இருப்பானேன்? இந்து மதஸ்தர்கள் என்று சொல்லிக் கொள்பவர்களுக்குள்ளாகவே சிலர் இவ்வேதத்தைப் படித்தால் கண்ணைக் குத்த வேண்டியதும், சிலர் காதினால் கேட்டால் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்ற வேண்டியதும் எதற்காக? கிறிஸ்தவருக்கும், முகமதியருக்கும் முறையே ஞாயிற்றுக்கிழமையும் வெள்ளிக்கிழமையும் மத சம்பந்தமான விசேஷ நாட்களாயிருக்கும்போது, இந்துக்கள் என்பவர்களுக்குள்ளாகவே ஒருவருக்கு திங்கட்கிழமை, ஒருவருக்கு சனிக்கிழமை, ஒருவருக்கு வெள்ளிக்கிழமை—இப்படியாக ஒரு வாரத்திலுள்ள ஏழு நாட்களும் வெவ்வேறு மனிதர்களுக்காகவும், இன்னும் சிலருக்கு நாட்கள் போதாமலும் போவானேன்?

மதச் சின்னங்கள் விஷயத்தில் ஒருவர் நாமம், ஒருவர் விபூதி, ஒருவர் கருப்புப் பொட்டு, ஒருவர் சந்தனக் கீறல், ஒருவர் முத்திரை, ஒருவர் நெடுக்கு, ஒருவர் குறுக்கு—இப்படியாகப் பல மாறுதல்கள் ஏற்படுவானேன்? இந்த மாறுதல்களோடு இதற்குக் காரணங்கள் ஆளுக்கு ஒருவிதமாய்ச் சொல்லுவானேன்? இந்த வித்தியாசங்களைச் சாமிகளுக்கும் புகுத்துவானேன்? நாமம் என்பது என்ன என்று கேட்டால், சிலர் சுவாமியின் பாதம் என்கிறார்கள். வெள்ளை நாமம் இரண்டும் பாதமானால் நடுவில் இருக்கும் சிவப்பு நாமத்திற்குப் பெயர் என்ன? அப்படியே சுவாமியின் பாதம் என்பதாகவே ஒப்புக்கொள்ளுவோமேயானால், சுவாமியின் பாதத்தையே சுவாமியின் நெற்றியில் கொண்டுபோய் வைப்பானேன்? இந்த நாமத்திற்கும், பாதம் வைத்த நாமம்—பாதமில்லாத நாமம் என்பதாக—'வடகலை' 'தென்கலை'—என்று ஒருவருக்கொருவர் உதைபோட்டுக் கொள்வானேன்? இவைகளில் ஒரு நாமம், மூன்று நாமம், பதினொரு நாமம் என்கிற கணக்குச் சண்டை எதற்கு? இந்துக்களிலேயே ஒரு சாரார் இந்த நாமத்தைப் பற்றிக் கேவலமாகப் பேசுவானேன்? இது போலவே, விபூதி, பொட்டு, முத்திரை இவைகளுக்குப் பலப்பல மாதிரி வியாக்கியானங்கள் இருப்பானேன்? இதை மற்ற தேசத்தாரும் ஒப்புக்கொள்ளாததேன்?

லிங்கத்தையும், ஆவுடையாரைப் பற்றியும் பல விதமாகப் பேசுவானேன்? நமது சுவாமிகளுடைய பெயரெல்லாம்—குறிகளெல்லாம் நமது தமிழ்ப் பாஷையில் இல்லாமல் அன்னிய பாஷையாகிய ஆரிய பாஷையில் இருப்பானேன்? சுவாமியைப் பூசிப்பதற்கு நமக்கும் சுவாமிக்கும் மத்தியில் ஒரு அன்னியன் இருப்பானேன்? அன்னிய பாஷையில் தோத்திரங்களும், மந்திரங்களும் இருப்பானேன்? ஆளுக்கொருவிதமாகப் பூசை செய்வானேன்? அதற்காக நாம் பணம் கொடுப்பானேன்? ஒவ்வொரு சுவாமிக்கும் ஒவ்வொரு வாகனம், ஒவ்வொரு வித வாகனங்கள் ஏற்படுத்துவானேன்? சுவாமிக்குப் பெண்டு பிள்ளைகள், வைப்பாட்டிகள், தாசிகள், விபசாரத் தன்மைகள் ஆகியவைகளைக் கற்பிப்பானேன்? சிலர் சுவாமியைப் பார்த்தால், சுவாமி சக்தி ஓடிப்போவானேன்? சிலர் கோவிலுக்கு வந்தால் கோவிலும் சுவாமியும் தீட்டாய்ப் போவானேன்? சிலர் சுவாமியைத் தொட்டால் சுவாமி இறந்து போவானேன்? ஒரே பெயரும், ரூபமும் உள்ள சுவாமிகளுக்கு ஊருக்கு ஒருவிதமாய் சக்திகள் ஏற்பட்டிருப்பானேன்?

காசி, ஜகந்நாதம், பண்டரிபுரம் முதலிய ஊர்களில் உள்ள சாமிகள் யார் தொட்டாலும் சாவதில்லை. அங்கு கோவிலுக்குப் போகிறவர்கள் எல்லாம் தாங்களே நேரில் சாமியைத் தொட்டுத் தலையில் தண்ணீர் விட்டு, புஷ்பம் போட்டுக் கும்பிடுகிறார்கள். அதே பெயருள்ள சாமி நமது நாட்டில் நாம் தொட்டால் செத்துப் போய்விடுகிறது. சீரங்கம், சிதம்பரம், பேரூர், பவானி, கொடுமுடி, திருச்செங்கோடு, கரூர் முதலிய முக்கிய க்ஷேத்திரங்களிலுள்ள சாமிகள்—நாடார்கள் கோவிலுக்குப் போய்க் கும்பிட்டால்—அக் கோவில்

களும் சாமிகளும் சாவதில்லை. மதுரை, திருநெல்வேலி, ராமநாதபுரம் ஜில்லாக்களில் உள்ள சாமிகள் மாத்திரம் நாடார்கள் கும்பிட்டால் செத்துவிடுகின்றன. இப்படி, சாமிகளின் சக்தியும் உயிரும் கோயில்களின் யோக்கியதையும் ஊருக்கு ஒருவிதமாய் இருப்பானேன்? பிறகு, பார்ப்பனர்க்கு மாத்திரம் அந்தச் சாமியை உயிர்ப்பிக்கும் சக்தி இருப்பானேன்?

நமது வேதம், சாமி, பூசை, வணக்கம் முதலியன சம்பந்தமான விஷயங்கள் இப்படி இருக்கின்றனவென்றால், இந்த இலட்சணத்தில் இம்மாதிரி சாமியினாலும் கோவிலினாலும் நமது சுயமரியாதை எவ்வளவு தூரம் பாதிக்கப்படுகிறது என்பதோடு, நமது பணம் எவ்வளவு செலவு ஆகிறது என்பதையும் கவனித்துப் பாருங்கள்! சென்னை மாகாணத்தில் மாத்திரம் இந்து மத சம்பிரதாயப்படிக்கு ஏற்பட்ட கோவில்களுக்கும் மடங்களுக்கும் வருஷம் ஒன்றுக்கு 2 கோடி ரூபாய் வரை வரும்படி வருகிறது. 2 கோடி ரூபாய் வரும்படி வந்தால் மக்களுக்கு எத்தனை கோடி ரூபாய் செலவு ஆகும்?

சாதாரணமாக, திருப்பதிக்கு மாத்திரம்—சர்க்கார் கணக்குப்படி—வருஷம் ஒன்றுக்கு 20 இலட்சம் வரும்படி வருவதாக ஏற்படுகிறது. கணக்குக்கு வராமல், மகந்துகளுக்கும் கோவில் அதிகாரிகளுக்கும் பூசாரிகளுக்கும் போகும் பணங்களுக்கு அளவே இல்லை. யாத்திரைக்காரர்கள் காணிக்கையாகக் கொண்டுவரும் தொகைகளை அறிந்த மகந்து, கோவில் அதிகாரிகள் முதலியவர்கள் யாத்திரைக்காரர்களைக் கூப்பிட்டு, "கோவில் கூடாரத்தில் காணிக்கையைப் போட்டால் சர்க்கார் எடுத்து ஜர்மன் யுத்தத்திற்கு வாங்கிய கடனுக்கு வட்டி கட்டிவிடுவார்கள்; மகந்துவிடம் கொடுத்தால்தான் சுவாமிக்குப் போய்ச் சேரும்; நீர் இவ்வளவு ரூபாய், இவ்வளவு நகை கொண்டு வருவதாகச் சாமி என்னிடத்தில் சொப்பனத்தில் சொல்லிற்று" என்று ஏமாற்றி, வழிப்பறி செய்வதில் கொள்ளை போகும் பணம் இந்த 20 இலட்சத்தில் சேர்ந்ததல்ல. இன்னமும், யாத்திரைக்காரன் இரயில் சார்ஜ், சில்லரைச் செலவு, மொனக்கேடு, தேங்காய் பழம் முதலிய செலவுகள் எத்தனை இலட்சம் ஆகும் என்று கணக்குப் பாருங்கள்!

இன்னும் உற்சவாதிகள் சுவாமிக்கும் அம்மனுக்கும் கலியாணம்; சுவாமி தாசி வீட்டுக்குப்போதல்; ஒரு காலைத் தூக்கி ஆடுதல்; நரியைக் குதிரையாக்குதல் முதலிய திருவிழாக்களுக்கு 10 மணு எடையுள்ள சுவாமியை 200 டன் எடையுள்ள தேரில் வைத்து 10,000 பேர் இழுப்பதும், அதனை 5000 பேர் வேடிக்கை பார்க்கப் பல இடங்களிலிருந்து வருவதும் ஆகிய காரியங்களுக்கு ஆகும் செலவுகளும்—சுவாமிகளுக்கு அபிஷேகம், பூசை, சதிர், பாட்டுக் கச்சேரி, நகைநட்டு, பாவாடை, புனுகு, சவ்வாது, பச்சைக் கற்பூரம், குங்குமப் பூ முதலிய செலவுகளுக்கெல்லாம் சேர்த்து, இந்துமத சாமிகளின் பூசைக்கும் உற்சவங்களுக்கும் மாத்திரம், தென் இந்தியாவில் வருஷத்திற்கு 25 கோடி ரூபாய்க்குக் குறைவில்லாமல் செலவாகிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. இந்த 25 கோடி ரூபாயும் நாம் சுயமரியாதை அற்றுக் கிடக்கின்றோம் என்பதை உறுதிப் படுத்துவதற்கும், தினம் தினம் நமக்கு ஞாபகப்படுத்துவதற்கும் செய்யும் செலவே யல்லாமல் இதனால் வேறு என்ன பலனை அடைகிறோம்? இப்பேர்ப்பட்ட இந்து மதந்தான், சென்னை சட்ட சபையில் இந்தப் பணங்களுக்குக் கணக்குக் கேட்க ஏற்படுத்திய இந்துமத பரிபாலன மசோதாவினால் அடியோடு பாதிக்கப்பட்டுப் போய்விட்டதாம். இம்மாதிரி, நமது சுய மரியாதையை ஒழிக்கும் 'இந்துக்கள்' தான், "மதம் போச்சுது, மதம் போச்சுது" என்று மாயக்கண்ணீர் விடுகிறார்கள். சாமி, பூசை, உற்சவம் இவைகளில் நமது யோக்கியதையும் சுயமரியாதைக் கேடும் இப்படி இருப்பதோடு, இந்து மதச் சடங்கு என்னும் பேரால் நமது தலையில் எவ்வளவு பளுவைச் சுமத்தி, நமது பணத்தை எவ்வளவு கொள்ளை கொண்டு, நமது பிறப்புரிமையான சுயமரியாதையை எவ்வளவு தூரம் நசுக்கி இருக்கிறார்களென்பதைக் கவனிப்போம்.

இந்து மதம் என்பதாக ஒன்றை நாம் ஒப்புக் கொள்வதால் நமது நிலை பிறவியிலேயே இழிவானதாகவும், இந்து மதஸ்தர்கள் என்று சொல்லிக் கொள்வோரிலேயே ஒரு வகுப்பாருக்கு நாம் அடிமைகளாகவும், வைப்பாட்டி மக்களாகவும், கடவுளாலேயே உண்டாக்கப்பட்டவர்கள் ஆகிறோம்; நம்மை இழிவாய்க் கருதுபவர்கள் காலிலே விழுந்து கும்பிடுபவர்களாகிறோம்.

இன்னும், நமது வாழ்நாள் முழுதும்—அதாவது தாய் வயிற்றில் கருத்தரித்த நிமிடம் முதற்கொண்டு—நமது மதச் சடங்குச் செலவைப் பாருங்கள்! சர்க்கார் நம்மிடம் வரி வசூல் செய்கிறார்கள். இதை அதிகமென்கிறோம். தவிர, நம்மிடம் வசூலிக்கும் வரியை நமக்காகச் செலவு செய்வதில்லை என்றும், இது நமது சுயமரியாதைக்கு ஈனம் என்றும் சொல்லி சர்க்காருடன் சண்டை செய்கிறோம். பாமர ஜனங்களை சர்க்காருக்கு விரோதமாய்க் கிளப்பிவிட்டு, பெரியபெரிய சர்க்கார் உத்தியோகங்களைப் பார்ப்பனர்கள் பெற்று, நமது சுயமரியாதைக்கும் இவ்வுத்தியோகங்கள் மூலமாய் இழிவை ஏற்படுத்திக் கொள்கிறோம்.

ஆனால், மதத்தின் பெயரால் பார்ப்பனர் நம்மிடம் வசூல் செய்யும் வரியைப்பற்றி நாம் ஒரு சிறிதும் கவலைப்படுவதில்லை. சர்க்கார் வரிக்காவது ஒரு கணக்கு வைத்திருக்கிறார்கள். அதாவது–பூமி வரி, வருமான வரி, ஸ்டாம்பு வரி என்பதாகக் குறிப்பு இருக்கிறது. பூமி உள்ளவர்கள், இவ்வளவு ரூபாய் வரும்படி உள்ளவர்கள், பிராது உள்ளவர்கள் முதலியவர்கள்தான் சர்க்காருக்கு இந்த வரிகள் கொடுக்கக் கடமைப்பட்டவர்கள். வரி கொடுக்கக் கட்டுப்படாதவர்கள் 100க்கு 90 பேர் இருக்கிறார்கள். இந்த வரியை நமக்காகச் செலவு செய்ததாகக் கணக்கும் காட்டுகிறார்கள். ஆனால் மதச் சடங்குகள் பேரால் பார்ப்பனர் வசூல் செய்யும் வரிக்கு அளவேயில்லை. மனிதனாகப் பிறந்தவன் எல்லாம்—அதாவது எவனாவது தன்னை இந்து என்று சொல்லிக் கொண்டால் அவனை உடனே 'பார்ப்பன வரிச் சனியன்' பிடித்துக் கொண்டது என்பதுபோல்—காலவரையறை ஒன்றுமே இல்லாமல், கர்ப்பந் தரித்ததுமுதல் சாகும்வரை, செத்தும் விடாமல்–அதாவது கர்ப்ப தானவரி, சீமந்த வரி, பிள்ளைப்பேறு வரி, தீட்டுக் கழித்தல் வரி, தொட்டிலிடல் வரி, பேர் வைத்தல் வரி, ஆயுசு ஓம வரி, சோறூட்டல் வரி, கிரகதோஷ வரி, வித்தியாப்பியாச வரி, கலியாண வரி, சாந்தி முகூர்த்த வரி, சாவு வரி, சாக 10 நாழிகை வரி, செத்த பின்னும் வரி, செத்தவர் மக்களைப் பிடித்து வருஷா வருஷம் வரி–ஆகிய பலதுறைகளில், காலாவதி இல்லாமலும் ஒரு நபரைக்கூட விடாமல் 100க்கு 100 பேரிடமும்—பணக்காரன் ஏழை என்ற பாகுபாடே இல்லாமல், கொடுப்போர் முட்டாள்தனத்திற்கும் களிமண் மூளைக்கும் தகுந்தாற்போல், வரி கறந்து விடுகிறார்கள்.

இந்த வரி வசூலுக்கு ஏதாவது பலன் உண்டா என்று பார்த்தால், இதைவிட முட்டாள் தனமான காரியம் உலகில் வேறொன்று மில்லையென்று சொல்லத்தக்க மாதிரி அதாவது —"சுவாமிகளே! நான் கொஞ்சமாகச் செய்திருந்தாலும் என்னுடைய பக்தி சிரத்தையை மதித்து அதைப் பெரிதாக எண்ணி, காசி கங்கையில் செய்தது போலவும், பிரயாகை வடவாகை விருட்சத்தின்கீழ் செய்தது போலவும் ஆகும்படி செய்து, எனது பெற்றோர்களுக்கு மோட்சமும் திருப்தியும் உண்டாகும்படி அருளுவதுடன், என்னையும் சிரஞ்சீவியாக்கி, எனது பாவங்களை மன்னித்து, மோட்சம் லபிக்கும்படி கிருபை செய்ய வேண்டியது"—என்று சொல்லிப் பார்ப்பனர் காலில் நமது தலை முட்டும்படி விழுந்து, கும்பிட்டு ஆசீர்வாதம் பெறுவதுமாய் நடந்துவருகின்றோம். இவ்வித சடங்குக்குச் செலவாகும் பணம் எத்தனை கோடி? தங்கச்செம்பு, வெள்ளிச்செம்பு, வீடு, பூமி கன்னிகை முதலிய தானங்கள், சமாராதனைகள், சாந்திகள் முதலிய காரியங்களில் ஆகும் செலவுகளில் எத்தனை கோடி ஆகும் என்பதைக் கவனித்துப் பாருங்கள்! இதற்கு ஏதாவது பிரயோஜனமுண்டா என்பதை யோசியுங்கள்! இந்தச் செலவுகள் ஒருபுறம் நம்மைப் பிய்த்துப் பிடுங்கித் தின்னவும், இதன் மூலம் நமது பிறப்புரிமையாகிய சுய

மரியாதை எவ்வளவு பாதிக்கப்பட்டு அடிமையாகி வாழ்கிறோம் என்பதையும் யோசியுங்கள்! இப்படி எத்தனையோ விதமான தடைகள் செயற்கையிலேயே, அதாவது நமது அறிவீனத் தினாலேயே நம்மைச் சூழ்ந்துகொண்டு வாட்டுகின்றன. இவைகளைக் களைந்தெறிய வழி தேடுங்கள். பிறகு சுயராஜ்யம் தானாக வந்துவிடும். பார்ப்பானுக்குப் பணம் கொடுத்து அவன் காலில் விழுந்தால் நமது பெற்றோர்கள் மோட்சத்திற்குப் போவார்கள்; நமது பாவம் தீரும் என்று நினைத்துக் கொண்டிருக்கும் ஜன சமூகத்திற்கு சுயராஜ்யம் வேண்டு மென்பது யாராவது நம்பக்கூடிய காரியமா? வீணாக, அதாவது சில பார்ப்பனர்கள் பிழைக்க இந்துக்களாக இருப்பது போலவே, சில புரட்டுக்காரர்களும் பித்தலாட்டக்காரர் களும் அயோக்கியர்களும் பிழைக்க, 'சுயராஜ்யம்' 'சுயராஜ்யம்' என்று கத்தி ஏமாறாதீர்கள்!

சுயமரியாதை கண்டவிடம்தான் சுயராஜ்யமே தவிர, சுயராஜ்யம் என்பது ஒரு தனி வஸ்து இல்லை என்பதை உணர வேண்டும். ஆதலால், பிறப்புரிமை இன்னது என்பதும், அது இன்ன விஷயங்களால் தடைப்பட்டுள்ளது என்பதும், அத் தடைகளிலிருந்து விலக இன்னின்னது செய்ய வேண்டும் என்பதும், சுயராஜ்யம் என்பது இதுபோலவே மக்களை ஏமாற்றும் ஒரு புரட்டான மார்க்கம் என்பதும், 'சுயமரியாதை கண்டவிடத்தில் உண்மை யான சுயராஜ்யம் என்பது துலங்கும்' என்பதும் விளங்கியிருக்குமென்று நினைக்கிறோம்.

[சென்னிமலையில், 29-12-1926-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 9-1-1927]

## 2. பார்ப்பனீய எதிர்ப்பு

அக்கிராசனரவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

தற்காலம் இந்நாட்டிலுள்ள ராஜீய வேஷங்கொண்ட பல பார்ப்பனர்கள், என்னை வகுப்புத் துவேஷக்காரன் என்றும், வகுப்புக் கலவரங்களை மூட்டிவிடுகிறவன் என்றும், சொல்லியும் எழுதியும், ஆட்களைவிட்டுப் பிரச்சாரம் செய்தும் வருகிறார்கள். வகுப்புத் துவேஷமும் வகுப்பு வேற்றுமைகளும் என்னால் ஏற்பட்டவையா, அல்லது நம் நாட்டுப் பார்ப்பனர்களால் ஏற்பட்டவையா என்பதை நீங்களே சற்று யோசனை செய்துபாருங்கள்! தயவுசெய்து நீங்கள் என்னோடு எழுந்து வருவீர்களானால்—இவ்வூருக்குள் சுற்றிப்பார்த் தால்—பார்ப்பனர்கள் வைத்திருக்கும் ஒவ்வொரு காப்பிக் கடையிலும், சாப்பாட்டுக் கடை யிலும், இரயில்வேக்களில் உள்ள காபி-சாப்பாட்டுக் கடைகளிலும், சத்திரம் சாவடிகளிலும், கோயில் குளங்களிலும், 'இது பிராமணர்களுக்கு'; 'இது சூத்திரருக்கு'; 'பஞ்சமர் களுக்கும், முகமதியர்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் இங்கு சாப்பாடு, பலகாரம், தண்ணீர் வகையறா முதலியன கொடுக்கப்படமாட்டாது'; 'இந்த இடத்தில் சூத்திரர்கள் தண்ணீர் மொள்ளக்கூடாது'; 'இந்த இடத்தில் சூத்திரர்கள் குளிக்கக்கூடாது'; 'இந்தப் பள்ளிக் கூடத்தில் சூத்திரர்களைச் சேர்த்துக்கொள்ள முடியாது'; 'இன்னின்ன விஷயங்களைச் சூத்திரர்கள் படிக்கக்கூடாது'; 'பிராமணர்கள் மாத்திரம் இதுவரையில் செல்லலாம்—சூத்திரர்கள் இந்த இடத்திற்குமேல் போகக்கூடாது'; 'இந்த வீதியில் சூத்திரர்கள் குடி இருக்கக்கூடாது'; 'இன்ன தெருவில் பஞ்சமர் நடக்கக்கூடாது' என்றும், இன்னும் பல வாறாகவும் போர்டுகள் போட்டும், நிர்ப்பந்தங்கள் ஏற்படுத்தியும், பிரித்து வைத்தும், துவேஷத்தையும் வெறுப்பையும் இழிவையும் உண்டாக்கி வருவது நானா? அல்லது பார்ப்பனர்களா? என்பதைக் கவனியுங்கள்.

அவர்களே நம் சாதிகளைப்பிரித்து—நம்மை இழிவுபடுத்தித் தாழ்த்தி வைத்து விட்டு—"ஏனையா இப்படிச் செய்கிறீர்கள்? இது தர்மமா? நியாயமா?" என்று நாம்




தம் 25 ஆம் வயதில் தந்தையாரிடம் கோபித்துக் கொண்டு துறவுக்கோலம் பூண்டார், பெரியார்.




தம் 38 ஆம் வயதில் ஈரோடு நகரமன்றத் தலைவர் பதவி வகித்த பெரியார்.



காங்கிரஸ் தலைவர் ஈ. வெ. ரா. அவர்களுடன் திருச்சி டாக்டர்
டி. எஸ். எஸ். ராஜன், சி. இராசகோபாலாச்சாரி ஆகியோர் (1922)

கேட்டால்—நம்மை வகுப்புத் துவேஷக்காரன் என்றும், வகுப்புப் பிரிவினைக்காரன் என்றும், வகுப்புரிமைக்காரன் என்றும் சொல்லிக் கொன்றுவிடப் பார்த்தால், அதற்கு நான் பயந்து கொள்வேனா என்று கேட்கிறேன்.

இரயில்வே ஸ்டேஷன்களிலுள்ள ஓட்டல்களை எடுத்துக்கொள்ளுங்கள். இரயிலில் பெரும்பான்மையாகப் பிரயாணம் செய்பவர்கள் நாமாயிருக்கிறோம்; ஓட்டல்காரனுக்கு அதிக இலாபம் கொடுப்பவர்கள் நாமாக இருக்கிறோம். ஆனால், அந்த ஓட்டலுக்காக இரயில்வே அதிகாரிகள் கொடுத்த இடத்தில் முக்கால் பாகத்திற்கு மேலாகத் தாங்கள் எடுத்துக்கொண்டு, கொஞ்சம் இடத்தை நமக்கு ஒதுக்கிவைத்துவிட்டு, அந்த இடத்தில் எச்சிலை போடவும், சாணிச்சட்டி, விளக்குமாறு வகைகளை வைக்கவும் கைகழுவவும் செய்கிறார்கள்.

ஒரு பார்ப்பனன் குஷ்டரோகியானாலும் அவன் நேரே சமையலறைக்குப் போய் சுடச்சுட உள்ள பதார்த்தங்களில் தனக்கு வேண்டுமானதை அடுப்பிற்குப் பக்கத்திலிருந்தே எடுத்துச் சாப்பிட்டுவிடுகிறான். நம்மில் எவ்வளவு பெரிய மனிதர்களானாலும் வெளியில் நின்றுகொண்டு, நாலணாவைக் கையில் தூக்கிக் காட்டிக்கொண்டு—'இடைச்சி மார்க்கு கட்டிப்பால்' விளம்பரத்தில் பெண்கள் கூட்டம் பால்கேட்பது போல—ஒரு கையைத் தூக்கிக்கொண்டு 'சாமி, சாமி' என்று கத்த வேண்டியதாயிருக்கின்றது. ஆறினதையும், ஈ, பூச்சி, புழுக்கள் விழுந்ததையும், விற்காமல் தேங்கினதையும் நாம் வாங்கிச் சாப்பிட வேண்டியதாயிருக்கிறது. இந்த நிலையில், வகுப்பு வித்தியாசத்தையும், வகுப்புத் துவேஷத்தையும் வளர்ப்பவர்கள் நாமா, இந்தப் பார்ப்பனர்களா என்பதை யோசித்துப் பாருங்கள்!

நம்முடைய பணத்தைக்கொண்டு மத சம்பந்தமான கல்விகளுக்கென்றும், வேதபாட சாலை என்றும், பெரிய பெரிய பள்ளிக்கூடங்களைக் கட்டிக்கொண்டு, அதில், பிராமணர்கள் தான் படிக்கலாம்-சூத்திரர்கள் படிக்கக்கூடாது, என்று சொல்லி, நம்மைத் தள்ளிவைத்து விடுகிறார்கள். சாதி வித்தியாசத்தையும், வகுப்புத் துவேஷத்தையும் வளர்ப்பவர்கள் நாமா, இல்லை அவர்களா என்பதை யோசித்துப் பாருங்கள்! நம்முடைய பணத்திலேயே பெரிய பெரிய கோயில்கள் 'கட்டப்பட்டு—நம்முடைய பணத்தைக்கொண்டே பூசைகள் செய்யப் பட்டுவரும் சுவாமிகளிடத்தில், நம்மைப் போகக்கூடாது என்று சொல்லுகிறார்கள். இதனால் வகுப்புத் துவேஷத்தை உண்டாக்குகிறவர்கள் நாமா, இல்லை அவர்களா?

ஆகவே, இப்போது சாதி வித்தியாசம் வளரக்கூடாது என்பதும், வகுப்புத் துவேஷங்கள் ஒழியவேண்டும் என்பதும்தான் நமது கொள்கை. அதற்காகத்தான் நான் பாடு படுகிறேன். சாதி வித்தியாசங்களான—மக்கள் உயர்வு, தாழ்வு என்பதை ஒழிப்பதற்கும், வகுப்புத் துவேஷங்கள் ஒழிவதற்கும் முட்டுக்கட்டையாக இருந்து வருபவர்கள் நாமா, அந்தப் பிராமணர்களா என்பதை யோசித்துப் பாருங்கள்.

சாதி வித்தியாசம் நிலைத்து இருப்பதற்கும், வகுப்புத் துவேஷங்கள் வளருவதற்கும், நிரந்தரமான ஏற்பாட்டைப் பார்ப்பனர்களே செய்து வைத்துக்கொண்டு, நம்மீது குறைகூறுகிறார்கள். நாம் இப்போது பார்ப்பனர்களைக் கேட்பது எல்லாம்—எங்களையும் சமமாகப் பாவியுங்கள்; எங்களைத் தாழ்ந்தவர்கள் என்று சொல்லி இழிவு படுத்தி, எங்களுடைய சுயமரியாதையைக் கொல்லாதீர்கள்—என்பதேயன்றி வேறில்லை. இதை அவர்கள் கொஞ்சமும் கவனியாமல், இந்தத் தேசத்தில் 100க்கு 97 பேர்களாக இருக்கிற நம்மைச் சூத்திரர்களென்றும் தாழ்ந்தவர்களென்றும் சொல்லுவதோடல்லாமல், நமக்கு இவர்கள் தர்மகர்த்தாக்கள் என்று பெயர் வைத்துக்கொண்டு, சர்க்காருக்கு உள் உளவாயிருந்து, எல்லா உத்தியோகங்களையும் அதிகாரங்களையும் இவர்களே கைப்பற்றிக்கொண்டு, நமக்குக் கொடுமை செய்துவருகிறார்கள். நாம் நமது சுய

மரியாதைக்காகத்தான் இவ்வளவு பிரயத்தனப்படுகிறோமேயல்லாமல்—கேவலம், இந்த உத்தியோகத்திற்கு ஆசைப்பட்டு அல்ல. ஆனால், நமது பார்ப்பனர்கள் இந்த உத்தியோகங்களைக் கைப்பற்றிக்கொண்டதன் பலனாகவே நம்மைத் தங்களுக்கும், சர்க்காருக்கும் நிரந்தரமான அடிமைகளாக்கி, நம்மீது ஆதிக்கம் செலுத்தி வருகிறார்கள். இவற்றிலிருந்து தப்பி நமது சுயமரியாதையைக் காப்பாற்றிக்கொள்வதற்காகவே, இப்பார்ப்பனர்களை எப்படியாவது—எல்லாவித உத்தியோகங்களிலிருந்தும் ஒழிக்கவேண்டுமென்று கஷ்டப்படுகிறோம்.

நீங்கள் கூச்சலிடுவதற்காகவோ, கரகோஷம் செய்வதற்காகவோ நான் உங்கள் முன் பேசவரவில்லை. உத்தியோக விஷயத்தில் மாத்திரம் பார்ப்பனர்கள் விஷயத்தில் பொறாமையும் துவேஷமும் உங்களுக்கு இருக்கிறதேயல்லாமல்—வைதீகச் சடங்குகளில் நீங்கள், அவர்களை உங்களைவிட உயர்ந்தவர்கள் என்றே எண்ணியிருக்கின்றீர்கள். நீங்கள் எவ்வளவு படித்தவர்களாக இருந்தாலும், எவ்வளவு பெரிய பதவியிலும் அதிகாரத்திலும் இருந்தாலும், இரண்டு காய்ந்த தர்ப்பைப் புல்லைக்கொண்டு, சாம்பலையோ, நாமத்தையோ அடித்துக்கொண்டு ஒரு பார்ப்பனன் உங்கள் வீட்டிற்கு வருவானேயானால், 'சுவாமி' என்று அவன் காலில் விழத் தயாராக இருக்கின்றீர்கள். அவனுக்குப் பணத்தைக்கொடுத்தால் உங்கள் பெற்றோர்களுக்கு மோட்சம் கிடைக்கும் என்ற முட்டாள் தனமான எண்ணம் இன்னமும் உங்கள் இரத்தத்தில் கலந்துகொண்டிருக்கிறது. அவன் கைப்பட தாலி எடுத்துக்கொடுத்து, நீங்கள் அதைக் கும்பிட்டு வாங்கிப் பெண்களின் கழுத்தில் கட்டினால்தான் உண்மையான கலியாணம் என்று நினைக்கிறீர்கள். ஒரு பார்ப்பனன் உங்கள் வீட்டுப் பெண்ணையும் பிள்ளையையும் படுக்கை அறைக்குள் அனுப்பிக் கதவைச் சாத்தினால்தான், நல்ல பிள்ளை பெறமுடியும் என்று நினைக்கிறீர்கள்; ஒரு பார்ப்பனனுக்குப் பணத்தைக் கொட்டிக்கொடுத்து, அவன் காலைக் கழுவின தண்ணீரைச் சாப்பிட்டால்தான், உங்கள் பாவம் தொலையுமென்றும் நீங்கள் மோட்சத்திற்குப் போகமுடியுமென்றும் நினைக்கிறீர்கள். இவ்விதமான முட்டாள்தனமான மனப்பான்மையை மாற்றிக் கொள்ளத் தயாராக இருக்கிறீர்களா? அப்படியானால் உங்களுடைய சந்தோஷங்களுக்குப் பொருள் உண்டு. அப்படிக்கில்லாமல், வீண் ஆரவாரங்களினாலும், அற்ப சந்தோஷத்தினாலும் பலன் என்ன?

ஆதலால், நாம் இப்போது செய்யும் இந்தப் போராட்டம் சுயமரியாதைப் போராட்டமேயல்லாமல், உத்தியோகத்திற்காகவே செய்யும் உத்தியோகப் போராட்டம் அல்ல என்பதை நன்றாய் உணருங்கள். நமது சுயமரியாதையைக் காப்பாற்றிக்கொள்வதற்கு இந்தவித உத்தியோகங்கள் சகாயமாயிருக்கும். மோட்சம் என்கிற வார்த்தையினாலும், சுயராஜ்யம் என்கிற வார்த்தையினாலும் சமூக வாழ்க்கையிலும், அரசியலிலும் முறையே நம்மைப் பார்ப்பனர்கள் ஏமாற்றி ஆதிக்கம் பெற்றுவிட்டார்கள். இவ்விரண்டு விஷயங்களிலும் பார்ப்பனர்களுக்கு உள்ள ஆதிக்கத்தை விரட்டி அடித்தால்தான் நாம் சுயமரியாதையை அடைய முடியும். அந்த சுயமரியாதைக்காக நாம் இன்று, நேற்று மாத்திரம் போராடவில்லை.

ஜஸ்டிஸ் கட்சி என்று ஏற்பட்டும், நாயர்—செட்டியார் என்ற மகான்களின் இயக்கம் ஏற்பட்டும் சுமார் பத்தாண்டுகள் ஆகி இருக்கின்றன. இன்றைக்கு எத்தனையோ ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்னதாகவே இப் பார்ப்பனரின் கொடுமையை உணர்ந்த நம் தமிழ் மக்கள், அதிலிருந்து தப்பவேண்டுமென்று எவ்வளவோ பிரயத்தனம் செய்திருக்கிறார்கள். நமது சித்தர்களெல்லாம் எவ்வளவோ தெளிவாய்ப் பார்ப்பனர்களின் அக்கிரமங்களை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அதனால்தான், நமது பார்ப்பனர்கள் சித்தர் நூல்களை ஒழித்து, சித்தர் உபதேசங்களையெல்லாம் மறைத்து, இராமாயணம், பாரதம், அரிச்சந்திர புராணம் முதலான நூல்களைப் பார்ப்பனர்களுக்கு அனுகூலமாக எழுதி, அவைகளுக்குச் செல்வாக்கு உண்டாக்கி, அவற்றைப் படித்தால்

மோட்சம் என்று சொல்லி நம்மை ஏமாற்றிவிட்டார்கள். கபிலர், பாய்ச்சலூரார், அவ்வையார், திருவள்ளுவர் முதலிய பெரியோர்கள் தாம் செய்திருக்கும் நூல்களினாலும், தங்களுடைய உபதேசங்களினாலும் இன்றைக்கு அய்யாயிரம் வருடங்களுக்கு முன்பே பார்ப்பனர்களின் கொடுமையை வெளிப்படுத்தி, அவைகளை ஒழிக்கப் பிரயத்தனப்பட்டிருக்கிறார்கள்.

சமீப காலத்தில் புத்தர், சமணர் முதலியோர்களும் பார்ப்பனர்களின் கொடுமையை ஒழித்து மக்கள் எல்லோரும் சமம் என்றும், அன்பும் சமரச உணர்ச்சியுந்தான் கடவுள் என்றும் உலகத்திற்கு உணர்த்த வந்ததை, இப் பார்ப்பனர்கள் சகிக்காமல் இவர்கள் பிரயத்தனத்தையெல்லாம் ஒழித்துவிட்டார்கள். பார்ப்பனர்கள் தங்களை உயர்ந்த சாதியினர் என்று சொல்லிக்கொண்ட காலத்தில் பலவான்களாக இருந்தவர்கள், அதை ஒப்புக் கொள்ளாமல் பலாத்காரத்தை உபயோகப்படுத்திவந்த சமயத்தில்—தந்திரமாய், “ நீங்கள் க்ஷத்திரியர்களாக இருந்து அரசாட்சி செய்யுங்கள்; நாங்கள் உங்களுக்கு மந்திரிகளாக இருந்து யோசனை சொல்லுகிறோம் ” என்று சொல்லி அவர்களை ஏமாற்றிக் கைக்குள் போட்டுக்கொண்டார்கள்.

கையில் செல்வமும் செல்வாக்குமுள்ள மற்றொரு கூட்டத்தார், “ நீங்கள் எப்படி உயர்ந்த சாதியாகலாம்?” என்று விவாதிக்கையில், “ நீங்கள் வைசியர்களாக இருங்கள்; உங்களுக்குக் கீழ் அனேகர்கள் இருக்கின்றார்கள் ” என்று சொல்லியும், “ உங்களுக்கும் எங்களைப்போல் பூணூல் போடுகிறோம் ” என்று சொல்லியும் அவர்களையும் ஏமாற்றிக் கைக்குள் போட்டுக் கொண்டார்கள். பிறகு, பெரும்பான்மையாக இருந்த விவசாயக்காரர்களையும், கைத்தொழில்காரர்களையும் பார்ப்பனர்களுக்கும் முதல் மூன்று வகைப் பிரிவுக்காரர்களுக்கும் வேலை செய்கிறவர்கள் என்று ஏற்படுத்திவிட்டார்கள். அவர்களில் பலர் இதை ஒப்புக்கொள்ளாமல் வாதாடவே, “ உங்களுக்குக் கீழாக ஒரு பிரிவினரை வைத்திருக்கிறோம்; அவர்களுக்கு நீங்கள்தான் எஜமானர்கள்; உங்கள் இஷ்டம்போல் அவர்களை நடத்திக் கொள்ளலாம் ” என்று சொல்லி, சாந்தமே உருவாகவும் சூது வாது தெரியாத சாது ஜனங்களாகவும் இருந்தவர்களைப் ‘ பஞ்சமர்கள் ’ என்று பெயர் வைத்து, அவர்களை மேற்படி சூத்திரர் என்பவர்களுக்குக் காட்டிக்கொடுத்து, அவர்களையும் ஏமாற்றி விட்டார்கள். கடைசியாக, வாயில்லாப் பூச்சிகளாகிய ஒரு வகுப்பார்—தீண்டத்தகாதவர்களாகித் துன்பப்பட்டுக் கொண்டிருக்கின்றார்கள்.

இவ்விதக் கொடுமை செய்தவர்களைத்தான் நீங்கள் இன்றைய தினம் உங்கள் மதகுருவாய் நினைத்துக் கொண்டிருக்கின்றீர்கள். இவ்விதக் கொடுமை நம்மை விட்டு நீங்கவேண்டுமென்றால், மத விஷயத்திலும் அரசியல் விஷயத்திலும் நாம் ஆதிக்கம் பெற வேண்டும். ஆதிக்கம் பெற்று நமது சுயமரியாதையை அடைய முயற்சிக்க வேண்டும். ஒரு சமூகத்திற்கானாலும், ஒரு தேசத்திற்கானாலும்—சுயராஜ்யத்தைவிட, சுயமரியாதையே பிரதானமானது என்பது எனது தாழ்மையானதும் முடிவானதுமான கொள்கை. அச் சுயமரியாதைக்கு, மகாத்மாவின் நிர்மாணத் திட்டமும் மறைவுபட்ட இந்தச் சமயத்தில்—அரசியலிலுள்ள சகல பதவிகளையும், சகல ஸ்தானங்களையும், சகல அதிகாரங்களையும், சகல உத்தியோகங்களையும் எப்படியாவது நாம் கைப்பற்றியாக வேண்டும். ஆதலால், இப்போது நடக்கிற தேர்தல் ஸ்தானங்கள் எல்லாம் இக்கருத்து கொண்ட பார்ப்பனரல்லாதார்களே கைப்பற்றும்படி நாம் செய்யவேண்டும். அதன் மூலம் நமது கருத்தை நிறைவேற்றிக் கொள்ள எவ்வெவ்வழிகளில் சாத்தியப்படுமோ அவ்வழிகளிலெல்லாம் உழைக்க வேண்டும். இதுதான் நம்முடைய தேசிய வேலை. இதை விட்டுவிட்டு, காங்கிரஸ் என்றும் சுயராஜ்யம் என்றும் காங்கிரஸ் மூலம் சுயராஜ்யம் அடையலாமென்றும் சொல்லுவதெல்லாம், பார்ப்பனர் மூலம் மோட்சமடையலாமென்று சொல்லுவது போலத்தான் ஆகும்.

[சென்னை திருவல்லிக்கேணியில், 31–7–1926-ல் சொற்பொழிவு—‘ குடி அரசு ’ 15–8–1926]

# 3. புரோகித பகிஷ்காரம்

அக்கிராசனரவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

நான் இன்று பேசத் துணிந்த விஷயமாகிய பார்ப்பனீயப் புரோகிதப் பகிஷ்கார விஷயம் சாமான்யமானதல்ல. ஆயிரக்கணக்கான வருஷங்களாய், அநேக தலைமுறையாய், நம்மவர்கள் குருட்டு நம்பிக்கையில் ஈடுபட்டு, மதத்தின் பேரால் ஆத்மார்த்தம் என்றும், மோட்சம் என்றும், தர்மம் என்றும், புண்ணியம் என்றும், கடமை என்றும் கருதி சுயமரியாதை இழந்து நடந்து வந்திருக்கும் ஒரு அர்த்தமற்ற காரியத்தைப் பற்றி உங்கள் முன் பேசுவதென்பது சுலபமான காரியமென்பதாக எனக்குத் தோன்றவில்லை. ஏனெனில், அம்மூடநம்பிக்கையும் அர்த்தமற்ற நடவடிக்கைகளும் நமது மக்கள் இரத்தத்திலேயே கலந்துவிட்டன. இவைகளைப் பற்றி யோசிப்பதுவே மிகப் பாவம் என்பதாகக் கருதப் படுகிறது.

கொஞ்ச காலத்திற்குமுன் இம்மாதிரி விஷயங்களுக்கு ஒரு கூட்டம் கூட்டுவதென்றால், கூட்டத்திற்கு வந்து என்ன பேசுகிறார்கள் என்று கேட்பதற்குக் கூட மனிதர்களுக்குப் பொறுமை இருக்காது. ஒரேயடியாய், "காலம் கெட்டுவிட்டது; கலியின் உக்கிரம் இம்மாதிரி நாஸ்திகம் வளர்ந்துவிட்டது" என்று எவ்வளவோ வெறுப்பார்கள். ஆனால், இப்பொழுது இதைப்பற்றி என்ன சொல்லுகிறான் என்று கேட்பதற்காவது இத்தனை பேர்கள் வந்திருப்பதே—அதிலும் மதம், சமயம் முதலிய விஷயங்களிலும், சரித்திர ஆராய்ச்சி முதலிய விஷயங்களிலும் நிபுணர்கள் உட்பட அநேக மேதாவிகளும் அறிவாளிகளும் இவ்விடம் வந்திருப்பது எனக்கே ஒரு ஆச்சரியத்தையும் நம்பிக்கையையும் கொடுக்கிறது. ஆனால், ஒரு விஷயத்தை முதலிலேயே சொல்லிவிடுகிறேன். நான் படித்தவன் என்று சொல்லிக்கொள்ளும் கூட்டத்தில் சேர்ந்தவனல்லன். ஏனெனில், எனது 10ஆவது வயதிலேயே எனக்குப் படிப்பு வராதென்றும், பள்ளியில் ஒழுங்காய்ப் படிக்க மாட்டேன் என்றும், மிகவும் துஷ்டப்பிள்ளை என்றும் எனது பெற்றோர்களால் கண்டுபிடிக்கப்பட்டு, என்னை என் தகப்பனார் பள்ளிக்கூடத்திற்கு அனுப்புவதை நிறுத்தி, தனது வியாபாரத்திற்கு அனுகூலமாய் இருக்கும்படி கடையிலேயே வைத்துக்கொண்டார்.

இப்போது எடுத்துக்கொண்ட விஷயமாய் எனக்கு உள்ள எண்ணம் ஏறக்குறைய அந்த வயது முதற்கொண்டே எனக்கு இருந்துவந்தாலும், பள்ளியில் படித்ததாலேயோ, ஆராய்ச்சியினாலேயோ அல்லாமல், பல பெரியோர்களிடம் பேசிப்பேசி அறிந்ததினாலும், உலகானுபவத்தினாலும், ஆலோசனைகளுக்கும் பகுத்தறிவுகளுக்கும் மதிப்புக் கொடுத்ததாலேயே ஆகும். மற்றும், இதுமாதிரி காரியங்களில் இகழ்ந்து பேசுவதும் உண்டு. இம்மாதிரி நான் பேசுங்கால் எனது வீட்டார்கள் உட்பட அநேகர் என்னை அக்காலம் முதற்கொண்டே பலமாய் நாஸ்திகன் என்றும், மதத் துவேஷி என்றும் வெறுப்பார்கள். என்ன வெறுத்தாலும் எனது எண்ணங்கள் இம்மாதிரி விஷயங்களில் ஆலோசிக்க ஒரு சிறிதும் மாறுபடாமல் இருந்துவந்ததோடு, இப்போதுதான் அவற்றை வெகு தாராளமாய் எடுத்துச் சொல்லவும், பலர் கூடிக் கேட்கவும் சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கின்றது.

பார்ப்பனீயப் புரோகிதப் பகிஷ்காரம் என்னும் இவ்விஷயம் இதன் பெயரைப் பார்க்கும்போதே பார்ப்பனப் புரோகிதத்தை மாத்திரம் விலக்கிவிட்டு—அந்த இடத்தில் பார்ப்பனரல்லாத புரோகிதரை வைத்து அச் சடங்குகளைச் செய்வது என்பதாகப் பலருக்குத் தோன்றலாம். இச்சங்கத்தின் கருத்து அதுவல்ல வென்றே நான் இதில் பேச ஒப்புக் கொண்டிருக்கிறேன். அப்படியில்லையானால் இச்சங்கமே அவசியமில்லை. இவ்விஷயத்தின் கருத்தே மூடநம்பிக்கைகள் ஒழிய வேண்டும் என்பதும், மனிதன் தனக்குள்ளாகவே, தான் மற்றவனைவிடப் பிறவியில் தாழ்ந்தவன் என்கிற உயர்வு-தாழ்வு உணர்ச்சி போய்,

தன்னம்பிக்கையும் சுயமரியாதையும் ஏற்படவேண்டும் என்பதுந்தானே அல்லாமல் வேறல்ல. ஆனால், பார்ப்பனீயப் புரோகிதப் பகிஷ்காரம் என்பதில் அவ்வித அர்த்தம் காண்கிறதே என்று கேட்பார்களானால் அதற்கு நான் சொல்லும் பதில் : புரோகிதம் என்று சொல்லும் வார்த்தையும், அதில் பிறக்கும் அச்சடங்கு—அதாவது திவசம், திதி, சிரார்த்தம், பிண்டம், புண்ணியாவர்ச்சனம், சாந்தி, கருமம், சங்கல்பம், தானம், பிதிர் தேவதை, பிதிர்லோகம் முதலியவைகள்—பார்ப்பனர்களே ஏற்படுத்தியதாலும், இவைகளும் இவை போன்ற பல சடங்குகளும் பார்ப்பனீயத்திலிருந்தே தோன்றியதாலும், பார்ப்பனீயம்தான் இம்மாதிரி மூடநம்பிக்கைகளுக்குத் தாயகமாகவும், மக்கள் உயர்வு–தாழ்வு முதலிய கற்பனைகளுக்கும் ஆதாரமாகவும் இருப்பதால், பார்ப்பனீயமே முதலில் ஒழியவேண்டுமென்கிற கருத்தைக் கொண்டு அப்பெயர் சூட்டப்பட்டிருக்கின்றது என்றே சொல்லுகின்றேன்.

குருட்டு நம்பிக்கைகளும், மூட வழக்கங்களும் ஒழியவேண்டுமானால், முதலாவது பார்ப்பனீயம் ஒழிந்தாக வேண்டும். பார்ப்பனன் ஒழியவேண்டுமானால்—பார்ப்பான் உயர்ந்தவன், நாம் அவனைவிடத் தாழ்ந்தவன் என்கிற உணர்ச்சி ஒழியவேண்டும். ஆதலால்தான், முதற்படியாக—பார்ப்பான் உயர்ந்தவன் என்று எண்ணுவதற்கும், ஆதாரமாயிருப்பதற்கும் அனுகூலமான—பார்ப்பனனைக் கொண்டுதான் புரோகிதம் முதலிய சடங்குகள் செய்வது என்கிற வழக்கமும் உணர்ச்சியும் ஒழிந்துவிட்டால், அடுத்தபடியில் அப் புரோகிதம் என்கிற மூட வழக்கங்களின் தத்துவங்களை எடுத்துச்சொல்லி, அதிலிருந்து அர்த்தமற்ற தன்மையையும் எடுத்துக்காட்டி, அவற்றை ஒழிப்பதற்கும் அனுகூலமாயிருக்கும். இல்லாதவரை, பாமர ஜனங்களுக்குள் ஏதோ ஒரு பெரிய மாறுதலை ஏற்படுத்துவதுபோல் நினைத்துப் பயப்பட இடமுண்டாகிவிடும். ஏனெனில், அம்மாதிரியான விஷம்தான் நான் முன் சொன்னதுபோல், பல ஆயிரக்கணக்கான வருஷங்களாகவே நமது மக்களுக்குள் புகுத்தப்பட்டிருக்கின்றது. அவ்விஷத்தைப் படிப்படியாகத்தான் கீழிறக்க வேண்டும். அவசரப்படுவதும் விதண்டாவாதம் பேசுவதும் காரியத்திற்கு உபயோகப்படாததாய்ப் போய்விடும். எனவே உயர்ந்த சாதி என்று எண்ணுகிற உணர்ச்சி ஒழிந்தவுடன், அதனால் ஏற்பட்ட மற்ற அசம்பாவிதங்களை ஒழிப்பது வெகு சுலபமாகிவிடும் என்கிற எண்ணந்தானேயல்லாமல், பார்ப்பனர் வரும்படியைக் கெடுத்து அதை மற்றவருக்குக் கொடுக்கவேண்டுமென்பதல்ல. தவிர, மேற்சொன்ன புரோகிதம் என்கிற சடங்குகள் நமக்கு எதன் மூலமாய்ப் புகுத்தப்பட்டது என்று பார்த்தால், மதம் என்பதை ஆதாரமாய் வைத்துப் புகுத்தப்பட்டிருக்கிறது.

அம்மதம் இந்துமதம் என்று சொல்லப்படுவது. அவ் இந்துமதம் என்ன என்று பார்க்கப்போனாலோ அது, "பிடிக்கப் பிடிக்க நமசிவாயா" என்பதுபோல் கொஞ்சங் கூடப் பொருள் இல்லாததும், முழுப் புரட்டானதும் என்றுதான் சொல்லவேண்டும். இந்த இந்துமதம் என்ற வார்த்தை எதில் இருக்கிறது? எப்போது ஏற்பட்டது? அதன் கொள்கைகள் என்ன என்கிற விஷயங்களை விசாரிக்கப்போனால் ஒன்றுக்குமே சமாதானம் கிடைக்காது. உலகத்தில் இந்த இந்துமதத்தைத் தவிர, வேறு எந்த மதமும் இம்மாதிரிப் புரட்டுகளையும் மோசத்தையும் கொண்டிருக்கவில்லை. வேறு எந்த மதஸ்தர்களும் தங்கள் மதத்தைப்பற்றி இவ்வளவு காட்டுமிராண்டித்தனமான மூடர்களாய் இருக்கவில்லை.

முகமதிய மதத்தை எடுத்துக்கொள்ளுங்கள். இன்ன காலத்தில் இன்னாரால் ஏற்பட்டது; அதன் கொள்கை இன்னது; அதற்கு மூல ஆதாரம் 'குர்ஆன்'; அதை எல்லோரும் படிக்கவேண்டும் என்கிற குறிப்புகள் உண்டு.

இதுபோலவே, கிறிஸ்துவ மதத்தை எடுத்துக்கொள்ளுங்கள். அது இன்ன காலத்தில் இன்னாரால் ஏற்படுத்தப்பட்டது; அதன் கொள்கைகள் இன்னவை; அதற்கு மூல ஆதாரம் 'பைபிள்'; அதை யாவரும் படிக்கவேண்டியது என்கிற குறிப்புகள் உண்டு. அதுபோலவே புத்த மதம், சமண மதம், சீக்கிய மதம் என்பன போன்ற எத்தனையோ மதங்களுக்கு

இதுபோன்ற காலங்களும், கர்த்தாக்களும், கொள்கைகளும், ஆதாரங்களும், அவற்றை எல்லா மக்களும் அறியச் சுதந்திரங்களும் உண்டு. நாம் சொல்லும் இந்துமதத்திற்கு இவைகளில் ஏதாவது—எள்ளளவாவது இருக்கிறதாவென்று பார்த்தால், ஊற்றுக்கு நிற்கும் படியான ஒரு காரியத்தையும் காணோம்.

இந்துமதம் என்கிற பெயரே பூர்வ சரித்திரங்கள், சங்க இலக்கியங்கள், புராணங்கள், இதிகாசங்கள், ஆகமங்கள், தர்மசாஸ்திரங்கள், ஸ்மிருதிகள், வேதங்கள் முதலான எந்தப் புத்தகங்களிலும் இருப்பதாகத் தெரியவில்லை. நான்தான் முன்னமேயே அதிகம் படிக்க வில்லை என்று சொல்லிவிட்டேன். ஆனாலும், படித்தவர்கள் என்று சொல்லக்கூடிய அநேகரையும் கேட்டால், ஒருவராவது இந்துமதம் என்ற பெயர் இந்த ஆதாரத்தில் இருக் கிறது என்பதாகச் சொல்லவே இல்லை. இங்கும் யாராவது சொன்னாலும் சரி என்றே சொல்லுகிறேன்.

பொதுவாக, இந்துமதம் என்றால் மக்கள் பிறவியில் உயர்வு—தாழ்வு என்பதைக் கற்பிப்பதும்; நெற்றியில் ஏதாவது குறி வைத்துக்கொள்ளுவதும்; பல சாமிகள் இருப்பதாக வணங்குவதும்; 'என் சாமி பெரியது, உன் சாமி சிறியது' என்று சண்டைபோடுவதும்; சாமிக்குப் பெண்டு பிள்ளைகள், கூத்தியாள் முதலியவைகள் கற்பிப்பதும் ஆகியவைகளைத் தவிர வேறொன்றும் இல்லை. இவைகளைப்பற்றி ஆராய்வோமென்றால் இவைகள், "வேதத்தில் உள்ளவை" என்றும், "வேதந்தான் இந்துமதம்" என்றும் சிலர் சொல்லி விடுகிறார்கள். சரி; அந்த வேதத்தையாவது பார்க்கலாம் என்றால், "அதை நீ கண்ணால் பார்த்தால் கண்ணைக் குத்தவேண்டும்; காதால் கேட்டால் காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றவேண்டும்" என்று சொல்லிவிடுகிறார்கள்.

வேதத்தில் என்ன சொல்லியிருக்கிறது என்று தெரிந்துகொள்ளுவதற்குக்கூட நமக்கு இடமில்லையானால், நாம் அதை எப்படி ஒப்புக்கொள்ள முடியும்? எவனாவது நம்மிடம்வந்து, "உனக்குக் கொஞ்சம் ரூபாய் தருகிறேன்; பெற்றுக்கொண்டதற்காக இந்தக் கடிதத்தில் கையெழுத்துப் போடு" என்று சொன்னால், அந்தக் கடிதத்தில் என்ன எழுதியிருக்கிறது என்று பார்த்துத்தானே கையொப்பம் இடுவோம்? "அதை நீ பார்க்கக் கூடாது. நான் காட்டுகிற இடத்தில் கையெழுத்துப் போடவேண்டியதுதான் பணம் பெற்றுக்கொள்ளுகிறவன் கடமை" என்று யாராவது சொன்னால், பேசாமல் கையெழுத்துப் போட்டுவிடுவோமா? அதில் என்ன எழுதியிருக்கிறது? எத்தனை ரூபாய்க்கு எழுதி இருக் கிறது? என்பவைகளைத் தெரிந்துகொள்ளாமல் கையெழுத்துப் போடுவது முட்டாள்தனம் என்று உணரமாட்டோமா? நம்மைப் பார்த்து, "நீ இந்து மதஸ்தன்; இந்து மதம் என்பது வேதத்தை ஒப்புக்கொள்ளுவது; அதிலுள்ள சடங்குகளை நீ ஒப்புக்கொள்ள வேண்டும்; ஒப்புக்கொள்வது என்பது பார்ப்பனனுக்குப் பணம் கொடுப்பதும் அவர்கள் காலில் விழுவதும்தான். ஆதலால், எனக்குப் பணம் கொடு; என் காலில் விழுந்து கும்பிடு; என் காலைக் கழுவித் தண்ணீரைக் குடிப்பது உனக்கு மோட்சம் கிடைக்கச் செய்யும்" என்று ஒரு பார்ப்பனன் சொல்லுவானேயானால்—"சரி; நாம் அப்படியே செய்யலாம்; ஆட்சேபம் இல்லை. ஆனால், அந்த வேதத்தைக் கொஞ்சம் காட்டுங்களே; அதில் அப்படி எழுதியிருக்கிறதா என்பதைக் கொஞ்சம் கண்ணால் காண்போம்" என்றால்—"நீ அதைப் பார்க்கக்கூடாது; பார்த்தால் பாவம்" என்று சொல்லும்போது, நாம் எப்படி அம் மதத்தை ஒப்புக்கொள்ள முடியும்? முன் சொன்னது போல், படித்துப் பார்க்காமல் கையெழுத்துப் போடக்கூடிய அவ்வளவு மூடர்களாய் நாம் இருந்தால்தானே, படித்துப் பார்க்காமல் இந்துமதத்தை ஒப்புக்கொள்ளுவதோ அல்லது அதில் இருக்கிறதாகச் சொல்லு கிறபடி நடப்பதோ முடியும்?

இந்து மதம் என்கிற ஒரு மதம் தவிர, வேறு மதக்காரன் எல்லோரும் தங்கள் தங்கள் மதங்களையும், கொள்கைகளையும் தங்கள் மதக்காரர்கள் எல்லோரையும் படிக்கச் செய்

வதுடன், வேறு மதக்காரர்களும் படிக்கும்படியாக அந்தந்த பாஷைகளில் தங்கள் சொந்தச் செலவில் அச்சிட்டு, இலவசமாக வழங்குகிறார்கள். பெண்களுக்கும் பெண்கள் மூலமாக வீட்டிற்குக் கொண்டுவந்து கொடுக்கிறார்கள்; சம்பளம் கொடுத்துப் பாதிரிமாரையும் உபதேசியாரையும் நியமித்துப் பிரச்சாரம் செய்விக்கிறார்கள். இவர்கள் பெரும் கூட்டங்கள் நடைபெறும் இடங்களுக்குச் சென்று, சாணி உருண்டை அடியும் கல்லடியும் பட்டுக் கொண்டு, எல்லா ஜனங்களுக்கும் போதிக்கிறார்கள். ஆனால், நம்முடைய மதம் என்கிற இந்துமத சம்பந்தமான வேதம் என்பதையோ, பார்ப்பனர்கள் தவிர மற்றவர்கள் கண்ணில் கூடப் பார்க்கக் கூடாது; காதால்கூடக் கேட்கக் கூடாது; நெஞ்சினால் கூட நினைக்கக் கூடாது என்கிறார்கள்.

மற்ற மதக்காரர்களுக்கு—அதாவது கிறிஸ்தவர், முகமதியர்களுக்குக் கடவுளை வழிபடவும் தொழவும், நாட்களும் காலமும் முறைகளும் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஞாயிறு, வெள்ளி ஆகிய கிழமைகள் முறையே அவர்களுக்கு முக்கிய நாட்களாகும். நமக்கோ ஒருவர் சனி, ஒருவர் ஞாயிறு, ஒருவர் திங்கள், ஒருவர் செவ்வாய் முதலிய ஏழு நாட்களைப் பற்றியும் ஒருவருக்கொருவர் சண்டையிடுவதல்லாமல் குறிப்புமில்லை. சர்க்காரிலும் நமது நாட்களுக்கு மரியாதை கொடுப்பதுமில்லை; அவர்கள் இதை ஒப்புக் கொள்வதுமில்லை. நமது இந்துமதம் என்பதையாவது சர்க்கார் ஒப்புக்கொண்டிருக் கிறார்களா அல்லது ஒப்புக்கொள்ளும்படி செய்திருக்கிறோமா என்று பார்த்தால், அதுவும் இல்லை.

எப்படியென்றால், அரசியல் சீர்திருத்தம் என்னும் பேரால் பல மதங்களுக்கும் தனிப் பிரதிநிதித்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதாவது, சட்டசபை ஸ்தானங்களுக்கு—கிறிஸ் துவ மதத்தின் பேரால் கிறிஸ்தவர்களுக்கு கிறிஸ்துவத் தொகுதி என்று சில ஸ்தானங்களும்; முகமதிய மதத்தின் பேரால் முகமதியர்களுக்கு முகமதியத் தொகுதி என்று பல ஸ்தானங் களும் ஒதுக்கிவைத்துக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அப்படியிருக்க, இந்துமதம் என்னும் ஒரு மதம் இருக்குமானால், அதற்கும் ஏதாவது சில ஸ்தானங்களை இந்துத் தொகுதி என்பதாக ஒதுக்கிவைத்திருப்பார்கள் இல்லையா? அப்படி ஏதாவது ஒதுக்கப்பட்டிருக் கின்றதா என்பதை யோசித்துப் பாருங்கள். அல்லாமலும், இந்துக்கள் என்கிற நாம் சட்டசபைக்கு நிற்கவேண்டுமானால், எந்தப் பேரால் நிற்கிறோம் என்பதைச் சற்றுக் கவனித்துப் பாருங்கள். 'முகமதியர் அல்லாதார் தொகுதி' என்கிற பெயரால்தானே நிற்கி றோம்! 'முகமதியரல்லாதார்' என்றால் என்ன அர்த்தம் என்று உங்களுக்குத் தெரியுமா? முகமதிய மதக் கோட்பாட்டின்படி 'காபிர்' என்றும் அல்லது 'மதம் இல்லாதவன்' என்றும்தான் பொருள்படும். நாம் மதமற்றவர்கள் என்பதற்கு இதைவிட வேறு என்ன அத்தாட்சி வேண்டும்? இந்தப் பெயரை வேறு ஒருவரும் நமக்குச் சூட்டவில்லை; நாமே தான் சூட்டிக்கொண்டு, "முகமதியரல்லாதார் தொகுதிக்கு நான் நிற்கிறேன்" என்கிறோம். நமது சட்டசபை மெம்பர்கள் எல்லாம் முகமதியரல்லாதாரே தவிர, இந்துக்களல்லர்.

இந்து மத பரிபாலனச் சட்டம் ஏற்படுத்தியதைப் பார்த்து சப்தம் போட்ட பெரிய பெரிய இந்துமத வருணாசிரம தர்மிகளும், இந்துமதத் தலைவர்களும், இந்துமதத்தைக் காப்பாற்றப் பிரச்சாரம் செய்த பத்திராதிபர்களும் இன்றைய தினம் இந்திய சட்டசபையில், 'முகமதியரல்லாதாராகத்தான்' அங்கம் பெற்றிருக்கின்றார்கள். காரணம் என்ன? 'முகமதியரல்லாதார்' ஆக வேண்டுமென்றா? அல்லவே அல்ல. பின் என்னவென்றால், இந்துமதம் என்று ஒரு மதம் இருக்கின்றதையும், அதன் கொள்கைகள் என்ன என்பதையும் ருஜுப்பிக்க முடியாததாலேயே அல்லாமல் வேறல்ல. இப்படிப்பட்டவர்கள் இந்துமத பரிபாலனச் சட்டத்தைப் பார்த்து, 'மதம் போச்சுது', 'மதம் போச்சுது' என்று சப்தம் போட்டார்கள் என்றால், நமது பணத்தைத் தின்று கொழுப்பதால் ஏற்படும் அந்த 'மதம்' போய்விடுமே என்கிற பயத்தினாலேயே அல்லாமல் வேறில்லை. மற்றபடி, அந்தச்

சட்டத்தினால் இப்பொழுது இருப்பதாய்ப் பாசாங்கு பண்ணும் மதத்திற்கு—என்ன குறைவு, எந்தப் பிரிவினால் ஏற்பட்டு விட்டது?

தவிரவும், "மதத்தில் சர்க்கார் புகுந்து விட்டார்கள்; சர்க்கார் புக நம் மந்திரிகள் இடம் கொடுத்துவிட்டார்கள்" என்று சப்தம் போட்டார்களே, சர்க்கார் எதில் புகுந்து விட்டார்கள்? எப்பொழுது புகுந்து விட்டார்கள்? இதற்கு முன்பு புகவில்லையா என்பதற்கு இவர்கள் பதில் சொல்ல முடியுமா? இந்துமத சாமியின் நெற்றியில் வைக்கும் நாமம் (குறி) வடகலையா, தென்கலையா? என்பதைக் கண்டுபிடிக்க, நமது மத ஆதாரங்களான நமது வேத சாஸ்திர நூல்களில் நமக்கு முடிவதில்லை; வெள்ளைக்கார ஜட்ஜு சொன்னால்தான் நாமும் ஒப்புக்கொள்ளுகிறோம். நமது கோயில்களில் தேவார பாராயணம் செய்யலாமா, வேண்டாமா என்பதற்கு வெள்ளைக்கார கோர்ட்டால் முடிவு பெற வேண்டியிருக்கிறது. இப்படி இருக்கும்போது, நமது மதத்திற்கு ஏதாவது பொதுக்கொள்கை உண்டா? சுயமரியாதை உண்டா? ஆகவே, நமது மத அஸ்திவாரமே—அதன் தத்துவமே—நமக்கு இன்னது என்று சொல்ல முடியாமலிருக்கும்போது, அதிலிருந்து ஏற்பட்ட ஆபாசக்கட்டுப் பாடுகளைப் பற்றியும், அர்த்தமற்ற சடங்குகளைப் பற்றியும் கவலை செலுத்துவது எவ்வளவு முட்டாள்தனமான காரியம் என்பதை நீங்களே சிந்தித்துப் பாருங்கள். மதச் சடங்குகளின் யோக்கியதையே இப்படி இருக்கும்போது, இச் சடங்குகளைப் பார்ப்பனர் களைக் கொண்டு செய்வதா அல்லது பார்ப்பனரல்லாதாரைக் கொண்டு செய்வதா என்கிற கேள்விகளுக்கு ஏதாவது அர்த்தமிருக்கிறதா? ஒருவனைப் பந்தியிலே உட்கார வைக்க வேண்டாம் என்றால், "இலை கிழிந்திருக்கிறது!" என்று சொல்லுவதில் பிரயோஜன மென்ன? அந்தப் பழமொழிபோல் இருக்கிறது—யாரைக் கொண்டு புரோகிதம் செய்விக் கிறது என்கிற விஷயம்.

இம்மாதிரி, முழுவதும் மோசமான மதத்தின் பேரால் நமக்கு ஏற்பட்டிருக்கும் சடங்குகளும், அதனால் நமக்கு ஏற்படும் வரி (செலவு)களும், அதனால் நமது சுயமரியாதை எவ்வளவு தூரம் பாதிக்கப்படுகிறது என்பதும் சற்று யோசித்துப் பாருங்கள். நாம் ஒரு இந்து என்று சொல்லிக்கொள்ளுவதனால் பார்ப்பனர்களுக்கு எவ்வளவு வரி கொடுக்க வேண்டியிருக்கின்றது என்பதைச் சற்றுக் கவனியுங்கள். சர்க்கார் நம்மிடம் வாங்கும் வரியைப் பற்றி நமது அரசியல் பிழைப்புக்காரரான இதே பார்ப்பனர்கள், அதுவும் அந்த வரிப் பணங்களையெல்லாம் இவர்களே அநுபவித்துக்கொண்டு, எவ்வளவு சத்தம் போடு கிறார்கள்? சர்க்காராவது வாங்கும் பணத்திற்கு ஒரு திட்டமான வரவு–செலவுக் கணக்கு முதலியவைகளைக் காட்டுகிறார்கள். வீடு, பூமி, கடை, தொழில், வியாபாரம், விவகாரம் முதலியவைகள் உள்ளவர்களிடந்தான் வரி வசூலிக்கிறார்கள். இதைச் சரியாகவோ, தப்பாகவோ, எல்லோருக்கும் உபயோகப்படுத்துவதாகச் சொல்லுகிறார்கள்.

மதத்தின் பேரால் இப் பார்ப்பனர்கள் நம்மிடமிருந்து வாங்கும் வரிப்பணத்திற்கு ஏதாவது ஒழுங்குண்டா? முறையுண்டா? வரவு–செலவுக் கணக்குச் சொல்லுவதுண்டா? ஒன்றுமில்லாமல், ஒவ்வொரு மனிதனையும் விடாமல், அதுவும் அவன் கர்ப்பத்தில் தரிக்கும் முன்பே கர்ப்பதான முகூர்த்தம் என்பதாகவும், கர்ப்பம் தரித்தால் சீமந்த முகூர்த்தம் என்பதாகவும், பிறந்துவிட்டால் ஜாதகரணம், நாமகரணம், தொட்டிலில் போடுதல், பாலூட்டுதல், ஆயுசு ஓமம், முடிவாங்குதல், காதுகுத்துதல், பள்ளியில் வைத்தல், காயலா முதலியவைகளுக்குச் சாந்தி; பிறகு, அவனுக்குக் கலியாணம் என்றால் பெண் பார்த்தல், பொருத்தம் பார்த்தல், நாள் வைத்தல்; அதன்பின் விவாகம், அதன்பின் மேற்படி சடங்கு; அவன் பிள்ளைகுட்டி பெற்றால் அதற்கும்—அதன் காயலாவுக்குக் கிரகதோஷம் சாந்தி, கோவில், குளம் யாத்திரை ஆகியவைகள். இவ்வளவும் தவிர, கடைசி காலத்தில் சாவதா யிருந்தால்—அதாவது சாக 10 நிமிஷங்களிருக்கும்போதே—சுங்கக்காரனுக்குச் சுங்கம் கொடுத்து விட்டுத்தான் ஒரு ஊருக்குள் நுழைய வேண்டும் என்பது போல, பார்ப்பானுக்கு

மாடு வாங்கிக் கொடுத்தால்தான் (கோதானம்), இந்த ஜீவன் அந்த மாட்டின் வாலைப் பிடித்துக்கொண்டு மோட்சத்திற்குப் போகமுடியும். இல்லாவிட்டால், மேல் லோகத்திலுள்ள நெருப்பாறு, மயிர்ப் பாலம் தாண்டமுடியாது என்று சொல்லி, மாடு கொடுக்க வேண்டியிருக்கிறது.

மாடு கொடுத்துவிட்டாலாவது விடுகிறானா? அப்போதும் வீட்டில் வந்து உட்கார்ந்து கொண்டு, இழவுக்கு வந்தவர்களைக்கூட விசாரிக்க நேரமில்லாமல் உபத்திரவித்து, வரிசையாக வருஷம் முழுவதும் பிய்த்துப் பிடுங்கித் தின்கிறார்கள். இவ்வளவுடன் தீர்ந்து விடுகிறதா? இல்லவே இல்லை. ஒரு வருஷம் ஆனதும், "உன் தகப்பனார் இன்ன வருடம், இன்ன மாதம், இன்ன தினம், இன்ன திதி செத்துப்போனார்; வை பணம், அரிசி, பருப்பு, உப்பு, புளி, வகையறா சாமான்கள்" என்று கேட்பதோடு, சாப்பிட்டு அஜீர்ணம் ஏற்பட்டால் அதற்கு இஞ்சியும் சுக்கும் கேட்டு வாங்கி, "இவ்வளவும் கொடுத்து, நீயும் உன் பெண் சாதியும் என் காலில் விழுந்து கும்பிட்டு, கால்கழுவின தண்ணீரைக் குடியுங்கள்" என்றும் சொல்லி மூட்டை கட்டிக்கொண்டு போய்விடுகிறார்கள். அம் மூட்டைகள் அனேகமாகத் தாசிகள் வீட்டிற்கே போய்ச் சேருகின்றன.

மதச் சடங்குகள் யோக்கியதைதான் இவ்வாறு இருக்கிறது என்றால், மத ஆச்சாரியார்கள் யோக்கியதையையும் கொஞ்சம் பாருங்கள்! மதத்தைக் காப்பதற்காக என்றோ மதப்பிரச்சாரம் செய்வதற்காக என்றோ, சமயத்தைப் பரப்ப என்றோ நமது முன்னோர்கள் 100, 200, 500, 1000 கணக்கான வேலி பூமிகளும்; 10,000, 20,000, 50,000 கணக்கான வராகன் பொன்களும், இராஜ்யங்களும், ஜமீன், மிட்டா என்னும் ஆட்சிகளும், தானமாகவும் மானியமாகவும் விட்டிருக்கின்றார்கள். இவற்றை நிர்வகிக்கும் மடாதிபதிகளின் யோக்கியதை எப்படி இருக்கிறது? அவர்களின் ஒழுக்க வழக்கங்கள் எப்படி இருக்கின்றன? இவ்வளவு சொத்துக்களின் வரும்படிகள் மதத்திற்கோ சமயத்திற்கோ என்ன பிரயோசனப் படுகின்றன?

[சென்னை சவுந்தரிய மகாலில், 23-3-1927-ல் சொற்பொழிவு— 'குடிஅரசு' 3-4-1927]

## 4. நமது முன்னேற்றம்

சகோதரர்களே! நான் உங்கள் ஊருக்கு இதற்குமுன் இரண்டொரு தடவைகள் வந்திருக்கின்றேன். ஒரு தடவை, ஒத்துழையாமையின்போது உங்கள் ஜில்லாவாகிய தென் ஆர்க்காடு ஜில்லாவில் சுற்றுப்பிரயாணம் செய்த காலத்தில், இந்த மண்டபத்துக் கெதிரில் பேசியிருப்பதாக எனக்கு ஞாபகமிருக்கின்றது. இன்னொரு தடவை, காலஞ் சென்ற நமது நண்பர் திரு. ம. ரா. குமாரசாமி பிள்ளையவர்கள் இருக்கின்றபோழ்து திரு. பிள்ளையவர்களால் அழைக்கப்பட்டு, உங்களூர் வாசிகளாகிய திரு. இலட்சுமணசாமி முதலியார், திரு. கிருஷ்ணசாமிப் பிள்ளை முதலியவர்களாலும் கடைவீதிக்காரர்களாலும் பெரிய ஆடம்பரத்துடன் வரவேற்கப்பட்டு, இவ்வூருக்கு வந்து இதேயிடத்தில் பேசியிருக்கிறேன். நான், இங்கு காலஞ்சென்ற எனது நண்பர் குமாரசாமி அவர்களின் குடும்பத்தாரைக் கண்டு எனது அனுதாபத்தைத் தெரிவித்து விட்டுப் போகலாமென வந்த இடத்தில், ஞானியார் ஆசிரமக் காரியஸ்தர் திரு. வடிவேல் செட்டியாரும் அவரது நண்பர்களும் இன்று இங்கு ஒரு சொற்பொழிவு நிகழ்த்தவேண்டுமென்று கேட்டுக்கொண்டதால் நானும் சம்மதித்து ஏதோ சில வார்த்தைகள் இன்று இங்கு பேச வந்திருக்கின்றேன்.

நான் இன்று பேசவேண்டிய தலைப்பு விஷயம் "நமது முன்னேற்றம்" என்பதாகும். இந்தத் தலைப்பின் கீழ் எதைவேண்டுமானாலும் பேசலாம் என்றாலும், நான்

நமது நாட்டு மக்கள் முன்னேற்றம் என்பதைப் பற்றிச் சொல்லும் முறையில், மற்ற நாட்டிற்கும் நமக்கும் உள்ள வித்தியாசத்தை முதலில் சொல்லி, பிறகு நாம் செய்யவேண்டியவைகள் என்று எனக்குத் தோன்றுவதைச் சொல்லுகின்றேன். நான் சொல்வது பெரும்பாலும் என்னுடைய சொந்தக் கருத்தும், நான் மனப்பூர்வமாய் சரி என்று உணர்ந்ததுமே சொல்லுகின்றேன். நமது நாட்டைப்பற்றி—முற்காலத்தில் இருந்த நிலை என்பதாக அதற்குப் பிரத்தியட்ச சாட்சியம் இல்லாத இக் காலத்தில்—எவ்வளவு பெருமையாகப் பேசிக் கொண்டாலும், இன்றையப் பிரத்தியட்ச நிலையை உணர்ந்து, இது நமது முற்போக்கா? பிற்போக்கா? என்பதை முதலில் உங்கள் ஞாபகத்திற்குக் கொண்டுவர விரும்புகின்றேன்.

நமது நாடு இன்றைய நிலைமையில் விளைபொருளிலும் வியாபாரத் தொழிலிலும் கைத்தொழில் வசதியிலும், இன்றைய தினம் நாமறிந்த எந்த நாட்டிற்கும் பிற்பட்டதல்ல என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள். அதுபோலவே, மக்கள் வாழ்வில் செல்வத்திலும் அறிவிலும் ஆராய்ச்சியிலும் சமூக உரிமையிலும் அரசியல் உரிமையிலும் பிற்பட்டு அடிமைப்பட்டு இருக்கின்றோம் என்பதையும் நீங்கள் ஒப்புக்கொள்ளுவீர்கள் என்று நினைக்கின்றேன். உதாரணமாக, செல்வத்தில் நாம் பிற்பட்டவர்கள் என்பதற்கு, மற்ற நாட்டுச் சாதாரணப் பெண்மணிகளிடம் இருக்கும் செல்வம் நமது நாட்டுப் பிரபுக்கள் என்பவர்களிடம் இல்லை. அது மாத்திரமல்லாமல், மற்ற நாட்டு ஒவ்வொரு தனிமனிதனுடைய சராசரி மாத வரும்படி 35 ரூபா வீதம் என்றால், நம்நாட்டு மனிதனின் சராசரி வரும்படி 3½ ரூபா ஆகின்றது. மற்றும் பிழைப்பு வசதியோ, நமது நாட்டில் வேலை கிடைக்காமல் வாரம் ஒன்றுக்குப் பதினாயிரக்கணக்கான மக்கள் வெளிநாடுகளுக்குக் கூலிகளாகக் கப்பலேறுகின்றார்கள். ஆனால், வெளிநாடுகளிலிருந்து நமக்கு முதலாளிகளாகவும் எஜமானர்களாகவும் அதிகாரிகளாகவும் பலர் தினம் இறங்கிக்கொண்டே இருக்கின்றார்கள். அவர்களைக் கண்டால் நாம் நடுங்குகின்றோம்.

மற்றபடி, அறிவிலும் நமது மக்களின் சராசரி அறிவு தெரியவேண்டுமானால், 100 க்கு 7 பேரே கையெழுத்துப்போடத் தெரிந்தவர்கள். பெண்களிலோ 1000-க்கு 1½ பேர் கையெழுத்துப் போடத்தெரிந்தவர்கள். அதிலும், சிறந்த மூடர்கள் என்பவர்கள் பண்டிதக் கூட்டங்களிலேயே பெரும்பான்மையோராக இருந்தால், மற்றவர்களைப்பற்றி நாம் யோசிக்கவும் வேண்டுமா? ஆராய்ச்சி விஷயத்திலோ எதுவும் இல்லை. ஆனால், வெளிநாட்டார்களின் ஆராய்ச்சியோ, மின்சாரத்தின் மூலமும் தண்ணீர் ஆவியின் மூலமும் எண்ணெயின் சூட்டின் மூலமும் அவர்கள் செய்கின்ற அற்புதங்களுக்கு அளவே இல்லை. ஒவ்வொரு துறையிலும் நாளுக்குநாள் முன்னேறுகின்றார்கள். செத்தவனைப் பிழைக்கவைக்க முயற்சித்துப் பலன் கண்டுகொண்டு வருகின்றார்கள். நட்சத்திர மண்டலத்திற்குப் போக முயற்சிக்கிறார்கள். மணிக்கு 500 மைல் வேகம் பறக்கப் பார்க்கிறார்கள். ஒரு வாரத்தில் 6000 மைல் தூரமுள்ள சீமைக்குப் போகிறார்கள். ஒரு மணி நேரத்தில் 10000 மைல்களுக்கு அப்பாலுள்ள செய்தியை அறிகின்றார்கள். ஒரு பீரங்கி வெடியில் பத்னாயிரக் கணக்கான மக்களை உயிர்வாங்கும்படியான யுத்த முறைகளைக் கண்டுபிடித்திருக்கின்றார்கள். கண்மூடித் திறப்பதற்குள் மின்னி மறையும் மின்னலிலிருந்து மின்சாரம் எடுக்கின்றார்கள். தண்ணீர் வீழ்ச்சியிலிருந்தும் சூரிய வெப்பத்திலிருந்தும் மின்சாரம் உண்டாக்குகின்றார்கள்.

எண்ணெய் இல்லாமல், நெருப்பில்லாமல், தண்ணீர் இல்லாமல்—கடிகாரத்திற்குச் சாவி கொடுத்தால் அது ஓடிக்கொண்டிருப்பதுபோல்—தானாகச் சாவி கொடுப்பதின் மூலம் ஓடும்படியான மாதிரியில் இயந்திரங்களையும் வண்டிகளையும் செய்ய முயற்சித்து வருகின்றார்கள். ஆனால், நமது நாட்டு ஆராய்ச்சிக்காரர்கள் என்பவர்களுக்கோ என்றால் புல்லிலும் பூண்டிலும் கல்லிலும் மண்ணிலும் கடவுளைத் தேடி, அவைகளுக்கு எப்படி பக்தி செலுத்துவது என்கின்ற வேலையே! இன்னமும் பலருக்கு ஆராய்ச்சி முடிவுபெறவில்லை.

கடவுளுடைய எண்ணிக்கைகளும் பெயர்களும் அவர்களுடைய லீலைகளும் பெண்டு பிள்ளை வைப்பாட்டிகளும் இன்னமும் கணக்கு கண்டுபிடிக்கப்பட்டுக்கொண்டே இருக்க

வேண்டி இருக்கின்றது. நாமத்தின் நடுவிலிடும் மஞ்சள் திருச்சூரணத்திற்கும் சிவப்புத் திருச்சூரணத்திற்கும் உள்ள பெருமை-சிறுமை வித்தியாசங்களும், பாதம் வைத்து இடும் நாமத்திற்கும் வளைவாய் இடும் நாமத்திற்கும் உள்ள பிரதானங்களுக்கும் உள்ள வித்தியாசம் கண்டுபிடிக்க நமது ஆராய்ச்சியால் முடியாமல், வெளிநாட்டு ஆராய்ச்சி நிபுணர்களின் உதவியை எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றது. நம்மை மோட்சத்துக்கு அனுப்ப அவதாரம் செய்த சமயாச்சாரிகள் சரித்திரமும் எண்ணிக்கையும் எப்படி நமக்குக் கிடைத்தது என்னும் விஷயம், யாரோ ஒருவர் சொல்வதை நம்புவதன் மூலம்தான் அறியக்கூடும் என்கிற நிபந்தனைகளை ஒத்துக்கொண்டாலும், என்ன சொல்லுவது என்கிற விஷயம் இன்னும் ஆராய்ச்சியில் இருந்துவருகின்றது. எந்த எந்த பாஷை, எந்த எந்த புஸ்தகம், யார் யார் படிக்கலாம் என்கின்ற விஷயமும், எந்த எந்த ஊரில், எந்த எந்த கடவுளை, யார் யார் எவ்வளவு எவ்வளவு தூரத்தில் இருந்து பார்க்கலாம், கும்பிடலாம் என்கின்ற விஷயமும், எந்த எந்த வீதியில் யார் யார் நடக்கலாம், எந்த எந்த சாதியார், எந்த எந்த சாதியாருக்கு எவ்வளவு எவ்வளவு தூரத்தில் இருக்கவேண்டும் என்கிற விஷயமும், எந்த எந்தமாதிரிக் குடுமி யார் யார் வைத்துக்கொள்ள வேண்டும், எந்த எந்தமாதிரி வேட்டி யார் யார் கட்டிக்கொள்ள வேண்டும், யார் யார் எங்கெங்கிருந்து சாப்பிட வேண்டும் என்கிற விஷயமும் இன்னமும் ஆராய்ச்சியிலும் தர்க்கத்திலுமே இருந்து வருகின்றது. மற்றும், ஒரு சாதி ஆணும் ஒரு சாதிப் பெண்ணும் கூடினால் என்ன சாதி மனிதன் பிறப்பான்? என்பது இன்னமும் ஆராய்ச்சியில் இருக்கின்றது. நம்மைப் போன்ற யாராவது "என்ன அய்யா! மற்ற நாட்டார்கள் எவ்வளவோ முற்போக்கடைந்திருக்கும்போது நாம் இன்னமும் இந்த ஆராய்ச்சியில் இருப்பது சரியா?" என்று கேட்டால் உடனே கோபம் வந்து, "அட போ! உனக்கென்ன தெரியும்? நீ எவ்வளவு படித்திருக்கின்றாய்? எங்களுக்குப் புத்தி சொல்ல வந்து விட்டாய்! மேனாட்டு ஆராய்ச்சி இரண்டு நாளைய வாழ்வு. அது இகத்தைப் பொறுத்தது. இன்றைக்கு இருப்பவர் நாளைக்கு இருக்கமாட்டார்கள். இதெல்லாம் வாவென்றால் வரும், போவென்றால் போகும். மனிதன் எதற்காகப் பிறந்தான்? அவன் வந்த வேலையை அல்லவா அவன் கவனிக்கவேண்டும்? அதுதான் ஆத்மார்த்தம்; மோட்ச சாதனம்" என்று சொல்லி ஏதோ ஒன்றைத் தனக்கும் புரியாமல் மற்றவர்களுக்கும் புரியாமல் பேசுகிறார்கள். யாராவது தட்டிப் பேசினால் உடனே "தோஷம் தோஷம்" என்று கன்னத்தில் அடித்துக்கொள்ளுகிறார்கள்.

எனவே, நமது நாட்டு முன்னேற்றம் எப்படி இருக்கிறது, மற்ற நாட்டு முன்னேற்றம் எப்படி இருக்கிறது என்பதை இதிலிருந்து யோசித்துப் பாருங்கள். பொதுவாக நமது மக்கள், முதலாவதாக 100க்கு ஏழு பேர்தான் படித்திருக்கின்றார்கள் என்பதை ஒப்புக் கொள்ளுகின்றீர்களா? இரண்டாவதாக, நமது மக்கள் சாப்பாட்டிற்கில்லாமல், வேலையும் கூலியும் கிடைக்காமல், வெளிநாட்டிற்குப் பதினாயிரக்கணக்கான குழந்தை குட்டி கற்ப ஸ்திரீகளுடன் கப்பலேறி, கண் காணாததும் முன்பின் அறியாததுமான நாட்டிற்குப் போய் கஷ்டப்பட்டு மடிகின்றார்கள் என்பதை ஒப்புக்கொள்ளுகின்றீர்களா? மூன்றாவது, மனிதனுக்கு மனிதன் இழிவாகவும் அவமானமாகவும் கருதத் தக்கபடி, கீழ்மேல் சாதி பிரித்து பஞ்சமன் என்றும் மிலேச்சன் என்றும் சூத்திரன் என்றும் அழைக்கப்படுவதும், சமூக வாழ்வில் சுயமரியாதைக்கு ஈனமான நிலையில் தாழ்த்தப்பட்டும் கொடுமைப்படுத்தப் பட்டும் இருக்கின்றார்கள் என்பதை ஒப்புக்கொள்ளுகின்றீர்களா?

அப்படியானால், இந்த நிலைமை இப்படியே வைத்துக்கொண்டிருப்பதால், நமது நாடு முற்போக்கு அடைய முடியுமா என்பதை நீங்களே யோசித்துப் பாருங்கள். இவைகளைத் திருத்தி, இந்த வழியில் வீணாகும் செலவுகளை மற்ற நாடுகளைப்போல் கல்விக்கும் ஆராய்ச்சிக்கும் தொழிலுக்கும் செலவிட வேண்டுமென்று சொன்னால், அதை நாத்திகம், மத தர்ம விரோதம் என்று சொல்லுகின்றார்கள். இது நாத்திகமா மத விரோதமா என்பதை நீங்களே யோசித்துப் பாருங்கள்.

மற்ற நாட்டாரின் ஆத்திகமும் மத தர்மமும் அவர்கள் நாட்டில் 100க்கு 100 பேரையும் படிக்கவைத்து, அவர்கள் அத்தனை பேருக்கும் தாராளமாய்த் தொழில் சம்பாதித்துக் கொடுத்துப் பிச்சைக்காரர் என்பவர்களே தங்கள் நாட்டில் இல்லாமல் செய்து, ஆராய்ச்சியின் மூலம் நாம் இன்னது என்று கண்டுபிடிக்க முடியாதமாதிரியில் அற்புதங்களைக் கண்டு பிடித்து, வெளிநாட்டுச் செல்வங்கள் எல்லாம் தங்கள் நாட்டிற்கே வரும்படி செய்து கொண்டு, மத தர்மமாக நமது நாட்டில் பள்ளிக்கூடமும், ஆஸ்பத்திரிகளும், மருத்துவ உதவிச்சாலையும், அனாதைப் பிள்ளைகள் பாதுகாப்பு நிலையமும் கட்டி, தீண்டாதார்கள் சட்டசபை மெம்பராகவும் மந்திரிகளாகவும் தக்க மாதிரியில் கல்வியும் உத்தியோகமும் கிடைக்கத்தக்க மதமாற்ற ஸ்தாபனங்களும் ஏற்படுத்தி, அதற்காகக் கோடிக்கணக்காகச் செலவு செய்து வருகின்றார்கள். இதை நீங்கள் தயவு செய்து நன்றாய்க் கவனித்துப் பாருங்கள். நாம் இப்படியே இருந்தால் முன்னேற முடியுமா? மற்ற நாட்டார்கள் முன்னிலையில் மானத்தோடு வாழ முடியுமா? நமது எதிரிகள் பழக்க வழக்கமென்பதையும் பெரியோர்கள் போனவழி என்பதையும் கடவுள் கட்டளை என்பதையும் ஆயுதமாக வைத்துக்கொண்டு, நம்மை முன்னேற விடாமல் தடுத்து.வருவதற்கு நீங்கள் இனியும் இடங் கொடுக்காதீர்கள். உங்கள் புத்திக்குச் சரி என்று பட்டதைத் தைரியமாகச் செய்யுங்கள். அது நாத்திகமானாலும், மகா பாதகமானாலும் கடைசியாய் ஒரு சிறிதுகூட அந்தப் பூச்சாண்டிகளுக்குப் பயப்படாதீர்கள்.

[திருக்கோவிலூர் மணம்பூண்டியில், 13–6–1929-ல் சொற்பொழிவு—' குடிஅரசு ' 16–6–1929]

## 5. வகுப்பு வாதம்

இந்திய மக்களின் முன்னேற்றமும் சீர்திருத்தமும் அதன் எதிரிகளுக்கு வகுப்பு வாதமாய் விளங்குகிறது.

மற்றொரு புறத்தில், " இந்தியாவின் முற்போக்குக்கும் சீர்திருத்தத்திற்கும் வகுப்புகளும் மதங்களும் முட்டுக்கட்டையாய் இருக்கின்றன " என்கிற விஷயம், இந்தியா மாத்திரமல்லாமல் உலக மக்களில் பெரும்பாலோரால் ஒப்புக்கொள்ளப்படுகிறது.

வகுப்புவாதத்தால் பல தடவைகளில் மாறிமாறி வெற்றி–தோல்விகள் ஏற்பட்டு வந்திருக்கின்றன என்று மாத்திரம்தான் சொல்லலாமே ஒழிய, வகுப்புவாதம் என்றாவது ஒழிந்திருந்ததாகக் கூறுவதற்கில்லை.

உதாரணமாக, இராமாயணம், கந்த புராணம், பெரிய புராணம் முதலிய வைணவ, சைவ மத ஆதாரங்களின் சரித்திரம் முழுவதும் வகுப்புவாதமாகவே இருந்து வருகின்றதைப் பார்க்கலாம்.

நாமறிய, சுமார் 50 வருஷ காலமாகவே இராமாயணக் கதை ஆரியர் - திராவிடர் வகுப்புக் கலவரங்களை எடுத்துக் காட்டுவது என்பதாக அனேக அறிஞர்கள் பல ஆதாரங்களுடன் எழுதியும், வாதப் பிரதிவாதங்கள் செய்தும் வந்திருக்கிறார்கள் என்றாலும், 20–வது நூற்றாண்டில் அது வெட்ட வெளிச்சமாய் ஒப்புக் கொள்ளப்பட்டுவிட்டது.

நிற்க, தேவர்கள், இராட்சதர்கள், சுரர்கள், அசுரர்கள் என்கின்ற பெயருடையவர்கள் இந்தியாவில் இந்த லோகத்தில் இருந்து கொண்டுதான் வழக்காடியதாகச் சரித்திரங்கள் இருக்கின்றனவே ஒழிய, வேறு லோகங்களில் இருந்துகொண்டு வழக்காடியதாகக் கதை ஆதாரமில்லை.

ஆனால், இராம - இராவண யுத்தம் மாத்திரமல்லாமல், பாரத யுத்தம், இரணிய யுத்தம் முதலிய அனேக யுத்தங்கள் வகுப்புவாதம் காரணமாகவே ஏற்பட்டிருக்கின்றன.

பார்ப்பனர்கள்—பார்ப்பனரல்லாதார்கள், தீண்டப்படாதவர்—தீண்டப்படக்கூடியவர் என்கின்ற வகுப்பு பேதங்களும் வாதங்களும் தீர்ந்துவிட்டதினாலேயே, வகுப்புவாதம் ஒழிந்துவிடும் என்று நாம் கருதிவிட முடியாது.

இன்றைய அரசியலில் வெளிப்படையாகவும், உள் எண்ணமாகவும் வகுப்புவாதங்கள் தலைவிரித்து ஆடுவதை யார்தான் மறுக்க முடியும்? வெளிப்படையாக இந்தியர், பிரிட்டிஷார் என்கின்ற (உள் எண்ண) வகுப்புவாத உணர்ச்சி, சுயராஜ்யம் - அன்னிய ராஜ்யம் என்ற பெயரால் வெளிப்படையாயிருந்து வருகிறது. அதுபோலவே, இந்துக்கள் ஆதிக்கமோ, முஸ்லிம்கள் ஆதிக்கமோ என்கின்ற (உள் எண்ண) வகுப்புவாத உணர்ச்சி, இந்து—முஸ்லிம் என்ற பெயரால் வெளிப்படையாய் இருந்து வருகின்றது.

சுருக்கமாகச் சொல்லவேண்டுமானால், வகுப்புக்கு வகுப்பு அவநம்பிக்கை, துவேஷம் ஆகியவைகளாலும், வகுப்பை வகுப்பு அடக்கி ஆளவேண்டும் என்கின்ற எண்ணத்தாலும், ஏதோ ஒரு காலத்தில் எந்தக் காரணத்தாலோ கிடைத்துவிட்ட ஆதிக்கத்தையும் அதிக உரிமையையும் எப்படி விட்டுக்கொடுப்பது என்கின்ற கெட்ட எண்ணத்தாலும், முட்டாள் பிடிவாதத்தாலும் வகுப்புவாதம் நாளுக்கு நாள் வளர்ந்து உரம்பெற்று வருகின்றதைச் சென்ற 30 வருஷ காலமாக நேரில் பார்த்து வருகின்றோம்.

வகுப்பு உணர்ச்சியைக் குறை கூறி அதை அடக்கப் பார்க்கின்றவர்கள், மக்களைப் பழி சுமத்தி, பயப்படுத்தி, ஏமாற்றி அடக்கப் பார்க்கின்றார்களே ஒழிய, ஒருவராவது அதன் உள் தத்துவத்தை உணர்ந்து, அதை அடியோடு தலையெடுக்க வொட்டாமல் செய்வதற்கு யாரும் முயற்சிப்பதில்லை.

['குடிஅரசு'—தலையங்கம்—26-5-1935]

## 6. அவசியமான காரியங்கள்

இந்திய நாட்டில், பெரும்பாலும் உலகத்தின் வேறு எங்கும் இல்லாததும், மனிதத் தன்மைக்கும் நியாயத்துக்கும் பகுத்தறிவுக்கும் ஒவ்வாததுமான கொடுமைகள் பல இருந்து வந்தாலும்—அவற்றுள் அவசரமாய்த் தீர்க்கப்பட வேண்டியதும், இந்தியர்கள் காட்டுமிராண்டிகள் அல்லரென்பதையும், மனிதத் தன்மையும் நாகரிகமுடையவுமான சமூகம் எனவும் உலகத்தாரால் மதிக்கப்பட வேண்டியதற்குச் செய்யவேண்டியதும்—மற்றும் உலகத்திலுள்ள பெரும்பான்மையான நாட்டார்களைப் போலவே அன்னிய நாட்டினர்களின் உதவியின்றித் தங்கள் நாட்டைத் தாங்களே பாதுகாத்துக்கொள்ளவும், ஆட்சி நிர்வாகம் செய்யவும் தகுதியுடையவர்கள் என்று சொல்லிக்கொள்ள வேண்டுமானாலும்—முதலாவதாய்ச் செய்யப்படவேண்டிய காரியம் இரண்டு உண்டு என்று உறுதியாய்க் கூறுவோம். அவைகளில் முதலாவது எதுவென்றால், இந்திய மக்களிலேயே பலகோடி ஜனசங்கியை உள்ள பல சமூகங்களைப் பிறவியிலேயே தீண்டாதவர்கள் என்று கற்பித்து, அவர்களைப் பகுத்தறிவற்ற மிருகங்களிலும் கேவலமாகவும், உணர்ச்சியற்ற பூச்சி புழுக்களிலும் இழிவாகவும் நடத்துவதை ஒழிக்க வேண்டியதாகும்.

இரண்டாவதானது எதுவென்றால், பொதுவாக இந்தியப் பெண்கள் சமூகத்தையே—அடியோடு, பிறவியில் சுதந்திரத்திற்கு அருகதையற்றவர்கள் என்றும், 'ஆண்களுக்கு அடிமையாக இருக்கக் கடவுளாலேயே சிருஷ்டிக்கப்பட்டவர்கள் என்றும் கற்பித்து, அவர்களை நகரும் பிணங்களாக நடத்துவதை ஒழிக்க வேண்டியதாகும். ஆகவே,

மேற்கண்ட இந்த இரண்டு காரியங்களும்–எந்தக் காரணத்தை முன்னிட்டும்–இந்தியாவில் இனி அரை நிமிடம்கூட இருக்கவிடக் கூடாதவைகளாகும்.

இந்தக் காரணத்தாலேதான், நாம் மேற்கண்ட இரண்டு கொடுமைகளும் அழிக்கப் படாமல்—இந்தியாவுக்குப் பூரண சுதந்திரம் கேட்பதோ, இந்தியாவின் பாதுகாப்பையும் ஆட்சி நிர்வாகத்தையும் இந்திய மக்கள் "நாங்களே பார்த்துக்கொள்ளுகிறோம்" என்று சொல்லுவதோ, மற்றும் இந்தியாவுக்கு அன்னியருடைய சம்பந்தமே சிறிதும் வேண்டாம் என்று சொல்லுவதோ—ஆகிய காரியங்கள் முடியாதென்றும், அவை சுத்த அறியாமைத் தனமானதென்றும், இல்லாவிட்டால்—சுயநல சூழ்ச்சியே கொண்ட நாணயத்தவறான காரியமாகுமென்றும் சொல்லி வருகிறோம் என்பதோடு—இப்படிச் சொல்லும் விஷயத்தில் நமக்குப் பயமோ, சந்தேகமோ கிடையாது என்றும் சொல்லுவோம். ஆதலால்தான், இவ்வித முட்டாள்தனமானதும், சூழ்ச்சியானதுமான முயற்சிகளை நாம் எதிர்க்க வேண்டியவர் களாயுமிருக்கின்றோம்.

தீண்டாமை என்னும் விஷயத்திலிருக்கும் கொடுமையும் மூடத்தனமும் மூர்க்கத் தனமும் யோசித்துப் பார்த்தால், அதை மன்னிக்கவோ, அலட்சியமாய்க் கருதவோ, 'நாளை பார்த்துக்கொள்ளலாம்; இப்போது அதற்கென்ன அவசியம், அவசரம்' என்று காலந் தள்ளவோ சிறிதும் மனம் இடம் தருவதில்லை. ஒருவன், அதாவது பிறரைத் தீண்டாதார் எனக் கருதிக் கொடுமைப் படுத்துகின்றவர்களை அத் தீண்டாதார்களுக்கு இருக்கும் உண்மையான கஷ்டத்தை உணரச் செய்யவேண்டுமானால், இப்போதைய வெள்ளைக்கார அரசாங்கத்தின் கீழ் அனுபவிக்கும் கொடுமைகள் போதாது என்றும், சிறிதும் சுதந்திரமும் சமத்துவமும் அற்றதும், சதா இராணுவச் சட்டம் அமுலில் இருப்பதுமான ஏதாவது ஒரு கொடுங்கோல் ஆட்சி இருந்தால்தான், இம்மாதிரி கொடுமைப் படுத்துகின்ற மக்களுக்கு உணர்ச்சி வந்து, புத்தி வருமென்றும் நமக்குச் சிற்சில சமயங்களில் தோன்றுவதுமுண்டு.

ஆனால், இந்தியாவை இம்மாதிரி மூர்க்கத்தனமும் நாணயக் குறைவும் மாத்திரம் சூழ்ந்துகொண்டிருக்காமல், மூடத்தனமும் சேர்ந்து கட்டிப் பிடித்துக்கொண்டிருப்பதால், இன்னமும் எவ்வளவு இழிவும் கொடுமையும் ஏற்பட்டாலும் இம்மாதிரியான மக்களுக்கு உண்மையான துன்பத்தை உணரத் தக்க நிலைமை வருவது கஷ்டமாக இருக்கும். என்றாலும், இந்நிலை மாறுதலடையக் கூடும் என்ற உறுதியை உண்டாக்கத் தக்க நம்பிக்கை கொள்வதற்கு இடமில்லாமல் போகவில்லை.

இனி, பெண்கள் விஷயத்தில் அவர்களுடைய சுதந்திரத்தையும் உணர்ச்சியையும் கட்டிப்போட்டிருக்கும் கொடுமையானது—இதுபோலவே, இந்தியர்களுக்குச் சுதந்திர உணர்ச்சியே இல்லை என்பதைக் காட்டவும், அவர்கள் அடிமைகளின் குழந்தைகள் என்பதை ஒப்புக்கொள்ளவும் ஆதாரமானதென்றுதான் சொல்லவேண்டும்.

எப்படியெனில், இவ்விரண்டைப்பற்றி இந்திய விடுதலைவாதிகள், சுதந்திரவாதிகள், சுயேச்சைவாதிகள், தேசியவாதிகள், மக்கள் நல உரிமைவாதிகள் என்கின்ற கூட்டத்தார் களுக்குச் சிறிதும் உண்மையான கவலை இல்லாவிட்டாலும், மேற்கண்ட கூட்டத்தார்களில் 100க்கு 90 பேர்களுக்கு மேற்பட்டவர்கள் சுயநலங் கொண்ட நாணயமற்றவர்களாகவே காணப்படினும்—இவர்களது முயற்சி இல்லாமலும் சிலசமயங்களில் மேற்கண்ட சுயநல சூழ்ச்சிவாதிகளின் எதிர்ப்பிற்கும் இடைஞ்சலுக்கும் இடையிலும் வேறு ஒரு வழியில் கொடுமைகள் அனுபவிக்கும் மேற்கண்ட இருவகையாருக்கும் விமோசனம் ஏற்படுவதற்கு அறிகுறிகள் ஆங்காங்கு காணப்படுகின்றதைப் பார்க்கச் சிறிது மகிழ்ச்சி அடைகின்றோம்.

['பகுத்தறிவு'—கட்டுரை—1938, இதழ் 10, மலர் 3]

## 7. ஆரியரும் திராவிடரும்

தலைவரவர்களே! தோழர்களே!

கத்தி இல்லாத—துப்பாக்கி இல்லாத—உடல்வலிகூட இல்லாத இந்த ஆரியர்களுக்கு அரசியல், சமூக இயல், சமய இயல், பொருளாதார இயல், ஞான இயல் முதலாகியவைகளுக் கெல்லாம் நாம் உரிமை இல்லாமல், அடிமைப்பட்டு உழல்வதற்குக் காரணம் கண்டுபிடிக்க வேண்டாமா?

சரித்திரத்தைப் பாருங்கள்! ஆராய்ச்சியாளர் கூறுவதின் உண்மையைப் பாருங்கள். உலகிலேயே முதன்முதல் தோன்றிய நாடு தமிழ் நாடு என்றும், உலகிலேயே மனித வர்க்கம் தோன்றிய இடம் நம் தென்னாடு என்றும் கூறப்படவில்லையா? இந்தமாதிரி பூர்வீகப் பெருமைகளால்—பழங் கதைகளால் நமக்கு ஆவது ஒன்றும் இல்லையென்றாலும், இப்படிப் பட்ட தமிழர்கள் ஏன் உலகில் இவ்வளவு கீழான நிலையிலும், இழிவான தன்மையிலும் இருக்கவேண்டும் என்று சிந்தித்துப் பார்க்கவேண்டாமா என்பதற்காகவே இவற்றைக் கூறினேன்.

தமிழன் தன்னை இந்தியன் என்று கருதியதால், தமிழ்நாட்டையும் தமிழர் வீரத்தையும் கலையையும் நாகரிகத்தையும் மறந்தான். தமிழன் தன்னை 'இந்து' என்று கருதியதால், தனது மானத்தையும் ஞானத்தையும் பகுத்தறிவையும் உரிமையையும் இழந்தான்.

இப்போது தமிழன் 'இந்தியன்' என்பதையும், 'இந்து' என்பதையும் மறப்ப தாலேயே—அக் கட்டுகளிலிருந்தும் விடுபட்டு விலகுவதாலேயே—தன்னை ஒரு மனிதன் என்றும் ஞானத்துக்கும் வீரத்துக்கும் பகுத்தறிவுக்கும் மானத்துக்கும் உரிமை உடை யவன் என்றும்; இவைகளுக்கு ஒரு காலத்தில் உறைவிடமாக இருந்தவன் என்றும் உணருவானாவான்.

[சேலத்தில், 3-9-1939-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 17-9-1939]

## 8. யார் தமிழர்கள்?

தலைவரவர்களே! பெரியோர்களே! தோழர்களே!

நாம் மைனாரிட்டி என்று சொன்னவுடன் பார்ப்பன காங்கிரஸ்காரர்கள், "நாங்கள் 100க்கு மூன்றுபேர்கள்தாமே; நீங்கள் 97 பேர் இருக்கிறீர்களே; நாங்கள்தாம் மைனாரிட்டிகள்" என்பார்கள். இந்த இரகசியம் உங்களுக்குத் தெரியாது. நாம், பேருக்கு வேண்டுமானால் 97 ஆவோம். ஆனால், நம்மைப் பல வகுப்புகளாகப் பிரித்திருக்கின்றனர். உடையார், செட்டியார், ரெட்டியார், பிள்ளை, நாயுடு, முதலியார், கவுண்டர், கள்ளர், மறவர், அகமுடையர், அம்பட்டர், வாணியர், ஆர்சுத்தியார், புற்றிலே கழிந்தார், பொரபொரத்தார் என்று முழுவதும் சொல்லலாம்; அவ்வளவு எண்ணற்ற பிரிவுகள்! இங்கே ஒருவனுடைய கவலையை மற்றவன் எடுத்துக்கொள்வதில்லை. அப்படி எடுத்துக்கொண்டாலும், அதுவும் பார்ப்பனர்களுக்குத்தான் அனுகூலம். ஒரு 'பிள்ளையை' அடித்தால், மற்றொரு 'முதலி' பார்த்துக்கொண்டு சந்தோஷப்படுவதல்லாமல், "வெள்ளாளப் பயலுக்கு நல்லா வேணும்" என்று காலாட்டிக்கொண்டிருக்கிறான். அதுமாதிரியே, ஒரு சாதியான் அடிபட்டால், மற்ற சாதியான் கவலைப்படுவதில்லை. ஒரு பார்ப்பான் உதைபடட்டும்—இமாலய மலையி லிருந்து தெற்கே கன்னியாகுமரி வரை—சத்தம் கேட்குதே! யார் மைனாரிட்டி என்று யோசித்துப் பாருங்கள்!

தமிழ்நாட்டில் இருப்பவரெல்லாம் தமிழர்தான். நான் கேள்விப்பட்டேன், நண்பர் சர். பன்னீர் செல்வம் அவர்கள் தங்களது விசேஷத்தில் இந்து மதபுராண சம்பிரதாயப்படி ஒரு சடங்கும், கிறிஸ்துவ குருக்கள் மூலமாக மற்றொன்றும் செய்ததாக! அவர் தமிழரல்லவா? இங்கேயுள்ள சாயபுமார்கள்தாம் யார்? அவர்களும் நாடாராகவோ, உடையாராகவோ, பிள்ளையாகவோ, சாம்பாராகவோ இருந்து இப்படி வந்தவர்கள் தாம். அவர்கள் ஆப்கனிஸ்தானத்திலிருந்து வந்தவர்களல்லர். அவர்களது கொடிவழிப்பட்டியை இழுத்துப் பார்த்தால், அவர்கள் ஏற்கனவே ஒரு குடும்பனாகவாவது இருந்திருப்பார்கள் என்பது நிச்சயம்.

ஆனால், பார்ப்பனர்கள் அப்படியல்லவே! பி. டி. சீனிவாசய்யங்கார் சரித்திரத்திலிருந்து உ. வே. மு. இராகவய்யங்கார் சரித்திரம் வரை, ஆரியர்கள் வெளிநாட்டிலிருந்து பிழைக்க வந்தவர்கள்தாமே! அவர்களுக்கும் நமக்கும், சட்டப்படிக்கல்லாத வழியில் இரத்தக் கலப்பு இருக்கலாமே தவிர, வேறு எந்த வகையிலும் அவர்களுக்கும் நமக்கும் இரத்த சம்மந்தமில்லையே! நாம் அவர்களோடு சண்டை பிடிக்கவில்லை—கொடுமையை ஒழியுங்கள் என்றுதான் சொல்லுகிறோம்.

[திருவாரூரில், 18-12-1939-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 31-12-1939]

## 9. நாம் இந்துக்களா?

நம்மை, 'இந்துக்கள்' என்று சொல்லிக்கொள்கிறோம் என்றாலும், அரசாங்க ஆதாரங்களில் நமக்கு 'முகமதியரல்லாதார்' என்கின்ற பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறதே ஒழிய, இந்துக்கள் என்ற பெயர் கிடையாது.

இதிலிருந்து என்ன ஏற்படுகின்றதென்றால், நமக்குச் சமுதாயத்தின் பெயராலும் (அதாவது நேஷன் பெயராலும்), மதத்தின் பெயராலும், நாட்டின் பெயராலும் ஒரு குறிப்பிட்ட பெயர் கிடையாது என்பதாகும். இது தவிர, சமூகத்தின் பெயராலும், நமக்குப் 'பார்ப்பனரல்லாதார் சமூகம்' என்கின்ற பெயர்தான் இருந்து வருகிறதே தவிர—அந்தப்படியே நாமும் சொல்லி வருகிறோமே ஒழிய—வேறு நம்மைக் குறிப்பிட்டுக் காட்டிக்கொள்ளும்படியான "ஒரு எதிர்மறை அல்லாத பெயர்" கிடையாது. அப்படி இருந்தும் சமயத்தின் பெயராலும் சட்டத்தின் பெயராலும் இந்துக்களுக்குள்ளாகவே நாம் நாலாஞ் சாதியார், அய்ந்தாஞ் சாதியார் (சதுரன், பஞ்சமன்) என்பதாக—அதாவது சூத்திரன், கீழ் மகன் என்று பார்ப்பனர்களால் அழைக்கப்படுகிறோம் என்பதோடு—அதற்கேற்றதான சட்ட உரிமையும் சமுதாய உரிமையும் நடப்பும்தான் பெற்று வருகிறோம்.

சூத்திரன் என்கின்ற சொல்லுக்குப் பொருள் என்ன என்பதை நம்மில் அனேகர் தெரியாதவர்கள் அல்லர். சூத்திரன், தஸ்யூ, தாசன் என்கின்றதான சொற்கள் இந்துக்களின் (ஆரியர்களின்) புராதன வேதங்களிலேயே குறிப்பிடப்பட்டிருப்பதைக் காணலாம். அப்படிக் குறிப்பிட்டிருப்பதிலும், அவற்றில் மற்றொரு அநீதி என்னவென்றால்—இச் சூத்திரர்களையும், தஸ்யூக்களையும் எவ்வளவு வெறுக்க வேண்டுமோ, எவ்வளவு இழிவு படுத்த வேண்டுமோ, எவ்வளவு கொடுமைப்படுத்த வேண்டுமோ அவ்வளவுக்கு மேலாகவே வெறுத்து இழிவுபடுத்திக் கொடுமை செய்ய ஏவுகின்றன.

வேதங்களுக்குச் செய்யப்பட்ட வியாக்கியானங்களில்—சூத்திரன் என்றால் திருடன் என்றும், தஸ்யூ என்றால் கொள்ளை அடிக்கிற கூட்டத்தினன் என்றும், தாசன் என்றால் அடிமை என்றும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. இதுவும் தவிர, இந்துக்களின் தர்ம

சாஸ்திரங்கள் என்பவைகளான மனு தர்மம், பராசர ஸ்மிருதி, நாரதர் தர்மம், யக்ஞ வல்க்யர் தர்மம் போன்ற சாஸ்திரங்களிலும், ஸ்மிருதிகளிலும், இந்துமத புராண இதிகாசங்கள் என்பவைகளிலும் இந்தப்படியே நம்மை இழிவாகவும், வெறுக்கத் தகுந்த படியாகவும், தாராளமாய்க் கொடுமை செய்து நன்றாய்ச் சுரண்டத்தக்க விதமாகவும், கட்டுப்பாடு ஏற்படுத்தி வலியுறுத்திக் கூறப்பட்டிருக்கின்றன என்பதோடு, அவைகள் நமக்குள்ளாகவும் புகுத்தப்பட்டு விட்டன. நமது பண்டிதர்களுக்கு அவையே பரீட்சைப் பாடமாகவும், நமது பிள்ளைகளுக்கு அவையே பாடப் புத்தகங்களாகவும் ஆக்கப்பட்டு விட்டன. ஏனெனில், இந்த சாஸ்திரம், ஸ்மிருதி, புராணம், இதிகாசம் ஆகியவைகள் எல்லாம் வேதத்தின் சாரங்களாக இருக்கின்றபடியாலும், வேதசாரத்தை வலியுறுத்திக் கூறவே கடவுள் வாக்குகள், கடவுள் சரித்திரங்கள், கடவுள் நடத்தைகள், கடவுள் கதைகள் என்கின்ற பெயர்களால் ஏற்படுத்தப்பட்டவைகள் இருக்கின்றன ஆதலாலும் அந்தப்படி எழுதவும் செய்யவும் இடம் தந்துவிட்டது.

அரசாங்கத்தாரால் நமக்கு நீதி வழங்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் 'இந்து லா' (அதாவது இந்துக்களின் சட்டம்) என்பது மேற்கண்ட வேதம், சாஸ்திரம், ஸ்மிருதி ஆகியவைகளை ஆதாரமாகக்கொண்டு, அவைகளில் தேர்ச்சி பெற்ற வைதிகப் பார்ப்பன சாஸ்திரிகளையும், பார்ப்பனப் பண்டிதர்களையும் கூட்டி வைத்து, அவர்களது கருத்துப்படி, பார்ப்பனப் பிரமுகர்களால் செய்யப்பட்டவையாகும் என்பதோடு—பிராமணன், சூத்திரன், க்ஷத்திரியன், வைசியன் அல்லாதவர்களை (அதாவது நம்மை) தாசி புத்திரர்கள் என்றும் 'இந்து லா' சட்டத்தில் குறிப்பிடப்பட்டிருக்கின்ற விஷயமும் நம்மைவிட நமது வக்கீல்களுக்கு நன்றாய்த் தெரியும்.

வெகு காலமாகவே, கோர்ட்டுகளில் நடக்கும் சொத்து பாத்தியம் முதலிய விவகாரங்களிலும் வருண முறைப்படி பிராமணனுக்கு ஒரு மாதிரியும், சூத்திரனுக்கு ஒரு மாதிரியுமாகவே தீர்ப்புகள் செய்யப்பட்டு வருவதோடு—கோவில், குளம் (தீர்த்தம்) முதலிய பொது இடங்கள் பற்றிய உரிமைகளிலும் இந்த வருண முறையும், சூத்திர வருணத்தில் உள்சாதி முறையும்—அதாவது பறையர், சக்கிலி, பள்ளர், நாடார், வாணியர், நாயக்கர், சைவர் என்கின்ற பல வகுப்புக்களுக்குத் தனித்தனி உரிமை, பழக்க வழக்கம் முதலியவைகளை வைத்து நீதி செலுத்தப்படுகிறது. நம் பெண்கள் விஷயத்திலும், யாரை யார் மணந்து பிள்ளை பெற்றாலும், சாதி வருண முறைகளால் மனைவிக்கு ஜீவனாம்சமும் பிள்ளைகளுக்குச் சொத்துரிமையும் சரிவரக் கிடைக்காமல் போகின்றது.

நம்மில் அனேகர் தங்களைக் கீழ்ச் சாதி, இழிவான சாதி என்று கருதினாலும், நடத்தினாலும், கோர்ட்டுகளில் தீர்ப்புக் கூறினாலும், 'மானம் போனால் போகட்டும், சொத்தும் பதவியும் வந்தால் போதும்' என்று கருதி, இழிவை மறந்தும் மறைத்து வைக்கவும் பார்க்கிறார்கள். யாராவது ஞாபகப்படுத்தினால்—வெளிப்படுத்தினால், அவர்கள் மீது கோபிக்கிறார்களே ஒழிய—பழிவாங்கப் பார்க்கிறார்களே ஒழிய, தங்கள் மானக்கேட்டைப்பற்றிச் சரியானபடி இலட்சியம் செய்வதே இல்லை.

உலகம் 20-ஆவது நூற்றாண்டில் இருக்கிறது; தமிழர்களாகிய நாம் பல நூற்றாண்டுகளுக்கும் முந்திய நிலையில் இருக்கிறோம்; இன்னமும் சொல்ல வேண்டுமானால்—புராண காலத்திலும், பழைய தமிழ் இலக்கிய காலத்திலும் இருக்கிறோம். இவை சுருக்கமாகச் சொல்லப்பட வேண்டுமானால், காட்டுமிராண்டி காலத்தவர்களாக இருக்கிறோம். இதை மறந்துவிடாதீர்கள்!

['குடி அரசு' - கட்டுரை—6-11-1943]

# 10. நம் தாழ்மைக்குக் காரணம்

தமிழர் நிலை தாழ்ந்திருக்கிறது. தமிழர் சமுதாயத்தில் கீழான சாதி; கல்வியில் 100க்கு 80 தற்குறி; செல்வத்தில் 100க்கு 90 கூலி ஜீவனம்; தொழிலில் 100க்கு 75 சரீரப் பாடுபட்டு உழைக்கும் தொழில்; ஒற்றுமையில் 108 சாதிகள்; கட்டுப்பாட்டில் அவனவன் சுயநலமும் ஒருவனை ஒருவன் ஏய்ப்பதும்—ஒழிக்க சமயம் பார்ப்பதும்; சமயத்தில் (மதத்தில்) எதிரிக்கு அடிமையாய் இருந்து உழைத்துப் போடுவது; அரசியலில் வஞ்சக அயோக்கியருக்கு வால்பிடித்துக் கைதூக்குவது; மானத்தில் ஈனமும், மதிப்பில் காரி உமிழத் தக்கவராகவும் இருக்கின்றனர். இதற்குக் காரணம் என்ன?

"நன்றி, விசுவாசம் காட்டுவதும், நயவஞ்சகம் செய்யாமையும் தமிழனுக்கு நஞ்சு" என்று கூடச் சொல்லப்படுவதற்கும்—அவை அனேகமாய் உண்மையாய் இருப்பதற்கும் காரணம் என்ன என்பது இரண்டாவது கேள்வி.

இந்த நிலையும், குணங்களும் பார்ப்பனர்களுக்குள்ளும், முஸ்லிம்களுக்குள்ளும், ஏன்—சட்டைக்காரர்களுக்குள்ளும் கூடச் சாதாரணமாய்க் காண்பதற்கு முடிவதில்லை என்று சொல்லப்படுகிறதே, இதற்குக் காரணம் என்ன? இது மூன்றாவது கேள்வி. இந்த மூன்று கேள்விகளிலும் உள்ள விஷயங்கள் சிறிது அதிகப்படுத்திக் கூறியிருப்பதாகச் சிலர் கருதலாம். ஆனால் பெரும்பான்மை உண்மை என்பதைப் பெரும்பான்மையோர் ஒப்புக் கொள்ளுவார்கள்.

ஆதலால், இவைகளுக்குக் காரணம் என்ன என்று கவனிக்க வேண்டாமா?

சென்னை மாகாண மக்கள் தொகையில் 100க்கு 3 பேர்களே பார்ப்பனர்கள். 100க்கு 8 அல்லது 9 பேர்களே முஸ்லிம்கள்; 1000க்கு ஒருவராய் இருந்தாலும் இருக்கலாம் சட்டைக்காரர்கள். இப்படி மிகச் சிறிய தொகையினராக இருக்கும் இவர்கள், தமிழர்களுக்கு ஏற்பட்ட மேற்கண்ட இழிவுகள் இல்லாமல் மேன்மையாய், கட்டுப்பாடாய், சுதந்திரமாய் மதிக்கத் தக்க வண்ணம்—அன்னியன் கண்டு பயப்படும்படியும்—வாழ்வதற்குக் காரணம் என்ன என்று சிந்தித்தால், தமிழர் இழிவுக்குக் காரணங்கள் சுலபமாய்க் கிடைத்துவிடும்.

காரணம் (1) தமிழனுக்கு அஸ்திவாரமில்லை. அதாவது, அவன் யார்? அவனுக்குச் சொந்தம் எது? அவனுடைய பூர்வோத்திரமென்ன? இலட்சியம் என்ன? என்பனவாகிய நாலும் தெரியாதவனாகவும் ஆதாரம் இல்லாதவனாகவும் இருக்கிறான். ஆகவே, அஸ்திவாரம் இல்லாக் கட்டிடம் வெடிப்புக் காணுவதும் அதிருவதும் அதில் (மானமோ, மேன்மையோ) குடியிருக்க மக்கள் பயப்படுவதும் இயற்கைதானே! அதுபோலவே, தனக்குச் சொந்தம், உரிமை இன்னது என்று தெரியாதவன், தொட்டதற்கெல்லாம் அன்னியனிடம் பல்லைக் கெஞ்சுவதும் ஒண்டுவதும், ஒருவனுக்கொருவன் போட்டி போட்டுப் பின்தள்ளிவிட்டுப்போய்த் தன்காரியம் பார்த்துக்கொள்வதும் இயற்கைதானே!

(2) தமிழனுக்கு ஒரு ஸ்தாபனம் கிடையாது; வேறு எதனுடனாவது சேர்ந்துதான் தன்னைத் தமிழன் என்று காட்டிக்கொள்ளவேண்டியவனாய் இருக்கிறான். அப்படி இல்லாவிட்டால், பார்ப்பனரல்லாதான் –முஸ்லிமல்லாதான் –கிறிஸ்தவனல்லாதான் –இந்து அல்லாதான் என்பது போன்ற—"அல்லாதான்" என்கின்ற பெயரால்தான் தன்னைக் காட்டிக் கொள்ள முடிகிறது.

(3) தமிழன் என்றால் இதில் பார்ப்பான், முஸ்லிம், கிறிஸ்தவர் முதலிய பலர் சேர்கிறார்கள். யாரையாவது நாம் சேர்ப்பதில்லை என்றால் அவர்கள், 'நானும் தமிழன், தமிழ்நாட்டில் பிறந்தவன், தமிழ் பேசுகிறவன்' என்கிறார்கள். அது மாத்திரமா? தமிழனே—தமிழ்ப் பண்டிதனே—"தமிழ்நாட்டில் பிறந்து, தமிழ் பேசுகிற எவனும்–அவன் நம்மை எவ்வளவு இழிவாயும், மானமற்ற தன்மை உண்டாகும்படியும் நடத்தினாலும் சரி அவனெல்லாந் தமிழனே" என்று வக்காலத்துப் பேசுகிறான்; ஆதாரம் காட்டுகிறான்.

(4) தமிழன் நடந்துகொள்ளுவதற்கு என்று தனிமுறை, வழிதுறை கிடையாது; தமிழனுக்கு என்று தனி நடை உடை பாவனை கிடையாது.

(5) தமிழனுக்கு என்று தனித்த முறையில் ஆரியம் கலவாத இலக்கியம் கிடையாது.

['குடிஅரசு' – கட்டுரை—27-11-1943]

## 11. இழிவு நீங்க ஒரு மருந்து

எஸ்.அய்.ஆர். இரயில் நிலையத்தில் அலுவல் பார்க்கும் தோழர்களே! அவர்களது அனுதாபிகளே!

திராவிடர் கழக நிதிக்கு நீங்கள் அன்புடன் 1080 ரூபாய் அளித்தமைக்கு எனது நன்றி உரித்தாகுக. அலுவலில் உங்களுக்குள்ள குறைபாடுகளைப் பற்றிய முறையீட்டைப் பார்த்தேன். தலைவர் வேதாசலம் அவர்கள் அதை மக்களுக்கு மிக நன்றாய் விளக்கிச் சொன்னார். அதிலிருந்து நானும் பல விஷயங்கள் அறிந்துகொண்டேன். உங்கள் முறையீட்டில் குறிப்பிட்டு இருக்கும் முக்கிய விஷயங்கள் 5, 6 ஆகும்.

இவற்றுள் முதலாவதான உத்தியோகம் நியமிக்கும் கமிட்டியைப் பற்றி பேசத் துவக்கினால் உடல் பதறுகிறது; இரத்தம் கொதிக்கிறது. முட்டாள்தனமான ஆத்திரங் கூடப் பொங்குகிறது. சுயராஜ்யம் வந்த காலத்தில் உத்தியோக விநியோகக் கமிட்டி, இந்த யோக்கியதையில் நியமிக்கப்படுகிறதென்றால்—இதன் அரசாங்க முறையை, எந்த மடையனும் சுயராஜ்ய ஆட்சிமுறை என்று சொல்லமாட்டான். இந்த நாட்டில் உள்ள எல்லா இன, வகுப்பு மக்களுக்கும் இரயில்வே நிர்வாகம் பொதுவாகும்; எல்லாப் பதவியும் பெற உரிமையுண்டு. எல்லா முக்கிய வகுப்பாரும் அந்தக் கமிட்டியில் இடம்பெற வேண்டியது யோக்கியமும் நாணயமுமாகும். ஒன்று இரண்டு பெரு வகுப்புக்குச் சரியான பிரதி நிதித்துவம் இல்லாவிட்டாலும் முக்கியமானதும், அடிப்படையானதும், மொத்த ஜனத் தொகையில் 100க்கு 80, 90 வீதம் எண்ணிக்கை கொண்ட வகுப்புக்கும் பிரதிநிதித்துவமே இல்லாமல்—மொத்த ஜனத்தொகையில் 100க்கு 3 பேர்களாகவும், மற்ற மக்களை யெல்லாம் கீழ்ச்சாதி மக்கள், இழிமக்கள், தகுதியற்ற மக்கள் என்று பித்தலாட்டமாகவும், அயோக் கியத்தனமாகவும் கூறிக்கொண்டு, மனித சமுதாயத்துக்கும் நாட்டுக்கும் கேடு செய்து கொண்டிருப்பதுமான வகுப்புக்கே எல்லா ஸ்தானங்களையும் கொடுத்து, மக்களைத் தெரிந்தெடுக்கச் சொல்லுவதென்றால்—இது, நம்மைக் கொடுமைப்படுத்தி, அலட்சியப் படுத்தி இம்சிப்பதில் கவலையற்று அகம்பாவமாகவும், ஆணவமாகவும் நடந்துகொள்ளும் முறையை சர்க்கார் துணிந்து கையாளுகிறது என்று அர்த்தமாகவில்லையா என்று கேட் கிறேன்.

இரயில்வே சர்வீஸ் கமிஷன் கமிட்டி அங்கத்தினர் தன்மையைச் சற்று கவனித்துப் பாருங்கள். இது S. I. R., M. S. M. ஆகிய இரண்டு இரயில்வேக்கும் உத்தியோகஸ்தர் நியமிக்கும் கமிட்டியாகும். அதாவது:

(1) இராவ்பகதூர் R. மாதவாச்சாரியார். கமிட்டிக்கு இவர் தலைவர்.
(2) இராவ்பகதூர் M. இராமச்சந்திர (அய்யர்)
(3) T. K. சுந்தரராஜ அய்யங்கார்.
(4) கான்பகதூர் அப்துல் கரீம்.
(5) K. சுந்தரராஜ (அய்யர்)

இந்த அய்வரில் நால்வர் பார்ப்பனர் (அதிலும் பெரும்பாலும் அய்யங்கார்கள்); மீதியுள்ள ஒருவர் சாயபு என்பவர். அதாவது முஸ்லிம் என்று சொல்லப்பட்டாலும் அவரும் முக்கால் பார்ப்பனர், கால் முஸ்லிம் என்று இங்கு சொல்லப்பட்டது. அதாவது, கான் பகதூர் அப்துல் கரீம் சாயபு அவர்கள் பார்ப்பன மதமாகிய ' தியாசபியைச் ' சேர்ந்தவர்; பார்ப்பன மாதை மணம் செய்துகொண்டவர். அந்த மாது கமிட்டித் தலைவருக்குச் சொந்தமான மாதாம். அன்றியும், இவர் இன்றைய அரசியலில் Dr. T. S. S. இராஜனுக்கு அடுத்தபடியாகப் பச்சைப் பார்ப்பனீயத்தைக் கொடுங்கோன்முறையில், நெஞ்சில் சற்றும் ஈவு இரக்கமில்லாமல் திராவிடர்மேல் செலுத்தும் தோழர் கே. சந்தானம் என்னும் அய்யங்கார் பார்ப்பனருக்குச் சகலையாம்.

எனவே, கமிட்டியின் யோக்கியதையைப் பாருங்கள். இவர்களால் பார்ப்பனரல்லாத சமுதாயத்துக்கு, திராவிடர்களுக்கு ஏதாவது கடுகளவு நீதியோ, கருணையோ, உரிமையோ கிடைக்கும் என்று எவர்தான் கருதமுடியும்? இது "சுயராஜ்ய" சர்க்காரின் எவ்வளவு துணிகரமான வேலை என்று பாருங்கள்.

இனி, அடுத்த விஷயம் சம்பள விஷயம். இந்தச் சம்பள விஷயத்தில் சில உத்தியோகங்களை ஒவ்வொரு இலாகாவிலும் உயர்தரம் என்று அதிகாரமும் சவுகரியமும் இருக்கும்படியும், கீழ்த்தர அதிகாரம் என்று அதிக வேலையும் குறைந்த சம்பளமும் இருக்கும்படியும் பிரித்து—உயர்தர வேலையைப் பெரிதும் பார்ப்பனருக்கே கிடைக்கும்படியாய் வழிசெய்து நல்ல சம்பளம் பெற்றுக்கொண்டு—கஷ்டப்படும் மக்களுக்கு மிகவும் பேதமுள்ளதும், நித்திய வாழ்வுக்குப் போதாததுமான சம்பளத் தன்மையில் வைக்கப்பட்டிருக்கிறது. இந்த நிலை தானாகவே பார்ப்பனர்களை மேல் உத்தியோகஸ்தர்களாகவும், மற்றவர்களைக் கீழ் உத்தியோகஸ்தர்களாகவும் ஆக்கிவிடுகிறது.

மாதம் 500 சம்பளம் வாங்கிய மந்திரிகள் இன்று மாதம் 1500 ரூபாய் வாங்குகிறார்கள். பெரும்பாலான நாட்களில் ஊரார் வீட்டிலிருந்து சாப்பாட்டில் காலத்தைக் கழித்துவிட்டு, சம்பளத்தில் பெரும்பாகம் மீதி செய்துகொள்ளுகிறார்கள். காங்கிரஸ் சட்டசபை அங்கத்தினர்கள் மாதம் 75 ரூபாய் வாங்கிக்கொண்டிருந்தவர்கள்—இன்று மாதம் 150 ரூபாய் சம்பளமும், –உத்தியோகம், ' லைசென்சு,' தண்டனை ரத்து, கேஸ் வாபஸ் வாங்கிக்கொள்ளச்செய்தல் முதலிய காரியங்களுக்கு மந்திரிகளிடம் சிபாரிசு செய்வதில் ஏராளமான கவுரவத் தொகையும் (ஆனரேரியமும்) கமிஷனும் சன்மானமும் வாங்கியும்; சட்டசபை மெம்பராவதற்கு முன் வீட்டுவாடகை கொடுக்காமல் சண்டித்தனம் செய்துகொண்டு இருந்தவர்கள்—இன்று மோட்டார் கார்கள் வைத்துக்கொண்டும், சிலர் இலட்சக் கணக்கில் பொருள் சேர்த்தும் செல்வச் சீமான்களாய்—"இலட்சுமி புத்திரர்"களாய் இருக்கிறார்கள். இப்படியாக இவர்கள் மாத்திரம் இருந்துகொண்டு, இரவும் பகலும் 24 மணி நேரத்திலும் பொறுப்பு ஏற்று வேலை செய்யவேண்டிய திராவிடமக்களுக்கு இரயில்வேயில் இந்தக் கேவலமான சம்பள நிலையும்; கண்விழிப்பும், தொல்லையும் இருக்கும்படியான மக்களுக்குக் குறைந்த சம்பளம்—அதுவும் வீடு, கல்வி, வைத்தியம், வசதிபற்றிக்கூட கவலையில்லாத சம்பளம்—இருப்பதென்றால், இது மனுதர்ம ஆட்சியா அல்லவா என்று யோசித்துப் பாருங்கள்.

அடுத்தபடி, உத்தியோக விநியோகம். இந்த விஷயம் மிகவும் முக்கியமானதாகும். இது கண்டிப்பாய், இந்த மாகாணத்தின் பல வகுப்பு மக்களுக்கும் வகுப்புவிகிதம் விநியோகிக்கப் படவேண்டியதும்; உத்தியோகத்துக்கு வேண்டிய அளவு கல்வித் தகுதி இருந்தால் எல்லா முக்கிய, உயர்தர, தனி உத்தியோகங்களும் விகிதாச்சாரம் இருக்கும்படி இருக்க வேண்டியதும் நேர்மையாகும். ஆனால், இப்போது சர்க்கார் உத்தியோகம்கூட எவ்வளவோ பித்தலாட்டமாகத்தான் கொடுக்கப்பட்டு வருகிறது. முக்கிய உத்தியோகம் கொடுக்கப் படுவதில் எந்த வகுப்பார் தகுதியாய் இருந்தாலும், முதலாவதாகப் பார்ப்பனர்தான் தெரிந்தெடுக்கப்படுகிறார். அதற்குப் பெருத்த எதிர்ப்பு இருந்தால் அது வெள்ளை

யருக்கு அளிக்கப்பட்டுவிடும். வெள்ளையருக்குக் கொடுக்கமுடியாததாய் ஏற்பட்டால் வேறு மாகாணத்தானுக்குக் கொடுக்கப்பட்டுவிடும். அவனுக்குக் கொடுக்கவும் வசதிப்படாத தானால் ஒரு கிறிஸ்தவருக்கும்; அவருக்கு எதிர்ப்பு இருந்தால் ஒரு முஸ்லிமுக்கும்; அதுவும் தடைப்பட்டால் ஒரு மங்களூர்க்காரனுக்கும்; அதற்கும் தடைப்பட்டால் ஒரு மலையாளிக்கும்; அதற்கும் தடைப்பட்டால் ஒரு ஆந்திரருக்குமாவது பெரிதும் வழங்கப் படுகிறதே தவிர—சுலபத்தில் ஒரு தமிழனுக்கு—அவன் எவ்வளவு தகுதியானவனாய் இருந்தாலும் வழங்கப்படுவதில்லை. சில சமயங்களில் தமிழனுக்கு வழங்கப்படவேண்டிய அவசியம் வந்தபோது, "அந்த உத்தியோகமே இருக்கவேண்டியதில்லை" என்று செய்யப் பட்டிருக்கும் விஷயமும் எனக்குத் தெரியும்.

உத்தியோக விநியோக விஷயத்தில் இன்றைய சென்னை அரசாங்கம் முன்னைய வகுப்புவாரி உத்தரவை மிகமிகப் பரிகாசமாக ஆக்கிவிட்டது. நமது அய்க்கோர்ட்டைப் பாருங்கள்! கலெக்டர்களைப் பாருங்கள்! மற்றும் மாகாண அதிகாரிகளைப் பாருங்கள்! மாகாண அதிகார விநியோகங்களைப் பாருங்கள்! மனுதர்ம சாஸ்திரத்தை அனுசரித்தே இதுவரை இது நடந்துவந்திருக்கிறது. இதில் பார்ப்பனர்கள் வெகு ஜாக்கிரதையாக இருக்கிறார்கள். வெள்ளையர் காலத்திலும் இது மாற்றமடையவில்லை.

காங்கிரசும் சுயராஜ்யமும் இராமராஜ்யமும், திராவிடர்கள் சூத்திரத் தன்மையில் இருந்து மனிதத் தன்மை பெறாமல் இழிநிலையில்—அடிமை நிலையில் இருப்பதற்கு ஏற்பட்டவைகளே தவிர, வேறு எந்தக் காரியத்துக்கும் ஏற்பட்டதல்ல என்பதை நான் எங்கும் நிரூபிப்பேன். இல்லாவிட்டால், தேவைக்கு மேற்பட்ட யோக்கியதாம்சத்தை ஏற்படுத்திக்கொண்டு, திராவிடனுக்கு மாத்திரம் தகுதி, திறமை என்கின்ற முட்டுக்கட்டை ஏன்? முஸ்லிமுக்குத் தகுதி, திறமை வேண்டியதில்லை; வெள்ளையனுக்கு வேண்டிய தில்லை; சட்டைக்காரர்களுக்கு வேண்டியதில்லை, 'வேறு மதத்திற்குப் போய்விடுவேன்' என்று மிரட்டுகிற ஆதித் திராவிடர்களுக்குத் தகுதி, திறமை என்பவை—'திராவிடனுக்கு இருக்கவேண்டும் என்றபடி' வேண்டியதில்லை. ஆனால் திராவிடனுக்குப் பள்ளியில் சேர்க்கப்படுவதற்கே தகுதி, திறமை வேண்டும் என்று, சுயராஜ்யப் பார்ப்பனப் பிரதம மந்திரி சர்க்காரிலுள்ள திராவிடக் கல்வி மந்திரியைக் கொண்டே திட்டம் செய்வாரானால், மனுதர்மமும் விபீஷணத்தன்மையும் எவ்வளவு பலாத்காரமாகக் கையாளப்படுகிறது என்று பாருங்கள்.

இனி அடுத்த விஷயம் புரமோஷன் என்பதாகும். இதில் பார்ப்பனர் தந்திரம் மிக மிகக் கண்டிக்கப்படத் தக்கதாகும். முறைப்படி புரமோஷன் (மேல் உத்தியோகம்) இல்லாததாலேயே, நல்ல உத்தியோகம் பெற்ற திராவிடர் (தமிழர்)களில் பலர் இனப்பற்று அற்ற இனத் துரோகிகளாக, அளவுக்கு மீறிய சுயநல அயோக்கியர்களாக ஆகி விடுகிறார்கள். அவர்களுக்கு உத்தியோகம் வரும்படி செய்கின்றவர்கள் நாம் என்றாலும், அவர்களுக்கு அதில் தகுதி, பட்டம் கொடுத்து புரமோஷன் செய்கிறவர்கள் பார்ப்பனர் களாக இருப்பதால், அவர்கள் பார்ப்பன தாசர்களாகவும், விபீஷணர், அனுமார்களாகவும் ஆகி, நமக்குத் துரோகம் செய்யாமல் இருக்கமுடியாதவர்களாக ஆகிவிடுகிறார்கள். இன்று இரயிலிலாகட்டும், சர்க்கார் பதவியிலாகட்டும் பெரிய பதவியில் இருக்கும் திராவிடர்கள் யாராவது தன்னைத் திராவிடன் என்றோ, தமிழனாயிற்றே என்றோ கருதுகிறவர் உண்டா? என்று கேட்கிறேன். இதற்குக் காரணம், இவர்கள் அயோக்கியர்கள் என்பது அல்லவே அல்ல. அவர்கள்—நல்ல பேர், அந்தஸ்து, உயர்வு பெறவேண்டுமானால், பார்ப்பனர் ஆசீர்வாதம், மங்களாசாசனம், சடகோபம் பெற்றே ஆகவேண்டும். பார்ப்பனர் மற்றொரு தந்திரம் இதற்குக் கையாளுகிறார்கள். அதாவது—

ஏதாவது புரமோஷன் தமிழனுக்குக் கொடுக்க வேண்டுமென்று நாம் வாதாடிக் கொடுத்தாகவேண்டிய அவசியம் வந்தால்—அப்போது பார்ப்பனர், ஏதாவது ஒரு கண்

போன, கைபோன, நொண்டி, முடம், 'ஸ்குரு லூஸ்', 'கிராக்', மக்கு, அதிகப் பிரசங்கி அல்லது இரகசியத்தில் பல குற்றச்சாட்டுள்ள அயோக்கியன் எங்காவது இருக்கமாட்டானா? என்று, அவனைத் தேடிப்பிடித்து அவனுக்கு ஒரு மேல் உத்தியோகத்தைக் கொடுத்து விட்டு, அன்று முதலே அவன்மீது குப்பை செத்தை சேர்த்து, ஒரு நாளில் குவிய வைத்து நெருப்பிட்டு, "பார்த்தாயா, பார்த்தாயா! திறமை, தகுதி எல்லா வகுப்புக்கும் உண்டு என்று திராவிடர்கள் வாதாடுகிறார்களே! உத்தியோகம் கொடுத்து நடந்தது என்ன?" என்று ரிகார்டு ஏற்படுத்தி, நமக்கு வெட்கம் ஏற்படும்படி செய்துவிடுகிறார்கள். அல்லது புரமோஷனுக்குத் தேவையில்லாத கடுமையான நிபந்தனைகளைத் திடீரென்று வைத்து நல்ல கெட்டிக்காரர்களையும் அறிவாளிகளையும் யோக்கியர்களையும் சலித்து எடுத்துத் தள்ளிவிடுகிறார்கள்.

உதாரணமாக, கல்வி இலாகாவில் தோழர் அவினாசிலிங்கம் அவர்களுக்கு மந்திரி வேலை கொடுத்தார்கள். எதற்காகக் கொடுத்தார்கள்? "ஒருவராவது இலஞ்சம் வாங்காதவர் இந்த 13 மந்திரிகளில் இல்லையா?" என்று யாராவது சொன்னால், நான் கண்டிப்பாய், "இலஞ்சம் வாங்காதவர் அவினாசிலிங்கனார்" என்று உறுதி கூறுவேன். ஆனால், புத்திக்கும் இன உணர்ச்சிக்கும் வகுப்பு அபிமானத்திற்கும் உலக அனுபவத் திற்கும் அவருக்கும் வெகு வெகு தூரம். நம்மை இங்கிலீஷ் படிக்கக்கூடாது என்றார்; ஆனால் இந்தி கட்டாயம் படி என்றார்; பள்ளிக்கூடத்தில் பிள்ளைகள் சேர்க்கப்படுவ தற்குக்கூட, சட்டப்படி உண்டான தகுதிக்குமேல் தகுதியும் திறமையும் வேண்டு மென்றார்; அந்தத் தகுதி இங்கிலீஷிலும் இருக்கவேண்டும் என்றார். இப்படிப் பல முட்டாள்தனமான காரியங்களைப் பார்ப்பனர் சொன்னபடி நடந்து, அவர்கள் கையெழுத் துப் போடும்படி சொன்ன இடத்தில் போடுகிறார். நமக்கு எவ்வளவு கேடு? நமது பின் சந்ததிக்கு எவ்வளவு கெடுதி? இந்தப்படி பார்ப்பனர் செய்துவிட்டுத் தாங்கள் தப்பித்துக்கொள்கிறார்கள். இப்படி உத்தியோகங்களிலும் பலர் நமக்குப் பயன்படாமலும், நல்ல பேர் எடுக்காமலும், பார்ப்பனரின் அடிமைகளாகி, அவர்களுக்கும் பயனில்லாமல் செய்யப்பட்டு விடுகிறார்கள். இது பார்ப்பனத் தந்திரமாகும்.

அடுத்த விஷயம், நம்மை அவர்கள் நடத்தும் மாதிரி. இது உண்மையில் மோச மாகவே இருக்கிறது. பார்ப்பன மேலதிகாரிகள் நம்மவர்களை மிக மிக இழிவாய் நடத்து கிறார்கள்; குற்றம் கண்டுபிடிப்பதில் மிகக் கடினமாக இருந்து, அக்கிரமமான வழியில் நெஞ்சுத் துணிவோடு நம்மைக் கெடுத்து வருகிறார்கள். உதாரணம் பாருங்கள். தோழர் (புலவர். கனகசபை என்னும்) பொன்னம்பலம் என்பவர் ஒரு தமிழ்ப் புலவர்; அவர் சேலம் அய்ஸ்கூலில் ஒரு புலவர். அவர் சிறிது திராவிட உணர்ச்சி உள்ளவர். அந்த உணர்ச்சி என்னவென்றால் முடம், மொக்கை இல்லாமல், சுத்தமான தமிழில் கூடியவரை பேசுபவர். அவர் பேசுவதைக் கண்டால் எந்தப் பார்ப்பனருக்கும் கோபம் வரும்; வடமொழிக் கலப்பில்லாமல் பேசுவார். அதுதான் அவரிடம் பார்ப்பனருக்குப் பிடிக்காத காரியம்.

அப்பள்ளித் தலைமை உபாத்தியாயர் ஒரு ஆரியர். அவர், பொன்னம்பலத்தைப் பற்றி பள்ளிப் பிள்ளைகளைக்கொண்டு முனிசிபல் கமிஷனருக்கு ஒரு முறையீடு எழுதிக் கொடுக்கச் செய்து, அவரை வீட்டுக்கனுப்ப முயற்சிகள் கட்டுப்பாடாகச் செய்வதாக எனக்குத் தகவல் வந்திருக்கிறது. கமிஷனர்கள் யோக்கியதையோ நாம் சொல்ல வேண்டியதில்லை. 100-க்கு 75 கமிஷனர்கள் திராவிடர்களேயானாலும்—அவர்கள் கமிஷனர்கள் ஆனவுடன், திராவிட இரத்தம் பார்ப்பன அடிமை இரத்தமாக மாறும்படி 'இனாக்குலேஷன்' செய்யப்பட்டவர்கள். அவர்கள் பார்ப்பன ஆசிரியரைக் கண்ணியப் படுத்தி, திராவிட ஆசிரியரைக் கண்டித்து, எச்சரிக்கை செய்து அந்த முறையீட்டை முடிப்பவர்களே தவிர, வேறு பார்ப்பன ஆசிரியரை—குற்றம் இருந்தாலும்—கண்டிக்க மாட்டார்கள். மற்ற இலாகாவிலும் திராவிடர்களை ஆரியர்கள், அரசாங்கத்தார்—திராவிட

மேலதிகாரிகள்கூட—கீழ்மையாக நடத்தி, மேல் உயர்வுக்குத் தகுதியற்றவர்களாக ஆக்கி வருகிறார்கள். பல கலெக்டர்கள் திராவிட அதிகாரிகளை நடத்துகிற மாதிரி மிகமிக மோசமானதென்றே சொல்லலாம். ஏனென்றால் ஆட்சி, மனு ஆட்சிதானே!

ஆதித் திராவிடர்களையும் முஸ்லிம்களையும் நடத்தியமாதிரி மிக மோசமாக இருந்து வந்தாலும், இப்போது அவர்களுக்குப் "பிரைஸ்" அடித்துவிட்டது. முதல் பிரைஸ் இல்லையானாலும் நல்ல பிரைஸ். அவர்கள் நிலை உயர்த்தப்பட்டுவிட்டது. இனி அவர்களுக்குச் சரியானபடி விகிதாசாரமும்–மேலுங்கூட–கண்டிப்பாய்க் கிடைக்கும். அவர்களுக்கு சிபாரிசு, குறைகளைக் கேட்க வசதிகள் ஏற்பட்டுவிட்டன.

நாம் ஒன்று 'பஞ்சம வர்ணத்தாரா'கவோ, அதாவது ஆதித் திராவிடராகவோ, இஸ்லாம் மதஸ்தராகவோ ஆனால் ஒழிய, நமக்கு மானவாழ்வு, நீதிவாழ்வு, முற்போக்கு வாழ்வு இல்லை என்றே சொல்லுவேன்.

தோழர்களே! நேற்று இதே இடத்தில் நான் சுமார் 20 ஆயிரம் பேர் இடையில் நம் தலைவர் வேதாசலம் அவர்கள் தலைமையில் இதையே வலியுறுத்திச் சொன்னேன். நேற்றுக் காலை நகரசபைக் கொட்டகையில் நடந்த டாக்டர். அம்பேத்கார் மாணவர் இல்ல ஆண்டு விழாவில் தலைமை வகித்தபோதும் இதையே சொன்னேன். இதனால் திராவிடர்கள் இடையில் எனக்குக் கெட்ட பெயர் வளருகிறது என்றுகூடச் சிலர் சொன்னார்கள். இன்றும் காலையில் சிலர் சொன்னார்கள்; சிலர் என்கூடவே இருந்துகொண்டு இதைச் சொல்லி விஷமப் பிரச்சாரம் செய்கிறார்கள். எனக்கு இதைப்பற்றிக் கவலையில்லை.

எனக்கு இந்தவிதமான—உணர்ச்சிக்கு இடமில்லாத, மானத்தைப்பற்றிக் கவலையில்லாத—திராவிட மக்களிடத்தில் நல்ல பேர் வாங்கவேண்டுமென்ற கவலை சிறிதுமில்லை. அப்படிப் போலி நல்ல பெயரின்மீது எனது வாழ்வு ஏற்பட்டிருக்கவில்லை. திராவிடர்களுக்கு ஏதாவது தொண்டாற்றவேண்டும்; அதில் முதன்மையாக, திராவிடன் இழிவு நீங்க வேண்டும் என்கின்ற ஆசையும் கவலையுமே தவிர, வேறு ஒன்றுமே எனது கவலையாக இல்லை. என் வாழ்வைப் பற்றி எனக்குக் கவலையில்லை; எனக்கு வேறு அடைய வேண்டிய சாதனமும் இல்லை. இன்று திராவிடனுக்கு உள்ள இழிவு என்னவென்றால், அவன் சூத்திரனாய் இருக்கவேண்டியிருக்கும்; 'இந்துவாய்' இருப்பதைத் தவிர வேறில்லை.

ஆதித் திராவிடர்களுக்குத் திடீர் என்று வந்தயோகம் டாக்டர். அம்பேத்கார், "நான் இந்து அல்ல; பஞ்சமன் அல்ல; இந்து மதத்தின் எந்தப் பாகுபாட்டுக்கும் சம்பந்தப் பட்டவன் அல்ல" என்று சொன்னதால்தான். கோயில் திறக்கப்பட்டதும்; "லிஸ்ட்டு கொடுங்கள், உத்தியோகம் கொடுக்கிறேன்" என்று மந்திரி கேட்பதும்; "உங்களுக்கு நீதிக்குமேல், அளவுக்குமேல் நன்மை செய்கிறேன். என்ன வேண்டும்? கேள்" என்று பட்டேல் சொல்லுவதும்; "நானும் ஆதித் திராவிடன், பங்கி (Bungi)" என்று காந்தியார் சொல்வதும் ஆன காரியங்களுக்குக் காரணம்—"நான் இந்துவல்ல" என்ற அஷ்டாட்சர மந்திரமேயாகும். டாக்டர். அம்பேத்காருக்கும் அய்ந்து வருடத்துக்கு முன்பே, நான், 1925-ல் சொன்னேன்; ஆனால், எனக்கு 5 வருடத்துக்குப் பின்பு சொன்ன அவர்கள் வெற்றி பெற்று விட்டார்கள். ஆனாலும், அவர்கள் இனியும் "இந்து அல்ல" என்று தான்—வாயிலாவது சொல்லிக்கொண்டே—எல்லா உரிமைகளும் பெறப் போகிறார்கள்.

முஸ்லிம்களுக்கு வந்த, வரப்போகின்ற மேன்மையும் அதனால்தான். அதாவது—"நாங்கள் இந்துக்கள் அல்ல; இந்திய சமுதாயம் அல்ல" என்று சொல்லுவதால்தான். நான், "திராவிடநாடு" பற்றி 1937-ல் பிரஸ்தாபித்தேன்; ஜின்னா சாயபு 1940-ல் பாகிஸ்தான் பிரஸ்தாபித்தார். இன்று பாகிஸ்தான் அவர் காலடியில் கிடக்கின்றது. "நன்றாய் விளக்கித் தேய்த்துக் கழுவிச் சுத்தப்படுத்திக்கொண்டு வாருங்கள்" என்று திருப்பி அடிக்கிறார் ஜின்னா. இந்தத் திராவிடசமுதாயத்தினர் மானங்கெட்ட சமுதாயத்

தினராய்—சூத்திரராய்—4ஆம் 5ஆம் சாதியாய்—வேசி மக்கள்–தாசி மக்கள்–அடிமை மக்களாய்; கல்வி, செல்வம், மானவாழ்வு, உழைத்த கூலிகூட இல்லாமல் மிருகங்களினும் கேவலமாய்; உரிமை இழந்து, மனிதத் தன்மை இழந்து, ஈனவாழ்வில் அழுத்தப்பட்டுக் கிடப்பதற்குக் காரணம்—இந்துவாய் இருப்பதல்லாமல் வேறு என்ன என்று கேட்கிறேன். உங்களை மாத்திரம் அல்ல, நம் சர்கள்—அண்ணாமலை, சண்முகம், ஏ. இராமசாமிகளையும்; ஜமீன்தார்களையும், மகாராஜாக்களையும்; பண்டார சன்னதிகளையும் மறைமலைகளையும் பாரதிகளையும் கேட்கிறேன். இந்தச் சிறு கூட்டத்தாரின் மாயவாழ்வுக்கு நாம் இத்தனை கோடிப்பேர்கள் இந்துக்களாக (சூத்திரர்களாக) இருப்பதா என்று கேட்கிறேன்.

தோழர்களே! நமது வியாதி–நோய் ('சூத்திரர்கள்', 'வேசிமக்கள்' என்ற நோய்) பெரிது, மிகமிகப் பெரிது. இது (Cancer) புற்று, தொழுநோய் போன்றது; வெகு நாளைய நோய். இதற்கு ஒரே ஒரு மருந்துதான்—அது இஸ்லாம்தான்! இதைத் தவிர, வேறு மருந்து இல்லை. இது இல்லாவிட்டால் வேதனைப்பட வேண்டியதுதான். தூக்க மருந்தும் போதைமருந்தும் கொண்டு, நோய் இம்சை தெரியாமல், நாமும் பிணம்போல் கிடக்க வேண்டியதுதான். நோய் தீர்ந்து எழுந்து நடக்க, இன்றைய நிலையில் இஸ்லாம் ('இந்து மதத்தைவிடுவது' என்னும்) மருந்துதான். இதுதான் நாடுகொடுக்கும், வீரம் கொடுக்கும், நிமிர்ந்து நடக்கச் செய்யும் மருந்தாகும்.

இஸ்லாம் என்றால் முகம்மது நபிகள் மதம் என்றோ, இங்கு 'லுங்கி' கட்டிக்கொண்டு, அளந்து தாடி வைத்துக்கொண்டு இருக்கும் சாயபு, ராவுத்தர், மரைக்காயர், மாப்பிள்ளை என்கின்றவர்கள் மதம் என்றோ, கருதிவிடாதீர்கள். திராவிடர்கள் மதம்—முகமது நபிக்கு முன்பு, கிறிஸ்துநாதருக்கு முன்பு, புத்த மகானுக்கு முன்பு–ஆரியர்களுக்கு, 'கிருஷ்ணன்', 'ராமன்', 'சிவன்', 'விஷ்ணு'க்களுக்கு முன்பு—திராவிடர்களுக்கு இருந்த மதமாகும்.

இஸ்லாம் என்பது சாந்தி, பணிவு, பக்தி என்ற பொருள்படும் அரபுச் சொல்; இஸ்லாம் என்பது சகோதரத் தன்மை என்பது. இவ்வளவுதான். 100, 200 வருடங்களுக்கு முற்பட்ட அகராதிகளைப் பாருங்கள். அரபு வார்த்தையில் சொல்லாமல் தமிழில்–ஒரு கடவுள், உருவமற்ற கடவுள் வழிபாடு, சாந்தி, ஒற்றுமை, பரஸ்பர பணிவு, பக்தி, உடன்பிறப்பு என்ற தன்மைகள் கொண்ட மதம் என்றால் போதும். கடவுள் என்பது திராவிட மொழி; காட் (God) என்பது ஆங்கில மொழி; அல்லா என்பது அரபு மொழி என்பதல்லாமல், திராவிடர்களுக்கு மாறுபட்ட கடவுள் அல்ல—கொள்கை அல்ல என்பேன். மதங்களை விபூதிப் பூச்சு, நாமம், உச்சிக் குடுமிகளைக்கொண்டு நிர்ணயிப்பதுபோல், இஸ்லாத்தை தலை மொட்டை, தாடி, லுங்கி முதலியவைகளைக்கொண்டு நிர்ணயிக்காதீர்கள். இஸ்லாத்துக்கு எஜமானர் இந்நாட்டு முஸ்லிம்கள் அல்லர்; இவர்கள் இஸ்லாத்தின் ஒரு பகுதியினர்; மலையாள மாப்பிள்ளையார் மற்றொரு பகுதியினர்; ஈஜிப்ட்டார் மற்றொரு பகுதியினர்; ஜப்பான், ஜெர்மன் இஸ்லாமியர்கள் மற்றொரு பகுதியினர்; ஆப்பிரிக்கர், நீக்ரோவர், அபிசீனியர் ஆகிய இஸ்லாமியர் மற்றொரு பகுதியினர்.

இவர்கள் இத்தனை பேருக்கும் ஒரு கடவுள். அதுவும் உருவம், பெண்டு, பிள்ளை, சோறு, சாறு வேண்டாததும் அற்றதுமாகும். உடன்பிறப்பு, சம உரிமை, கட்டுப்பாடு இவைதான் பொது; மற்றவைகள் எல்லாம் காலதேச வர்த்தமானங்களைப் பொறுத்தது. இவை ஒன்றாய் இருப்பதால்தான் 60 கோடி மக்கள் உலகில் எந்தப் பாகத்தில் இருந்தாலும் உடன்பிறப்பாய் இருக்கிறார்கள்; இவர்களுக்கு உலகம் நடுங்குகிறது. நீங்கள் 'இந்து' என்றால் உங்கள் 15 கோடி மக்களுக்கு ஏது பொது? எங்கே மானம்? எங்கே உடன்பிறப்பு? எங்கே ஒற்றுமை? எங்கே மனிதத் தன்மை? கட்டுப்பாடு? கோபித்து, ஆத்திரப்பட்டு என்ன செய்வது? டாக்டர். அம்பேத்கார் இப்போதைக்கு வெற்றி பெற்றாலும், இந்த ஆவேசம் அடங்கியவுடன் அவர் இந்து என்று சொல்லிக்கொள்வாரேயானால்—மறுபடியும் அவர் 'பஞ்சம பட்டியலில்' சேர்க்கப்பட்டுவிடுவார்.

நாம் இந்த நாட்டை இந்து நாடாக—இந்துஸ்தானாக ஆக்குவதைவிட, திராவிடஸ்தானாக—அதாவது அந்தப் பெயரைப் பார்ப்பனர் சகிக்கவில்லையானால்—' திராவிடநாடு கொள்கையையே கொண்ட பாகிஸ்தான் ' என்ற வேறு பெயரில் மாற்றிக்கொள்வதில் தப்பு என்ன?

' மதம் ' இல்லாமல் மக்கள் வாழமுடியாது. அதாவது நான் சொல்லும் மதம், கடவுளுக்கும் மக்களுக்கும், சம்பந்தமும் மோட்சமும் விதியும் மன்னிப்பும் சமாதானமும் மேல் லோகத்தில் அளிப்பது என்கிற மதம் அல்ல. மற்றெதுவென்றால், மனிதனுக்கு மரியாதையாய், (பணிவாய்) அன்பாய், பக்தியாய், சாந்தியாய், சகோதரத் தன்மையாய், ஒற்றுமையாய், ஒழுக்கமாய், உதவியாய் வாழும் கொள்கையை—உங்களுக்குப் புரிவதற்காக மதம் என்ற பழக்கமான வார்த்தையில் கூறுகிறேன். இதை ' சமுதாயக் கொள்கை' என்று சொல்ல எனக்கு இஷ்டம். இதை நீங்கள் மதம் என்று சொல்லவேண்டும் என்றாலும் ஆட்சேபிக்கவில்லை. இப்படிப்பட்ட ' மதம் ' இல்லாமல் மனிதன் சமுதாயத்தில் வாழுவது சங்கடப்படும்.

ஆகையால், இந்த நாட்டில் இந்தக் கொள்கையின் பேரால் ஏற்கனவே ஒன்றுபட்டு வாழும் 10 கோடி மக்களுடன், நாம் திராவிடர்கள் 4 கோடி பேர்களில் குறைந்தது 2½ கோடி பேர் சேர்ந்து, 12½ கோடி பேர் ஒரு கொள்கையினராய் வாழ்ந்து—மானம் பெற்று, ஈனம் ஒழித்து, மனிதத் தன்மை, உரிமையுடன் வாழ்ந்தால்—யாருக்கு என்ன நஷ்டம், என்ன இழிவு என்று கேட்கிறேன்.

அல்லது, இந்தப் பார்ப்பன அட்டுழியத்துக்கு யாராவது வேறு மருந்து சொல்லட்டும்; நான் கேட்கிறேன். திராவிட நாட்டில், நாம், ' இஸ்லாம் ' ஆனால் நம் இஷ்டப்படிதான் இஸ்லாம் இருக்குமே தவிர—யாரோ சாயபோ, முல்லாவோ சொல்லுகிறபடி இஸ்லாம் இருக்காது. எனக்கு 10 நாட்டு முஸ்லிம்கள் அனுசரிக்கும் இஸ்லாமும் தெரியும். நாட்டு இஷ்டம், மெஜாரிட்டி இஷ்டம்தானே தவிர—இந்து மதம்போல் (3¾) மூன்றே அரைக்கால் பார்ப்பனர் 93 பேர்களை, ' எட்டி நில்; நீ படிக்க முடியாது; நீ சூத்திரன்; நீ வேசி மகன்; உனக்கு சரி சமத்துவம் இல்லை; உத்தியோகம் இல்லை; பிரதிநிதித்துவம் இல்லை ' என்பதல்ல இஸ்லாம். அதாவது, பணிவையும் சாந்தியையும் உண்மை சகோதரத்துவத்தையும் கொள்கையாய்க் கொண்ட மார்க்கம். மற்றது எது எப்படி இருந்தாலும் ஒற்றுமை கட்டுப்பாடு கொண்ட மார்க்கம். இதை யாரும் மறுக்க முடியாது.

நான் இஸ்லாத்துக்கு 'வக்காலத்து'ப் பேசவில்லை; பிரச்சாரம் செய்யவில்லை. இது உண்மை! உண்மை!! முஸ்லிம்களிடம்—எனக்கு, உங்களை எல்லாம்விட அளவு கடந்த அன்போ, நேசமோ, நம்பிக்கையோ, கூட்டுறவோ கிடையாது. ஆனால், ' பார்ப்பனீயம் '—' இந்து ' என்னும் பொல்லாத—கொடுமையான—கோரமான பாம்பைக் கொல்லுவதற்கு, அல்லது அதன் விஷத்தன்மைப் பாதகத்திலிருந்து விலகுவதற்கு இதுதான் மருந்து. இஸ்லாத்தைச் சரியாய்த் தெரிந்துகொள்ள வேண்டியவர்கள் இங்கிலாந்து, ஈஜிப்ட், துருக்கி சென்று வாருங்கள்.

வரப்போகும் சுயராஜ்யம் நமக்கு மகா மகா கேடானதாக இருக்கும். திராவிடர்கள் 100க்கு 75 பேர்கள் அனுமார்களாக, விபீஷணர்களாக வாழுவதுடன் தோழர் அவினாசிலிங்கம் போன்ற மற்றும் பல திராவிடர்கள், பண்டிதர்கள், 'சர்'கள், தங்கள் பின்னால் மணி கட்டின வால் ஒட்ட வைத்துக்கொண்டு, இராம பஜனை (ஆரியர் பஜனை) செய்து, ஆரியன் பின் திரிந்து, நம்மை நசுக்கப் போகிறார்கள்.

இது என்ன மானக்கேடு! என்னுடைய நாட்டில், என் வரிப்பணத்தில், எனக்காக நடக்கிற ஆட்சியிலே எனக்குப் பிரதிநிதித்துவம் இல்லை; எனக்கு விகித உத்தியோக

மில்லை என்றால்—எனக்கு மனிதத் தன்மை இல்லை என்றால்—இதற்காக ஆரியனுக்கு நான் விண்ணப்பம் போடுவதும், விழுந்து கும்பிடுவதும், கெஞ்சிக் கூத்தாடுவதும் மானமுள்ள தன்மையா என்று கேட்கிறேன். யாரோ சில துரோகிகள், சுயநல வஞ்சகர்கள் மானம், ஈனம் இல்லாமல் தங்களைப் பார்ப்பன அடிமை (இந்து) என்று சொல்லிக் கொண்டால்—நாமும் 'இந்து' (அடியேன், தாசன், நாய்க்குட்டி, அடிமை) என்று சொல்லிக்கொள்ளுவதா என்று கேட்கிறேன். "இழிவு நீங்க இஸ்லாம்" ('நான் இந்து வல்ல') என்கிற மந்திரம்தான் நம்மை மனிதராக்க முடியும். இதை நான் இன்று நேற்று சொல்லவில்லை; 1919 முதல், 1920 முதல் இன்று வரை 28 வருடங்களாகச் சொல்லி வருகிறேன். எனக்கு ஒன்றும் செல்வாக்குக் குறைந்துபோகவில்லை. இதற்கு முக்கிய காரணம் என்னவென்றால், இழிவு நீங்க வேறு மருந்தில்லை. இந்த வியாதியை நீக்கும் முயற்சியில் இதுவரை எந்தப் பெரிய வைத்தியனுடைய—எந்த மருந்தும் தோல்வியையே அடைந்துவிட்டது.

சாயபுகளும் பதவி விகிதாச்சாரம் பெற்று, ஷெட்யூல்டு வகுப்பாரும் பதவி உத்தி யோகமும் கல்வி விகிதாச்சாரமும் பெற்று, மீதி உள்ளதில் பார்ப்பனர் ஏகபோகமாய் உட்கார்ந்துகொண்டால்—திராவிடனே அல்லது தமிழனே, அதாவது பார்ப்பானல்லாத, முஸ்லிம் அல்லாத, கிறிஸ்தவன் அல்லாத, ஆதித் திராவிடன் அல்லாத (ஷெட்யூல்டு வகுப் பார்) திராவிடனே! 'சூத்திரனே!' உன் கதி, உன் எதிர்காலம் என்ன ஆகும்? சிந்தித்துப் பார்! அரசியல் நிர்ணய சபையில் உனக்குப் பிரதிநிதி எங்கே? ஷெட்யூல்டு வகுப்புக்கு, பார்ப்பானுக்கு, கொள்ளை அடிக்கும் வியாபாரிக்கு, கொடுமை முறை சங்கராச்சாரிக்கு அங்கே பிரதிநிதிகள் இருக்கிறார்கள். "நான் ஏன் சூத்திரன்" என்று பதறுகிற திராவிடனுக்குப் பிரதிநிதிகள் எங்கே? நினைத்துப் பார். மானத்தோடு சிந்தித்துப் பார்! உத்தியோகம் மாத்திரம் அல்ல நமது இலட்சியம். நம் இழிவு போக வேண்டும்; நாம் விபீஷணன் இல்லாத சமுதாயத்தினராக வேண்டும்.

என் அன்புள்ள அருமை திராவிடச் சகோதரர்களே! இதற்கு இஸ்லாத்தைத் தவிர ஒரு மருந்து சொல். இப்போதே சொல்லாதே; வீடுபோய் தமிழ்ப் பெரியார்கள், 'சர்' பெரியார்கள், பண்டிதப் பெரியார்கள், ஆங்கிலம் கற்றுப் பதவி வகிக்கும் வக்கீல்கள், உத்தியோகப் பெரியார்கள் முதலானவர்களுடன் கலந்து, கட்டியழுது முடிவு கண்டு—நாளைக்குச் சொல்!

இதுவரை கல்லைப் போடாமல், கலகம் செய்யாமல் பேச இடங்கொடுத்துப் பொறுமையோடு கேட்டுக்கொண்டிருந்த உங்களுக்கு 100 'இஸ்லாம்'.

(திராவிட உத்தியோகஸ்தர்கள் எஸ். அய். ஆர். (எம்ப்ளாயீஸ் அசோசியேஷன்) சங்கத்தார் சார்பாகப் பெரியாருக்குத் திருச்சியில் 18–3–1947ஆம் தேதி 1080 ரூபாய் கொண்ட பணமுடிப்பு ஒன்று அளிக்கப்பட்டது.)

[நூல்: "இன இழிவு ஒழிய இஸ்லாமே நன்மருந்து"–'குடி அரசு' பதிப்பகம், ஈரோடு—1947]

## 12. முஸ்லிம்களே, கிறிஸ்தவர்களே சிந்தியுங்கள்!

பெரியோர்களே! தோழர்களே!

முஸ்லிம் தோழர்களுக்கு ஓர் விண்ணப்பம்! உங்களை ஏன் எங்களுடன் நன்கு சேர ஒட்டாமல், உங்கள் தலைவர்கள் தடுத்துவருகிறார்கள்? ஜின்னா சாகிப் ஒரு காலத்தில், "முஸ்லிம்கள் யாரும் வேறு கட்சியில் சேரக் கூடாது" என்று கூறினார் என்றால் அதற்கு அர்த்தம் இருந்தது. முஸ்லிம்களின் இலட்சியமான பாகிஸ்தானையடைய எல்லா முஸ்லிம்

களும் ஒரே கட்சியின் கீழிருந்து வேலை செய்யவேண்டும் என்பதற்காக அவர் அவ்விதம் சொல்லியிருந்தார். அப்பொழுது நானும் முஸ்லிம் கட்சியில் இருந்தேன். பாகிஸ்தான் பெற்றாகிவிட்டது. எனவே, அவர் கூறியது காலாவதியாகிவிட்டது—' லிமிடேஷன் பார் ' ஆகிவிட்டது.

இனி முஸ்லிம்கள் தங்கள் பாதுகாப்புக்காக, ஏதாவது ஒரு கட்சியில் சேர்ந்து கொள்வதுதான் நல்லது. இன்றுள்ள இம்மாகாண முஸ்லிம் தலைவர்கள் சொற்ப சலுகை களுக்காகவும், பயத்துக்காகவும், சுயநலத்துக்காகவும் காங்கிரஸ்காரர்களின் காலடியில் இருந்துகொண்டு வருகின்றனர். தமக்குக் கிடைக்கும் சலுகைக்காக முஸ்லிம் இனத்தையே காட்டிக்கொடுக்கத் துணிந்து அவர்களைக் கோழைகளாக்கிவிட்டனர். இதை முஸ்லிம் பாமர மக்கள் உணர்ந்துகொள்ள வேண்டும். காங்கிரசுடன் சேர்ந்துகொள்வதா யிருந்தால் தாராளமாய்ச் சேர்ந்துகொள்ளுங்கள் ! நாங்கள் வேண்டாம் என்று கூறவில்லை. 100க்கு 90 பேராக உள்ள எங்களையே ஏமாற்றிக் கொண்டிருக்கும் பார்ப்பனர்களா 100க்கு 7 பேரான உங்களுக்கு வளைந்து கொடுத்துவிடப் போகிறார்கள் ? எங்களைப் பொறுத்தவரை இன்னும் நாங்கள் உங்களை எங்கள் உடன் பிறந்தவர்களாகத்தான் கருதுகிறோம். எனவே, எங்கள் இனத்தவர் நீங்கள் என்பதற்காக—உங்களை இந்த அளவுக்கு அளவளாவவும், ஆதரிக்கவும் உள்ள எங்கள் கழகத்தில் வேண்டுமானாலும் சேருங்கள் ! அல்லது வடநாட்டானால் பல கோடி செலவிட்டுப் பத்திரிகைகளைக் கொண்டு தீவிரப் பிரச்சாரம் செய்து, இந்துக்களைத் தூண்டிவிட்டு, உங்களைக் கொள்ளையடிக்க நினைக்கும் பார்ப்பனர்களோடாவது சேர்ந்து கொள்ளுங்கள் !

சேருமுன் கொஞ்சம் தீர யோசித்துவிட்டுமட்டும் சேருங்கள். திருவண்ணாமலையும், ஈரோடும், திருநெல்வேலியும் உங்களுக்கு ஞாபகமிருக்கட்டும் ! முஸ்லிம்களைவிடக் குறைவான எண்ணிக்கையுடைய கிறிஸ்தவர்களுக்கும் சொல்கிறேன்.

கிறிஸ்தவர்களாகிவிட்டதாலேயே நீங்கள் உயர்ந்தவர்கள் என்று கருதிக்கொண்டு விடாதீர்கள் ! நீங்களும் குறள் மதக்காரர்கள்—பைபிளுக்கு விரோதமாகக் குறளில் ஒன்றும் கிடையாது. பார்ப்பனர்களின் தயவுக்காகவேண்டி சுயமரியாதையை இழந்துவிடாதீர்கள் ! உங்கள் நன்மையைப் பாதுகாத்துக் கொள்வதாயிருந்தால் சாதி, சமய பேதமின்றிப் பாடு படும் திராவிடர் கழகத்தில் சேருங்கள் ! திராவிடர்கழகம் திருவள்ளுவர் குறளைப் பின்பற்றி நடந்துவரும் கழகம். இந் நாட்டில் மனுதர்மம் ஒழிந்து, மனிதத் தன்மை ஏற்படப் பாடு பட்டு வரும் கழகம். அதற்குக் குறள்தான் வழிகாட்டி ; எந்த முன்னேற்றத்திற்கும் விரோத மில்லாமல் பணியாற்றிவரும் கழகம் என்பதை உங்களால் உணர்ந்து, ஆன எல்லா உதவியையும் அதற்களித்து ஆதரியுங்கள்.

[ஈரோட்டில், 23, 24-10-1948-ல், சொற்பொழிவு—' விடுதலை ' 5-11-1948]

## 13. பார்ப்பனர் எதற்கு?

பார்ப்பனர்கள் இந்த நாட்டுக்குச் சுமார் இரண்டாயிரம் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னேயே பிழைக்கவந்தவர்கள் ; வந்ததும் இந்த நாட்டுவாழ்க்கைக்குச் சம்பந்தப்படாமல் இந்த நாட்டுவளப்பத்தை அனுபவிக்கத் துவங்கிவிட்டார்கள்.

நாம் உழைக்கிறோம் ; உழுகிறோம். நம்மால்தான் மக்களுக்கு உணவு அளிக்கப் படுகிறது. நாம் வேளாண்மை செய்யாவிட்டால், இந்த நாட்டு மக்களுக்கு உணவு இல்லை. நாம்தான் நெசவு செய்கிறோம் ; நம்மால்தான் அத்தனைபேருக்கும்உடை, துணி கிடைக் கிறது. நாம்தான் வீடுகட்டிக் கொடுக்கிறோம். ஆகவே நம்மால்தான் இந்த நாட்டு மக்களுக்கு இருக்கிற வசதிகளெல்லாம் செய்யப்பட்டு இருக்கின்றன. ஆகவே ஒரு நாட்டு

மக்களுக்கு உணவு, உடை, வீடு முதலிய வசதிகளை அளிக்கும் நாம்தான் சூத்திரர்கள் என்று இழிவுபடுத்தப்பட்டு இருக்கிறோம்.

பார்ப்பனன் எங்காவது உழைக்கிறானா? எந்தப் பார்ப்பனத்தியாவது வீடு கட்டுகிறாளா? கல் உடைக்கின்றாளா? ஏன்? இவைகள் எல்லாம் அவர்கள் செய்தால் பாவம் என்று எழுதிவைத்திருக்கிறார்கள். ஆகையால் இவைகள் எல்லாம் மாறி, நாம் முன்னேற வேண்டுமென்றுதான் கேட்கிறோம்.

[சித்தோட்டில் 26-7-1951-ல் நடைபெற்ற தி.க. பொதுக்கூட்டத்தில் விளக்கவுரை—'விடுதலை' 31-7-1951]

## 14. பார்ப்பனரும், தி. க.வும்

தோழர்களே!

யாரோ சில பிராமணர்கள், "பெரியார் ராமசாமி நாயக்கர், பிராமணர்கள் இந்த நாட்டில் வாழவே கூடாது என்று கூறி வருகிறார். இவரை நீங்கள் எப்படி இங்கே கூப்பிட்டீர்கள் என்பதாகக் கேட்டார்கள்" என்று ஒருவர் இங்கு சொன்னார். பிராமணர்கள் இந்த நாட்டில் வாழக்கூடாது என்றோ, இருக்கக்கூடாது என்றோ திராவிடர் கழகம் வேலை செய்யவில்லை—திராவிடர் கழகத்தின் திட்டமும் அதுவல்ல. திராவிடர் கழகத்தினுடைய திட்டமெல்லாம்—திராவிடர் கழகமும் நானும் சொல்லுவதெல்லாம், விரும்புவது எல்லாம்—நாங்களும் கொஞ்சம் வாழவேண்டும் என்பதுதான். இந்த நாட்டிலே நாங்களும் கொஞ்சம் மனிதத் தன்மையோடு சமத்துவமாக இருக்கவேண்டும் என்பதுதான்.

இது 'பிராமணர்கள்' இங்கு வாழக்கூடாது என்று சொன்னதாகவோ, இந்த நாட்டைவிட்டு அவர்கள் போய்விட வேண்டுமென்று சொன்னதாகவோ அர்த்தம் ஆகாது. அவர்களைப் போகச் சொல்லவேண்டிய அவசியமில்லை. அது ஆகிற காரியம் என்று நான் கருதவுமில்லை. தவிரவும் 'பிராமணர்களுக்'கும் நமக்கும் பிரமாதமான பேதம் ஒன்றும் இல்லை. அவர்கள் அனுசரிக்கிற சில பழக்க வழக்கங்களையும், முறைகளையும் தான் நாங்கள் எதிர்க்கிறோம். இது, அவர்கள் மனம் வைத்தால் மாற்றிக்கொள்வது பிரமாதமான காரியம் இல்லை.

நமக்கும் அவர்களுக்கும் என்ன பேதம்? இப்போது அவர்களும், நாமும் ஒரு குழாயிலே தண்ணீர் பிடிக்கிறோம். ஒரு தெருவிலே நடக்கிறோம்; ஒரு தொழிலையே இருவரும் செய்கிறோம். காலமும் பெருத்த மாறுதல் அடைந்துவிட்டது. மக்களும் எவ்வளவோ முன்னேற்றமடைந்து விட்டார்கள். விஞ்ஞானம் பெருக்கம் அடைந்து விட்டது. இந்த நிலைமையில் நமக்குள் மனித தர்மத்தில் பேதம் இருப்பானேன்? ஆகவே, உள்ள பேதங்கள் மாறி, நாம் ஒருவருக்கொருவர் சமமாகவும் சகோதர உரிமையுடனும் இருக்கவேண்டும் என்பதற்காகத்தான் நான் பாடுபடுகிறேன். நம்மிடையில் பேத உணர்ச்சி வளரக்கூடாது என்பதில் எனக்குக் கவலை உண்டு. எனவே, முயற்சியில் பலாத்காரம் சிறிதும் இருக்கக்கூடாது என்பதிலும் எனக்குக் கவலை உண்டு. காலம் எப்போதுமே ஒன்றுபோல இருக்கமுடியாது.

நம்மில் இருதரப்பிலும் பல அறிஞர்களும், பொறுமைசாலிகளும் இருப்பதனாலேயே நிலைமை கசப்புக்கு இடமில்லாமல் இருந்துவருகிறது. இப்படியே என்றும் இருக்கும் என்று நினைக்க முடியாது. திராவிடர் கழகப் பின் சந்ததிகளும், பிராமணர்களின் பின் சந்ததிகளும் இந்தப்படியே நடந்துகொள்வார்கள் என்றும் கூறமுடியாது. ஆதலால், அதிருப்திகளுக்குக் காரணமானவைகளை மாற்றிக்கொள்வது இருவருக்கும் நலம். அதை நண்பர் ஸ்ரீனிவாச ராகவன் அவர்களும் நன்றாய் விளக்கி இருக்கிறார்;

அதாவது பிராமணர்களும் கால தேச வர்த்தமானத்துக்குத் தக்கபடி தங்களை மாற்றிக் கொள்ளவேண்டும் என்று சொன்னார். அதுதான் இப்போது இருதரப்பினரும் கவனிக்க வேண்டியது.

[இராயப்பேட்டை லட்சுமிபுரத்தில் 5-1-1953-ல் சொற்பொழிவு—'விடுதலை' 8-1-1953]

## 15. பூதேவர்களின் தேவ பாதுகாப்பு மாநாடு

தேசியப் பத்திரிகை நகரத்தில், பார்ப்பன நிருபர்கள் பந்தலில், பூதேவர்கள் கழகச் சார்பில், விஷமப் பிரச்சாரக் கோஷ்டிப் படையின் சதியாலோசனை மாநாடு நடவடிக்கைகள்.

விஷயாலோசனைக் கூட்டம்

தலைவர்: நம் மாநாட்டு ஊர்வலம் வெகு வெற்றிகரமாக முடிந்தது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன்.

வரவேற்புக் கழகத் தலைவர்: ஆம்! ஆம்! மிக மிக வெற்றிதான்! யாவரும் அறியாமல், ஒருவருக்கும் தெரியாமல், நாம் தனித்தனியாய் எங்கேயோ போகிற யாரோ ஒரு அனாமதேயம்போல் நடித்து—மெள்ள வந்து இத்தனைபேர் இந்த சதி ஆலோசனைக் கூட்டத்துக்கு வந்து சேர்ந்தது நமக்கு மாபெரும் வெற்றிதான்.

தலைவர்: சரி, சந்தோஷம்! மாநாட்டிற்கு முதல் தீர்மானம் என்ன?

காரியதரிசி: அதிகாரத்திலிருக்கும் தேவர்களுக்கு நன்றி செலுத்தவேண்டியதாகும்.

தலைவர்: சரி, அவர்களுக்காகத்தானே பாடுபடுகின்றோம். அதற்கு நன்றி செலுத்தவேண்டுமா? அவர்கள் கடமையைத்தானே அவர்கள் செய்கிறார்கள்?

காரியதரிசி: இருந்தாலும் நாம் நன்றி செலுத்தினால் இன்னும் அதிகமாக அக்கிரமங்கள், அநியாயங்கள் செய்து நமக்கு உதவி செய்வதோடு நல்ல யோசனையும் சொல்லி உற்சாகப்படுத்துவார்கள். நம் ஆதரவு பூரணமாக இருக்கிறது என்று—என்னமும் (எதுவும்) செய்து நம் எதிரிகளை அழித்துவிடுவார்கள். அந்தக் காலத்தில் நமக்கு விஷ்ணு, இந்திரன் இருந்தது போலத்தானே, இந்தக் காலத்தில் நம்மளவாள் ஆட்சியும், நம் அதிகாரிகளும் இருந்து வருகிறார்கள்? ஆதலால், செய்யும் யாகம், எக்கியம் என்பவைகளான—பத்திரிகைப் பித்தலாட்டம், விஷமத்தனம் ஆகியவைகளால் (நம்மளவாள்) அரசாங்கத்தாரும், நம் அதிகாரிகளும் வாழ்கிறார்கள். ஆதலால், அவர்களுக்கு நம் ஆதரவு காட்டும் முறையில் நன்றி காட்டவேண்டியது முதல் தீர்மானமாகும்.

தலைவர்: சரி, இதை நானே பிரரேபித்து விடுகிறேன். இனி அடுத்த தீர்மானம்?

காரியதரிசி: பத்திரிகைக்காரர்கள் கட்டுப்பாடாய் எதிரிகளின் நடவடிக்கைகளை, அவர்கள் அனுப்பும் சேதிகளை அறவே பிரசுரிக்கக் கூடாது. அப்படி மீறிப் பொது ஜனங்களுக்குப் பயந்து பிரசுரித்தாலும், நம் எதிரிகள், "இதை ஏனடா இவன் போட்டான்" என்று (அவர்கள்) வருத்தப்படும் மாதிரியில், அவர்களுக்குக் கேடுவரும் மாதிரியில் பிரசுரிக்கவேண்டும் என்று பத்திராதிபர்களைக் கேட்டுக்கொள்வதாகும்.

தலைவர்: இப்படித்தானே இப்போது நடக்கிறது! இதை மறுபடியும் அவர்களுக்குச் சொல்லுவதெதற்கு? ஒரு சமயம் அவர்கள் இதுவரை செய்துவருவதை நாம் அறியாமல் இருக்கிறோம் என்று நினைத்து, இதனால் வருத்தப்பட்டால் என்ன செய்வது?

வரவேற்புக் கழகத் தலைவர்: வருத்தம் ஒன்றும் ஏற்படாது. இன்னும் சிறிது சுறுசுறுப்பாய் வேலை நடக்கும். எதிரி நடவடிக்கைகளைக் கொன்று தீர்த்துவிடுவார்கள்; அனுமதியுங்கள்.

தலைவர்: சரி, இதை வரவேற்புத் தலைவர் பிரரேபிக்கட்டும்; காரியதரிசி ஆதரிக்கட்டும். இனி அடுத்த தீர்மானம்?

ஆலவாய்க் கதை தேவர்: அடுத்த தீர்மானமாக, நான் பிரரேபிப்பது, 'பத்திரிகை நிருபர்கள் நம் நோக்கங்களுக்கு, நலன்களுக்கு ஏற்பவும்—நம் எதிரிகளுக்குக் கேடுகள், கெட்டபெயர்கள் ஏற்படவும்,—கலகம் விளைவிக்காத நம் இயக்கக் கோழைகள் இருக்கும் இடத்திலும் கலகம் நடக்கும்படி தூண்டிவிடவும், எங்கும் காலித்தனம் தாண்டவமாடவும், அதுவே பாரதமாதா சேவை, தேசியத் தொண்டு, காங்கிரஸ் பக்தர்கள் கடமை என்று கருதும்படியாகவும்—அவ்வளவு திரித்துக் கற்பித்துச் சேதிகள் விடவேண்டும்; இந்தக் கைங்கரியத்தைச் சர்க்காரும் செவ்வனே செய்துவருகிறது. பிரசுரிக்க வேண்டுமென்று ஆசிரியர், நிருபர், ஏனைய ரிப்போர்ட்டர்களைக் கேட்டுக்கொள்கிறது' என்ற தீர்மானமாகும்.

இதன்மீது நான் சிறிது பேசுகிறேன். அதாவது, இந்தக் காரியத்தில் அல்லாது தேவர்களாகிய நாம் இனி வாழமுடியாது. எதிரிகள் வலுத்துவிட்டார்கள்; அவர்கள் மக்களை வசப்படுத்திக் கொண்டார்கள். தனிப்பட்ட முறையில் எதிரிகள் எதுவும் செய்யச் சக்தி உடையவர்களாகிவிட்டார்கள். நாம் தனியே நடக்கப் பயப்படவேண்டிய நிலையில் இருக்கிறோம். இப்போதைய விபீஷணர்களும், அனுமார்களும் கூட முன்காலத்தவர்களைப் போல நடக்கிறார்கள்.

எனவே, நம்மை இனி நம் பத்திரிகைக்காரர்கள்தான் காப்பாற்றவேண்டும்; நம் தந்திரங்கள், சூழ்ச்சிகள்தான் நமக்குக் கதிமோட்சம் கொடுக்கக் கூடியவை. ஆகவே இதை அவர்கள் உணரவேண்டும்.

தலைவர்: இதை நீங்களே பிரரேபியுங்கள். ஆசிரியர், நிருபர், பத்திரிகைச் சொந்தக்காரர்கள் வந்திருக்கிறார்களா?

காரியதரிசி: ஆம்!

தலைவர்: சரி, அடுத்து?

கணநாதர்: நம் அதிகாரிகள் சிறிதும் தயவு, தாட்சண்யம் பார்க்காது—கல் நெஞ்சத்துடன்—காரியம் பார்த்து நம் எதிரிகளின் ஸ்தானங்களை அழிக்கவேண்டும் என்கின்ற தீர்மானத்தை நான் பிரரேபிக்கிறேன்.

தலைவர்: இனி இப்படித் தனித் தனித் தீர்மானம் வேண்டாம். நம்மவர்கள், அதிகாரிகள், மனுதர்ம சாஸ்திரம், பராசரஸ்மிருதி, இராமாயணம், பாரதம், புராணம் ஆகியவைகளில் இராட்சதர், அசுரர் என்பவர்களை அழிக்க—பிராமணர்கள், தேவர்கள் என்பவர்கள் எப்படி எப்படி நடந்தார்களோ அப்படி அப்படியெல்லாம் நடக்க வேண்டுமென்று ஒரு தீர்மானம் போட்டால் போதும்.

மற்றவர்கள் ஏகோபித்து—சரி, சரி, ரொம்பவும் விளக்கமாகிவிட்டது. இது ஆளுகிறவர்கள், அதிகாரிகள், பத்திரிகைக்காரர்கள் ஆகியவர்களுக்கு மாத்திரம் அல்ல; தேவர்கள் யாவருக்குமே பொருந்தியதாகும்.

தலைவர்: சரி, விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டம் ஒத்திப் போடப்பட்டது. இவை பொதுமாநாட்டில் முடிவுசெய்தபின் மற்றவை.

['விடுதலை'-'சித்திரபுத்திரன்' உரையாடல்—2-11-1953]

# 16. பார்ப்பனர் உயர் வாழ்வு

பெரியோர்களே! தோழர்களே!

இன்று பார்ப்பனர்களெல்லாம் சவுக்கியமாக இருக்கிறார்கள். பிச்சை எடுக்கிற பார்ப்பான் கூட இரண்டு வேளை காப்பி குடிப்பான். தினமும் வெயிலில் பாடுபடும் குடியானவனுக்கோ—அவன் குடும்பத்துக்கோ காப்பி என்றால் என்ன என்றே தெரியாதே! கஞ்சிதான் இருக்கும்; வெறும் கூழ்தான் இருக்கும். அதற்கு உப்பும் இருக்காதே!

ஆனால் பார்ப்பனர்களில்—ஓட்டலில் வேலை செய்யும் பார்ப்பானாக இருந்தாலும், கோவிலில் வேலை செய்யும் பார்ப்பானாக இருந்தாலும், புரோகிதப் பார்ப்பானாக இருந்தாலும்—அவன் மகனெல்லாம் நன்றாகப் படித்து கலெக்டர், ஜட்ஜ், மந்திரி, இந்தியா பிரஸிடெண்டாக ஆகிவிடுகிறானே! ஆனால் உழைக்கிற நாம் கீழான நிலையில்தானே இருக்கிறோம்!

நேற்றுவரையில் மந்திரியாக இருந்தாரே இராஜகோபாலாச்சாரியார் அவர் என்ன பிரபுவின் மகனா? அவர்தானே சொல்லி இருக்கிறார், 'ஸ்காலர்ஷிப்பில்' படித்ததாக! அவருடைய பாட்டன் புரோகிதர்; இவர் முதல் மந்திரி! இந்த நாட்டை ஆளுகின்றாரே நேரு, அவர் ஒரு காஷ்மீரத்துப் பார்ப்பனர். இங்கே எப்படிக் கல்யாணம், கருமாதி செய்கிற பார்ப்பனரைப் புரோகிதர் என்று சொல்லுகிறோமோ, அப்படி நேரு குடும்பம் அங்கே 'பண்டா' என்று சொல்லுகிற புரோகிதக் குடும்பம். அவருடைய பாட்டன் அப்படிப்பட்ட பண்டா என்று சொல்லும் புரோகிதர்; அவருடைய அப்பன் வக்கீல்; இவர் பெரிய தலைவர்—காங்கிரஸ் ராஷ்டிரபதி—இந் நாட்டுக்கே முதல் மந்திரி. இராஜகோபாலாச்சாரியாரின் பாட்டன் ஒரு சாமியார். அவரே சொல்லி இருக்கிறார், 'எனக்கு மைசூரில் ஸ்காலர்ஷிப் கொடுத்தார்கள்; அதில்தான் நான் படித்தேன்' என்று.

இன்றைக்கு இந்த நாட்டுக்குப் பிரசிடெண்டாக இருக்கிற இராஜேந்திர பிரசாத் ஒரு பார்ப்பனர். அவருடைய குடும்பம் ஒரு மலைஜாதி நாட்டுப் பார்ப்பனர் குடும்பம்.

இப்படி முக்கியமானவர்களைப் பற்றி மட்டுந்தான் சொன்னேன். இப்படிப் பட்டவர்களெல்லாம் தங்கள் சாதி காரணமாகவே உயர்ந்திருக்கிறார்கள். நம்மவனுக்கு சற்றுப் பணக்காரத் தன்மை வந்துவிட்டால், அவனுக்கு தான் ஏன் கீழ்சாதி என்றே படுவதில்லை. நம்மவருள் மிராசுதார், புலவர் என்பவருக்கும் நாம் ஏன் கீழ்சாதி என்றே படுவதில்லை. நம்மவர் எவராவது இதுபற்றிச் சிந்தித்தது உண்டா? அது கிடையவே கிடையாது. எப்படியாவது நமக்குப் பணம் வேண்டும்; எப்படியாவது நம்மை மிராசு, மிட்டா என்று மற்றவன் சொன்னால் போதும் என்று கருதுவதும், பார்ப்பான் தன்னைத் தர்மப்பிரபு என்று சொன்னால் போதும் என்று கருதிக் கோயில் கட்டுவதும் கும்பாபிஷேகம் செய்வதும்; 100 ஏக்கர், 200 ஏக்கர், 500 ஏக்கர், 1000 ஏக்கர், 100 வேலி, 200 வேலி, 700 வேலி என்று காவேரிப் பாசனத்தில் எழுதிவைக்கிறானே! இதை எழுதி வைத்தவரெல்லாம் நம்மவர்கள். அப்படிப்பட்ட நாம் ஏன் கீழ்சாதி? இப்படிப்பட்ட மக்களுடைய சரித்திரம் எப்படிப்பட்டது? நாம் உயர்ந்தவர்களாக வாழ்ந்ததாகத்தானே சரித்திரம் கூறுகிறது! பார்ப்பனர் வந்தபிறகுதானே நாம் தாழ்ந்ததாக உள்ளது? எந்த நாட்டிலேயாவது அந்த நாட்டு உழைப்பாளி—தர்மப் பிரபுக்கள் தாழ்ந்த சாதியாக இருந்திருக்கிறார்களா?

காட்டுமிராண்டிகளும்கூட முன்னேறி வர திராவிடர் மட்டும் இழிசாதியினராய் இருப்பதா?

மற்ற நாட்டுக்காரனுக்கு வேட்டிக் கட்டத் தெரியாதபோது நாமெல்லாம் நாகரிகத்தோடு வாழ்ந்து வந்தோம்; வெளிநாட்டான் காட்டுமிராண்டியாகவே இருந்தான். அப்படி இருந்தவன் நாளுக்கு நாள் வளர்ந்து, இன்றைக்கு அதிசயப்படும்படியாக வளர்ந்து விட்டானே!

வெள்ளையன்தான் இரயிலைக் கண்டுபிடித்தான்; இந்த ஒலிபெருக்கி, கேஸ் லைட், மோட்டார், விமானம் எல்லாம் அவன் கண்டுபிடித்தவைதாமே! இன்னும் எலெக்டிரிக் விளக்கும் அவன் கண்டுபிடித்திருக்கிறான். ஒரு பொத்தானை அழுத்தினால் இலட்சம் விளக்கு எரிகிறது. இந்த வெள்ளைக்காரன் 1000 ஆண்டுக்கு முன்பு பாம்பு, மீன், காய் எல்லாம் பச்சையாகத் தின்றவன். அதே நேரத்தில் நம்மவன் உயர்ந்த வாழ்வு வாழ்ந்தான்.

இன்றைக்குச் சீரங்கம் கோவிலை எடுத்துக்கொள்ளுங்களேன். அதில் எவ்வளவு பெரிய சிலைகளைச் செய்து வைத்திருக்கிறார்கள்? எவ்வளவு நல்ல சித்திரங்களை வரைந்து வைத்திருக்கின்றார்கள்? அங்கே மொட்டைக் கோபுரம் என்று ஒன்று இருக்கின்றது. அங்கே நான்கு கால்கள் இருக்கின்றன. அது 40 அடி மேலே நிற்கின்றது; அந்தக் கல் ஒவ்வொன்றும் 4 அடி, 3 அடி பருமன் இருக்கும். 40 அடி மேலே நின்றால் 10 அடியாவது பூமியில் அஸ்திவாரம் எடுத்திருக்க வேண்டும். இப்போதுதானே வெள்ளைக்காரன் 'ஜாக்கி' கொண்டு வந்திருக்கிறான். இந்த சீரங்கம் கோவிலை என்ன இன்றைக்கு நேற்றா கட்டினார்கள்? அப்போது இப்படித் தூக்கி நிறுத்த வசதி ஏது? அப்படிப்பட்ட வசதியில்லாத காலத்திலேயே தூக்கி நிறுத்தியிருக்கிறானே! அதுமட்டுமல்ல. காவேரியையே வேறுபக்கம் திருப்பி இருக்கிறானே ஒரு அரசன்! அப்படிப்பட்ட நாம் எப்படி இந் நிலைக்கு வந்தோம்? எனக்கு முன் பேசியவர் சொன்னார்—மொகஞ்சோதாரோ, ஹாரப்பா பற்றி; அவை இப்போது சாயபுக்கிட்டே போய்விட்டன. அவை 4000 வருடங்கட்கு முந்தியவை என்று கூறுகிறார்கள்.

இந்தப் பார்ப்பனர்கள், தங்கள் மாட்டுக்குப் புல்லைத் தேடிக்கொண்டு இங்கே வந்து, நம்மைக் கோயிலைக் கட்டச்சொல்லி சாமியைச் செய்யச் சொல்லி—அந்தச் சாமியை நாம் தொட்டால் தீட்டு, சாமி செத்துப் போய்விடும் என்று சொல்லிவிட்டானே? இதை இந்துப் பணக்காரனும் பண்டிதனும் ஒப்புக்கொண்டதன் விளைவாக, நாம் இப்படி நாசமாகிவிட்டோம். மிருகங்கள் இருக்கின்றனவே! அவற்றில் பார்ப்பாரக் கழுதை, பறைக் கழுதை என்று இருக்கின்றனவா?

உலகத்திலேயே மிகவும் தாழ்வாகப் பேசப்படுகின்ற—கருதப்படுகின்ற மக்கள் நீக்ரோக்களாவர். அவர்கள் காட்டில் திரிபவர்கள்; ஆடைக்குப் பதிலாகத் தழைகளைக் கட்டிக்கொண்டு இருப்பவர்கள். அவர்கள் உதடு தடித்திருக்கும். அவர்கள் இப்போது அமெரிக்காவிலிருக்கிறார்கள். அமெரிக்காவில் அவர்கள் ஜனத்தொகை 1 கோடியே 30 இலட்சமாகும். அப்படிப்பட்ட மக்கள் இன்று 100க்கு 90 பேர் படித்திருக்கின்றார்கள். உலகத்தில் தாழ்ந்த காட்டுமிராண்டி, இன்றைக்கு எவ்வளவு முன்னேறி இருக்கிறான். இவர்கள் முன்னேறியது எல்லாம் கடந்த 150 வருடத்திற்குள்ளாகத்தான். இவர்கள் ஆட்களில் 100க்கு ஒருவன் வெள்ளைக்காரனைப் போலவே பி. ஏ. படித்திருக்கிறான். வெள்ளைக்காரனைப்போலவே அவனுக்குச் சரிசமமாக இருக்கிறான். ஆனால், இங்கு இன்று எல்லா உயர் பதவிகளும் பார்ப்பனருக்கேதானா? பிச்சை எடுக்க வந்தவன்தான் இன்று மந்திரி, பிரஸிடெண்ட், ராஷ்டிரபதி, சங்கராச்சாரி—எல்லாம் அவன்தானே? அரசாங்கத்தில் உயர்ந்த பதவி, எதை எடுத்தாலும் பார்ப்பான்தானே இருக்கிறான்? எப்படி இந்த நிலை வந்தது?

நாளைக்கு ஒரு கம்யூனிஸ்டோ, சோஷ்யலிஸ்டோ வருவார்கள். "என்ன, நேற்று இந்த ராமசாமி ஏதேதோ பேசினாராமே; மக்கள் உணவுக்கு, உடைக்கு ஏதாவது பரிகாரம் கூறினாரா?" என்பார்கள். நம் மட ஜனங்களும் அதை நம்புவார்கள்!

நான் கேட்பதெல்லாம்—“ஏன் பிச்சை எடுக்கிறான்?” என்றுதான் கேட்கிறேன். “ஏன் பட்டினி? யாருக்குப் பட்டினி?” என்றுதான் கேட்கிறேன்.

இந்தக் கேள்வியை, அந்தக் கம்யூனிஸ்டைக் கேளுங்களேன். “ஊரெல்லாம் பட்டினி; மக்கள் பட்டினி ஊர்வலம் போகிறார்களே” என்கிறார்கள். அப்படிப் போகிற பட்டினி ஊர்வலத்தில் எந்தப் பார்ப்பான் போகிறான்? நமக்குக் கஞ்சிக்கு உப்பில்லை என்றால்—அவன் சோற்றுக்கு நெய்யில்லை என்கிறான். நம்மவனுக்கு வேட்டியில்லை, கிழிந்ததையெல்லாம் ஒட்டி, வெட்டித் தைத்துக்கொண்டு கட்டிக்கொள்கிறான். பார்ப்பானுக்கா வேட்டியில்லை? வேட்டி வாங்கித் தருபவனும் நம்முடைய பணக்காரன்! பார்ப்பனப் பெண்கள் 18 முழமல்லவா கட்டுகிறார்கள்? மொட்டைப் பார்ப்பனத்தியும் அல்லவா 18 முழம் கட்டுகிறாள்?

[இராமியம்பட்டியில் 30-5-1954-ல் சொற்பொழிவு-‘விடுதலை’ 6-5-1954]

## 17. பேதச் சின்னத்தை அகற்றுக

28-3-1955-ஆம் தேதி அழகிரி நினைவுநாள் ஆதலாலும், நானும் அத் தேதியில் தஞ்சையில் இருக்க நேர்ந்ததாலும், அன்று நான் தஞ்சையில் உள்ள திரு. அழகிரியின் நினைவுச் சின்னத்திற்குச் சென்று மாலையிட்டு வரலாம் என்று கருதிச் சென்றுவந்தேன். அதுசமயம் அந்தச் சுடுகாட்டில் பார்ப்பனர், சூத்திரர் என்று இடம் பிரித்து, ‘சூத்திரர்கள் இடம்’ என்பதாகச் செதுக்கப்பட்ட கல் ஒன்று நட்டு வைத்து இருப்பதைப் பார்த்தேன். அதைப் பார்த்தவுடன் என் மனம் சங்கடப்பட்டது. அக் கல்வெட்டுக்குச் சம்பந்தப்பட்ட இடத்தில்தான் திரு. அழகிரியையும், நெடும்பலம் திரு. சாமியப்ப முதலியார் அவர்களையும் அடக்கம் செய்திருந்ததுடன், அவ்விருவர்களுக்கும் ஸ்தூபிகளும் கட்டப்பட்டிருந்தன. நான் அங்கிருந்து திரும்பி வரும்போது அக் கல்லைப் பெயர்த்தெடுத்து அப்புறப்படுத்தி விடும்படி, தஞ்சை முனிசிபல் கவுன்சிலுக்கு, சென்னை சென்றவுடன் ஒரு வேண்டுகோள் விடுவதென்று எண்ணிக்கொண்டு வந்தேன்.

தஞ்சையை விட்டு நேரே சென்னைக்கு வராமல், பல இடங்களுக்குச் சென்றுவிட்டு வரவேண்டி இருந்தபடியால், அதை உடனே தெரியப்படுத்த முடியாமல் போய்விட்டது.

இப்போது இந்த வேண்டுகோளை தஞ்சை முனிசிபல் கவுன்சிலுக்குச் (நகராட்சி மன்றத்திற்கு) செய்துகொள்ளுகிறேன்.

அதாவது, 1. தஞ்சை நகர புதைகாடு, சுடுகாடு என்பதாக இருக்கும் இடத்தில் பின்புறம் கோடியில் ‘சூத்திரர்கள் இடம்’ என்பதாகக் கல்லில் அடித்து (மைல் கல் போல்) நட்டு இருக்கும் அந்தக் கல்லானது, தஞ்சை நகராட்சிக்குச் சேர்ந்ததாயிருந்தால் தஞ்சை நகராட்சி மன்றத்தார் அருள்கூர்ந்து அக் கல்லை அப்புறப்படுத்திவிட வேண்டுமாய் வேண்டிக்கொள்ளுகிறேன்.

ஏனெனில், அந்தக் கல் திராவிட மக்கள் இனத்தையே இழிவுபடுத்தும் அறிகுறியாகக் காட்சி அளிக்கிறது. இன்று மக்களுக்குள்ள உணர்ச்சியைப் பொறுத்தும், மனிதத் தன்மையைப் பொறுத்தும் திராவிட நாட்டில் எந்த இடத்திலானாலும் இப்படிப்பட்ட பேதச் சின்னமும், இழிவுச் சின்னமும், பேத நடைமுறையும் இருந்துவருவது சிறிதும் ஏற்கக்கூடியதும், பொறுக்கக்கூடியதும் அல்ல என்றே கருதுகின்றேன்.

2. மேலும், இப்படியாகவும் மற்றும் இதுபோன்ற தன்மையதாகவும் இருந்துவரும் பேதச் சின்னமும், இழிவுச் சின்னமும், நடைமுறையும் தமிழ்நாட்டில் இன்று தஞ்சையில் மாத்திரமல்லாமல் மற்றும் எந்த ஊரில், எந்த நாட்டில் இருந்தாலும் அந்த இடத்தில் உள்ள

திராவிடத் தோழர்கள் அருள்கூர்ந்து அரசாங்கத்திற்கும், அந்தந்த இடத்தைச் சேர்ந்த சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கும் அதை நீக்கிவிடும்படி வேண்டுகோள் செய்துகொள்வதோடு, அருள்கூர்ந்து நமக்கும் அவசியம் தெரிவிக்க வேண்டுமாய்ப் பொதுமக்களை வேண்டிக்கொள்ளுகிறேன்.

['விடுதலை'—அறிக்கை—5-4-1955]

## 18. பார்ப்பனர் திமிர்

பார்ப்பனர் கொடுமைகளைப்பற்றி இப்பொழுது உள்ள வாலிபர்களைக் கேட்டால் தெரியாது; 60 வயதுக்கு மேற்பட்டவர்களைக் கேட்டால் தெரியும். 15 வயது பார்ப்பனப் பையன் 60 வயதுக் கிழவனைக்கூட, "ஏண்டா, இராமசாமி!" என்றுதான் கூப்பிடுவான். நம் மக்கள் பாடுபட்டாலும் வயிராறக் கஞ்சி கிடைப்பதில்லை. பாடுபடாத பார்ப்பனர்கள் மட்டும் நான்கு வகைப் பதார்த்தங்களுடன் நெய் ஊற்றிக்கொண்டு சாப்பிடுவார்கள்; 12 முழ வேஷ்டியைக் கட்டிக்கொள்வார்கள். இந்த நிலை சமுதாய அமைப்பினால்தானே? இப்போதுதான் மக்கள் இதை உணர முடிகிறது.

[புகளூர் செம்படாபாளையத்தில், 26-7-1956-ல் சொற்பொழிவு—'விடுதலை' 10-8-1956]

## 19. அரசியல் புரட்சி இல்லை

இந்த நாட்டில் அரசியல் புரட்சி என்பதாக ஒன்று, சரித்திரம் தெரிந்த காலந்தொட்டு நடந்து வரவில்லை.

தோழர்களே! புராணங்களில்கூட அரசியல் காணப்படுகின்றது. கந்த புராணம் இருக்கின்றது. அதில் சூரபதமன் அரசாண்டு இருக்கின்றான். பாகவதத்தில் விஷ்ணு, பத்து கடவுள்களாக அவதாரம் எடுத்தான். அந்த 10 அவதாரங்களும் 10 அரசர்களைக் கொல்லுவதற்கே ஆகும். அவர்கள் இராவணன், இரணியன், இரண்யாட்சதன், மாபலி முதலானவர்களைக் கொன்று இருக்கிறார்கள். அப்படி அவதாரம் எடுத்த புராணக் கடவுள்கள், புராண கால அரசர்களை ஒழித்தது அரசியலுக்காக அல்ல; சாதிக்காக ஆகும். அத்தனை ராஜாக்கள் பண்ணிய காரியங்களும் ஒரு சாதியாரை,—அதாவது தேவர்களைக் கொடுமை பண்ணினார்கள் என்பதே!

இந்தத் தேவர்கள் எத்தனை பேர்? இன்றையப் பார்ப்பனர்கள் போல 100க்கு 2, 3 பேர்களே! ஆனால், அசுரர்கள் என்பவர்கள் 100க்கு 97 பேர்கள். இந்த 97 பேர்கள் மீது 100க்கு 3 பேராக உள்ள தேவர்களால் சுமத்தப்பட்ட பழியும் அதற்காக அவர்களை ஒழித்ததும் அரசியல் ஆகிவிடுமா? அது சாதிப் போராட்டமேயாகும்.

அடுத்து, சரித்திர காலத்தை எடுத்துக்கொண்டால் நமக்குக் கேடான ஆட்சியும், பார்ப்பனனுக்கு நன்மையான ஆட்சியுமே நடந்து வந்திருக்கின்றது. அதன் காரணமாக தேவாசுரப் போராட்டம் நடைபெறவில்லை. அந்த அரசர்கள் எல்லாம் பார்ப்பானுக்கு அடிமையாக இருந்து, அவனுக்குத் தொண்டுசெய்வதே மேலான புண்ணியம் என்று கருதி ஆண்டு வந்தார்கள். பார்ப்பானுக்குப் பிழைக்கக் கோவிலும் மானியமும் வேத பாடசாலையும் ஏற்படுத்தி, அவர்கள் ஆதிக்கத்தை வளரச்செய்யப் பாடுபட்டார்களே ஒழிய, நம் மக்களின் நலனிலோ கல்வியிலோ அக்கறை காட்டவில்லை.

அடுத்து, முஸ்லிம்கள் இந்த நாட்டை ஆண்டார்கள். அவர்களும் பார்ப்பானுக்கு வாய்க்கரிசி போட்டுவிட்டுத் தங்கள் ஆட்சியை நடத்திக்கொண்டு போனார்களே ஒழிய, இந்த நாட்டு மக்களைப்பற்றிக் கவலைப்படவில்லை.

அடுத்து, அறிவு வளர்ச்சி அடைந்த வெள்ளைக்காரன் 200 ஆண்டுகள் ஆட்சி புரிந்தும்—நம் நலனிலோ, கல்வியிலோ அக்கறை செலுத்தாமல், பார்ப்பானுக்குக் கல்வி, உத்தியோகம், பதவி முதலியன பெற வாய்ப்பளித்து வந்தானே ஒழிய, நம்மைப்பற்றி கவலைப்படவில்லை.

அடுத்து, காங்கிரஸ் ஆட்சி ஏற்பட்டது. காமராஜர் ஆட்சிப் பொறுப்புக்கு வரும் வரையில் எவனும் இந் நாட்டு மக்களின் நலனில் அக்கறை காட்டாமல்—பார்ப்பானுக்கே, பார்ப்பான் உயர்வுக்கே, பார்ப்பான் வாழ்வுக்கே—பாடுபட்டு வந்தார்கள்.

தோழர்களே! சேரன், சோழன், பாண்டியன் காலம் முதல் காமராஜர் பதவிக்கு வரும் முன்பு வரையில், எவராவது—100க்கு 97 பேராக உள்ள இந்த நாட்டு மக்களைப் பற்றிக் கவலை எடுத்துக்கொண்டு பாடுபட்டார்கள் என்று சொல்ல, ஒன்றுமே இல்லை.

[தூத்துக்குடியில், 18–3–1961-ல் சொற்பொழிவு—'விடுதலை' 6–4–1961]

## 20. பார்ப்பனத் தோழர்களுக்கு

பார்ப்பனத் தோழர்களே! நான் மனிதத் தன்மையில் பார்ப்பனர்களுக்கு எதிரி அல்லன். தமிழ் நாட்டிலேயே அநேக பார்ப்பனப் பிரமுகர்கள்–பெரியோர்கள் ஆகியோர்களுக்கு அன்பனாகவும், மதிப்புக்குரியவனாகவும் நண்பனாகவும் கூட இருந்து வருகிறேன். சிலர் என்னிடத்தில் அதிக நம்பிக்கையும் வைத்திருக்கிறார்கள்.

சமுதாயத் துறையில் பார்ப்பனர்கள் அனுஷ்டிக்கிற உயர்வு, அவர்கள் அனுபவிக்கிற அளவுக்கு மேற்பட்ட விகிதம்—ஆகியவைகளில்தான் எனக்கு வெறுப்பு இருக்கிறது. இது பார்ப்பனர்களிடம் மாத்திரமல்ல, இந்த நிலையில் உள்ள எல்லோரிடத்திலுமே நான் வெறுப்புக் கொள்கிறேன். இந்நிலை என்னிடத்தில் ஏற்பட்டிருப்பதற்குக் காரணம், ஒரு தாய் வயிற்றில் பிறந்த எல்லா மக்களுக்கும் சம அனுபவம் இருக்க வேண்டும் என்று கருதி, ஒன்றுக்கொன்று குறைவு, அதிகம் இல்லாமல் பார்த்துக்கொள்வது எப்படி ஒரு தாய்க்கு இயற்கைக் குணமாக இருக்குமோ, அதுபோலத்தான் எனக்கும் தோன்றுகிறது. மற்றும், அந்தத் தாய் தனதுமக்களில் உடல்நிலையில் இளைத்துப்போய், வலிவுக்குறைவாய் இருக்கிற மகனுக்கு, மற்ற குழந்தைகளுக்கு அளிக்கிற போஷணையை விட எப்படி அதிகமான போஷணையைக் கொடுத்து மற்ற குழந்தைகளோடு சரிசமானமுள்ள குழந்தையாக ஆக்க வேண்டுமென்று பாடுபடுவாளோ, அது போலத்தான் நான் மற்ற வலுக் குறைவான பின் தங்கிய மக்களிடம் அனுதாபம் காட்டுகிறேன். இந்த அளவுதான் நான் பார்ப்பனரிடமும், மற்ற வகுப்புக்களிடமும் காட்டிக்கொள்ளும் உணர்ச்சி ஆகும்.

உண்மையிலேயே பார்ப்பனர்கள் தங்களை இந்நாட்டு மக்கள் என்றும், இந்நாட்டிலுள்ள மக்கள் யாவரும் ஒருதாய் வயிற்றுப் பிள்ளைகள் என்றும், தாயின் செல்வத்துக்கும், வளப்பத்துக்கும் தாங்கள் எல்லோரும் சரிபங்கு விகிதத்துக்கு உரிமை உடையவர்கள் என்றும் கருதுவார்களேயானால், இந்நாட்டிலே சமுதாயப் போராட்டமும், சமுதாய வெறுப்பும் ஏற்பட வாய்ப்பே இருக்காது.

நான் காங்கிரஸில் இருந்த காலத்தில்—அதாவது எனது நல்ல நடுத்தர வயதான 40–வது வயது காலத்தில்—நான் ஒரு சுயநலமும் எதிர்பாராமல், எதிர்பார்க்கவேண்டிய அவசியமும் இல்லாமல் (உயர்ந்த அந்தஸ்தில்) இருக்கும் போதே, பார்ப்பன சமுதாயத்தில் இரண்டறக் கலந்து, எவ்வளவு தொண்டு செய்திருக்கிறேன் என்பது எல்லாப் பார்ப்பனர்களுக்கும் தெரியும். நான் காங்கிரஸிலிருந்து பிரிந்ததே, பார்ப்பன வெறுப்புணர்ச்சி ஏற்பட்டுத்தான் பிரிந்தேனேயொழிய, மற்றபடி எந்தவிதமான சுயநலம் காரணமாகவும்

பிரியவில்லை. பிரிந்தபிறகு பார்ப்பன வெறுப்புணர்ச்சியோடு தொண்டாற்றுகிறேன் என்றால், அத்தொண்டில் எனக்குச் சுயநலம் என்ன இருக்கிறது? அல்லது எனது தொண்டில் நான் வெளிப்படையாகச் சொல்லுகின்ற கருத்தல்லாமல் வேறு உட்கருத்து என்ன இருக்கிறது?

என்னைப் போலவே என் கருத்துக்களுக்கெதிரான கொள்கைகளின்மீது உண்மையாகப் பாடுபடுகிற இராஜாஜி அவர்களுக்கு என்னைப் பற்றி நன்றாகத் தெரியும். எப்படியோ நாங்கள் இரு பிளவாகப் பிளந்து ஒன்றுக் கொன்று ஒட்டமுடியாத அளவு விலகிப் போய்க்கொண்டிருக்கிறோம்.

எனக்கு, "நான் தோல்வியடைய மாட்டேன்; நிதானமாகவாவது வெற்றியடைவேன்" என்கிற நம்பிக்கை உண்டு. இராஜாஜியோ, எப்படியோ யோசனையின்றி ஆத்திரப் பட்டுத் தவறான வழியில் இறங்கிவிட்டார். உண்மையிலேயே வருணாசிரம சாதி முறையைப் புதுப்பித்து நிலைநிறுத்துவது சாத்தியமாகுமா? காந்தி இப்படிச் சொல்லித் தப்பித்துக்கொண்டார் என்றால், அது இன்றைக்கு 35 ஆண்டுக்கு முந்தியகாலம். இந்தக் காரணத்தினால்தான், அவர் கொல்லப்பட்டதற்குத் தமிழர்கள் அவ்வளவாக வருந்தவில்லை. இன்றைய இராஜாஜியின் கருத்தை, என்னை அவர் காங்கிரஸில் இழுத்த காலத்தில் சொல்லியிருப்பாரேயானால், அவருக்கு ஏற்பட்ட பெருமையும், பதவி வாய்ப்பும், செல்வ வளர்ச்சியும் ஏற்பட்டு இருக்கமுடியுமா? ஆகவே அவருடைய இன்றைய நிலைமை மக்களை ஏய்த்து வளர்ந்தவர் என்றுதானே பொருள்? நான் அப்படியொன்றும் ஏய்க்க வில்லையே; உளறவும் இல்லையே?

நான்—எனக்கு ஞாபகமிருக்கிற வரையில்—என்னுடைய 10ஆவது வயதிலிருந்தே நாத்திகன்; சாதி, சமயச் சடங்கு முதலியவற்றில் நம்பிக்கையில்லாதவன். ஒழுக்க சம்பந்தமான காரியங்களில்கூட, மற்றவர்களுக்குத் துன்பமோ, தொல்லையோ தரப்படாது என்பதைத் தவிர, மற்றபடி வேறு காரியங்களில் ஒழுக்கத்துக்கு மதிப்புக் கொடுத்தவனும் அல்லன். பணம், காசு, பண்டம் முதலியவைகளில் எனக்குப் பேராசை இருக்கிறது என்றாலும், அவைகளைச் சம்பாதிப்பதில் சாமர்த்தியத்தையாவது காட்டியிருப்பேனே யொழிய, நாணயக் குறைவையோ, நம்பிக்கைத் துரோகத்தையோ காட்டியிருக்க மாட்டேன். யாரையும் ஏமாற்றலாம் என்பதில் நான் சிறிதுகூட முற்பட்டிருக்கமாட்டேன். வியாபாரத் துறையில் பொய் பேசி இருந்தாலும், பொதுவாழ்வுத் துறையில் பொய்யையோ, மனதறிந்த மாற்றுக் கருத்தையோ வெளியிட்டிருக்கமாட்டேன்.

இப்படிப்பட்ட நான், எதற்காக ஒரு சமுதாயத்தாரிடம் விரோதமோ, குரோதமோ கொள்ளவேண்டும்? நான் நமது நாட்டையும், சமுதாயத்தையும் ஆங்கில நாட்டுத் தன்மைக்கும், நாகரிகத்திற்கும் கொண்டு வரவேண்டும் என்கின்ற ஆசையுடையவன். இதற்கு முட்டுக் கட்டையாகப் பார்ப்பன சமுதாயம் இருக்கிறது என்று சரியாகவோ, தப்பாகவோ கருதுகிறேன்.

தாங்கள் அப்படி இல்லையென்பதைப் பார்ப்பனர்கள் காட்டிக்கொள்ளவேண்டாமா? உண்மையிலேயே எனக்கு மாத்திரம் பார்ப்பனர்களுடைய ஆதரவு இருந்திருக்குமானால் நம் நாட்டை எவ்வளவோ முன்னுக்குக் கொண்டுவர என்னால் முடிந்திருக்கும்.

நம் நாடு இன்று அடைந்திருக்கிற இந்தப் போலி சுதந்திரம் என்பது ஒன்றைத் தவிர—மற்ற எல்லா வளர்ச்சிக்கும் பார்ப்பன சமுதாயம் எதிரியாக இருந்திருக்கிறது. இதுமாத்திரம் அல்லாமல், நாட்டில் சமயம், தர்மம், நீதி, அரசியல் என்னும் பேரால் இருந்து வளர்ந்துவரும் எல்லாக் கேடுகளுக்கும் பார்ப்பனசமுதாயம் ஆதரவளித்தே வந்திருக்கிறது, வருகிறது. அவர்களின் எதிர்ப்பையும் சமாளித்துத்தான் இந்த நாடும் இந்தச் சமுதாயமும் இந்த அளவுக்கு வளர்ந்திருக்கிறது. இனி வளர்ச்சியை மெதுவாக்கலாமே தவிர, யாராலும் தடுக்கமுடியாது என்கிற நிலைமையைக் காண்கிறேன்.

ஆகவே, பார்ப்பன சமுதாயம் இன்றையத் தங்கள் போக்கை மாற்றிக் கொள்ள வேண்டும். இராஜாஜியின் போக்கைத் தங்கள் சமுதாயத்துக்கு ஏற்பட்ட ஒரு அபாயகரமான நோய் என்று கருதி, அவரை வெறுத்து நல்ல செல்வாக்குள்ள பார்ப்பனர்கள் எல்லாம் அறிக்கை விடவேண்டும். அதுமாத்திரம் போதாது. வரப்போகும் தேர்தலில் தங்களின் நல்லெண்ணத்தைக் காட்டிக்கொள்ள வேண்டும். அதாவது—இந்தத் தேர்தலில் இராஜாஜியின் போக்குக்கு அல்லது அவர் கட்சிக்கு, அல்லது அவர் கூட்டுஒப்பந்தம் செய்துகொண்டிருக்கிற எந்தக் கட்சிக்குமாவது வோட்டுப் போடுவது இல்லை; அல்லது காங்கிரசுக்கே வோட்டுப் போடுவது; அல்லது காங்கிரசும் அல்லாத, இராஜாஜியும் அல்லாத மற்ற கட்சிக்குப் போடுவது—என்கின்ற இப்படியான எந்த முறையைக் கையாண்டாலும் இந்தத் தேர்தலில் பார்ப்பனர்கள் பொதுமக்கள் நம்பிக்கையைப் பெறமுடியாது; பொதுமக்கள் சந்தேகமும் மாறாது. எதிர் காலத்தில் பார்ப்பனர்கள் பொதுமக்களின் அன்பையும் அபிமானத்தையும் நல்லெண்ணத்தையும் நட்பையும் பெறவேண்டுமானால், பார்ப்பனர்களுக்குப் புத்திசாலித்தனமாக நடந்துகொள்ள இன்று ஒரே ஒரு வழிதான் இருக்கிறது.

அதாவது, பார்ப்பனர்கள் வரப்போகும் தேர்தலில் எந்தக் கட்சிக்கும் யாருக்கும் எந்த முறையிலும் வோட்டுப் போடாமல் விலகி இருப்பதே ஆகும். இத்தேர்தல் உண்மையிலேயே பார்ப்பனர்களுக்கு ஒரு சோதனைக் காலம். தேர்தலில் இராஜாஜி தமிழ்நாட்டைப் பொறுத்தவரை கண்டிப்பாக ஜெயிக்கமாட்டார். கூட்டு ஒப்பந்தங்கள் எல்லாம் ஒருவரை ஒருவர் ஏமாற்றுகிற அடிப்படையில் ஏற்பட்டவைதான். கூட்டு ஒப்பந்தத்தின்படி எந்தக் கட்சி ஜெயித்தாலும் ஒருவருக்கொருவர் உபயோகப்பட மாட்டார்கள். காங்கிரஸ் ஜெயிப்பது என்னமோ உறுதி. காங்கிரஸ் ஜெயித்தால் அதன் பின்விளைவு பார்ப்பன வெறுப்புத்தான் மக்களிடம் வளரும்.

இப்போது ஏதோ சில பார்ப்பனர்கள் உத்தியோகத்தில் முக்கிய பதவிகளில் இருக்கிறார்கள் என்பதாலேயே பார்ப்பனர்களுக்கு நல்ல பலன் ஒன்றும் ஏற்பட்டுவிடாது; தற்கால சாந்தியாய் ஏதாவது நடக்கலாம். இந்த உத்தியோகஸ்தர்களாலும் அய்க்கோர்ட் ஜட்ஜுகள், செக்ரடரிகள், கலெக்டர்கள் முதலியவர்களாலும் மக்களிடம் பார்ப்பன வேறுபாடுகள், வெறுப்புகள் வளர்ந்துதான் வருகிறது. அவர்களை நம்பியே பார்ப்பனர்கள் இருப்பது அவ்வளவு புத்திசாலித்தனமல்ல.

இவற்றையெல்லாம் விட, பார்ப்பனர்கள் பண்டித நேருவைப் பகைத்துக்கொள்வது அவ்வளவு புத்திசாலித்தனமான காரியம் ஆகமாட்டாது. தேர்தலுக்குப் பிறகு அரசியல் திட்டம் எதுவாயிருந்தாலும்—சமுதாயத் திட்டம் என்பது பார்ப்பனர் வெறுப்புத் திட்டங்களாகத்தான் இருக்கும். பார்ப்பனரல்லாதவர்களில் ஒரு சில சுயநலக்காரர்கள் தவிர, மற்ற எல்லோரும் இத்திட்டத்துக்கு ஆதரவளிப்பவர்களாகத்தான் இருப்பார்கள்.

இனி, கண்ணீர்த் துளிக் கட்சி தேர்தலுக்குப் பிறகு இந்த நாட்டில் உலவ வேண்டுமானால், பார்ப்பன வெறுப்புச் சாதனத்தைத்தான் கைத்தடியாகப் பிடித்துக் கொள்ள வேண்டியவர்கள் ஆவார்கள்! இந்தக் காரியத்துக்கு என்னை அணுகலாம்; நானும் ஆதரவளிக்கலாம். எனக்கு சமுதாயத் துறையில் பார்ப்பனர்களைத் தவிர வேறு யாரும் எதிரிகளல்லர்.

பார்ப்பனர்கள், நான் இப்படியெல்லாம் கூறுவதை, ஏதோ மிரட்டுகிறேன் என்பதாகக் கருதிவிடக் கூடாது. உண்மையிலேயே இருக்கிற நிலைமையையும் எதிர் காலத்தையும் விளக்குவதோடு, இந்த நாட்டுச் சமுதாய நலனுக்கும் நாகரிக வளர்ச்சிக்கும் பார்ப்பனர்களுடைய ஆதரவு, ஒத்துழைப்பு இருந்தால் வேகத்தில் நலம் பெறலாம் என்கிற எண்ணத்தில் இவைகளைச் சொல்லுகிறேனே தவிர, வேறு இதில் சூழ்ச்சியோ, தந்திரமோ, மிரட்டுதலோ

இல்லை; கண்டிப்பாக இல்லை. நான் இவைகளை உபயோகப்படுத்துவதில் வெட்கப் படுகிறவன்.

ஆகவே, இத்தேர்தலில் பார்ப்பனர்கள், வக்கீல்கள், டாக்டர்கள், உத்தியோகஸ்தர்கள், ஓட்டல் வகையறாக்காரர்கள் முதலியவர்கள் வோட்டுச் சாவடியை அணுகாமல் இருப்பதன் மூலம் பார்ப்பனரல்லாதவர் சமுதாயத்துக்கு நம்பிக்கையுடையவர்களாக ஆக வேண்டுமென்று தெரிவித்துக்கொள்கிறேன். இதற்கேற்றமாதிரி பார்ப்பனத் தலைவர்கள் அறிக்கை விடுவது நலம் என்று கருதுகிறேன்.

['விடுதலை'—அறிக்கை—1-1-1962]

## 21. மைனாரிட்டி சமுதாயம்

நாட்டு இலட்சணப்படி, எந்த நாட்டிலும் மைனாரிட்டி சமுதாயம், மைனாரிட்டி மதம், மைனாரிட்டி கலாசாரம் கொண்ட மக்களுக்கு ஆதிக்கமோ, செல்வாக்கோ இருக்குமானால்—அது அந்த நாட்டின் நலத்துக்கு, பொது வளர்ச்சிக்குக் கேடாகவே முடியும்.

இந்நாட்டு மைனாரிட்டி சமுதாயங்களான பார்ப்பனர், முஸ்லிம் ஆகியவர்களுக்கு அன்னிய ஆட்சியாலும் காங்கிரசாலும்—மற்றும் இவர்களுக்கு நீதி, அல்லது தனிச் சலுகைகளை இன்றுள்ள ஆட்சியும் காட்டி வந்த காரணத்தினாலும், மேலும் இவர்களது செல்வாக்குக் காரணமாய் 'புத்திசாலித்தனமான' 'திறமையான' 'தகுதியுள்ள' சமுதாயம் என்று கருதி ஆதிக்கத்திற்கும் இடம் கொடுத்ததினாலும், நாடு வளர்ச்சியடையாமலும் மெஜாரிட்டி (நாட்டின் இயற்கையான பெருவாரி) மக்கள் மனிதத் தன்மை பெறாமலுமே போய்விட்டார்கள்.

குறிப்பாகத் தமிழ்நாட்டின் இன்றைய நிலைக்கு இதுவே காரணம் என்பதை வலியுறுத்திக் கூறுகிறேன்.

தமிழ்நாடு இன்னும் சுதந்திரமற்ற அடிமை நாடு என்பது எனது பலமான கருத்து. இதை இந்நாட்டுப் பெருவாரி (மெஜாரிட்டி) சமுதாயம் ஒப்புக்கொள்ள மாட்டார்கள் என்பது எனக்குத் தெரியும். காரணம், தமிழனுக்கு சுதந்திரம் என்பது என்ன என்றே தெரியாது. ஏன் என்றால், தமிழன் பல பிரிவினன் ஆக ஆக்கப்பட்டவனானதால், "எதையும் கொடுத்து—என்னவும் செய்து" பயனடைந்து வந்தவன். இந்தத் தன்மைக்கு ஏதாவது ஒரு மாறுதல் தோன்றிற்று என்று சொல்ல வேண்டுமானால், 1900 ஆண்டுக்குப் பிறகுதான் இதுபற்றிச் சிந்திக்க வலியுறுத்தப் பட்டிருக்கிறது.

அது எப்படியோ போகட்டும்.

இனிமேலாகிலும் தமிழன், தமிழ்நாடு—சுதந்திரத்துடன், சுயமரியாதையுடன் வாழ வேண்டாமா என்பதுதான் இனி சிந்திக்க வேண்டியதாகும்.

இன்றைய சுதந்திரம், சுதந்திரமே அல்ல. வெள்ளையன் ஆட்சிக்கால சுதந்திரத்தை விட மோசமான நிலை என்பது—'சுதந்திர உதய நாள்' முதல் எனது கருத்து.

இதற்கு உதாரணம், இந்த நாட்டில் இன்று மைனாரிட்டியாக உள்ள சமுதாயத்திற்கு இருந்து வரும் ஆதிக்கமும், நடப்பு வசதியுமே போதுமானதாகும்.

அதாவது 100க்கு 90 விகிதம் உள்ள இந்த நாட்டுப் பெருவாரி சமுதாயமாகிய தமிழனின் பெண்கள்—நாட்டில் களை பிடுங்கி, ரோட்டில் கல் உடைத்து, வீதியில் மக்கள் நடக்க மண் சுமந்து கொண்டிருக்கிறார்கள். இன்னும் இதுபோன்ற ஏராளமான பொதுத் (மக்கள்) தொண்டு செய்கிறார்கள். இப்படி இன்னும் பல இருக்கின்றன.

100க்கு 3 விகிதமுள்ள பார்ப்பன மக்களும் அவர்கள் பெண்களும் பொது நலத்துக்கு என்று ஒரு தொழிலும் செய்யாமல் 'நம்மை எட்டிப் போ!' 'மேலே படாதே!' என்று சொல்லிக்கொண்டு உயர்வாழ்வு வாழ்கிறார்கள். அதுபோலவே, 100க்கு 6 வீதம் உள்ள முஸ்லிம்கள், ஒரு கூலி உடலுழைப்பு வேலையும் செய்யாமல், அவர்கள் பெண்கள் நம் மனிதர்கள் "கண்ணுக்கே தென்படக்கூடாது" என்கின்ற நிலையிலும், பிச்சை எடுப்பவன் வீட்டுப் பெண்கள் உள்பட 'கோஷா' முறையில்—உழைப்பில்லாமல் வாழும் முறையை இந்த நாட்டில் அனுபவிக்கிறார்கள். அதே நேரத்தில் நம் ஆண்களும் பெண்களும் அவர்கள் வீட்டு வேலைக்காரர்கள், வேலைக்காரிகளாக இருக்கிறார்கள்.

முதலாவது, இந்த இரண்டு தர மக்கள் நிலையும் இந்நாட்டுத் தமிழனுக்கு எவ்வளவு இழிவு, மானக்கேடு என்பதை எந்தத் தமிழன் உணருகிறான்?

'இது அவரவர்கள் மத தர்மம், மத ஆசாரம்' என்றால்—யார் நாட்டில், யார் மத்தியில், யாருடைய மத தர்மம், யாருடைய மத ஆசாரம்; யாரை இந்த நிலையில் இழிவு படுத்துவது? என்பதைச் சிந்தித்தால் தமிழனின் சுதந்திரம், சுயமரியாதை அளவு விளங்கும்.

ஜோசியத்தில் வல்லவரான ஒரு மேதாவியானவன் (அமாவாசையில் பிறந்தவன் திருடுவான் என்பது ஜோஸ்யமானால்) தன் வீட்டில் திருடின—அமாவாசையில் பிறந்த வனை மன்னித்து விடுவானா? இதுபோல், நமது நாட்டில் மைனாரிட்டிகள் உரிமை அவர்களது சமய, கலாச்சாரப் பண்பு என்பதற்காக, பல காரியங்களில் நாம் நம் சுய மரியாதையை விட்டுக் கொடுத்து வந்த காரணமே, இன்று நாட்டுக்கு மைனாரிட்டிகளால் பெருங்கேடும் துரோகமும் அடையவேண்டியவர்களாகிவிட்டோம்.

மைனாரிட்டிகளுக்கு அளிக்கும் சலுகையும் உரிமையும் 'துரோகம்—பச்சைத் துரோகம்' என்கின்ற குழந்தைகளைத்தான் ஈனும்; ஈன்றும் வருகிறது. இது இயற்கை யான பண்பு (அல்லது விதி.)

அதனாலேயே, நம் நாட்டிலுள்ள யோக்கியப் பொறுப்பற்ற மக்கள் தங்கள் சுயநல சமுதாயக் கேடான காரியங்களுக்கு, இப்படிப்பட்ட மைனாரிட்டிகளின் பின்பலத்தைப் பயன்படுத்திக்கொண்டு எதையும் செய்யத் துணிகிறார்கள்.

இந்தத் துரோகி மைனாரிட்டிகளும் அப்படிப்பட்ட பொறுப்பற்ற சமூகத் துரோகி களுக்கு பயன்பட்டு வாழக் காத்துக் கிடக்கிறார்கள்.

இந்தியக் கூட்டாட்சியில் தமிழ்நாடு ஒரு நாடாக இருக்கும் வரை, தமிழ்நாடு இந்த கதிக்கு ஆளாகித்தான் தீரும்.

தமிழ்நாட்டு அரசியல் வாதிகள், பதவி—பண வாதிகள் ஆகையால் அவர்களுக்கு இந்த உண்மை ஒப்புக்கொள்ளத் தகாதது.

பார்ப்பானுக்குப் பயந்தும், முஸ்லிம்களுக்கு அதிக இடம் கொடுத்தும் வந்தோம். அதன் பலனை இன்று அனுபவிக்கிறோம்.

இது சாணியை மிதிக்க அசிங்கப்பட்டு, மலத்தின்மீது காலை வைக்க நேர்ந்த பழமொழியாக முடிந்தது.

ஏன் இப்படிச் சொல்லுகிறேன் என்றால், பார்ப்பான் துரோகம் செய்ய அவனுக்குக் காரணம் உண்டு. என்னவென்றால், அவனது பொய் பித்தலாட்ட உயர் வாழ்வு சரிந்து விழுகிறது. முஸ்லிம் துரோகம் செய்யக் காரணம் என்ன? முஸ்லிம்கள் அதை வெளி யிட்டு மக்களைத் திருப்தி செய்யவேண்டும். அப்போதுதான் அவர்கள் துரோகக் கூட்டத்திலிருந்து விலக இச்சைப்பட்டவர்கள் ஆவார்கள்.

இவ்வளவு எழுதப்பட்டதன் காரணம், மைனாரிட்டிகளை ஆதிக்கத்தில் விட்டு வைப்பதும், அவர்களது தனிச் சலுகைகளுக்கு இடம் கொடுப்பதும் நாட்டுக்கு—நாட்டுப் பெருவாரி மக்கள் சமுதாயத்துக்குக் கேடு என்பதை விளக்கவேயாகும்.

நான் ஒரு மனித தர்மவாதி என்பதும், எதையும் திரைமறைவு இல்லாமல் திகம்பர மாய்க் கண்டே கருத்துக் கொள்கிறவன் என்பதையும் யாவரும் அறிவார்கள்.

['விடுதலை'—தலையங்கம்—6-3-1962

## 22. திராவிடர் கடமை

இன்றைய நிலையில் தமிழர்கள் (திராவிடர்கள்) ஓர் அளவு முன்னேற்றப் பாதையில் செல்லுகிறார்கள். அவர்கள் அடைய உரிமையுள்ள இடத்திற்குச் சென்றுவிட்டதாகக் கூற முடியாது.

சமுதாயத்துறையில் ஒரு அளவுக்குப் பார்ப்பனரைப் பகிஷ்கரித்திருக்கிறார்கள் என்றாலும் அந்த அளவு, பகுதிக்கும் குறைவான அளவு என்றுதான் சொல்லவேண்டும். கல்வித்துறையில் பார்ப்பனர்களுக்கு ஏகபோகம் இல்லையென்றுதான் சொல்லலாமே தவிர, அவர்கள் தங்கள் விகிதாச்சார அளவிற்கு 100க்கு 500 பங்கு முதல் 1000 பங்கு வரை அதிக மாக அனுபவித்து வருகிறார்கள் என்றுதான் சொல்லவேண்டும். அந்த விகிதம் ஒழிந்து அவர்கள் தங்களுக்கு உள்ள உரிமையுடன் இருக்க வேண்டுமானால், டில்லி ஆதிக்கம் ஒழிந்தேயாகவேண்டும். டில்லி ஆதிக்கம் ஒழியும் வரை திராவிடர்கள் 4 ஆம் சாதி— இழிசாதி என்கின்ற இழிவும் நீங்காது என்பது உறுதி.

அரசியல் தலைமைத்துறை ஆகியவற்றில் அவர்களுக்கு இடமில்லாமல் ஆகிவிட்டது என்றாலும், அவர்கள் அவற்றில் இல்லாமலே அவர்களுக்கு வேண்டிய காரியங்களும், நாம் வளர்ச்சி அடைய முடியாமல் இருக்கும்படியான காரியங்களும் தாராளமாய் அவர் களால் செய்ய முடிந்துதான் வருகிறது.

இவற்றிற்கெல்லாம் அவர்களுக்கு ஆதாரமாக—'சஞ்சீவி' மருந்தாக—இருந்துவரும் சாதனமான பத்திரிகை உலகம் 100க்கு 100 அவர்களுடையதாகவும், அவர்களுடைய அடிமைகளுடையதாகவும் இருந்து வருவதேதான். இந்தத் துறையில் தமிழர் சிறிதுகூட சிந்தனை செய்ததாகவே காண முடியவில்லை. அந்த ஒரு காரியத்தில் நாம் முயற்சி எடுத்து நமது மனிதாபிமானத்தைக் காட்டாத வரையில் வேறு எந்தக் காரியத்தில் நாம் வெற்றி பெற்றபோதிலும் அதன் பயனை நாம் அனுபவிக்கவே முடியாது என்பது மாத்திர மல்லாமல், நம்முடைய நாட்டிலே—அதிலும் நாம் மொத்த ஜனத்தொகையில் 100க்கு 90-க்கு மேற்பட்டவர்களாக இருக்கும் நமது நாட்டிலே—100க்கு 3 பேராய் இருப்பவரும் நமது பிறவி எதிரியும், நமது கேட்டிற்கும் அழிவிற்கும் இழிவிற்குமாகவே உழைத்துவரும் வெகு, வெகு சிறு சாதியாரான இனத்தாரிடம் நமது நாட்டுப் பத்திரிகைகளும், பத்திரிகை களின் ஆதிக்கமும் இருந்துவருவது என்றால், இது நமது சமுதாயத்திற்கு எவ்வளவு இழிவான நிலை என்பதும் யோசிக்கத் தக்கதாகும் என்பதோடு, இது (நம்) போன்ற இழிவான மானங்கெட்ட சமுதாயம் வேறு எங்குமே இருப்பதாகத் தெரியவே இல்லை.

அது மாத்திரமா? நமது பத்திரிகை என்பவைகளை நமது மக்கள் ஆயிரக் கணக்கில் வாங்கிப் படிக்கிறார்கள் என்றால், நமது எதிரிகளான பார்ப்பனருடையவும் அவர்கள் அடிமைகளுடையவும், அவர்கள் ஆதரவால்தான்—அவர்களுக்கு நல்ல பிள்ளை களாய் இருந்தால்தான் வாழ முடியும் என்று கருதுபவர்களுடையதுமான பத்திரிகைகளை இலட்சக் (1,00,000) கணக்கில் நமது மக்கள் வாங்கிப் படித்து ஈனர்களாக ஆகி வருகிறார்கள்.

சாதாரணமாகச் சொல்வோமானால், தமிழர் நல்வாழ்வுக்காகவே வளர்ச்சிக்காகவே யென்று 45 ஆண்டுகளுக்கு முன்பு நாட்டில் சுயமரியாதை (சமூக முன்னேற்ற) இயக்கம் என்பது ஆரம்பிக்கப்பட்டு, மூலை முடுக்குகளெல்லாம் பிரச்சாரம் செய்யப்பட்டு வந்தும், நம் எதிரிகளை 'பிராமணாள்', 'சாமி' என்றழைப்பது ஆயிரத்துக்குப் பத்து வீதமான மக்களால்கூட நிறுத்தப்படவில்லை என்பதோடு—பத்திரிகை படிப்பவர்களில் ஆயிரத்துக்கு ஒருவரால்கூட நம் எதிரிகளது பத்திரிகைகளை வாங்கிப் படிப்பது நிறுத்தப்படவில்லை என்றால், நம் மக்கள் தன்மைக்கு எந்தக் குணத்தை உதாரணமாகக் கூறுவது என்பது நமக்குப் புரியவில்லை.

அது மாத்திரமா? நமது கேட்டிற்கும், இழிவிற்கும், வளர்ச்சித் தடைக்கும் என்பதற்காகவே நடத்தப்படும் நமது எதிரிகளுடைய பத்திரிகைகளால் எதிரிகள் ஆண்டு ஒன்றுக்கு—ஒன்று, இரண்டு, மூன்று, ஏன் அய்ந்து இலட்சம் ரூபாய்கள் வரை இலாபம் வருவாய் சம்பாதித்துக் கொள்ளுகிறார்கள்.

ஆகவே, இழி நிலையானது நமது எதிரிகள்—மேல் சாதியார், பிராமணன், சாமி—என்று நம்மாலேயே அழைக்கப்படுபவர்களாகவும் நமது செல்வத்தையே ஆண்டு ஒன்றுக்கு ஒன்று முதல் அய்ந்து இலட்ச ரூபாய் வரை இலாபம் வருவாய் உள்ளவர்களாக இருப்பதற்கும் நாம் இடம் கொடுத்து வருகிறோம் என்றால், மறுபடியும் நமது நிலை எவ்வளவு இழிவானது என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டுகிறேன்.

['விடுதலை'–தலையங்கம்—15–7–1971]

## 23. பரிகாரம் என்ன?

உலகில் நானறிந்த வரையில், நம் நாட்டு மக்களிடம் (இந்துக்கள் என்பவர்களிடம்) ஒழுக்கம், நாணயம் என்பது சற்றேறக்குறைய 100க்கு 99 பேர்களிடம் இருப்பதில்லை. காரணம் என்ன?

நமக்கு 'கடவுள்' இல்லையா? நாம் 'கடவுள் பக்தி' இல்லாதவர்களா? நாம் 'மதம்' அற்றவர்களா? நமக்குக் 'கடவுள் பயம்' இல்லையா? 'கடவுள் நெறி' இல்லையா? 'நன்மை செய்தால் நற்பயன் கிடைக்கும், தீமை செய்தால் தீய பயன் கிடைக்கும்' என்கின்றதான எச்சரிக்கை சாதனங்கள் இல்லையா? நம்மில் பெரியவர்கள்—'தெய்வீகத் தன்மை' கொண்ட மக்கள்—என்பவர்கள் ஏற்பட்டு, நமக்கு அறிவுரை கூறியவர்கள், கூறுபவர்கள், கூறும்படியான நீதி நூல்கள் இல்லையா? அரசாங்கக் கட்டுதிட்டம், தண்டனை முதலியவைகள் இல்லையா? நமக்கு 'நற்கதி' அளிக்கும்படியான கோயில்கள் இல்லையா? நமக்குக் குருமார்கள்—மடாதிபதிகள் இல்லையா? இவைகளும் மற்றும் இவை போன்ற பலவும் ஏராளமாக இருக்கும்போது நமக்கு—நம் மக்களுக்கு—ஏன் ஒழுக்கம், நாணயம், இன உணர்ச்சி, பொதுநல உணர்ச்சி, யோக்கியத் தன்மை முதலிய நற்குணங்கள் இல்லை? இப்படிப்பட்ட நிலை நமக்கு ஏற்படக் காரணம் என்ன? என்பதை மனிதன் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

எனக்குப் பல ஆண்டுகளாகவே இந்தக் கவலை உண்டு என்பதோடு, எனது தொண்டில் இதை—அதாவது மக்களிடம் ஒழுக்கம், நாணயம், யோக்கியப் பொறுப்பு, இன உணர்ச்சி ஏற்பட வேண்டுமென்பதை—முக்கிய இலட்சியமாகக் கொண்டு தொண்டாற்றி வந்திருக்கிறேன். அதை முதன்மையாகக் கொண்டு பிரச்சாரமும் செய்து வருகிறேன்.

எனது இத்தனை ஆண்டு வாழ்வில்—80 ஆண்டு உலக அனுபவத்தில்—நாளுக்குநாள் மக்களிடம் ஒழுக்கம், நாணயம், யோக்கியப் பொறுப்பு ஆகிய தன்மைகள் குறைந்து

கொண்டே வந்திருப்பதுடன், இன்று அக் குறைவு நிலை உச்ச நிலையடையும் வழியில் மனித சமுதாயமானது சென்று கொண்டிருக்கிறது என்பதுதான் எனது கருத்து.

இது பற்றி நான் மிகவும் கவலையடைகிறேன். இவ்விஷயங்களில் இன்றைய நிலை மாறுமா என்பதில் நான் மிகுதியும் கவலைப்படுகிறேன். மேற் சொன்னபடி எனது பல நாள்–30, 40 ஆண்டுகள்–இதற்காகவே நான் செய்துவந்த தொண்டின் காரணமாய் ஏதாவது பயன் ஏற்பட்டிருக்கிறதா என்று பார்த்தால், அடியோடு இல்லையென்றுதான் சொல்ல வேண்டும். ஆகவேதான் மேலும் மேலும் கவலையோடு, இந்த நிலை ஏன் ஏற்பட்டது? இதற்கு என்ன பரிகாரம்? என்பதில் நான் மிகுதியும் சிந்திக்க முயற்சித்து, சதா சிந்திக்கிற வண்ணமாகவே இருக்கின்றேன்.

நமக்கு சுயராஜ்யம் வந்து என்ன பயன்? சுதந்திரம்—பூரண சுயேச்சை வந்து என்ன பயன்? நம்மை நாமே ஆண்டு கொள்வதில் (ஜனநாயகத்தில்) என்ன பயன்? இந்த நிலையில் வாழும் மக்களுக்கு அந்நிய ஆட்சி ஏற்படுவதில் தீமை என்ன? என்றெல்லாம் என் மனம் சிந்தனையில்—கவலையில் மூழ்கிக் கிடக்கின்றது. ஏனெனில் இந்த நாட்டில், பொது வாழ்வில், எல்லா மக்களையும் பொறுத்த பொதுத் தொண்டில்—சிறிதும் சுயநலமில்லாமல்—எனக்குள்ள சகலத்தையும் பொதுவுக்கு ஈடுபடுத்திய தொண்டின் பயனாய், தொண்டின் பெயரால் எவ்வித சுயநல நன்மையும் அடையாமல், உண்மையாகவே என்னை ஒரு தொண்டன்—தொண்டுக்காகவே வாழ்பவன், வாழவேண்டியவன் என்று கருதிக் கொண்டு, உண்மைத் தொண்டு செய்து வந்ததில்—வருவதில் எனக்கு மேற்பட்ட தொண்டன் யாருமில்லையென்னும் தன்மையில் தொண்டாற்றி வருபவன் நான் எனக் கருதிக்கொண்டு தொண்டாற்றி வருவதால், எனக்கு இந்தக் கவலை—அதாவது நம் மக்களில் யோக்கிய மானவன், நாணயமானவன், எந்தத் தரத்திலும், எந்த நிலையிலும் ஏன் ஒருவனைக்கூட காணமுடியவில்லை? இருப்பதாகக் கருதக்கூட முடியவில்லை?—என்பனவற்றைக் கருதக் கூடியவனாக, கவலைப்படக்கூடியவனாக இருந்து வருகிறேன்.

இந்த நீண்ட நாள் கவலையின்–சிந்தனையின் பயனாக இதற்கு—அதாவது இந்த நாட்டில் இன்று, இந்தக் காலத்திலும் ஒரு யோக்கியன், நாணயமானவன், ஒழுக்கமானவன், யோக்கியப் பொறுப்புக்கு ஆளானவன் எந்தத் தரத்திலும் எவனும் இல்லாமல் போனதற்கு—காரணம்: நமது நாட்டிலுள்ள சூழ்நிலை, சுற்றுச்சார்பு, நமது கடவுள்கள், நமது நீதி நெறி, சாத்திரங்கள், தர்மங்கள் இவைபற்றிய புராணங்கள், இதிகாசங்கள், பிரசாரங்கள், பெரியவர்கள், மகான்கள் மகாத்மாக்கள், இன்று இருந்துவரும் அரசாங்க முறை, அரசியலில் ஈடுபடும் மக்கள் தன்மை, அரசியலில் ஒழுக்கம், மத ஒழுக்கம், சமுதாய அமைப்பு முதலியவைகள் தாம் என்கிற முடிவுக்கு வரவேண்டியவனாகி விட்டேன். அது மாத்திரமல்லாமல், மேற்கண்ட காரண காரியங்களில் நல்ல அளவுக்கு மாறுதல் ஏற்படாதவரை—மாறுதல் செய்யப்படாதவரை—நமக்கு மேற்கண்ட தீய குணங்களில் எவ்வித மாற்றமும் ஏற்பட முடியாது என்பதுடன், ஏற்படுத்த எவராலும் ஆகாது என்கிற முடிவுக்கு வரவேண்டியனாகிவிட்டேன்.

நமது கடவுள்களில் ஒன்றுகூட ஒழுக்கமாய், யோக்கியமாய், நாணயமாய் யோக்கியப் பொறுப்புடன் இருந்ததாகக் கடவுள் சம்பந்தப்பட்ட எந்த ஆதாரங்களிலுமே காணமுடியவில்லை—கேட்க முடியவில்லை. அது மாத்திரமல்லாமல், இன்றுள்ள மக்களில் எந்த இழி மக்களிடமிருந்தும் எப்படிப்பட்ட ஒழுக்க ஈனம், யோக்கிய ஈனம், நாணயமான காரியங்கள் எதுவும் இன்றுள்ள நம் கடவுள்கள் எதனிடமும் இல்லை என்று சொல்ல முடியாத தன்மையில் தானே நம் கடவுள்கள் இருந்துவருகின்றன! ஒழுக்கக்கேடு, நாணயக்கேடு, யோக்கியக்கேடு இல்லாத நம் பதினாயிரக்கணக்கான கடவுள்கள், அவர்களின் பெண்டு பிள்ளைக் கடவுள்களில் ஒரு கடவுளையாவது காட்ட எந்த பக்தனாலாவது, குருமார்களினாலாவது, கடவுள் கதைகளினாலாவது காட்டமுடியுமா என்று பந்தயம் கட்டிக் கேட்கிறேன்.

மற்றும் வேத சாஸ்திர, தர்ம புராண—இதிகாசங்கள் எதிலாவது இன்று நாம் கூறும், விரும்பும் ஒழுக்கம், நாணயம், யோக்கியம், நேர்மை, யோக்கியமாகக் கருதும், நடக்கும் தன்மை மிகுந்திருப்பதாக எந்தப் பக்தன், குரு, பண்டிதன், புலவன் ஒருவனாலாவது காட்ட முடியுமா என்று கேட்கிறேன். அல்லது நமது பெரியோர்கள், முன்னோர்கள், தெய்வீகத்தன்மை பெற்ற ரிஷிகள், மகான்கள், மகாத்மாக்கள் என்பவர்களில் யாரிடமாவது மேற்கண்ட குணங்களோ, அல்லது அறிவோ, பண்போ இருந்ததாக யாராவது காட்ட முடியுமா என்று கேட்கிறேன். பந்தயம் கட்டிக் கேட்கிறேன்.

['விடுதலை'–தலையங்கம்—31–7–1972]

## 24. சுகாதார வாழ்வு

அக்கிராசனரவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

உலகத்திலேயே நாகரிகம் பெற்ற நாடுகள் என்று சொல்லப்படுபவைகளில் நம்நாடே சுகாதார விஷயத்தில் மிகவும் கேவலமாக இருந்து வருகிறது. இது வெளிநாடு சென்று வந்தவர்களுக்குத் தெரியும்.

வெளிநாட்டிற்கும் நமது நாட்டிற்கும் சுகாதாரக் கொள்கைகளும் அனுஷ்டிப்பு முறைகளும் நேர்தலைகீழாக இருக்கின்றன. அதாவது, நமது நாட்டுச் சுகாதாரமெல்லாம்—ஒரு சாதி மனிதனை மற்றொரு சாதி மனிதன் தொட்டால் தோஷம்; பார்த்தால் தோஷம்; நிழல் பட்டாலே தோஷம்; தெருவில் நடந்தால் தோஷம் என்கின்ற முறையிலிருக்கின்றதே தவிர—மற்றபடி மனிதன் அசிங்கமாக இருக்கக்கூடாது; துர்நாற்றம் வீசக்கூடாது; கெட்டுப்போன பதார்த்தமாக இருக்கக்கூடாது என்கின்ற கவலைகள் சுத்தமாய்க் கிடையாது.

இதன் காரணமெல்லாம் சுகாதார அறிவு இல்லாததேயாகும். ஒரு மனிதன் பணக் காரனாக வேண்டும்; பெரிய உத்தியோகஸ்தனாக வேண்டும்; பெரிய பண்டிதனாக வேண்டும்; பெருமையுடையவனாக வேண்டும் என்பன போன்ற விஷயங்களில் அதிகக் கவலை வைத்திருக்கிறானே ஒழிய—நல்ல திடகாத்திரத்துடன் இருக்க வேண்டும்; சுகஜீவியாக இருக்கவேண்டும் என்பன போன்ற விஷயங்களில் கவலைப்படுவதில்லை.

மேல்நாட்டார் முதலியவர்கள் தாங்கள் உலகத்தில் இருப்பதே சுகமாய் வாழ்வதற் கென்றும், சுகாதார முறைப்படி இருப்பதற்கே சம்பாதிப்பதென்றும், சுகாதார வாழ்க்கையை அனுசரித்தே தமது பொருளாதார நிலைமையென்றும் கருதி, அதற்கே தமது கவனத்தில் பெரும்பாகத்தைச் செலவு செய்கிறார்கள். அதனாலேயே மேல்நாட்டுக்காரன் நம்மைவிட இரட்டிப்புப் பலசாலியாகவும், சுகசரீரியாகவும், அதிகப் புத்திகூர்மையும் மனோஉறுதியும் உடையவனாகவும், நம்மைவிட இரட்டிப்பு வயது ஜீவியாகவுமிருந்து வருகிறான்.

நமது மக்களின் சராசரி வயது 24; வெள்ளைக்காரரின் சராசரி வயது 45. இதற்குக் காரணம் என்ன? சுகாதாரத்தினால் என்ன பலனிருக்கின்றது என்பதே நமக்குத் தெரியாது. "எல்லாம் கடவுள் செயல்" என்கின்ற ஒரே ஒரு அறிவுதான் நமக்கு உண்டு. நமக்குக் 'காலரா' வந்தால் 'ஓங்காளியம்மன்' குற்றமென்று பொங்கல் வைக்கவும்; வேல் மிரவணை செய்யவும் தான் முயற்சி செய்வோம். வைசூரி வந்தால் மாரியம்மன் குற்ற மென்று மாரியாயிக்கு தயிர் அபிஷேகமும், இளநீர் அபிஷேகமும் தான் செய்வோம். வயிற்றுவலி வந்தால் திருப்பதி பொன்றாமத்தையனுக்கு வேண்டுதல் செய்வோம். நரம்புச் சிலந்தி வந்தால் சிலந்திராயனுக்கு அபிஷேகம் செய்வோம். நம் சங்கதிதானிப்படி என்றால், குழந்தைகளுக்குக் காயலா வந்தால் 'பாலாரிஷ்டம்' என்போம்; கிரக தோஷ

மென்போம்; செத்துவிட்டால் விதி மூண்டுவிட்டது என்போம். ஆகவே இந்த மாதிரி வழிகளில்தான் நமது புத்திகள் போகுமேயல்லாமல் ஏன் வியாதி வந்தது? ஆகாரத்திலாவது, பானத்திலாவது, காற்றிலாவது என்ன கெடுதி ஏற்பட்டது? சரீரத்தில் என்ன கோளாறு இருக்கின்றது? என்கின்ற விஷயங்களில் கவலை செலுத்தும்படியான அறிவோ, படிப்போ நமக்குக் கிடையாது.

நமதுநாட்டு மக்கள் தங்கள் வீட்டுக் குப்பைகளை பக்கத்து வீட்டுக்கு முன்புறமாய்க் கொண்டுபோய்க் கொட்டுவதே வழக்கம்; பக்கத்து வீட்டுக்காரன் நமது வீட்டுக்கு முன்புறத்தில் கொண்டுவந்து கொட்டிவிட்டுப் போவது வழக்கம். நமது குழந்தைகளுக்குப் பொது வீதிகளேதான் கக்கூசுகள்.

[ஈரோட்டில், 27-8-1930-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 21-9-1930]

## 25. சாயலும் உடையும்

இந்திய மக்கள் எவ்வித முன்னேற்றமோ, விடுதலையோ, சுதந்திரமோ பெறுவதற்குத் தங்களை அருகர்கள் என்று சொல்லிக் கொள்ளுவதற்கு முன்பாக—இந்தியர்கள் ஒரே சமூகத்தார் ஒரே இலட்சியமுடையவர்—என்கிற நிலையை அடையவேண்டியது மிகவும் முக்கியமானதாகும். இன்று முற்போக்கோ, சுதந்திரமோ, விடுதலையோ அடைந்திருக்கும் நாட்டார்கள் எல்லாம் முதலில் தங்கள் நாட்டாரெல்லாம் ஒரே சமூகத்தார் என்றும், ஒரே இலட்சியமுடையவர்கள் என்றுமானபிறகுதான் அவர்கள் முன்னேறவும், விடுதலை பெற்றுச் சுதந்திரமடையவும் முடிந்தது.

ஆனால், நமது இந்தியாவைப் பற்றிப் பேசப் புறப்படுவோமானால், இது ஒரு சமூக மக்கள்கொண்ட நாடு என்றோ, ஒரே இலட்சியமுள்ள மக்களைக் கொண்டநாடு என்றோ யாரும் சொல்ல முடியாது. ஏனெனில், இந்தியாவானது பல மதங்களாய், பல சாதிகளாய் இருப்பதோடு, மொழிகளிலும் நடை, உடை, பாவனைகளிலும் பலப் பல மாறுதல்களைக் கொண்டிருக்கிறது. இந்த வித்தியாசங்கள் என்று தொலைவது? மக்கள் எந்தக் காலம் ஒன்றுபட்டு ஒரு சமூகமாகி, ஒரே இலட்சியம் கொள்ளுவது என்பவைகளை நினைத்தால், மனம் ஒடிய வேண்டியிருக்கிறதே தவிர நம்பிக்கைக்கு இடமில்லை. என்றாலும், மக்கள் ஒன்றுபட்ட சாயலை அடைந்து பார்வையிலாவது,—அதாவது மனிதனுக்கு மனிதன் பார்த்தவுடனே ஒரு வேற்றுமை உணர்ச்சி தோன்றுவதற்கில்லாமல் செய்துவிட்டால்—பிறகு ஒவ்வொருவரும் தன்தன் மதம், சாதி, வகுப்பு, மொழி ஆகியவைகளைக் காட்டியபின்பு ஒரு சமயம் வேற்றுமை உணர்ச்சி உண்டானாலும், அதை அது முதலில் பார்த்தவுடன் தோன்றிய ஒற்றுமை உணர்ச்சியின் பலத்தால் தலை தூக்காதிருக்கும்படி செய்யலாம்.

ஆதலால், ஒரு நாட்டினருக்குள் இருக்கும் பலவிதமான வேற்றுமைகளை ஒழித்து ஒரு சமூகமாக்க வேண்டுமானால், முதலில் சாயலுக்கும் பிரித்துக் காட்டுவதற்கும் ஆதாரமாய் இருக்கும் உடையை ஒன்றுபடுத்தவேண்டியது முக்கியமானதாகும்.

உதாரணமாக, மற்ற நாட்டினரான சைனாக்காரரையோ, ஜப்பான்காரரையோ எடுத்துக்கொண்டால், அந்த நாட்டாரில் அந்த நாட்டாருக்குள்ளாகவே ஒருவருக்கொருவர் எவ்வித வித்தியாசத்தையும் கண்டுபிடிக்க முடியாத சாயலையும் உடையையும் கொண்டிருப்பது யாவருமறியலாம்.

இந்த உண்மையையும் இரகசியத்தையும் கண்டுதான் வீரர் கமால்பாட்சா அவர்கள் எல்லோரும் ஒரேவித உடை அணிந்து ஒரு சாயலாகவே இருக்கவேண்டுமென்று உத்தர

விட்டார். அதன்மூலம், துருக்கிநாடு சிறியதாக இருந்தாலும் அது தன்னையும் ஒரு வல்லரசு என்று மதிக்கும்படி செய்துகொண்டது. இதைப் பின்பற்றியேதான் ஆப்கானிஸ்தானமும் முயல்கின்றது.

நமது நாட்டிற்கும் இப்போது வெகு அவசரமாக உடையும் சாயலும் மாற்றப்பட்டு ஒன்றுபோல் தோன்றும்படி செய்யவேண்டியது அவசியம். இந்த எண்ணம் நமக்கும் நமது நண்பர்களில் பலருக்கும் வெகுநாளாகவே இருந்துவந்தாலும், என்ன மாறுதல் செய்வது என்னும் விஷயத்தில் யோசனையாகவே இருந்துவந்ததால் தாமதப்படுத்தப்பட்டு விட்டது. அதோடு நாம் சொல்லுவது மற்றவர்களுக்கும் சம்மதப்படும்படியாய் இருக்க வேண்டுமே, உடனே பின்பற்றவேண்டுமே என்கின்ற யோசனையும் இருந்துவந்தது.

சாயல், உடை, பழக்க உணர்ச்சி ஆகியவைகளில் மேல்நாட்டாரைப் போல் கட்டுப் படுகின்ற வழக்கமோ, கவலையோ நம்மவர்களுக்குச் சிறிதும் கிடையாததலினாலும், அவ்வித வித்தியாசங்களே இந்த நாட்டின் பெருமைக்கும், இயற்கை வனப்பிற்கும் அணிகலனாய் இருப்பதாக மக்கள் கருதிவந்ததாலும், இது இப்போது பிரஸ்தாபிக்கக் கூடாததாகக் கூட பலருக்குத் தோன்றினாலும் தோன்றலாம்.

மேல்நாட்டார் கட்டுப்பாட்டுக்கு ஒரு உதாரணம் சொல்லவேண்டுமானால், அவர்கள் உடை, முன் இருந்ததற்கும் இப்போது இருப்பதற்கும் உள்ளமாறுதலும், அதை ஒரேயடியாய் அய்ரோப்பா, ஆஸ்திரேலியா, அமெரிக்கா முதலிய கண்டங்கள் உடனே பின்பற்றுவதும்—அதுபோலவே அப்பெண்கள் தலைமயிர் முன் இருந்ததற்கும் இப்போது இருப்பதற்கும் உள்ள வித்தியாசமும், அதை எல்லாக் கண்டங்களிலுள்ள வெள்ளைக்காரரும் பின்பற்றுவதையும் பார்த்தாலே போதுமானதாகும்.

அவசியம் என்றோ, கட்டுப்பாடு என்றோ அவர்களுக்குத் தோன்றிவிடுமானால், எந்த மாறுதலானாலும் அதை அரச ஆக்கினைபோல் பாவித்து, எல்லோரும் உடனே கீழ்ப் படியும் வழக்கம் அவர்களுக்குள் உண்டு. கட்டுப்பாட்டிற்கு மற்றொரு உதாரணமாக ஒன்றைக் குறிப்பிடுகின்றோம்.

அதாவது, அய்ரோப்பாவில் பெண்கள் தலைமயிரைக் கத்தரித்துக்கொண்டதில் சில உயர் குடும்பங்கள் என்று சொல்லப்படும் குடும்பப் பெண்கள் தாங்களும் தலை மயிரைக் கத்தரித்துக் கொண்டாலும், ஜார்ஜ் சக்கரவர்த்தியின் மனைவியான மேரிராணியார் தலை மயிரைக் கத்தரித்துக் கொள்ளாததில் சற்று அதிருப்தியுடன் கட்டுப்பாட்டிற்குப் பயப்பட வேண்டியவர்களாக இருந்தார்களாம். இதை அரசகுடும்பத்தார் அறிந்ததும் இளவரசர் மனைவியரான இளவரசியை உடனே தலைமயிரைக் கத்தரித்துக் கொள்ளும்படி செய்தார்களாம். இப்போது அது பொது தேசாச்சாரமாய் விட்டது.

ஆனால், நம் நாட்டிலோ எப்பேர்ப்பட்ட மாறுதலாயிருந்தாலும் அது எவ்வளவு சரியானதாயும், தேவையானதாயும் இருந்தாலும் பயனும் பொருளும் அற்ற பழைய வழக்கம் என்னும் 'பேய்க்கு'—அதாவது மூடபயத்திற்கு அடிமையாகி, உடனே அதைக் குற்றம் சொல்லவும், உள் எண்ணம் கற்பிக்கவும், எதிர்ப் பிரச்சாரம் செய்யவும் புறப்பட்டு விடுகிறார்கள். ஆதலால்தான், ஆயிரக் கணக்கான வருஷங்களாக இந்தியமக்கள் மாத்திரம் வேற்றுமைப்பட்டு, பிரிந்து, துவேஷங்கொண்டு, அன்னியருக்கு அடிமைகளாய் இருக்க வேண்டியவர்களாகி விட்டார்கள். இதை ஒரு வழியில் போக்க முயற்சிக்க வேண்டுமென்று கருதி, பல மாறுதல்களுடன் உடைமாறுதல்களைப் பற்றித் துணிந்து தெரிவிக்கிறேன்.

['குடி அரசு'-தலையங்கம்—9-11-1930]

# 2. ஆதித் திராவிடர்

## 1. தென் ஆப்பிரிக்கா தினம்

தென்ஆப்பிரிக்காவில் இந்தியர்களைத் தாழ்வாய் நடத்துவதைப்பற்றியும், இந்தியர்களை அந் நாட்டைவிட்டு ஒழிப்பதற்கென ஏற்படுத்திய சட்டத்தைப்பற்றியும் சென்ற 11-ந் தேதி இந்தியாவெங்கும் பொதுத் தினமாகக்கொண்டாடி, தேசமெங்கும் கண்டனத் தீர்மானங்கள் நடைபெற்றன. அக் கண்டன விஷயத்தில் நாமும் கலந்து கொள்ளுகிறோம். ஆனால், நமது நாட்டில் கோடிக்கணக்கான சகோதரர்களைத் தீண்டாதாரென்றும், பார்க்கக்கூடாதாரென்றும், தங்களுடைய வேதங்களையே படிக்கக்கூடாதாரென்றும், தங்களுடைய தெய்வங்களையே கண்டு வணங்கக்கூடாதாரென்றும் கொடுமை செய்திருக்கிற ஒரு நாட்டார், இக் கண்டனத் தீர்மானம் செய்வதில் ஏதாவது பலன் உண்டாகுமா? இதை அறிந்த தென் ஆப்பிரிக்கா வெள்ளையர்கள் இக் கண்டனத் தீர்மானங்களை மதிப்பார்களா? அல்லது குப்பைத்தொட்டியில் போடுவார்களா? என்பதை வாசகர்களே கவனித்துப் பார்த்தால், வீணாக ஒரு நாளை இப் போலிக் கண்டனத் தீர்மானங்களுக்காகப் பாழாக்கினோமே என்ற முடிவுக்குத்தான் வருவார்கள்.

['குடிஅரசு'-தலையங்கம்—18-10-1925]

## 2. பறையரும் சூத்திரரும்

அக்கிராசனரவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

ஆதித் திராவிடர் முன்னேற்றத்துக்கு உழைப்பதாய் நினைத்துக் கொள்வதும், ஆதித் திராவிடர்களுக்கு உழைப்பதாய்ச் சொல்லுவதும், வேஷத்திற்காகத்தான் உழைக்கிறவர்களும் பேசுகிறவர்களுமாய் இருப்பார்கள் என்பது எனது அபிப்பிராயம். அதாவது, இந்தியாவின் நன்மைக்காக அய்ரோப்பியர்கள் இந்தியாவை ஆளுகிறார்கள் என்பது போல்தான் அது ஆகுமே யல்லாமல், வேறல்ல. நான் அப்படி நினைக்கவேயில்லை.

'பறையர்' என்கிற ஒரு சாதிப் பெயர் நம் நாட்டிலிருப்பதால் தான் 'சூத்திரர்' என்கிற ஒரு சாதிப் பெயர் நம் நாட்டில் இருக்கிறது. 'பறையர்' என்கிற சாதிப் பெயரை விட, 'சூத்திரர்' என்கிற சாதிப் பெயர் மிக்க இழிவானது. இந்து சாஸ்திரப்படி, பறைய ஸ்திரிகளில் பதிவிரதைகளுக்கும்—சரியான ஒரு தாய்க்கும், தகப்பனுக்கும்—பிறந்தவர்களும் இருக்கலாம். 'சூத்திரர்'களில் அப்படி இருக்க இடமில்லை. ஏனென்றால், 'சூத்திரச்சி' என்றால் தாசி, வேசி மகள் என்பதுதான் பொருள். 'சூத்திரன்' என்றால் தாசி மகன், வேசி மகன் என்றுதான் பொருள். இதை ஒப்புக்கொள்ளாதவன் இந்து ஆக மாட்டான் என்பது சாஸ்திர சம்மதம். ஆகையால், என்போன்ற 'சூத்திரன்' என்று சொல்லப்படுபவன், 'பறையர்கள்' என்று சொல்லப்படுவோருக்கு உழைப்பதாகச் சொல்லுவதெல்லாம், 'சூத்திரர்கள்' என்று தம்மை யாரும் கருதக் கூடாது என்பதற்காகத்தானே யல்லாமல் வேறல்ல. ஆகையால், எனக்காக நான் பாடுபடுவதென்பது உங்கள் கண்ணுக்கு உங்களுக்காகப் பாடுபடுவதாய்த் தோன்றுகிறது. உங்களைத் தாழ்மையாய்க் கருதும் பெண்களும் ஆண்களும், தாங்கள் பிறரால் உங்களை விடக் கேவலமாய்—தாழ்மையாய்க் கருதப்படுவதை அறிவதில்லை. அன்னியர்களைத் தாழ்ந்தவர்களாக நினைக்கும் அறியாமையால், தங்களை மற்றவர்கள் தாழ்மையாய் நினைப்பது தங்களுக்கு ஈனமாய்த் தோன்றுவதில்லை.

இந்த இலட்சணத்தில், உங்களிடம் தப்பிதங் கண்டுபிடித்து, "உங்கள் உடம்பில் துர்வாடை அடிக்கிறது; நீங்கள் ஸ்நானம் செய்வதில்லை; துணி துவைப்பதில்லை; மாட்டு மாமிசம் சாப்பிடுகிறீர்கள்; மது அருந்துகிறீர்கள்; இதை விட்டுவிடுங்கள்" என்று ஞானோபதேசம் செய்கிறார்கள்.

நீங்கள் வேட்டி துவைக்காமலும் குளிக்காமலும் இருப்பதற்கு யார் ஜவாப்தாரி என்பதை அவர்கள் உணருவதில்லை. உங்களுக்குக் குடிக்கவே தண்ணீர் இல்லை என்றால் குளிப்பதெப்படி? அழுக்கும் நாற்றமும் உங்கள் கூடப் பிறந்ததவையா என்று கேட்கிறேன். குளிக்கவும் வேட்டி துவைக்கவும், பல் துலக்கவும் தண்ணீர் கொடுக்காமல்—மகந்துகள் என்போரையும், சங்கராச்சாரிகள் என்போரையும் கொண்டுவந்து வீட்டில் அடைத்து வைத்து விட்டால், அவர்கள் துணி அழுக்கில்லாமல் இருக்குமா? அவர்கள் உடம்பும், வாயும் நாற்றமடிக்காமலிருக்குமா என்று யோசித்துப் பாருங்கள்! நாமே ஒருவனைப் பட்டினி போட்டு வைத்து, அவன் இறந்துபோன பிறகு, "பட்டினியால் இறந்துபோய்விட்டான், பாவி" என்று சொன்னால், யார் பாவி என்பதை நினைத்துப் பாருங்கள்!

அல்லாமலும், மாடு தின்பதும் மதுவருந்துவதும் நீங்கள் பறையர்களாக இருப்பதற்குக் காரணமென்று சொல்வது கொஞ்சமும் யோக்கியமான காரியமல்ல. மாடு சாப்பிட்டுக்கொண்டும், மதுவருந்திக்கொண்டும் இருப்பவர்கள் தான் இன்று உலகத்தையே ஆண்டுகொண்டிருக்கிறார்கள். தவிரவும், நீங்கள் மாடு சாப்பிடுவதன் குற்றம் உங்களைச் சார்ந்ததல்ல. உங்களை, மற்றவர்களைப் போல சரியானபடி சம்பாதிக்கவும், தாராளமாய்ச் சாப்பிடவும், தெருவில் நடக்கவும், தாராளமாய் எங்கும் போய் வேலைசெய்து சம்பாதிக்கவும் வழியில்லாமல் செய்துவிட்டதால், கொஞ்சப் பணத்தில் அதிக ஆகாரம் ஆகக்கூடியதான மாட்டு மாமிசத்தைப் புசிக்கவேண்டியதாயிற்று. மாட்டு மாமிசத்தை அனுமதிக்கும் மதத்தைச் சேர்ந்த முகமதியரிலும் கிறிஸ்தவரிலுங்கூட, சிலர் கைப் பணந் தாராளமாய்க் கிடைப்பதாயிருந்தால், 'நாங்கள் மாட்டு மாமிசம் சாப்பிடும் வழக்கம் இல்லை' என்று சொல்லி விடுகின்றார்கள். ஆதலால், நமது நாட்டில் மாட்டிறைச்சி சாப்பிடுவதற்குத் தரித்திரந்தான் முக்கிய காரணம். அல்லாமலும், மாட்டு மாமிசம் சாப்பிடுவது—ஆடு, கோழி, மீன், பன்றி இவைகளை விட என்ன அவ்வளவு அதிகமான பாவமாய்ப் போய்விட்டது? கோழியும் மீனும் பன்றியும், எச்சிலையும் பூச்சி புழுக்களையும் அழுக்குகளையும் மலத்தையும் தின்கின்றன. இப்படி இருக்க, இதைச் சாப்பிடுகிற வடநாட்டு 'பிராமணர்கள்' முதல் தென்னாட்டு சூத்திரர்கள் வரை, நல்ல சாதியும் தொடக்கூடியவர்களாயும் இருக்கும்போது, புல்லும் பருத்திக்கொட்டையும் தவிடும் பிண்ணாக்கும் தின்கிற மாட்டின் இறைச்சி சாப்பிடுவதனால் மாத்திரம் எப்படி ஒரு மனிதன் தாழ்ந்தவனாவான்? அப்படிப் பார்த்தாலும், மாடு சாப்பிடுகிறவர்களையெல்லாம் "தொடாதே; தெருவில் நடக்காதே; குளத்தில் தண்ணீர் சாப்பிடாதே; ஊருக்குள் குடி இருக்காதே" என்று சொல்லுகிறார்களா? இது வேண்டுமென்றே வீணாய் உங்களைத் தாழ்த்திவைப்பதற்காகச் சொல்லும் ஒரு யோக்கியப் பொறுப்பற்ற காரணமேயல்லாமல்—உண்மையான காரணமல்ல என்பதுதான் எனது முடிவு. மதுவையும் மாட்டு மாமிசத்தையும் தள்ளவேண்டும் என்பதை நான் ஆட்சேபிக்க வரவில்லை. மதுவையும் மாட்டு மாமிசத்தையும் தள்ளினால் தான், உங்கள் சாதி உயரும் என்று சிலர் சொல்லும் அயோக்கியத்தனமான காரணத்தை நான் ஒப்புக்கொள்ள முடியாது. சாதி உயருவதற்காக மதுவையும் மாட்டு மாமிசத்தையும் விடுங்களென்று கேட்கமாட்டேன். அதற்காக நீங்கள் விடுவதும் அவ்வளவு அவசியமில்லை.

நம் நாட்டில் தென்னை, பனை மரங்களில் ஊறும் கள்ளும், காய்ச்சும் சாராயமும், வெளிநாடுகளிலிருந்து வரும் சாராய தினுசுகளும் சென்னை மாகாணத்தில் மாத்திரம் சுமார் 15, 20 கோடி ரூபாய் பெறும்படியானதையெல்லாம் நீங்களே குடித்து விடுகிறீர்களா?

யாராவது நம்புவார்களா? ஒருகாலும் நம்பமாட்டார்கள். ஆதலால், சாதி உயர்வை உத்தேசித்து இவற்றை விட்டுவிட வேண்டுமானால், மற்றவர்கள் முதலில் விடட்டும்.

"மதுபானம் மனிதனின் ஒழுக்கத்திற்கு விரோதமானதென்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். மது விலக்குக்காக நானும் சிறிது தொண்டு செய்து இருக்கிறேன். ஆனால் சாதி உயர்வுக்கு எல்லா சாதியாரும் சாப்பிடும் மதுபானம் ஒன்றும் தடை செய்வது இல்லை. ஆகையால், மதுவிலக்கும் மாமிசவிலக்கும் சாதி உயர்வுக்கு அவசியம் என்று சொல்வது வேண்டுமென்றே சொல்லும் பொய். அல்லாமலும், உங்களிடம் சில குற்றங்கள் இருக்கிறதைச் சொல்லாமலிருக்க முடியவில்லை. அதாவது, நீங்களாகவே உங்கள் சாதிக்கு இழிவு சம்பாதித்துக் கொள்கிறீர்கள். அனாவசியமாக, யாரைக் கண்டாலும் 'சாமி' என்று கும்பிடுகிறீர்கள். நீங்கள் தாழ்ந்தவர்கள் என்ற எண்ணம் உங்கள் இரத்தத்தில் கலந்திருக்கிறது. அதை மாற்றிவிட வேண்டும். ஒரு மனிதனைப் பார்த்தால், அவனுக்கும் உங்களுக்கும் என்ன வித்தியாசம் என்பது உங்கள் மனத்தில் உதிக்க வேண்டும். சுயமரியாதையில் கவனமில்லாத சாதியாரை உயர்த்தினாலும் உயர மாட்டார்கள். அவனவனுக்கே, தான் மனிதன் என்ற உணர்ச்சி வரவேண்டும்.

நீங்கள் இனிமேல் யாரையும் 'சாமி' என்று கூப்பிடக்கூடாது. வேண்டுமானால் 'அய்யா' என்று கூப்பிடுங்கள். நீங்களாகவே பதுங்குவதும் ஒதுங்குவதுமான துர்க்குணங்கள் உங்களை விட்டுப் போகவேண்டும். அன்றுதான் நீங்கள் சமத்துவமாக நடத்தப்படுவீர்கள்.

[சிராவயலில், 7-4-1926-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 25-4-1926]

## 3. ஆதித் திராவிடர் நிலை

சகோதர, சகோதரிகளே!

இந்த ஜில்லா ஆதித் திராவிடர்கள் மகாநாட்டுக்கு நான் இதற்குமுன் நான்கு அய்ந்து தடவைகள் அழைக்கப்பட்டிருந்தாலும், அப்போது பல காரணங்களால் எனக்கு வரமுடியாமல் போய்விட்டதால், இந்தத் தடவை கட்டாயமாய் எப்படியாவது வரவேண்டுமென்று கருதியே வந்து சேர்ந்தேன். வரவேற்புக் கழகத் தலைவர் என்னைப்பற்றிப் பிரமாதமாகப் புகழ்ந்து கூறினார். அவ்வளவு புகழ்ச்சி எனக்கு வெட்கத்தைக் கொடுத்ததே அல்லாமல், மற்றபடி அதில் உண்மை இல்லை என்று சொல்லுவேன்.

தீண்டாமை விலக்கு என்னும் விஷயத்தில் நான் ஏதாவது ஒரு சிறிதாகிலும் வேலை செய்திருப்பதாக ஏற்படுமானால் அது எங்கள் நலத்திற்குச் செய்ததாகுமே ஒழிய, உங்கள் நலத்திற்கென்று செய்ததாக மாட்டாது.

ஏனெனில், உங்களுக்கும் எங்களுக்கும் சமூக வாழ்வின் பொதுத் தத்துவத்தில் சிறிதும் பேதமில்லை. உதாரணமாக, நீங்கள் எப்படித் தீண்டப்படாதவர்களோ அப்படியே தான் உங்களைவிடச் சிறிது மேல்வகுப்பார் என்கின்ற நாங்களும் ஒரு வகுப்பாருக்கு, அதாவது கடவுள் முகத்திலிருந்து பிறந்ததாகவும், பூலோகத் தேவர்கள் என்றும் சொல்லிக்கொள்ளும் பார்ப்பனர்களுக்கு—நாங்கள் தீண்டாதவர்களாகவே இருக்கின்றோம். கோவில் பிரவேசம் என்பதிலும் உங்களைவிட சற்று முன்போக மாத்திரம் அனுமதிக்கப்படுகிறோமே தவிர, மற்றபடி பார்ப்பனன் இருக்கும் இடத்திற்குப் பின்னால்தான் நிற்க வேண்டியவர்களாக இருக்கிறோம். நீங்கள் கோவிலுக்குள் வந்தால் எப்படிக் கோவிலும் சாமியும் தீட்டுப்பட்டுவிடுகின்றதோ, அப்படித்தான் நாங்களும் ஒரு இடத்திற்குப் போனால் சாமியும் கோவிலும் தீட்டுப்பட்டுவிடுகின்றன. உங்கள் எதிரில் சாப்பிட்டால்—உங்களுடன் சாப்பிட்டால்—உங்கள் வீட்டில் சாப்பிட்டால், எப்படித் தோஷமும் பாவமுமான காரியமாகி

விடுகின்றதோ, அப்படியே எங்கள் வீட்டில்—எங்கள் முன்னாலே—எங்கள் பக்கத்திலே சாப்பிட்டாலும் தோஷம், மோசம், பாவமென்றுதான் சொல்லப்படுகின்றது.

நமது சமூகத்திற்குப் பெயர் சொல்லி அழைப்பதிலும் உங்களைவிட இழிவாகவே தான் அழைக்கப்படுகின்றோம். உங்களைப் பறையர் என்றும் பள்ளர் என்றும் சொல்லுகிறார்கள். ஆனாலும் பறையர், பள்ளர் என்கின்ற வார்த்தை தொழிலையும் வசிப்பு இடத்தையும் பொறுத்து ஏற்படுத்தப்பட்டது. பறையனும் பள்ளனும் அந்தப் பெயரால் சுதந்திரமானவராகவும் இழிவுபடுத்தத் தகாதவராகவும் இருக்கிறார்கள். ஆனால், எங்களை அழைக்கும் பெயராகிய 'சூத்திரன்' என்று சொல்லப்படும் பெயரானது, பிறவியிலேயே இழிவை உண்டாக்கத் தக்கதும், ஒருவனுக்குப் பிறவி அடிமையாகவும், பிறவித் தாசி மகனாகவும், மற்றும், மிக்க இழிவான கருத்து கொண்டதாகவுமே இருக்கின்றது. எங்களுக்கு ஏற்படுத்தியிருக்கும் நிர்பந்தங்களும் சகிக்கமுடியாத இழிவைக் கொடுக்கக் கூடியதாகவே இருக்கின்றது. பறையன் என்றால் சொந்தத் தாய் தந்தைக்கே பிறந்தவன் என்கின்ற கருத்து உண்டு. ஆனால், சூத்திரன் என்றால் தாசிமகன், வேசிமகன், வைப் பாட்டிமகன், பிறவி அடிமை, விலைக்கு வாங்கப்பட்ட அடிமை என்பதுபோன்ற பல இழிவுப் பொருள்கள் நிரம்பியிருக்கின்றது.

தவிர, உங்களைப் போன்ற ஒரு வகுப்பும்—அதாவது பஞ்சமர்கள் என்று சொல்லப் படுவதற்கும் அப்படி ஒன்று இருப்பதற்கும் பார்ப்பன மதத்தில்—அதாவது இந்து மதத்தில்—இடமே இல்லை. இந்து மதத்தில் சூத்திரன் என்பதற்கும் கீழாக ஒரு சாதியே பிறவியில் கிடையாது. ஆனால், வாழ்க்கையில் நான்கு வருணக்காரர்களும் நடந்து கொள்ளுகின்ற முறையில் 'சண்டாளர்கள்' என்று ஒரு வகுப்பு உண்டாகிறது. அதாவது—பார்ப்பன ஆணுக்கும் பார்ப்பனரல்லாத பெண்களுக்கும் பிறக்கும் பிள்ளைகள், பார்ப்பனர்களில் வேதம் படிக்காதவன், நெருப்பு வளர்க்காதவன், சந்தியாவந்தனம் செய்யாதவன், மற்றும் இதுபோல் பார்ப்பனீய கருமம் என்பவைகளைச் செய்யாதவன்—முதலானவர்கள் சண்டாளர்களாகின்றார்கள். இதைத் தர்க்க பார்ப்பனப் பண்டிதர்களும், வேதசாத்திர நிபுணர்கள் என்பவர்களுமே சொல்லி உறுதிப்படுத்தி இருக்கின்றார்கள். ஆதலால், உங்களை யாராவது சண்டாளர்கள் என்று சொல்வார்களானால் அவர்கள் உங்களைப் பார்ப்பனிக்கும் பார்ப்பனரல்லாதார்க்கும், அல்லது பார்ப்பனர்க்கும் அல்லாத பெண்ணுக்கும் பிறந்தவர்கள் என்பதை ஒப்புக்கொள்ளவேண்டும். அப்படி இல்லையானால், ஒழுக்கந் தவறிய பார்ப்பனர்கள்தான் நீங்கள் என்பதைஒப்புக்கொள்ளவேண்டும். அப்படியானால், இன்றையத் தினம் பார்ப்பனச் சமூகத்திலுள்ள நூற்றுக்கு 99¾ பேர்வழிகள் சண்டாளர்களாகத்தான் இருக்கவேண்டும். எனவே, இந்த முறையில் உங்களுக்காவது தர்க்க ரீதியில் ஒரு வழியில் குற்றம்சொல்லாமலிருக்க ஆதாரங்களும் இடமும் இருக்கின்றன. ஆனால், எங்கள் நிலை நினைக்கவே முடியாதபடி, பெரிய இழிவாய் இருக்கின்றது. ஆதலால்தான், சமூக வாழ்வில் உங்களைவிட நாங்கள் தாழ்ந்த, இழிவான தன்மையில் இருக்கின்றவர்கள் என்று சொல்லுகின்றதுடன், இதனை இழிவு நீங்க முயற்சிக்கும் வேலை—முக்கியமாக எங்கள் வகுப்புக்காகச் செய்யப்படும் வேலை—என்றும் சொல்லுகின்றேன். தவிர, உங்களுக்கோ, எங்களுக்கோ இப்போது இருக்கும் இழிவுகள் ஒழிய வேண்டுமென்கின்ற கவலை சிறிதளவாவது—யாருக்காவது—இருக்குமானால், அவர்கள் இவ்விழிவு நிலைக்கு ஆதாரமாய் உள்ளதை அழிக்கத் தைரியங்கொண்டு தயாராய் இருந்தாலொழிய, கண்டிப்பாய் முடியவே முடியாது. ஏனெனில், இவ்விழிவு நிலைகளை ஏற்படுத்தியது மனிதனுடைய அயோக்கியத்தனமாய் இருந்தாலும், அதை நிலைநிறுத்தக் கருதி அதையே ஒரு மதத் தத்துவமாகவும், அத் தத்துவம் எல்லாம்வல்ல கடவுள் என்பவரால் ஏற்படுத்தப்பட்டதென்றும் கற்பிக்கப்பட்டு, நிலைநிறுத்தி அமுலில் நடத்திவரப்படுகின்றது.

இந் நிலை சிறிது மாற்றப்படவேண்டுமென்றாலும், மேற்கண்ட மதமும் கடவுளும் வந்து குறுக்கிடுகின்றன. ஆதலால், இந் நிலைக்கு ஆதாரமானதென்று சொல்லப்படும்

மதத்தையும், அம் மதத்தை உண்டாக்கினதாகச் சொல்லப்படும் கடவுளையும் எதிர்த்து நின்று அவற்றை அழித்தாலொழிய வேறு மார்க்கமில்லையென்று பதில் அளிக்கவும் ஒழிக்கவும், தைரியமாகவும் தயாராகவுமிருந்தாலொழிய,—வேறு மார்க்கத்தில் முடியவே முடியாது. அன்றியும் உங்களுக்குச் சுயமரியாதை உணர்ச்சியும் வேண்டும். நாம் ஏன் தாழ்ந்தவர்கள்? நாம் ஏன் ஒருவனுக்குப் பாடுபடவேண்டும்? என்கின்ற உணர்ச்சி வர வேண்டும். நீங்களும் மற்றவர்களைப்போல் மனிதர்கள்தான் என்று கருதவேண்டும்.

உங்களை யாராவது கிராமவாசிகள் துன்புறுத்தினால், இழிவாய் நடத்தினால் எதிர்த்து நிற்கவேண்டும். முடியாவிட்டால் வேறு பட்டனங்களுக்குக் குடியேறிவிட வேண்டும். அங்கும் ஜீவனத்திற்கு மார்க்கமில்லாவிட்டால் இம் மாதிரியான கொடுமையான மதத்தை உதறித்தள்ளிவிட்டு சமத்துவமுள்ள மதத்திற்குப் போய்விடவேண்டும். அதுவும் முடியாவிட்டால், வெளிநாடுகளுக்காவது கூலிகளாய்ப் போய் உயிரையாவது விடவேண்டும். இம் மாதிரியான உறுதியான முறைகளைக் கையாளத் துணியவில்லையானால், உங்கள்மீது சுமத்தப்பட்ட இழிவு சுலபத்தில் ஒழியாது என்றே சொல்லுவேன். கஷ்டப்படவும் கட்டுப் பாட்டை உடைத்து எறியவும், உயிரை விடவும் தயாராய் இல்லாமல், எந்தக் காரியத்தை யும் சாதிக்கமுடியாது. அன்றியும் வேறு ஒருவன் வந்து உங்களுக்கு உதவி செய் வான் என்று எதிர்பார்ப்பதும் பெரிய முட்டாள்தனமாகும்.

உங்களையே நீங்கள் உபயோகப்படுத்திக்கொள்ளத் துணிவு கொள்ளவேண்டும். படிப்பினாலும் பணம் சம்பாதிப்பதாலும், குளிப்பதனாலும், குடிக்காமல் இருப்பதாலும், மாமிசம் சாப்பிடாது இருப்பதினாலும் இவ்விழிவு போய்விடுமென்று சிலர் உங்களுக்கு உபதேசம் சொல்லுகின்றார்கள். நான் அவைகளை ஒப்புக்கொள்ளமாட்டேன். உங்க ளுடைய இழிவுக்கு இவைகள்தாம் காரணமானால் இந்தத் தன்மைகள் உள்ள மற்றவர்கள் இவ் விழிவை அடையாமல், பிராமணர்களாகவே எப்படி இருக்கின்றார்கள்? உங்களுடைய இழிவுக்குக் காரணம் உங்களுக்கு மானம், சுயமரியாதை உணர்ச்சி ஏற்படாததுதானே ஒழிய வேறில்லை. ஆகையால், நீங்கள் மற்றவர்களைப்போல் மனிதர்கள்தாம் என்று எண்ணிக் கொண்டு, அதற்கு ஏற்றவிதமாக நடந்துகொள்ளத் துணிவு கொள்ளுங்கள். அதனால் ஏற்படும் கஷ்டங்களைச் சகிக்கத் தைரியம் கொள்ளுங்கள். சீக்கிரத்தில் விடுபடுவீர்கள்.

[சிறுவத்தூரில், 12-6-1929-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 16-6-1929]

அக்கிராசனரவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

ஆதித் திராவிட சமூகத்தாருக்கு, மற்ற சமூகத்தார்கள் செய்யும் கொடுமைகளைப் பற்றிக் கேட்க எனக்கு ஆத்திரமாய் இருக்கின்றது. ஆனால், இதற்கு யார் ஜவாப்தாரி என்பதைப் பற்றி யோசித்துப் பார்க்கையில், உங்களைக் கொடுமை செய்பவர்கள் ஜவாப் தாரியல்லர்; ஏனெனில், அவர்கள் தங்களது நம்பிக்கையின் பேரில், தங்களது மத உணர்ச்சி மத ஆதாரம் ஆகியவைகளில் உள்ள பற்றுதலின் பேரில், தங்கள் முன் ஜென்மத்தின் கர்மம்—பூர்வ புண்ணியம்—தலைவிதி என்கின்ற சுதந்திரத்தின் பேரில், ஒரு உரிமை பாராட்டி அம்மாதிரி செய்கின்றார்களேயொழிய வேறில்லை. அதுபோலவே, நீங்களும் பிறர் உங்களை நடத்துகின்ற அந்த மாதிரியான கொடுமைகளை நினைத்த மாத்திரம்—அதுவும் அந்தச் சமயத்தில் மாத்திரம்—சிறிது அக்கிரமமாகவும் கொடுமையாகவும் இருப்ப தாகக் கருதுகின்றீர்களே யொழிய, 'அதற்குக் காரணம் என்ன? இப்படிப்பட்ட ஒரு கொடுமையானதும், அக்கிரமமானதுமான காரியம் ஏன் நடக்கின்றது?' என்கின்ற விஷயத் தையும், 'இதை எப்படி அடியோடு ஒழிப்பது? இதற்காக என்ன செய்ய வேண்டியது?' என்கின்ற விஷயங்களையும் நீங்கள் நினைப்பதுமில்லை. அப்படிப்பட்டவைகளை, வேறு யாராவது எடுத்துச் சொன்னாலும் அவைகளை ஒப்புக்கொண்டு நடவடிக்கையில் நடப்பதற்கு நீங்கள் துணிவதுமில்லை. வீணாய், இப்படிப்பட்ட ஏதாவது ஒரு சமயத்தில்—

உங்களில் தனிப்பட்டவர்களுக்கு ஏதாவது சங்கடம் வந்த காலத்தில் மாத்திரம்—இரண்டொரு வார்த்தைகளால்—அதுவும் இதன் அஸ்திவாரத்தைக் கவனியாமல்—தனிப்பட்ட நபர் மீதோ, வகுப்பார் மீதோ குற்றம் சொல்லிக் கூப்பாடு போடுவதும், பிறகு நாலு நாள் கடந்துவிட்டால், அது மறைந்து போய்ப் பழையபடி ஆகிவிடுவதும் வழக்கமாயிருக்கிறது. பொது வாழ்க்கையில் உள்ள சில கனவான்களும் உங்களுக்குப் பரிந்து பேசுவது போல் சில வார்த்தைகளைப் பேசிவிட்டு, பிறகு அவரவர்கள் சொந்த வேலையை அவரவர்கள் பார்ப்பதும், பிறகு என்றும்போல் சாதாரணமாய் இருப்பதும் வழக்கம்.

எப்படி இருந்தாலும், மனிதன் மனித சுதந்திரம்—அதாவது தெருவில் நடப்பது, குளத்தில் தண்ணீர் மொள்ளுவது, மனிதனுக்கு மனிதன் தொடுவது முதலிய சுதந்திரங்கள் கூடக் கொடுப்பதற்குத் தன் நாட்டினனாலேயே தடைப்பட்டிருக்கும் போது, வேறு நாட்டானிடம் அரசாட்சி சுதந்திரம் கேட்பது வேடிக்கை இல்லையா? உங்களுக்கு மனித சுதந்திரம் கிடைக்க வேண்டும். அல்லது இந்த நாட்டிலாவது, மதத்திலாவது, சமூகத்திலாவது இல்லாமல் இருக்க வேண்டும். இந்த முடிவைத் தவிர, எப்படியோ உயிர் வாழ்ந்தால் போதும் என்று நினைத்துக்கொண்டு, இப்படியே இருப்பது மிகவும் மானங்கெட்ட தன்மையாகும். இவ்விஷயத்தில் பொறுத்துப் பார்க்கலாம் என்பது பேடித்தன்மையாகும். எவ்வளவு நாள் பொறுப்பது? எவ்வளவு மெல்லப் போவது? இந்த நிலைக்காக இதற்கு முன் எத்தனையோ பேர் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் வக்காலத்துப் பேசியாய்விட்டது. எத்தனையோ பேர் தர்மம், நியாயம் பேசியாய் விட்டது. அவ்வளவும் பழைய நிலையைப் பலப்படுத்தவே முடிந்தது. "தோலைக் கடித்து, துருத்தியைக் கடித்து வேட்டை நாய் ஆகிவிட்டது" என்பது போல், தேசியமானது ஒரு பக்கம் அரசியல் சுதந்திரம் கேட்டுக் கொண்டும், மற்றொரு பக்கம் வருணாசிரம சுயராஜ்யமும் பெற முயற்சிகள் நடைபெறுகின்றன. இந்த விழிப்பாசை மயக்கத்தில் கூட, "சாதி வித்தியாசம் இருக்க வேண்டும்; பறையர் வேண்டும்; மனுதர்மம் வேண்டும்" என்று மாநாடுகள் கூடிப் பேசப்படுகின்றது.

நம் மீதும் உங்கள் மீதும் சுமத்தப்பட்ட இழிவுகள் ஒழிய வேண்டும். அதற்காக, உயிரையும்விட, உங்கள் பெண்டு பிள்ளைகளும் நீங்களும் தயாராயிருங்கள்! இன்றைய தினம் உலகத்தில் பல தேசங்கள் பணக்காரன்—ஏழை என்கின்ற வித்தியாசமும் இருக்கக் கூடாது என்று முடிவுகட்டி, வேலைசெய்து வெற்றியடைந்து வருகின்ற காலத்தில், நீங்கள் 'பார்ப்பார சாதி—பறைச் சாதி; ஒருவரையொருவர் பார்த்தால்—தொட்டால்—தெருவில் நடந்தால் தீட்டு' என்ற கொள்கையை வைத்துக்கொண்டிருந்தால், நமக்கும் மேல் நாட்டிற்கும் கருத்தில் எவ்வளவு வித்தியாசம் என்பதை யோசியுங்கள்! இந்த உணர்ச்சிகள் உங்களுக்குத் தோன்றாமல் இருப்பதற்குக் காரணம், உங்கள் முட்டாள்தனமும், அதற்கு ஆதரவான உங்கள் மத நம்பிக்கையும் தெய்வ நம்பிக்கையுமாகும். ஆதலால், அவற்றை முதலில் விரட்டி அடியுங்கள். பிறகு சுயமரியாதையும் சமத்துவமும் கிடைக்கும்.

(இருகூரில், 3-1-1931-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 11-1-1931)

அக்கிராசனரவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

சாதியை நாங்கள் ஒன்றாக்குகின்றோம். ஆம்! ஆக்க முயற்சிக்கின்றோம். அதில் சந்தேகமில்லை, ஆனால், சீக்கிரத்தில் முடியுமா என்பது சந்தேகம். மனித சாதி ஒன்றாகித் தான் தீரவேண்டும். அதற்குத் தடை செய்கின்றவர்கள் அயோக்கியர்கள்—மடையர்கள் என்று தைரியமாகச் சொல்லுகின்றோம். எங்கள் பெண்களை பறையனுக்குக் கொடுப்போமா என்று கேட்கப்படுகின்றது.

இது ஒரு அறிவீனமான கேள்வி; அல்லது அயோக்கியத்தனமான கேள்வி என்றே சொல்லுவேன். ஏனெனில், எங்கள் பெண்களை நாங்கள் அவர்களுக்கு இஷ்டப்பட்டவர்

களுடன் கூடி வாழச் செய்யப்போகின்றோமே யொழிய, எங்களுக்கு இஷ்டமானவர்களுக்குக் கொடுக்கும் உரிமையைக் கொண்டாடுகின்றவர்கள் அல்லர். பெண்களை ஒரு சாமானாகக் கருதி, 'ஒருவருக்குக் கொடுப்பது' என்கின்ற முறையை ஒழிக்க முயற்சிக்கின்றோம்.

நண்பர்களே! நாங்கள் ஆதித் திராவிடர்களைப்பற்றிப் பேசும் போது, பார்ப்பனர்கள் மனவருத்தம் அடைவதில் அர்த்தம் உண்டு. ஆனால், பார்ப்பனரல்லாதார் மனவருத்தமடைவதில் சிறிதும் அர்த்தமில்லை. அது வெறும் முட்டாள்தனமும், மானமற்ற தன்மையுமே யாகும். ஏனெனில், நமது சமூகத்தில் பார்ப்பனர் என்கின்ற கூட்டத்தாராகிய 100க்கு 3 வீதமுள்ள ஜனத்தொகை நீங்கி, மற்ற ஜனங்களுக்கு இந்த நாட்டில் சூத்திரன் (அடிமை), ஆதித் திராவிடன் என்கின்ற பட்டமில்லாமல் வேறு எந்தப் பட்டத்தோடாவது யாராவது இருக்க முடியுமா? இருக்கின்றார்களா? என்று கருதியும், அனுபவத்தையும் கொண்டு பாருங்கள்! சூத்திரன் என்கின்ற 'கலத்தில்' நீங்கள் பதியப்பட்டிருப்பதில் உங்களுக்குச் சிறிதாவது மானம் இருந்தால், பறையன் என்கின்ற பட்டம் போகவேண்டுமென்பதில் கடுகளவாவது வருத்தமிருக்குமா?

பறையன் பட்டம் போகாமல், உங்களுடைய சூத்திரப்பட்டம் போய்விடும் என்று கருதுகிறீர்களேயானால், நீங்கள் வடிகட்டின முட்டாள்களேயாவீர்கள்.

மற்றும் பேசப்போனால், பறையன், சக்கிலி என்பதற்கு இன்னார்தான் உரிமை என்றும், அது கீழ்சாதி என்பதற்கு இன்னது ஆதாரமென்றும் சொல்லுவதற்கு ஒன்றுமே இல்லை. கை பலமேயொழிய, தந்திரமேயொழிய வேறில்லை. ஆதலால், பறைப்பட்டமாவது சீக்கிரத்தில் மறைந்துவிடக்கூடும். உங்கள் சூத்திரப் பட்டத்திற்குக் கடவுள், மதம், வேதம், சாஸ்திரம், புராணம் இதிகாசம் ஆகிய அனேக ஆதாரங்கள் உண்டு. இத்தனையையும் நாசமாக்கி அடியோடு ஒழித்தாலல்லாமல் உங்கள் தலையில் இருக்கும் சூத்திரப் பட்டம் கீழே இறங்காது.

ஆகவே, யாருக்காவது மான உணர்ச்சி இருந்திருந்தால், "நீங்கள் சாதியை ஒன்றாக்குகின்றீர்களே!" என்று நம்மைக் கேட்டிருக்க மாட்டார்கள்.

ஆகவே, ஆதித் திராவிடர் நன்மையைக் கோரிப் பேசப்படும் பேச்சுகளும், செய்யப்படும் முயற்சிகளும் ஆதித் திராவிடரல்லாத மக்களில் பார்ப்பனரல்லாத எல்லோருடைய நன்மைக்கும் என்பதாக உணருங்கள்.

[நாகையில், 3-10-1931-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 11-10-1931]

## 4. தீண்டாமை

அமெரிக்காவில் நீக்ரோவர் துயரத்திற்கு, எந்த, 'நிற இறுமாப்பு' காரணமோ, அதே 'நிற இறுமாப்பு' தான் நமது நாட்டுத் தீண்டாமைக்குக் காரணமாயிருக்கிறது. இது ஆரியர் ஆதிகாலத்தில் நமது நாட்டில் குடியேறியபோது, பழங்குடி மக்களை அசுரர், இராட்சதர், மிலேச்சர், பஞ்சமர், சூத்திரர் என்று இழிவு படுத்தக் காரணமாய் இருந்தது.

தீண்டாமை என்பது, ஏணி மரப்படிபோல், இந்த நாட்டு மக்கள் ஒவ்வொருவரையும் பிடித்திருக்கின்றது. தீண்டாமையை ஒழிக்கவேண்டுமென்று பேசும் இந்தியத் தலைவர்கள் வருணாசிரம தர்மத்தை ஒழிக்க விரும்புவதில்லை.

['குடி அரசு'-தலையங்கம்—12-4-1931]

உலகிலுள்ள கொடுமைகள் எல்லாவற்றையும் விட, இந்தியாவில் மக்களை மக்கள் தீண்டாமை என்கின்ற இழிவு சம்பந்தமாகச் செய்துவரும் கொடுமையே மிகப் பெரிய கொடுமை என்றும், அதற்குச் சமமாக வேறு எந்தக் கொடுமையும் கூறமுடியாதென்றும் எல்லா மக்களாலும் அரசியல் சமூக இயல்வாதிகளாலும் சொல்லப்பட்டு, பொதுமக்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயமாகும். ஆனால், அது விஷயத்தில் மாத்திரம் பயன்படத் தக்க வழியில் ஏதாவதொரு முயற்சியை இதுவரை யாரும் எடுத்துக் கொள்ளாமல்—வெறும் வாய்ப்பந்தல் போடுவதனாலேயே, மக்களை ஏமாற்றிக்கொண்டு காலங் கழித்துவருவதும் பிரத்யட்சத்தில் தெரிந்த காரியமாகும்.

ஏதோ ஒருவகையில் சுயமரியாதை இயக்கம் செய்துள்ள கிளர்ச்சிகளாலும், தீண்டத் தகாதார் எனப்பட்ட சமூகத்தாருக்கு ஏற்பட்டுள்ள தீவிர உணர்ச்சியாலும், பொதுமக்களுள் ஒருவித பரபரப்பு ஏற்பட்டு இருப்பதுடன், எதிர்ப்புக்கு அதிக மரியாதை இருக்காது என்பதாகவும் தோன்றுகிறது. ஆதலால், காங்கிரசிலுள்ள பார்ப்பனரல்லாத தலைவர்களும் தொண்டர்களும் தனியாகக் கூடியாவது இந்தச் சமயத்தில்—மற்ற இயக்கக்காரர்களையும் கலந்துகொண்டும்—ஏதாவது முயற்சிக்கு முந்துவார்களாக! இந்த நிலையில் தீண்டப் படாதவர்கள் என்பவர்களும் தகுந்தபடி கிளர்ச்சி செய்தோ, அல்லது தீண்டாமைக்கு ஆதாரமான இந்து மதத்தை விட்டுவிடச் செய்தோ, தங்களது இழிவுகளையும் கொடுமை களையும் ஒழித்துக் கொள்ள முயற்சி செய்யவேண்டும்.

தீண்டாதார் என்பவர்களில் ஆங்கிலப் படிப்பு படைத்தோ அல்லது செல்வம் படைத்தோ உத்தியோகம், நியமனம் முதலியவைகளை எதிர்பார்த்துக் கொண்டிருப்பவர் களால் தீவிரமான முயற்சிகள் எதுவும் செய்யப்படும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக் காமல், ஆங்காங்குள்ளவர்கள் கூடிக்கூடி ஏதாவது ஒரு முடிவுக்கு வரவேண்டியதும் மிகவும் அவசியமாகும்.

['குடி அரசு'–தலையங்கம்—24-5-1931]

தீண்டாமையை ஒழித்து, அதனால் கொடுமைப் படுத்தப்பட்டிருக்கும் மக்களைக் கைதூக்கி விடவேண்டியது ஒழுங்கும் நியாயமும் அவசியமும் ஆகும் என்ற உணர்ச்சி, தற்போது நமது நாட்டு உயர்சாதி மக்கள் எனப்படுவோர் சிலருடைய மனத்தில் பட்டிருப்பதற்குக் காரணம், தாழ்த்தப்பட்ட சகோதரர்கள் செய்யும் கிளர்ச்சியும், சென்ற ஏழெட்டு ஆண்டுகளாக நமது இயக்கம் செய்துவரும் பிரச்சாரமுமே என்பதை யாரும் மறுக்க முடியாது.

ஆனால், தீண்டாமையை எந்த வழியினால் ஒழிக்கமுடியும் என்பதை ஆலோசிக்கும் போது, எல்லோரும் கீழ்க்கண்ட விஷயங்களைப் பற்றி எண்ணிப் பார்க்காமலிருக்க முடியாது.

இந்து மதத்தைச் சாராதவர்களும் இந்து மதத்திற்கு எதிரானவர்களும், இந்து மதப் பற்றுடைய மக்களால், 'அன்னியர்கள்', 'மிலேச்சர்கள்' என்று இழித்துக் கூறக் கூடியவர் களுமாகிய வேற்று மதத்தினர்கள் உயர்சாதி இந்துக்களுடன் தீண்டாமை யென்ற வேறுபாடின்றி நெருங்கிப் பழகிக் கொண்டிருக்கின்றனர்.

ஆனால், நீண்டகாலமாக இந்துக்கள் என்றே மதிக்கப்பட்டு வருகின்ற தாழ்த்தப் பட்ட மக்களோ, உயர்சாதி இந்துக்களுடன் நெருங்கிப் பழக முடியாதவர்களாகவும், அவர்கள் வசிக்கும் தெரு, குளம், கிணறு, பள்ளிக்கூடம், கோயில் முதலியவைகளைச் சமத்துவமாக அனுபவிக்க முடியாதவர்களாகவும்; 'சண்டாளர்கள்' என்றும்; 'பாவிகள்' என்றும்; 'பஞ்சமர்கள்' என்றும்; 'பாதகர்கள்' என்றும்; 'புலையர்கள்' என்றும் பலவாறு இகழ்ந்து ஒதுக்கப்பட்டு வருகிறார்கள்.

இந்தத் தகாத நடத்தைக்குக் காரணம் என்ன என்பதைக் கொஞ்சம் பொறுமையோடு ஆலோசித்தால் விளங்காமல் போகாது.

அன்னியராயிருந்தாலும் அவர்களிடம் மற்ற உயர்ந்தசாதி இந்துக்களைப் போலக் கல்வியும் செல்வமும் திறமையும் செல்வாக்கும் கட்டுப்பாடும் ஒற்றுமையும் அமைந்திருப்பதே, அவர்கள் மற்ற உயர்ந்தசாதி இந்துக்களுடன் சமத்துவமாகப் பழகுவதற்குக் காரணமாகும்.

சகோதர இந்துக்கள் என்று சொல்லப்பட்டாலும் தாழ்த்தப்பட்டவர்களிடம் செல்வமும் கல்வியும் திறமையும் செல்வாக்கும் கட்டுப்பாடும் ஒற்றுமையும் இல்லாமையே, இவர்கள் 'உயர் சாதி' என்று சொல்லப்படுகின்ற இந்துக்களால் தீண்டப்படாதவர்களாகக் கொடுமைப்படுவதற்குக் காரணமாகும்.

ஆகையால், உண்மையில் தீண்டப்படாத சகோதரர்கள் சமூக சமத்துவம் பெற வேண்டுமானால், அவர்கள் கல்வியிலும் திறமையிலும் செல்வத்திலும் செல்வாக்கிலும் ஒற்றுமையிலும் மற்றவர்களைப் போல சமநிலையை அடையவேண்டும் என்பதை யாரும் மறுக்க முடியாது.

தீண்டப்படாதவர்கள் மற்றவர்களுடன் சமத்துவமாகக் கோவிலுக்குச் செல்லும் உரிமை பெறுவதன் மூலம் ஓரளவு தீண்டாமை ஒழிகின்றதென்பதையும், சமத்துவம் கிடைக்கின்றது என்பதையும் நாம் ஒப்புக்கொள்கிறோம். இதுவும்—இரயில் வண்டிகளிலும், திருவிழாக் காலங்களிலும், கோயில்களின் தேர்களை இழுக்கும் காலங்களிலும் எந்த அளவில் தீண்டாமை ஒழிந்து சமத்துவம் ஏற்படுகின்றதோ, அந்த அளவில்தான் கோயில் நுழைவினாலும் தீண்டாமை ஒழிந்து சமத்துவம் ஏற்படும் என்பதே நமது கருத்தாகும். ஆகவே, கோயில் நுழைவினால் நிரந்தரமாகத் தீண்டாமை ஒழியவோ, சமத்துவம் ஏற்பட்டுவிடவோ முடியாது என்பதைப் பற்றி யாருக்கும் சந்தேகம் வேண்டியதில்லை.

ஆகையால், பொது இடத்துக்குப் போகக்கூடிய உரிமை தீண்டாதார்களுக்கும் இருக்கவேண்டும் என்ற கருத்துடன் கோயில் பிரவேச முயற்சி நடைபெறுமானால்—அதை நாம் மனப்பூர்வமாக ஆதரிக்கவே கடமைப்பட்டுள்ளோம் என்பதில் அய்யமில்லை.

இவ்வாறில்லாமல், தீண்டாதவர்களும் கோயிலில் சென்று, அங்கு இருப்பதாகச் சொல்லப்படும் 'கடவுள்' என்கின்ற குழவிக் கல்லுகளையும் பதுமைகளையும் தொழுவதற்கும்; அவைகளின் பேரால் மற்ற மூட மக்களைப்போல் பணம் செலவு செய்வதற்கும்; இவ்வாறு செய்வதன்மூலம் அவர்கள் 'பக்திமான்கள்' ஆவதற்கும் 'மோட்சம்' பெறுவதற்கும் கோயில் பிரவேசம் அவசியம் என்ற கருத்துடன் முயற்சி செய்யப்படுமானால்— "இம்முயற்சி கண்டிப்பாகத் தீண்டாதவர்களுக்குக் கேடு சூழும் முயற்சியே" என்றுதான் கூறுவோம்.

இப்பொழுது நமது நாட்டில் இருந்துவரும் எண்ணற்ற கோயில்கள் காரணமாகவும் அவைகளின் சார்பில் நடைபெற்றுவரும் 'திருவிழா'க்களின் காரணமாகவும், இவைகளின் மேல் பாமர மக்களுக்குள்ள 'நம்பிக்கை', 'பக்தி' முதலியவைகளின் காரணமாகவுமே பொதுஜனங்களின் செல்வம் பாழாகின்றது என்பதை யாரும் மறுக்கமுடியாது. இதோடு மட்டுமல்லாமல், பொதுஜனங்கள் அறியாமை நிறைந்தவர்களாகவும் மூட நம்பிக்கை மிகுந்தவர்களாகவும் இருந்து வருகின்றதற்குக் கோயில்களே காரணமாகும். இந்த நிலையைக் கருதும்போது, நமது நாட்டுப் பொதுமக்கள் சேவை என்ன என்பதைச் சற்று யோசித்துப் பாருங்கள்!

['குடி அரசு'—தலையங்கம்—8-5-1932]

தலைவரவர்களே! தோழர்களே!

தாழ்த்தப்பட்ட மக்களை, அவர்களுக்கு மற்றவர்கள் இழைத்துவரும் கொடுமையிலிருந்து விடுதலை செய்யவேண்டும் என்பதை உண்மையான கருத்துடன் பார்த்தால், அது ஒரு புரட்சி வேலையேயாகும். ஏனெனில், தாழ்த்தப்பட்ட மக்களின் நிலை ஒரு பெரிய அஸ்திவாரத்தின்மீதே கட்டப்பட்டிருக்கின்றது.

எப்படி என்றால், தாழ்த்தப்பட்ட மக்கள் கீழ்சாதி மக்கள்; தீண்டப்படாதவர்கள் என்பவர்களெல்லாம் பிறவியிலேயே கீழ்மைத்தன்மை அடைந்தவர்கள் என்றும், அவர்கள் கடவுளாலேயே அந்தப்படி பிறப்பிவிக்கப்பட்டவர்கள் என்றும், கடவுள் செயலையோ மத விதிகளையோ யாரும் மாற்றக்கூடாது என்றும், அவை மாற்றுதலுக்குக் கட்டுப்பட்டவை அல்லவென்றும் சொல்லக்கூடிய ஒரு பலமான அஸ்திவாரத்தின்மீது கட்டப்பட்டிருக்கிறது.

தாழ்த்தப்பட்ட மக்கள் சமத்துவம் பெறுவதும் தீண்டாமைத் தத்துவம் மனித சமூகத்திலிருந்து விலக்கப்படுவதும், வெறும் வார்த்தையாலோ, பிரச்சாரத்தினாலோ, மேல்சாதிக்காரர்களைக் கேட்டுக்கொள்வதினாலோ ஆகக்கூடிய காரியம் என்று யாராவது நினைத்தால், அவர்களது வாழ்வு வீண் வாழ்வு என்றுதான் சொல்லுவேன்.

தாழ்த்தப்பட்டவர்கள், தீண்டப்படாதவர்கள் என்பவர்களில் சிலர் தாங்கள் ஏதோ குளித்து முழுகிவிட்டு விபூதிப் பூச்சோ, பட்டை நாமமோ விதிப்படி அணிந்து, வைதீகர்கள்போல் வேஷம் போட்டுக்கொண்டு, மது மாமிசம் சாப்பிடுவதில்லை என்று சொல்லிக்கொண்டு, சுவாமி என்று பெயர் வைத்துக்கொண்டு திரிந்தால்—தங்கள் நிலை உயர்ந்துவிடும் என்றும், தீண்டாமை ஒழிந்துவிடும் என்றும் கருதியிருக்கிறார்கள். இது மற்றவர்களை ஏமாற்ற நினைத்துத் தங்களையே ஏமாற்றிக்கொள்ளும் பைத்தியக்காரத்தனமேயாகும்.

இந்தப்படி வெகுபேர்—தாழ்த்தப்பட்ட மக்களில், ஆதித் திராவிடர்களில்—வெகு காலமாகவே வேஷம் போட்டுப் பார்த்தாகிவிட்டது. அதற்குப் பல புராண சரித்திர ஆதாரங்கள் உண்டு.

ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்பிருந்து நாளது வரை, தீண்டாமை விலக்கு விஷயத்தில் ஒரு காரியமும் முடிந்ததில்லை என்று தைரியமாய்ச் சொல்லலாம்.

ஏதோ சில பாஷாண்டிகள் செய்த காரியங்களைத் தங்கள் சுயநலத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளத்தான் முடிந்ததே ஒழிய, அப்படிப்பட்ட வேஷத்தாலும் பக்தியாலும் காரியத்தில் ஏதும் ஆகி இருக்காது.

ஆகவே, கடவுளும் மதமும் அதற்கு ஆதாரமான கீதையும் மனுதர்ம சாஸ்திரமும் காப்பாற்றப்படுவதாயிருந்தால், சூத்திரத் தன்மையும் கீழ்சாதித் தன்மையும் தீண்டப்படாமையும் எப்படி மாற்றப்பட முடியும் என்று யோசித்துப் பாருங்கள்.

இன்று தீண்டாமை விலக்கு வேலையிலும் சாதி வித்தியாசம் ஒழிப்பு வேலையிலும் ஈடுபட்டிருப்பவர்களில் 100க்கு 100 பேரும் கீதை, மனுதர்ம சாஸ்திரம் ஆகியவற்றை நம்பும்—ஆதரிக்கும் சோணகிரிகளேயாவார்கள்.

இவர்கள் எவ்வளவு நாளைக்குப் பாடுபட்டாலும், அடியற்ற ஓட்டைக் குடத்தில் தண்ணீர் இறைக்கும் மூடர்களுக்கு ஒப்பானவர்களே யாவார்கள்.

ஆகவே, தீண்டாமை ஒழிப்புக்கோ, சாதி ஒழிப்புக்கோ நீங்கள் முதலில் உங்கள் மதத்தை ஒழித்தாகவேண்டும். மதத்தை ஒழிக்க உங்களால் முடியவில்லையானால்

மதத்தை விட்டு நீங்களாவது விலகியாகவேண்டும். உங்கள் மதம் போகாமல் ஒருநாளும் உங்களது தீண்டாமைத் தன்மையோ, பறைத் தன்மையோ ஒழியவே ஒழியாது என்பது கல்லுப்போன்ற உறுதி.

உதாரணம் வேண்டுமானால், இதுவரையில் தீண்டப்படாதவர்களாய் இருந்து, மனித சமூகத்தில் தீண்டக்கூடியவர்களாக ஆன எவரும்—தீண்டப்படாதவர்களாய் இருந்த போது அவர்கள்மீது சுமத்தப்பட்டிருந்த மதத்தை உதறித் தள்ளிவிட்ட பின்புதான்—'தீண்டத் தக்கவர்கள்' ஆகியிருக்கிறார்கள்.

ஆதலால், மதத்தைக் காப்பாற்றிக்கொண்டு தீண்டாமையை விலக்கிவிடலாம் என்று நினைத்து ஏமாற்றமடையாதீர்கள்.

[சீர்காழியில் 10-7-1935-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 28-7-1935]

## 5. ஆட்சிக் காலங்களும் ஆதித் திராவிடர் நிலையும்

தலைவரவர்களே! தோழர்களே!

இந் நாட்டில் இன்று எங்கு பார்த்தாலும் தாழ்த்தப்பட்டவர்கள் மாநாடு என்பதாகப் பல மகாநாடுகள் கூட்டி, தாழ்த்தப்பட்ட மக்கள் குறைகளைப்பற்றிப் பேசப்படுகின்றது. தாழ்த்தப்பட்ட மக்கள் என்பவர்கள் சுதந்திரம் பெறவேண்டும் என்றும், சுயமரியாதை பெறவேண்டுமென்றும் இந்த 10, 18 வருஷ காலமாகத்தான் வெளிப்படையாகவும், தைரிய மாகவும் கிளர்ச்சி செய்ய சந்தர்ப்பமும் சவுகரியமும் பெற்றிருக்கிறார்களென்பதோடு, உங்களுக்கே இந்த உணர்ச்சியும் இப்போதுதான் ஏற்பட்டிருக்கிறது.

இந்த நாட்டில், புராண காலங்களில் தாழ்த்தப்பட்ட மக்கள் தங்கள் மேம்பாட்டிற் காகப் பொதுவாக உழைத்ததாகவோ, உழைக்க ஆசைப்பட்டதாகவோ காணமுடியவில்லை யென்றாலும், ஏதோ இரண்டொருவர்—நந்தன், பாணன், சொக்கன் என்பதாகச் சிலர்—தங்கள் தங்கள் சொந்தத்தில் முத்தியடையவோ, கடவுளைத் தரிசிக்கவோவென்று பாடுபட்டதாகப் புராணங்களில் காணலாம். அவை வெற்றிபெற்றதாகக் கதைகள் இருந்த போதிலும், அவை நம்ப முடியாததும், சாதிக்கமுடியாததுமான பெரிய நிபந்தனைகள்மீது—அதாவது நெருப்பில் குளித்துவிட்டு வந்தும், கடவுளுடைய சம்மதமும் உத்தரவும் பெற்ற பிறகும்—ஏதோ முத்தியோ, மோட்சமோ அடைந்ததாகத்தான் காணப்படுகின்றனவே யொழிய, இந்த உலகத்தில் மற்ற மனிதர்களைப் போல் மானத்துடன் வாழ முயற்சித்த தாகவோ, வாழ முடிந்ததாகவோ பொய்க் கதைகள் கூடக் கிடையாது. அதுமாத்திர மல்லாமல், இந்து அரசர்கள் காலத்திலும் நீங்கள் இன்றுள்ள நிலையைவிட மிக்க கேவல மான நிலையில் நடத்தப்பட்டதாகத்தான் காணமுடிகின்றது.

அன்றியும், தமிழ்அரசர்கள், மூவேந்தர்கள் முதலியவர்களுடைய ஆட்சிக்காலத் திலும் நீங்கள் மிகக் கேவலமாகவே உயிர்வாழ்ந்ததாகத்தான் காணக்கிடக்கிறது.

அவற்றிற்கு உதாரணம், திருவாங்கூர், கொச்சி முதலிய இந்து அரசர்கள் வாழும் நாட்டில், நீங்கள் எப்படி நடத்தப்பட்டீர்கள்—நடத்தப்படுகிறீர்களென்பதைப் பார்த்தால் தெரிந்துகொள்ளலாம்.

இந்து அரசர்களல்லாத முகமதிய அரசர்கள், கிறிஸ்துவ அரசர்கள் ஆகியவர்கள் ஆட்சிக்காலமே உங்களை ஓரளவுக்காவது மனிதர்களாக நடத்தப்பட்ட காலமாகச் சரித்திரமும், பிரத்தியட்ச அனுபவமும் காணப்படுகின்றன.

உண்மையாகவே, இந் நாட்டில் முகமதிய அரசர்கள் ஆட்சி 600, 700 வருஷ காலம் நடந்திருக்கவில்லையானால், தாழ்த்தப்பட்ட—தீண்டப்படாத மக்களின் எண்ணிக்கை இன்று, 'தோட்டத்தில் முக்கால் பாகம் கிணறு' என்பது போல், சுமார் 15—20 கோடி மக்களுக்குக் குறையாமல் இருந்திருக்கும்.

தீண்டப்படாதவர்கள் எண்ணிக்கை இன்று இந்திய ஜனத்தொகையில் ஐந்தில் ஒரு பாகத்திற்குள்ளாக இருப்பதற்குக் காரணம் முகமதிய ஆட்சியேயாகும். அது பெருகாமல் அந்த அளவுக்கு உள்ளாகவே இருந்து வருவதற்கும், கூடிய சீக்கிரத்தில் அடியோடு ஒழிந்துபோவதற்கும் நம்பிக்கைக்கு இடம் ஏற்படக் காரணமாய் இருப்பது பிரிட்டிஷ் அரசாட்சியின் பயனேயாகும்.

இந்த இரண்டு ஆட்சிகளும் எந்தக் காரணத்தாலோ இந்தியாவுக்கு ஏற்பட்டிருக்க வில்லையானால்—இந்தியாவில் இராஜ குடும்பமும், பார்ப்பனர் குடும்பமும் தவிர—மற்ற மக்கள் எல்லோரும் தீண்டத்தகாதவர்களாய், தாழ்த்தப்பட்ட மக்களாய்த்தான் இருந்திருக்க வேண்டும். இன்றுகூடப் பார்ப்பனரொழிந்த மற்ற மக்கள், 'கீழ்ச் சாதிக்காரராய், மத சம்பிரதாயப்படியும் பழக்கவழக்கப்படியும்—ஏன் அரசாங்கச் சட்ட முறைப்படியும்—குறிப் பிடப்பட்டிருப்பதை யாரே மறுக்கமுடியும்?

பழையகால அரசர்களின் யோக்கியதைகளைப் பார்க்கவேண்டுமானால்—அவர்கள் மக்களை எப்படி நடத்தினார்கள் என்பதை உணரவேண்டுமானால்—இராமன், அரிச் சந்திரன், சந்தனராஜன், பாண்டியன் முதலிய இந்து அரசர்கள் என்பவர்கள் நாடகத்தைப் பார்த்தாலே அறியலாம்.

முதன்முதலாக அரசன் கொலுமண்டபத்துக்கு வந்தவுடன் என்ன கேட்கிறான்?

"மந்திரி! நமது நாட்டில் பிராமணர்கள் ஜப, தபம்; ஓமம், எக்கியம்; யாகம் முதலியவைகளைச் செய்து சுகமாக வாழ்கின்றார்களா?

அவர்களுக்கு மான்யங்கள் முதலியவைகள் தாராளமாக விடப்பட்டிருக்கின்றனவா?

பிராமணர் முதலியவர்களுக்குச் சூத்திரர்கள் அடங்கி, ஒடுங்கி, ஒழுங்காகத் தொண்டு செய்து வருகிறார்களா?" என்றுதான் நகர விசாரணை செய்கிறார்களே யொழிய, வேறு என்ன?

ஆனால், இன்றுள்ள பிரிட்டிஷ் ஆட்சியின் நகர விசாரணை எப்படி இருக்கிற தென்பதை யோசித்துப் பாருங்கள்!

சமீப காலத்தில் பாராளுமன்றம் என்னும் பார்லிமெண்டைத் துவக்கியபோது அரசர்பெருமான் என்ன சொன்னார்?

"என்னுடைய பிரஜைகள் எல்லோரையும்—அவர்கள் எந்த சாதியினராக இருந் தாலும்—எவ்வித வித்தியாசமுமில்லாமல், எல்லாத்துறையிலும் சரிசமமாய் நடத்துவேன்" என்று சொல்லித் திறந்துவைத்தார்.

"அந்தப்படி அவர் நடத்துவார் என்பதற்கு என்ன நம்பிக்கை?" என்று இராம ராஜ்ய ஸ்தாபிதர்களாகிய காந்தியாரும், காந்தி பக்தர்களும் கேட்கலாம்.

மற்ற காரியங்களில் பிரிட்டிஷ் அரசாங்கம் எப்படி நடந்துகொண்டு வந்தது என்றாலும், தாழ்த்தப்பட்ட மக்கள் என்பவர்களாகிய உங்களைப் பொறுத்தமட்டில் யோக்கியமாகவும்—கூடிய அளவுக்கு நீதியாகவும்—ஆட்சி புரிந்திருக்கிறது என்று தைரிய மாகச் சொல்லுவேன்.

இன்று தாலுக்கா போர்டு, ஜில்லா போர்டு, பஞ்சாயத்து சபை, சட்டசபை, இந்திய சட்டசபை ஆகியவைகளில் உங்களுக்கு ஸ்தானமளித்து—பெரிய சாஸ்திரிகள், 'கனபாடி'கள், சங்கராச்சாரிய சுவாமிகள், இராஜாக்கள், ஜமீன்தார்கள் என்பவர்களுக்குச் சமமாய் நடத்துகிறார்கள். இராமராஜ்யத்தில் இந்த சபைகளுக்கு கக்கூஸ் வாரவோ, 'பங்கா' போடவோகூட—உங்களை அனுமதிக்கமாட்டார்கள்.

உதாரணமாக, இன்றும் சில அக்கிரகாரங்களில் எச்சிலை எடுக்கவோ, குப்பை கூட்டவோ, கக்கூஸ் வாரவோகூட உங்களை அனுமதிப்பதில்லை.

கும்பகோணம் முனிசிபாலிட்டியில், "அக்கிரகாரத்துக்கு கக்கூஸ் எடுக்கச் சூத்திரர்கள் என்பவர்களை நியமிக்கவேண்டும்" என்று பாடுபட்டது உங்களுக்குத் தெரியாதா?

இப்படி, பிரிட்டிஷ் அரசாங்கம் உங்களைப் பொறுத்தவரை எவ்வளவோ நன்மை செய்துவந்திருப்பதோடு, உங்களுக்கு ஒரு மந்திரி ஸ்தானமும் கிடைக்கும்படியான அளவுக்குச் சட்டசபைகளில் பிரதிநிதித்துவம் கிடைக்கும்படி சீர்திருத்தம் வழங்கி இருக்கிறது.

ஆகவே, நான் ஏதோ இராஜவிஸ்வாச உபந்யாசம் செய்வதாய் தேசாபிமான வீரர்களுக்குத் தோன்றலாம்.

பிரிட்டிஷ் அரசாங்கம் மாத்திரமேயல்லாமல், உலகிலுள்ள அரசாங்கங்கள் எல்லாமே ஒழிந்துபோக வேண்டும் என்கின்ற ஆசையுள்ளவன் நான்.

இராஜாக்கள் என்பவர்களே இன்றைய உலகுக்கு அவசியமில்லாதவர்கள் என்றும், பொதுஜனங்களுடைய சுயமரியாதைக்குக் கேடானவர்கள் என்றும் கருதியும், சொல்லியும், எழுதியும் வந்திருக்கின்றவன் நான்.

இராஜாக்கள் மாத்திரமல்லாமல் பணக்காரர்கள், ஜமீன்தார்கள், வியாபாரிகள், முதலாளிகள் என்கின்றதான கூட்டங்கள் கூடப் பொதுஜனங்களை அரித்துத் தின்னும் புழுக்களானதால், அவை அழிக்கப்படவேண்டியவை என்றும் கூடச் சொல்லுகிறவன் நான்.

உங்களைப் பொறுத்தவரையிலும், நீங்கள் காந்தி ராஜ்யத்துக்கோ, இராம ராஜ்யத்துக்கோ, கராச்சி சமதர்ம ராஜ்யத்துக்கோ போவதை விட—பிரிட்டிஷ் அரசாங்கம் ஆயிரம்மடங்கு மேலானது என்று பறை அடிப்பேன்.

இராம ராஜ்யத்திலாகட்டும், கராச்சி திட்ட சமதர்ம ராஜ்யத்திலாகட்டும்—வருணாசிரம தர்மமோ, சாதிப் பாகுபாடோ, இவைகள் சம்பந்தப்பட்ட பழைய பழக்க வழக்கங்கள், இது சம்பந்தமான கலைகளோ சிறிதுகூட மாற்றமுடியாதென்றும், அவை பத்திரமாகக் காப்பாற்றப்படுமென்றும், மேல் சாதியாருக்கு வாக்குறுதிகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இந்த வாக்குறுதிகள், உங்களுக்கு எவ்வளவு ஆபத்து என்பது இப்போது ஒரு சமயம் உங்களுக்குத் தெரியாமல் இருக்கலாம்.

இந்த வாக்குறுதிகள், எவ்வித முற்போக்குக்கும் முட்டுக்கட்டையாக வந்து தடுத்துக் கொள்ளும்.

ஏதோ ஒரு காலத்தில் விக்டோரியா மகாராணியார், "உங்கள் மதவிஷயங்களில் பிரவேசிப்பதில்லை" என்று வாக்குறுதி கொடுத்ததாகக் கூறிக்கொண்டு, இன்று அவ் வாக்குறுதியை,

ஏதாவது ஒரு பொதுக் கிணற்றில் எல்லோரும் தண்ணீர் இறைத்துக் கொள்ளலாம் என்றாலும்,

ஏதாவது ஒரு பொதுரோட்டில் எல்லோரும் நடக்கலாம் என்றாலும் ;

ஒரு பொதுச் சத்திரத்தில் எல்லோரும் இருக்கலாமென்றாலும் ;

விபசாரத்துக்குக் கடவுள் பேரால் பெண்களுக்கு (பொட்டுக்கட்டு) லைசென்சு கொடுக்கக் கூடாது என்றாலும் ;

ஏதாவது ஒரு கடவுள் என்பதைக் கோயிலில் சென்று தரிசிக்கலாமென்றாலும் ;

பால் குடிக்கும் குழந்தைகளை—சீலைகட்டத் தெரியாத குழந்தைகளைப் பெண்சாதியாக ஆக்கிப் படுக்கை வீட்டிற்குள் விடக்கூடாதென்றாலும் ;

அவ்வாக்குறுதிகள் வந்து முட்டுக்கட்டையாக இருக்கும்படி பயன்படுத்தப் படுகின்றன.

இப்படியிருக்கும்போது, பழைய பழக்கவழக்கங்கள், சாஸ்திரங்கள், கலைகள், தொழில்முறைகள் ஆகியவை காப்பாற்றப்படுமென்று வாக்குறுதி கொடுத்து, ஒரு சமதர்ம ராஜ்யத்தை ஸ்தாபிப்பதென்றால்—அந்த சமதர்ம ராஜ்யத்துக்குக் காந்தியாரால் இராம ராஜ்யமென்றும், வருணாசிரம ராஜ்யமென்றும் பாஷ்யம் சொல்லப்பட்டு இருக்கிறதென்றால்—'சர்வ வியாதிக்கும் ஒரே மாத்திரை' என்பது போல்—சகலவித சீர்திருத்தத்திற்கும் இந்த ஒரு வாக்குறுதியே 'எமனாய்' வந்து கொன்றுவிடாதா என்று யோசித்துப் பாருங்கள். இந்த வாக்குறுதியின் கீழ் என்னென்ன சீர்திருத்தமோ—ஏதாவது ஒரு மாறுதலோ செய்யமுடியுமாவென்று யோசித்துப் பாருங்கள்.

இன்று உங்கள் மக்களுக்கு இருக்கும் தரித்திரமும் கொடுமையும் சேர்த்து இந்த இராம ராஜ்யத்தை ஆதரிக்கச் செய்கின்றது—ஏன் ? உங்களைவிடப் பெரிய சாதி என்று சொல்லிக்கொள்ளும் பார்ப்பனரல்லாத மேல்சாதி இந்துக்கள் என்பவர்களுடைய வயிற்றுப் பசியான தங்களுடைய சூத்திரப் பட்டம், இந்த ராமராஜ்யத்தில்—வருணாசிரம ராஜ்யத்தில்—கராச்சி சமதர்ம ராஜ்யத்தில்—ஒழியாது என்று தெரிந்திருந்தும், எத்தனை பேர் இன்று அதை ஆதரிக்கிறார்கள் என்பதைப் பார்க்கும்போது—உங்களில் சிலர் ஆதரிப்பதைப் பார்த்து நான் ஆச்சரியப்படவில்லை.

இவ்வளவு தூரம் நான் இவற்றை விவரித்துச் சொல்லக் காரணம், இன்றுள்ள உங்கள் குறைகள், இழிவுகள் நீங்கி, மனிதத் தன்மை பெறுவதற்கு நீங்கள் பிரிட்டிஷ் ஆட்சியைத்தான் நம்பவேண்டுமென்றும், அது உள்ள காலத்திலேயே உங்கள் குறைகளை, இழிவுகளை நிவர்த்தித்துக்கொள்ள முயலவேண்டும் என்றும், அரசாங்கத்துக்கு விரோதமாகப் பேசவோ, மக்களுக்குள் விரோத உணர்ச்சி ஏற்படச் செய்யவோ, அரசாங்கத்தாரோடு போர் புரிவதாகச் சொல்லிக்கொள்ளுகின்ற கட்சியிலோ, கூட்டத்திலோ நீங்கள் கலந்துகொள்ளக் கூடாதென்றும் சொல்லுவதற்காகவே இவற்றைச் சொல்லுகிறேன்.

நீங்களெல்லாம் அப்படிச் செய்யவில்லையா என்றும், மற்றும் எத்தனையோ பேர் அந்தப்படி அரசாங்கத்துக்கு விரோதமாய் நடந்துகொண்டு வாழவில்லையா என்றும் கேட்பீர்கள்.

அவர்கள் நிலை வேறு ; உங்கள் நிலை வேறு. அவர்களில் சிலர் இன்று மதத்தில் கீழாக மதிக்கப்பட்டாலும், பழக்க வழக்கத்தில் பலர் சமமாக மதிக்கப்படுகிறார்கள் ; கல்வியில் சிறிது முன்னணிக்கு வந்துவிட்டார்கள் ; உத்தியோகம் தொழில்கள் ஆகியவைகளில் எதிலும் போட்டிபோடத் தகுதி அடைந்துவிட்டார்கள்.

பார்ப்பனர்கள் சங்கதியோ கேட்க வேண்டியதில்லை ; எல்லாவிதத்திலும்—மதத்தாலும், பழக்கவழக்கத்தாலும், பிரத்தியட்சத்திலும்—மேல் நிலையில் இருக்கிறார்கள் ;

பாடுபடாமல் வாழ்க்கை நடத்தும் யோக்கியதை அடைந்துவிட்டார்கள்; 100-க்கு 100 பேர் படித்து இருக்கிறார்கள்; 100க்கு 90-க்கு மேல் உத்தியோகங்கள் அவர்கள் கைவசம் இருக்கின்றன.

இனி, அவர்களுக்கு வேண்டியதெல்லாம்—அவர்களோ, அவர்களது அடிமைகளோ நாட்டை ஆளவேண்டியது என்பதைத் தவிர வேறு இல்லை. ஆதலால், அவர்கள் அரசாங்கத்தாரோடு போராடவும், சட்டம் மீறி, அரசாங்கத்துக்குச் சதா தொல்லை விளைவிக்கவும் சவுகரியமுடையவர்களாக இருக்கிறார்கள்.

இது மாத்திரமல்லாமல், அவர்கள் மதத்துக்கும் பழக்கவழக்கத்துக்கும் விரோதமாக அரசாங்கம் சில சீர்திருத்தங்களைச் செய்ய முற்படுவதாலும், அதனால் பார்ப்பன ஆதிக்கத்திற்குப் பங்கம் வரும்போலிருப்பதாலும், அச்சீர்திருத்தங்களைச் செய்யவொட்டாமலும்—செய்துவிட்டால் அது அமுலில் நடத்தப்படாமலும் இருப்பதற்காக வேண்டியாவது—அரசாங்கத்தை வழிமறிப்பதற்காக அரசாங்கத்துக்குத் தொல்லை விளைவிக்க வேண்டியவர்களாக இருக்கிறார்கள். ஆதலால், அவர்களுடன் நீங்கள் சேரக்கூடாது என்று சொல்ல வேண்டியவனாய் இருக்கிறேன்.

[இராசிபுரத்தில், 29-9-1935-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 6-10-1935]

எந்தக் கட்சியிலும் நீங்கள் சேரக்கூடாது என்று சொல்லவேண்டியவனாய் இருக்கிறேன். உங்களுக்குள், 'தேசாபிமானம்' என்கின்ற யோக்கியமற்ற சூழ்ச்சிக்கு நீங்கள் ஆளாகக்கூடாது. அது, சோம்பேறிகள், காலிகள் ஆகியவர்கள் பிழைப்புக்கு ஏற்படுத்தப் பட்ட மோட்சம், நரகம் என்பது போன்ற மூட நம்பிக்கையாகும். உங்களுக்கு இன்று சுயமரியாதை அபிமானந்தான் உண்மையாய் வேண்டும்.

தேசாபிமானம் என்பதைப்போல் அர்த்தம் தெரியாததும் சூழ்ச்சி நிறைந்ததுமான வார்த்தை பல்ல, நான் இப்போது உங்களுக்குச் சொல்லும் சுயமரியாதை என்கின்ற வார்த்தை. நீங்கள் மனித சமூகத்தில் கீழானவர்களாய், இழிமக்களாய்க் கருதப்படுகிறீர்கள். மிருகங்களில் மிகமிகக் கீழாகவும், இழிவாகவும் கருதப்படுகின்ற நாய், கழுதை, பன்றி ஆகியவைகளை மதிப்பது போலக்கூட, நீங்கள் மதிக்கப்படுவதில்லை என்று உங்கள் வரவேற்புத் தலைவர் சொன்னதைக் கேட்டுக்கொண்டிருந்தீர்கள். அதைத்தான் நானும் சொல்லி—அந்தக் காரணத்தாலேயே, உங்கள் சமூகத்துக்கு முதலில் சுயமரியாதையையும், மனிதத் தன்மையையும் ஏற்படுத்த வேண்டுமென்று சொல்லுகிறேன். இதை நீங்கள் மனத்தில் கெட்டியாய்ப் பதிய வைத்துக்கொள்ள வேண்டும்.

இன்றைய தேசாபிமானம் என்பது, உங்களுடைய சுயமரியாதையையும், முற்போக்கையும் தடுப்பதாகவே இருந்து வருகின்றது. அதற்காகவே தேசாபிமானம் என்பது கற்பிக்கப்பட்டது என்றுகூடச் சொல்லலாம். காந்தியாருடைய தேசாபிமானத்தைப் பார்த்தாலே மற்றவர்கள் தேசாபிமானத்தின் யோக்கியதையைப்பற்றி நாம் யோசிக்க வேண்டியதில்லை.

வட்டமேசை மகாநாட்டில், உங்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம் ஒதுக்கப்படும் பட்சத்தில் அது தனது தேசாபிமானத்திற்கு விரோதமானதென்றும், உயிரைவிட்டாவது உங்கள் தனிப்பிரதிநிதித்துவத்தை ஒழிப்பதுதான் தனது தேசாபிமானமென்றும் காந்தியார் சொல்லவில்லையா?

அவரை உங்கள் தலைவர் என்றும், அவர்கொண்ட தேசாபிமானந்தான் உங்கள் தேசாபிமானமென்றும் நீங்கள் ஒப்புக் கொள்வீர்களானால் உங்கள் கட்சி என்னவாகி இருக்கும்?

மற்ற தேசாபிமானக்காரர்கள் தங்களுக்கு எந்தெந்தமாதிரி பிரதிநிதித்துவம் கேட்கிறார்களோ, அது உங்களுக்கும் கிடைக்கும்படி செய்திருக்க வேண்டாமா?

கிறிஸ்தவர்கள், முகமதியர்கள், சீக்கியர்கள், நாட்டுக்கோட்டையார்கள் என்கின்ற பிரிவுக்காரர்களும் சாதிக்காரர்களும் தனிப் பிரதிநிதித்துவம் பெறும்போது, நீங்கள்—தீண்டப்படாதவர்களாய் இருக்கிறவர்கள்—தனிப் பிரதிநிதித்துவம் பெறுவது தேசாபிமானத்துக்கு விரோதமென்றால், அப்படிப்பட்ட தேசாபிமானத்தின் யோக்கியதையை நான் சொல்லவேண்டுமோ என்று கேட்கிறேன்?

ஆகவே, தேசாபிமானம் என்பதும் சீர்திருத்தமென்பதும் கஷ்டப்பட்டு இழிவு படுத்தப்பட்ட மக்கள் விடுதலையடையக் கூடாது என்பதோடு, பாமரமக்கள் சீர்திருத்தம்–முன்னேற்றம் அடையக் கூடாது என்பதுமேயாகும்.

அரசாங்கத்தார் வழங்கிய சீர்திருத்தத்தில் உங்களுக்குச் சுயமரியாதையுள்ள சீர்திருத்தம் இருந்தது. அதைத் தேசாபிமான சீர்திருத்தமென்னும் பூனா ஒப்பந்தம் பாழாக்கிவிட்டது.

பூனா ஒப்பந்தத்தை உங்களில் சிலர் ஆதரிப்பது எனக்கு ஆச்சரியமாய் இருக்கிறது. அதற்கு அவர்கள் சொல்லும் காரணம் மிகமிக ஆச்சரியமாய் இருக்கிறது.

அதாவது, நீங்கள் மேல்சாதிக்காரர்களைப் போய் வோட்டுக் கேட்கவேண்டுமாம்; மேல்சாதிக்காரர்கள் உங்களை வந்து வோட்டுக் கேட்கவேண்டுமாம்; இதில் பரஸ்பர சிநேகம் ஏற்படுமாம்.

இது 'மைனா பிடிக்கின்ற வித்தை'யேயொழிய, இதில் நாணயமோ, அறிவுடைமையோ இல்லை.

பார்ப்பான் அதிகாரியாய் இருக்கிற கச்சேரிக்குள் நீங்கள் போகவேண்டுமானாலே சர்க்கார் உத்தரவும்—பொதுத் தெருவில் நீங்கள் நடக்கவேண்டுமானாலே 'பினல்கோட் சட்டமும்' வேண்டி இருக்கிறபோது, நீங்கள் பார்ப்பன அக்கிரகாரத்தில் நடந்துபோய், அவர்கள் வீட்டுவாசல் நடைகடந்து, உள் ஆசாரத்தில் படுத்து வயிற்றைத் தடவிக் கொண்டிருக்கும் பார்ப்பானிடம் போய் வோட்டுக் கேட்கமுடியுமா? மற்றும், அதுபோலவே தன்னை மேல்சாதிக்காரனென்றும், உங்களைத் தீண்டத்தகாதவனென்றும் கருதிக் கொண்டிருக்கும் மற்ற சாதியாரிடமாவது நீங்கள் போய் வோட்டுக் கேட்கமுடியுமா?

அவர்கள் உங்களது சேரிக்கு எலும்பையும் தோலையும் குப்பையையும் மயிரையும் மிதித்துக்கொண்டு வந்து வோட்டுக் கேட்டுவிடுவார்களா? அவ்வளவு மனமாற்றம் ஏற்பட்டிருக்குமானால், உங்களைக் கோவிலுக்குள் விடுவதாக வாக்குறுதி கொடுத்து பூனா ஒப்பந்தம் செய்துகொண்ட காந்தியார், "இன்று பொதுஜனங்கள் அதற்குத் தயாராக இல்லை; ஆதலால், அது சம்பந்தமாக ஒரு சட்டமும் கொண்டுவரக் கூடாது" என்று சொல்லமுடியுமா?

இந்திய சட்டசபைக்குச் சென்ற காங்கிரஸ் தேசபக்தர்களாவது, சமூக சீர்திருத்தம் சம்பந்தமாக எவ்விதச் சட்டமும் கொண்டுவர முடியாதென்று சொல்லுவார்களா?

ஒரு தோட்டியைவிட்டு உங்கள் எல்லோரையும் இழுத்துவரச் செய்து, தங்கள் இஷ்டப்படி வோட்டுப் போடாவிட்டால் உதைப்போமென்று எச்சரிக்கை செய்து, வெளிப் படையாய்ச் சொல்லிவிட்டுப் போகும்படி செய்வார்களே ஒழிய, உங்களை வந்து வோட்டுக் கேட்பார்களா?

அப்படியே நீங்கள் கேட்பதாகவே வைத்துக்கொண்டாலும், உங்களில் சுதந்திர புத்தி உள்ளவர்களுக்கு வோட்டுப்போட்டு விடுவார்களா?

அப்படியே போடுகிறார்களென்று வைத்துக்கொண்டாலும், அதனால், இரண்டு சாதிக்கும்—அதாவது பறை சாதிக்கும் பார்ப்பார சாதிக்கும்—பரஸ்பர நம்பிக்கை ஏற்பட்டு விடுமா?

இன்று பார்ப்பனர்—பார்ப்பனரல்லாதார் என்கின்றவர்களுக்கு ஒரே தொகுதி இருந்தும், ஒருவருக்கொருவர் வோட்டுக் கேட்டும், இன்று இருசாதியும் பரஸ்பர சிநேகமாய் இருக்கிறார்களா?

இதுவெல்லாம் உங்களை ஏமாற்றச் செய்யும் சூழ்ச்சியேயல்லாமல், உண்மையில் நாணயமான காரியமல்ல என்பதை மனத்தில் இறுத்துங்கள்.

இன்று இந் நாட்டில்—இந்துக்கள் என்பவர்களை முகமதியர் வோட்டுக் கேட்காததினாலும், முகமதியர்களை இந்துக்கள் என்பவர்கள் வோட்டுக் கேட்காததினாலும்—ஒருவரையொருவர் தெருவில்விடாமல் உதைத்து விரட்டுகிறார்களா?

ஆகவே, நீங்கள் 'தேசாபிமானம்' 'மகாத்மா' என்கின்ற வார்த்தைகளுக்குட் பட்டதின் பயனால் உங்கள் சுயமரியாதை வழியைத்தான் அடைத்துக் கொள்ளப் போகிறீர்கள்!

[இராசிபுரத்தில், 29-9-1935-ல் சொற்பொழிவு—'குடி அரசு' 13-10-1935]

## 6. தீண்டாமை விலக்கு

தீண்டாமை விலக்கு என்றால், ஒருவனைத் தொட்டு விடுவதாலும் கோயிலுக்குள் புக விட்டு விடுவதாலும் தீண்டாமை விலகிப்போய்விட்டதுஎன்று கற்பித்து, அந்தப்படியே இந்நாட்டு மக்களை நம்பச்செய்து, அவ்வளவு செய்தாலே போதுமென்று சொல்லி, அதற்கே பெரிய புரட்சி செய்ய வேண்டியதாய் ஏற்பாடு செய்து வைத்திருக்கிறோம். அப்படி சொல்லுகின்றவர்களையே—மகான்கள்—மகாத்மாக்கள்—பொதுஜன சேவைக்காரர்—தீண்டாமை விலக்கு வீரர்—வைக்கம் வீரர்—என்றெல்லாம் ஆக்கிவிட்டோம்.

"கங்காதரா மாண்டாயோ?" என்ற ஒரு வண்ணாத்தியின் அழுகைக்குரல் அரசன் வீடுவரை அழச்செய்து விட்டது என்ற கதை போல், இந்தக் காரியமே இப்போது தேசிய சேவையாய்—பொதுஜன சேவையாய்—சுயராஜ்ய சேவையாய்—அன்னிய ஆட்சியை விரட்டி அடிக்கும் சேவையாய் ஆக்கப்பட்டு, எங்கு பார்த்தாலும் இதே தப்பட்டை அடிக்கப் படுகிறது. அது மாத்திரமல்லாமல், மக்கள் எல்லோராலும் அப்படியே கருதப்படுகின்றது. இதனால் எல்லாம் உண்மைத் தீண்டாமை எப்படி விலகும்? தீண்டாமை விலக்கு என்றால் தீண்டாதவனைத் தொடுவதும், அவனை 'மோட்சத்திற்கு அனுப்ப' என்று கோவிலுக்குள் கொண்டு விடுவதும் தானா என்று கேட்கிறேன். ஒரு மனிதனுக்கு சாப்பாடும் உடையும் இடமும் கல்வியும் வேண்டுமா? மனிதனைத் தொடுவதும், செத்தபிறகு அனுபவிப்பதான மோட்சமும் வேண்டுமா என்று கேட்கின்றேன்.

தொடவும் கோவிலுக்குள் போகவும் விடப்பட்டு விட்டால், அவனுக்கு உண்டியும் உடையும் இடமும் கல்வியும் கிடைத்துவிடும் என்று சிலர் சொல்ல வருவார்கள். அப்படியானால், இன்று தொடவும் கோவிலுக்குள் போகவும் உரிமையுடையவர்களும், ஆயிரக் கணக்கான வருஷங்களாய் அவற்றை அனுபவித்து வருபவர்களுமான மனிதர்கள் எல்லாம் இன்று சோறும் துணியும் குடிசையும் படிப்பும் உடையவர்களாய் இருக்கிறார்களா என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்! "சோற்றுக்கும் துணிக்கும் வழி என்ன?" என்று கேட்கும் போது, கல்லில் போய் முட்டிக்கொள்ளக் கூட்டிவிட்டதால் அது பொது நல சேவையாகுமா? ஜீவகாருண்யமாகுமா? சமதர்மமாகுமா என்று யோசித்துப் பாருங்கள்! தீண்டப்படாத சகோதரர்களும் மூடநம்பிக்கை காரணமாகக் கோயில் நுழைவு உரிமை

பெறுவார்களாயின், அவர்களும் தங்கள் பொருள்களைச் சிறிதும் பயனில்லாமல் பாழாக்கி என்றுமுள்ள வறுமை நிலையில் இருந்துவர வேண்டியதைத்தவிர, வேறு வழியில்லை என்றே கூறுகின்றோம்.

ஆகையால், தீண்டப்படாத சகோதரர்களும் அவர்கள் சமூக சமத்துவத்தில் ஆவலுடைய மற்றவர்களும் 'பக்தி' என்ற மூடநம்பிக்கையைக்கொண்டு கோயில் நுழைவுக்குப் பாடுபடாமல், பொது இடத்தில் எல்லா மக்களுக்கும் உரிமை வேண்டும் என்ற உறுதியுடன் கோயில் நுழைவுக்கு முயற்சிசெய்ய வேண்டுகின்றோம். இந்த வகையில் தீண்டப்படாத சகோதரர்களும் எச்சரிக்கையாக இருக்க வேண்டுகிறோம்.

[கோவை நகரசபையில், 22-1-1933-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 29-1-1933]

## 7. தீண்டாதார் தேற வழி என்ன?

தலைவரவர்களே! தோழர்களே!

உங்களுக்கு மதத்தின் பயனாகச் சுயமரியாதை உணர்ச்சி இல்லையென்பதை உங்கள் பாதிரிமார்கள் நன்றாய் உணர்ந்திருப்பார்கள். கட்டுப்பாட்டை மீறி நீங்கள் ஏதும் செய்யமாட்டீர்கள் என்பது அவர்களுக்கு நன்றாகத் தெரியும். நீங்கள் மதத்திற்காகவும் கடவுளுக்காகவும் எவ்வளவு கஷ்டங்களையும் இழிவுகளையும் பொறுத்துக் கொண்டு வெறும் வாயினாலே மாத்திரம் எதையாவது பேசிக் கொண்டிருப்பீர்களே யொழிய, கட்டுப் பாடுகளை மீறவோ, உங்கள் இழிவுக்குக் காரணமானவற்றை உதறித்தள்ளவோ, அதை அழிக்க முயற்சிக்கவோ ஒருநாளும் சம்மதிக்க மாட்டீர்கள்.

உண்மையான விடுதலை உங்களுக்கு வேண்டுமானால், உங்கள் இழிவுக்கும் அடிமைத் தனத்துக்கும் அஸ்திவாரமான ஆதாரத்தை அழிக்க நீங்கள் தைரியம் கொள்ள வேண்டும். அந்தத் தைரியம் எவ்வித கட்டுப்பாடுகளையும் நம்பிக்கைகளையும் உடைத் தெறியத் தக்கதாயிருக்கவேண்டும். அப்படியில்லாமல், வீணே வாய்ப் பேச்சிலும் காகிதத் தீர்மானத்திலும் சாதித்து விடலாமென்று கருதுவது பைத்தியக்காரத்தனமாய்த்தான் முடியும். நீங்கள் கீழ்சாதி என்பதும்—தொடக்கூடாதவர்கள் என்பதும்—சமத்துவமளிக் காமல் தனியாய் வைக்கப்பட வேண்டியவர்களென்பதும்—ஆகிய காரியங்களுக்கு வெறும் மதமோ, பழக்க வழக்கமோ சாஸ்திரமோ, கடவுள் செயலோ என்பதெல்லாம் வெறும் பித்த லாட்டமேயாகும். உங்களுடைய கீழ்சாதித் தன்மைக்கும் மேற்கொண்ட காரியங்களுக்கும் யாதொரு சம்பந்தமே கிடையாது. உண்மையான காரணத்தைச் சொன்னால், ஒரே நிமிஷத்தில் நீங்கள் அவர்கள் மீது பாய்ந்து சின்னாபின்னமாய்க் கிழித்தெறிந்து விடுவீர்கள் என்று கருதி, ஏதேதோ சாக்குப் போக்குகளைச் சொல்லி உங்களை ஏமாற்று வதற்குக் கடவுளையும் மதத்தையும் பழக்க வழக்கத்தையும் சொல்லி வருகிறார்கள். கடவுள் மதத்தினர் கட்டளை என்றபடி, பழக்க வழக்கங்கள் என்ற முறைப்படி யார் நடக்கிறார்கள்? அவர்கள் சொந்த விஷயத்தைப் பொறுத்தமட்டில், எவ்விதக் கட்டுப்பாட்டிற்கும் பழக்க வழக்கத்திற்கும் கடவுள் மதக்கட்டளைக்கும் கீழ்ப் படியாமல், தங்கள் இஷ்டம்போலவே—சமுதாயத்திற் கேற்றபடியே—நடந்து கொள்கிறார்கள். ஆனால் பிறத்தியானை அடக்கி ஆண்டு அடிமை கொள்வதற்காக மாத்திரம் இந்தப்படி சொல்லிப் பயன் பெறுகிறார்கள்.

கீழ்சாதி என்பதாக ஒரு பிரிவு எதற்காக? யாரால் ஏற்படுத்தப்பட்டது? என்பதின் இரகசியத்தை உணர்ந்தால் பிறகு அதை அழிக்கும் விஷயம் வெகு சுலபமாக முடிந்து விடும். கீழ்சாதி, மேல்சாதி என்று சொல்வதின் தத்துவம் என்ன என்பதைப்பாருங்கள்! ஒரு பார்ப்பானையும், ஒரு பறையனையும் கூட்டி வந்து நிறுத்தி, கீழ்சாதி, மேல்சாதி என்பதும் அவர்களிடத்தில் எப்படி விளங்குகிறது என்று பார்த்தால், மேல்சாதி என்பவன் பாடுபடாமல் சோம்பேறியாய் இருந்து—ஊரார் உழைப்பில் வாழ்கிறவன் என்பதும்;

கீழ்சாதி என்பவன் பாடுபட்டு உழைத்து உழைப்பின் பயனை யெல்லாம் அன்னியருக்கே அழுதுவிட்டு, வீடில்லாமல், துணியில்லாமல், கஞ்சியில்லாமல், கல்வியில்லாமல், மிருகத்திலும் கேடாய் வாழ்கிறவன் என்பதும் நன்றாய் விளங்கும். ஆகவே, கீழ்சாதித் தன்மை ஒழிய வேண்டும் என்று கருதுகிற ஒருவன்,—அன்னியருக்காக நாம் உழைக்கப் பிறந்தோமென்கிற எண்ணத்தை விட்டுவிட்டு,—நமது உழைப்பின் பயனைச் சோம்பேறிகள், பாடுபடாத மக்கள் அனுபவிக்கவிடக்கூடாது என்கிற உறுதி கொண்டு—பிறவியில் நமக்கும் மற்றவருக்கும் எவ்வித வித்தியாசமுமில்லை என்கின்ற உறுதியோடு, சோம்பேறிக் கூட்டத்திற்கு எதிராக எவன் போர்தொடுக்க முனைந்து நிற்கிறானோ அவனே இவ்வித இழிவுகளை நீக்கிக்கொள்ள அருகதையுள்ளவனாக ஆகிறான்.

அதை விட்டுவிட்டு, மதக் கட்டளையை மதிப்பவன், பாதிரிகளின் சொல்லுக்குக் கீழ்ப்படிந்துதான் ஆகவேண்டும். கடவுள் நம்பிக்கையைக் கொண்டவன், அவனவன் தற்கால நிலைமைக்குக் காரணம் 'கடவுள்சித்தம்' என்பதை ஒப்புக் கொண்டுதான் ஆக வேண்டும். மதக் கட்டளையையும் கடவுள் நம்பிக்கையையும் கொண்ட ஒரு அடிமை,—ஒரு தாழ்ந்த சாதிக்காரன்—ஒரு நாளும் விடுதலை அடையவோ, முன்னேற்ற மடையவோ முடியவே முடியாது. மதக்கட்டளையும், கடவுள் நம்பிக்கையும்—மேல்சாதிக்காரனுக்கும் பாதிரிகளுக்கும் முதலாளிகளுக்கும்தான் மேன்மையையும் அனுகூலத்தையும் அளிக்கக் கூடியதாகும். இந்தநாட்டில், ஆயிரக்கணக்கான வருஷங்களாக ஏழைமக்களும் தாழ்ந்த சாதிக்காரர்களும் இருந்துதான் வருகிறார்கள். அவர்கள் அன்றுமுதல் இன்றுவரை, மத பக்தியும் கடவுள் பக்தியும் கொண்டு, அதற்காக எவ்வளவோ பணத்தையும் நேரத்தையும் செலவு செய்து, தங்கள் கஷ்டங்களும் இழிவுகளும் ஒழிய வேண்டு மென்று பிரார்த்தனை செய்து கொண்டுதான் வந்திருக்கிறார்கள். ஏழைகளின் எண்ணிக்கை குறைந்ததா? கீழ் சாதிக்காரர்களின் எண்ணிக்கை குறைந்ததா? அல்லது இவர்களுடைய கஷ்டமாவது ஒழிந்ததா? யோசித்துப் பாருங்கள்!

உங்களுக்கு—உங்களுடைய பிரதிப் பிரயோசன மெல்லாம், உங்களுடைய வயிற்றுக்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவுதான்; அதுவும் நீங்கள் சாகாமலிருப்பதற்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவுதான் என்பதாகப் பதினாயிர வருஷங்களுக்கு முன்பாகவே நிர்ணயிக்கப் பட்டுவிட்டது. இந்த நிர்ணயத்தை மீறி நீங்கள் அதிகம் கேட்காமலிருக்கவேண்டும் என்பதற்காகத்தான், உங்களைப் பறையர், சக்கிலியர் என்று சொல்லித் தீண்டாத சாதியார்களென்று ஆக்கவும், உங்கள் அண்ணன்மார்களை யெல்லாம் 'அடிமை' 'பார்ப்பானின் வைப்பாட்டிமகன்' 'சூத்திரன்' என்று சொல்லித் தாழ்ந்த சாதியாகவும் ஆக்கி வைக்கப்பட்டிருக்கிறது. உங்களுக்கு ஜீவனத்திற்காக என்று கொடுக்கப்படும் கூலிகளும் உங்கள் மீதுள்ள கருணையினால் என்று நினைத்து விடாதீர்கள். இந்த ஆகாரமும் இல்லாமல் மடிந்துபோவீர்களேயானால், நாளைக்கு மேல்சாதிக் காரர்களுக்கும் முதலாளிமார்களுக்கும் வேலை செய்ய ஆள் இல்லாமல் போகுமே என்கிற சுயநலக் கருணை கொண்டுதான்—மாடு வளர்க்கிறவன் தீனிபோடா விட்டால் பால் கறக்காதே, பாடுபடாதே என்று கருதி அதற்குத் தீனி போடுவதுபோல்,—உங்களுக்கும் ஜீவனத்திற்குக் கொடுக்கப் பட்டு வருகிறது. இந்தநிலை மாறவேண்டும் என்பதில்தான் உங்களுடைய முக்கியவேலை இருக்கவேண்டுமே ஒழிய—சும்மா பறையர் பட்டம் போனால் போதும், கிராதியை (தடுப்பு) எடுத்து விட்டால் போதும், கோயிலுக்குள் நுழைய விட்டால் போதும்—என்றெல்லாம் கருதி இருப்பதில் பிரயோசனமில்லை. கிராதி வித்தியாசமில்லாமலும், பறைசாதிப் பட்டம் இல்லாமலும், கோயிலுக்குள் போய்த் தொழுகிற உரிமையுடனும் இருக்கின்ற கோடிக் கணக்கான மக்கள் கஞ்சிக்கு வகையில்லாமல், இருக்க வீடில்லாமல் ஊர் ஊராய்ப் பிச்சைக் காரர்கள் போல், லம்பாடிகள் போல் திரிவதையும், மரங்களின் நிழல்களில் தலைக்குக் கல்லையோ, கையைமடக்கியோ வைத்துப் படுத்துக்கொண்டிருப்பதையும், இன்றையதினம் எங்கும் பார்க்கலாம். இதற்குக் காரணம் என்ன என்று கருதுகிறீர்கள்?

ஆகவே, உங்களுடைய கிளர்ச்சியானது பொருளாதாரத்துறையில், நீங்கள் மற்றவர்களால் ஏமாற்றப்படுவதும் வஞ்சிக்கப்படுவதும் ஒழியவேண்டுமென்பதையே அஸ்திவாரமாகக் கொண்டிருக்கவேண்டும். அதில்தான் உங்கள் விடுதலை இருக்கிறது. எந்தக் கடவுளும் எந்தப் பாதிரியும் இதற்கு வகைசெய்யமுடியாது.

எல்லாம்,—உங்கள் மதக் கடவுளையெல்லாம்—உங்கள் கடவுள் கட்டளையெல்லாம் 'பொறு, பொறு அவசரப்படாதே; ஆத்திரப்படாதே; உனது வாழ்வில் உள்ள எல்லாத் துன்பங்களையும் எல்லா இழிவுகளையும் பொறுமையோடு பொறுத்துக் கொண்டிருந்தால்—நீ செத்தபிறகு மேல் லோகத்தில் கடவுள் உன்னுடைய பொறுமைக்காக நல்ல சன்மானம் கொடுப்பார். அடுத்த ஜென்மத்தில் நல்ல பிறவி பெறுவாய். 'பொறுத்தார் பூமியாள்வார்' என்றுதான் உபதேசிக்கும். இந்த உபதேசத்தை ஆயிரக்கணக்கான வருஷங்களாகக் கேட்டுக் கேட்டு, அதன்படி பொறுமையாய் இருந்து வந்ததின் பலன்தான் இன்றும் இன்னமும் நீங்கள் பொறுமையாகவே இருந்து, இழிவடைந்து, கஷ்டப்பட்டுச் சீக்கிரம் செத்து, கடவுளிடம் சன்மானம் பெறவேண்டியவர்களாக இருக்கிறீர்கள்.

ஆகவே, செத்த பிறகு மேல் லோகத்தில் அல்லது அடுத்த ஜென்மத்தில் பயன் பெறலாமென்கின்ற பித்தலாட்ட சுயநல சூழ்ச்சியான உபதேசத்தை அடியோடு மறந்து, இந்த ஜென்மத்தில் நீங்கள் சாவதற்கு முன் உங்கள் இழிவுக்கும் கஷ்டத்திற்கும் என்ன பரிகாரம் என்பதைக் கவனித்து, அதற்குத் தக்கது செய்ய முன் வாருங்கள்!

இந்தப்படி நினைத்துத் தைரியமாய் முன்வந்த மக்கள்தான், இன்று உலகில் ஒரு பக்கத்தில் அடிமையாய், கூலியாய், இழிசாதியாய், ஏழையாய் இல்லாமல் மனிதனாக, கவலையற்று, தேசமே ஒரு குடும்பமாகவும், எல்லோரும் ஒரு தாய் வயிற்றுச் சகோதரர்களாகவும் வாழ்ந்து வருகின்றார்கள்.

[லால்குடி தாலுக்கா களத்தில்வென்றான்பேட்டை கிராமத்தில் ஆதித் திராவிட கிறிஸ்தவர்கள் மாநாட்டில் சொற்பொழிவு—'குடிஅரசு' 7-5-1933]

தலைவரவர்களே! தோழர்களே!

இந்த நாட்டில் தீண்டப்படாதவர் என்று அழைக்கப்படாத சாதி ஒரே சாதிதான் உண்டு; அதுதான் பார்ப்பன சாதியாகும். அதைத்தவிர மற்றெல்லா சாதி வகுப்பு மக்களும் தீண்டப்படாதவர்களாகவேதான் கருதப்படுகிறார்கள்.

ஐரோப்பியர்களும் முஸ்லிம்களும் இந்தியக் கிறிஸ்தவர்களும் பார்ப்பனர் ஒழிந்த ஏனைய இந்துக்கள் என்பவர்களும் பார்ப்பனர்களுக்குத் தீண்டப்படாதவர்களேயாவோம்.

இது சும்மா வாயினால் மாத்திரம் சொல்லப்படுவதல்ல. மதத் தர்மப்படி என்றும், வேதசாஸ்திர விதிப்படி என்றும் சொல்லப்பட்டுத் தாழ்த்தப்பட்டிருக்கிறோம். ஒருவன் இந்து என்று சொன்னால் அவனுக்கு ஒரு சாதிப்பிரிவு இருந்துதான் இருக்கும்; அதை அவன் ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும். அன்றியும், இந்துமதம் மாத்திரமல்லாமல், இந்து கடவுள்கள் என்பவைகளும் சாதிப் பாகுபாட்டுக்கு உட்பட்டவையே. ஆகவே, ஒரு மனிதன் இந்து என்கின்ற கூட்டத்தில் இருக்க ஆசைப்படுகிற வரை—அவன் சாதிப் பாகுபாட்டுக்கு உட்பட்டும்; அவன் பார்ப்பனரல்லாதாராய் இருக்கும் வரை—கீழ்சாதியானாகவும் இருந்துதான் ஆகவேண்டும். எத்தனை காந்திகள் தோன்றினாலும் சரி, அவர்களை எப்படிப்பட்ட மகாத்மாவாக விளம்பரப்படுத்தினாலும் சரி, சாதிப் பாகுபாடும் கீழ் மேல் சாதியும் ஒருநாளும் ஒழிக்கப்படமாட்டாது. இதுவரை இதற்காக எத்தனையோ பேர் எவ்வளவோ முயற்சிகள் செய்தாகி விட்டது. அப்படிப்பட்ட முயற்சியாளர்கள் எல்லோரையுமே பார்ப்பனர்கள் அடிமைகொண்டும், அடிமையாகக் கட்டுப்படாதவனை அழித்தும் வந்திருக்கிறார்களே ஒழிய, ஒருவனையாவது தலையெடுக்க விடவில்லை.

[பெரம்பலூரில் சொற்பொழிவு—'குடிஅரசு' 13-3-1938]

## 8. ஆதித் திராவிடர்

பெரியோர்களே! தோழர்களே!

நம் நாட்டில் திராவிட மக்களுக்குள்ளாகவே திராவிடர்—ஆதித் திராவிடர் என்கின்ற ஒரு பிரிவு இருக்கிறது என்பதோடு, ஆதித் திராவிட சமூகம் மிகப் பெரும் எண்ணிக்கை கொண்ட சமூகமாக இருந்து வருகிறது. திராவிட நாட்டில் எப்படி வெளியிலிருந்து வந்த ஆரியர்களுக்குத் திராவிட மக்கள் தீண்டப்படாதவர்களாக இருக்கிறார்களோ, அப்படி திராவிடர்களுக்கு ஆதித் திராவிடர்கள்—அதைவிட மேம்பட்ட தீண்டப்படாதவர்களாய்—இருக்கிறார்கள். இந்த நிலைமை திராவிட சமுதாயத்துக்கே ஒரு பெரும் மானக்கேடான நிலைமையாகும் என்பதோடு, திராவிடர்களை ஆரியர்கள் தீண்டப்படாத மக்களென்று வகுத்திருப்பதையும், நடத்துவதையும் அரண் செய்கிறது. ஆகையால், ஆதித் திராவிடர் என்கின்ற பெயரே மாற்றப்பட்டு, இருவரும் திராவிடர்கள் அல்லது தமிழர்கள் என்கின்ற பெயராலேயே வழங்கப்பட வேண்டுமென்பதும், திராவிடருக்கும் ஆதித் திராவிடருக்கும் சமுதாயத் துறையிலுள்ள எல்லா வித்தியாசங்களும் பேதங்களும் ஒழிந்து, ஒரே சமூகமாக ஆகவேண்டும் என்பதும் எனது ஆசை. இந்த இரு நோக்கங்களும் ஜஸ்டிஸ் கட்சியின் நோக்கங்களில் பட்டதென்பது எனது அபிப்பிராயமாதலால் கட்சியின் பேரால் இவைகளைச் சொல்லுகிறேன்.

உத்தியோகம், கல்வி முதலிய விஷயங்களில் ஆதித் திராவிடர் என்பவர்களுக்குத் தனிச் சலுகை காட்டி, சீக்கிரத்தில் நம்மோடு சரி சமத்துவம் அடையும்படியான நிலைமை ஏற்படுத்த வேண்டியது நம் கட்சியின் தனிப்பட்ட கடமைகளில் ஒன்று.

[திருவாரூரில், 24, 25–8–1940-ல் ஜஸ்டிஸ் கட்சி மாநாட்டில் தலைமைச் சொற்பொழிவு—
'குடிஅரசு' 25–8–1940]

## 9. வகுப்பு மாநாடு

வகுப்பு மகாநாடுகள் நமது நாட்டில் நடந்து வருவது நாட்டின் முற்போக்குக்கு ஏற்றதா இல்லையா என்பது கேள்வி. பலர் இது கெடுதல் எனச் சொல்லுகிறார்கள். எனினும், வகுப்பு மாநாடு அல்லாத (வகுப்புவாத மல்லாத) மகாநாடுகளே இந்நாட்டில் இல்லை என்பதே எனது அபிப்பிராயம்.

ஒவ்வொரு வகுப்பாரும் தங்களுடைய உரிமைகளைக் கேட்கவே மகாநாடுகள் நடத்துகிறார்கள். மற்றொரு வகுப்பார் தலையெடுக்காமல் அடிக்கவும், மற்ற வகுப்பார் உரிமைகள் பெறாமலிருக்கவுமே பலர் பல மகாநாடுகளை நடத்துகிறார்கள். ஆனால் நமது 'நாடார் மகாநாடோ' அப்படியில்லை. பிறருக்குக் கெடுதல் செய்யாமல், நாடார் மகாஜனங்களின் நன்மையைநாடியும் உரிமைகளைப் பெறவுமே இம் மகாநாடு நடைபெறுகின்றது. வகுப்பு மகாநாடுகளும், வகுப்புவாதங்களும் மேல் சாதியாராலும் அவர்களுடைய கொடுமைகளாலும்தான் ஏற்பட்டவை. துவேஷத்தை உண்டாக்க நாம் மகாநாடுகள் கூட்டுவதில்லை. 'துவேஷம் வேண்டாம்; எல்லோரும் சமம் என்று சொல்லுங்கள்' என்று சொல்லவே நாம் இம்மகாநாடு கூட்டியிருக்கிறோம். நம் நாட்டில் அடிக்கடி சொல்லப்பட்டு வரும் ஒற்றுமை என்ற வார்த்தையும், பிரச்சினைகளும் வெளி வேஷமே. தங்கள் தங்களைக் காப்பாற்றிக்கொள்ளக்கூடிய நிலைமை ஒவ்வொருவருக்கும் ஏற்பட்ட பின்னரே, உண்மை ஒற்றுமை ஏற்படும். ஒருவருக்கொருவர் ஒற்றுமையும் நம்பிக்கையும் ஏற்பட வேண்டியது அவசியம். அதற்கான வேலைகளைச் செய்யச் சுதந்திரம் ஒவ்வொரு சமூகத்திற்கும் இருக்கவேண்டும். ஒவ்வொரு வகுப்புக்கும் சுயமரியாதை, சமத்துவம், சுயமதிப்பு ஏற்படவேண்டும். அதன்மூலந்தான் தேசம் முன்னேற்றமடையும். உண்மையான

தேசியம் என்பது சுயமரியாதை ஒன்றே. சுயமரியாதையைப் பொறுத்தேதான், சுய ராஜ்யம் இருக்கிறது. சகலரும் ஒன்று; மேலோர், கீழோர் என்ற உணர்ச்சி இருக்கவே கூடாது.

[குடந்தையில், 1–10–1927-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 9–10–1927]

## 10. தாழ்த்தப்பட்டோர் ஈடேற வழி

அக்கிராசனரவர்களே! அன்பார்ந்த சகோதரர்களே! சகோதரிகளே!

அக்கிராசனரவர்கள் எம்மைப்பற்றி அதிகப் புகழ்ச்சியாகக் கூறிவிட்டார்கள். நான் அவைகளுக்கு அருகதையுடையவனல்ல என்றாலும், நமது மக்கள் தங்களது பகுத்தறிவைக்கொண்டு, நமது சுயமரியாதை இயக்கக் கொள்கைகளை ஒப்புக்கொள்கிறது ஒன்றே எமக்குத் திருப்திகரமாயிருக்கிறது. 'தாழ்த்தப்பட்ட மக்கள் ஈடேறும் வழி' என்பதாக என்னைப் பேசும்படிக் கேட்கப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி வியாக்கியானம் அதிகம் செய்யவேண்டியதில்லை என்றே கருதுகிறேன். ஏனெனில், பாஷாபிமானம், தேசாபிமானம், மதாபிமானம், குலாபிமானம் என்பவைகளின் உட்கருத்தை ஊன்றிக் கவனித்தால், தாழ்த்தப்பட்ட மக்கள் ஈடேறும் வழி தானாகவே தோன்றும். எப்படியெனில், குறிப்பிட்ட எந்தவிதமான அபிமானத்தை எடுத்துக்கொண்டபோதிலும், அனேகமாக அந்த அபிமானத்தின் பேரால் ஏமாற்றுகளே நடைபெறுகின்றன. தாழ்த்தப்பட்ட மக்களின் தலைவராக உள்ளவர்கள் இவைகளை ஊன்றிக் கவனித்து, அலசிப்பார்த்து, உரைகல்லில் வைத்து உரசிப் பார்க்கவேண்டும். அவ்வாறு அவர்கள் பார்ப்பார்களேயானால், வாஸ்தவத்திலே தாழ்த்தப்பட்டவர்கள் ஈடேறும் வழியை எளிதில் கண்டுகொள்வதற்கு ஏதுகரமாகவிருக்கும். மக்களது முன்னேற்றத்திற்குத் தடைக்கல்லாகவிருக்கும் காரியங்கள் எதுவுண்டோ அவைகளைத் தகர்த்தெறியவேண்டும். வீணாக—ஆடம்பரமாக 'நாங்களும் தலைவர்கள்தான்' என்று வீரம்பேசிக் கொள்வதில் பயனில்லை. நமக்குப் பகுத்தறிவு இருக்கிறது. அப்பகுத்தறிவின் பயனால், இடையூறாக இருக்கும் காரியங்களை மனோதிடத்துடன் தகர்த்தெறிய முன்வரவேண்டும். அன்றே முன்னேற—ஈடேற வழியேற்படுமென்பதில் சிறிதும் அய்யமில்லை.

[கொழும்பில், 22–10–1932-ல் ஆதித் திராவிட அபிவிருத்தி சங்கத்தார் அளித்த வரவேற்பில் சொற்பொழிவு —'குடி அரசு' 6–11–1932]

## 11. மகாத்மாவும் வருணாசிரமமும்

மகாத்மா காந்தி, 'தீண்டாமை ஒழியவேண்டும்; மதத்திலும், சமுதாயத்திலும் சீர்திருத்தம் ஏற்படவேண்டும்' என்கிற கொள்கை உடையவர் என்று ஜனங்கள் நம்பி வந்தாலும், அவரது எண்ணத்திலும் பேச்சிலும் அதற்கு நேர்விரோதமான கொள்கையை உடையவராகவே காணப்படுகிறார். இம்மாதிரி எண்ணத்தோடும் பேச்சுகளோடும் மகாத்மா காந்தியின் பிரச்சாரம் நடைபெற நடைபெற, தீண்டாமையும் மூடக்கொள்கைகளும் நாட்டில் வலிமையோடு நிலைபெற இடம் ஏற்படுமே அல்லாமல், ஒருக்காலும் இவை ஒழிக்கப்படவே முடியாது. எந்தத் தீண்டாமையை ஒழிக்கவேண்டுமென்று வெளிப்படையாய்ப் பேசுகிறாரோ, அதே தீண்டாமையை நிலைநிறுத்த அதே பேச்சை வியாக்கியானம் செய்வதில் பாடுபடுகிறார்.

இதைப்பற்றி முன் ஒருதடவைகூட எழுதி இருக்கிறோம்.

உண்மையான தீண்டாமையை நமது நாட்டைவிட்டு வெளிப்படுத்த வேண்டுமானால் மகாத்மா காந்தியையும் எதிர்த்துப் போராடித்தான் தீரவேண்டி இருக்கிறது.

'தீண்டாமை' இன்னது என்பது மகாத்மாவுக்கு இன்னமும் சரியாய்ப் புலப்பட வில்லை என்பதே நமது அபிப்பிராயம். அவர் மதத்தின் பெயரைச் சொல்லிக்கொள்வதனால், பொதுஜனங்களிடம் உண்டாக்கக்கூடிய செல்வாக்கையும் உபயோகப்படுத்திக் கொள்ள நினைப்பதால், உண்மைத் தீண்டாமைத் தத்துவம் அவருக்குப் புலப்பட மார்க்க மில்லாமல் போய்விடுகிறது. ஆதலால், மகாத்மாவினது தீண்டாமை விலக்குக் கொள்கையைப் பின்பற்றுவோமானால், மறுபடி தீண்டாமைச் சேற்றிலே சறுக்கி விழுகவேண்டிவரும் என்றே நாம் பயப்படுகிறோம். வெகுகாலம் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தும், மூடிமூடி வைத்தும்கூட உண்மையான தீண்டாமை விலக்கையும், சுயமரியாதையையும் உத்தேசித்து வெளிப்படையாய் இப்போது அவரைத் தாக்கித்தீரவேண்டியதாய் ஏற்பட்டுவிட்டதற்கு வருந்துகிறோம்.

ஏனென்றால், சமீபத்தில் தமிழ்நாட்டிற்கு மகாத்மா காந்தி வரப்போகிறார். தீண்டாமையைப்பற்றி பேசும்போது அவரது வழக்கப்படியேதான் பேசித் தீருவார். அதன் மூலம் நமது எதிரிகளுக்கு அதிகமான பலம் ஏற்பட்டு நமது முயற்சியை ஒழிக்க அதை அவர்கள் உபயோகித்துக் கொள்ளுவார்கள். ஆதலால், அதை இப்போதே நாம் வெளிப் படுத்திவிடுவது மேலானதென்றே கருதுகிறோம். அதாவது, மகாத்மா காந்தி, நமது பார்ப்பனர்கள் சொல்லுவதுபோலவே, நமது சமூக வாழ்வில் 'வருணாசிரம தர்மம்' உண்டு என்றும், அது பிறவியிலேயே ஏற்பட்டது என்றும் அடிக்கடி சொல்லி வருகிறார். சமீபத்தில் மைசூரில் ஒரு கூட்டத்தில் தீண்டாமையைப்பற்றிப் பேசும்போதும், 'இந்து சமூகத்தில் வருணாசிரம தர்மம் உண்டு' என்றும், அது நமது சமூகத்திற்கு அவசியம் என்றும், ஒவ்வொரு வருணத்தாருக்கு ஒவ்வொரு தர்மம் விதிக்கப்பட்டிருக்கிறதென்றும், அந்தந்த வருணத்தார் அந்தந்த தர்மத்தைச் செய்யும்போது அவரவர்கள் அம்மட்டிலுயர்ந்தவர்கள் என்றும், 'பிராமணன் அவன் தர்மத்தைச் செய்யும்போது உயர்ந்தவனாகிறது போலவே, மற்ற வருணத்தானும் அவனவன் தர்மத்தைச் செய்யும்போதுதான் உயர்ந்தவனாகிறான்' என்பதாகவும் பேசி இருக்கிறார். இதைத்தான் பார்ப்பனர்களும் தாங்கள் பிறவியிலேயே உயர்ந்தவர்கள் என்பதற்குக் காரணங்களாகச் சொல்லி வருகிறார்கள்.

வருணாசிரம தர்மத்தின் மூலமாகத்தான் நமது நாட்டில் தீண்டாமைக் கொள்கை அமுலில் இருந்து வருகிறதே ஒழிய, வருணாசிரமம் இல்லாவிட்டால் தீண்டாமைக் கொள்கை பரவ மார்க்கமே கிடையாது. வருணாசிரம தர்மம் என்கிற ஓர் உடல் இல்லா விட்டால், தீண்டாமை என்கிற உயிருக்கு ஆட்டம் இல்லை. யோசித்துப் பார்த்தால், இந்தக் கொள்கைத் தத்துவம் எவருக்கும் விளங்காமல் போகாது. அந்தந்த வருணத்தானுக்கு ஏற்பட்ட தர்மப்படி அவனவன் நடக்கவேண்டுமென்று மகாத்மா சொல்லுவதைத் தான், தூவார் மகாநாட்டு 'பிராமண சம்மேளன'மும் ஏகமனதாய்த் தீர்மானம் செய்திருக்கிறது.

மகாத்மா சொல்லும் வருணாசிரம தர்மம் அதுவல்ல என்பதற்கு வேறு ஆதாரம் என்ன? மகாத்மாவும் வருணாசிரமம் நான்கு என்று சொல்லுகிறார். அதாவது பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் என்கிறார். தூவார் பிராமண சம்மேளனத்தாரும் மகாத்மா சொல்லும் ஆதாரத்தைக் கொண்டே, 'க்ஷத்திரியனும் வைசியனும் உலகத்தில் இப்போது காணப்படவில்லை; ஆதலால், பிராமணன், சூத்திரன் ஆகிய இரண்டு வருணத்தார் மாத்திரம்தான் இருக்கிறார்கள்' என்கிறார்கள். மறைந்துவிட்ட இரண்டு வருணத்தாரைப்பற்றி நமக்குக் கவலை இல்லை. இருக்கிற இரண்டு வருணத்தாரைப் பற்றிய வரையிலாவது, இவர்களுக்கு 'மகாத்மா' கற்பிக்கும் தர்மங்கள் என்ன? என்பதுதான் நமது கேள்வி. வருணாசிரமத்தையும் அதன் தர்மத்தையும் ஒப்புக்கொள்ளுகிற ஒருவர்—அதுவும் வருணாசிரமமும் அதனதன் தர்மமும் மக்களுக்குப் பிறவியிலேயே உண்டு என்று ஒப்புக்கொள்ளுகிற ஒருவர்—தீண்டாமை இல்லை என்று எப்படிச் சொல்லமுடியும்? மகாத்மா

கூறும் வருணாசிரமத்திற்கு, பார்ப்பனர் கூறும் தர்மத்தைவிட, வேறு ஏதாவது தர்மம் கற்பிக்க ஆதாரம் இருக்கிறதா என்று பார்த்தால், நாளதுவரை மகாத்மா 'அதுவேறு' என்று சொன்னதாகவே தெரியவில்லை. மைசூர் உபந்நியாசத்தில், 'ஜன சேவையே பிராமணர் களுடைய தர்மம்' என்று சொல்லி இருக்கிறார். அதுபோலவே, 'பிராமண சேவையே சூத்திரனுடைய தர்மம்' என்றுதான் அவர் சொல்லி ஆகவேண்டும். பொதுஜன சேவைதான் பிராமண தர்மம் என்று சொன்ன சாஸ்திரங்களில்தான், பிராமண சேவையே சூத்திர தர்மம் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

பிராமணருக்குப் பொதுஜன சேவை செய்வதினால்மாத்திரம் உயர்வு உண்டாகு மானால், சூத்திரனுக்கு பிராமண சேவை செய்வதினால் மாத்திரந்தான் உயர்வு உண்டாகு மேயன்றி, அதை விட்டு வேறு வேலை செய்வானானால் சூத்திரன் கண்டிப்பாய்த் தாழ்ந்தவ னாகிறான் என்றுதான் மகாத்மாவின் தத்துவத்திற்குப் பொருள் ஏற்படுகிறது. இந்தப்படி யானால், எந்த விதத்தில் பிராமணனுக்கு சம அந்தஸ்தாக சூத்திரன் இருக்கமுடியும் என்று மகாத்மா கருதுகிறார் என்பது நமக்கு விளங்கவில்லை.

அன்றியும், அந்தந்த வருணத்தார் அந்தந்த தருமத்தைச் செய்து வருகையில் ஒருவருக்கொருவர் உயர் தாழ்வு சொல்லிக்கொள்ள இடமேது என்றும் பேசி இருக்கிறார். அப்படியானால், அந்தந்த வருணத்தாருக்குத் தனித்தனி தர்மம் ஏற்படவேண்டிய அவசியம் என்ன என்பதைப் பற்றியாவது, ஒரு வருணத்தான் மற்ற வருணத்தானுடைய தர்மத்தைச் செய்வதானால் கெடுதி என்ன என்பதைப் பற்றியாவது, ஒரு வார்த்தையாவது இதுவரை மகாத்மா சொன்னதேயில்லை. 'பொதுஜன சேவை என்பது பிராமணர்களுக்கு மாத்திரம் சொந்தமானது; அதற்காகவே அவர்கள் பிறந்திருக்கிறார்கள்' என்றும் மகாத்மா சொல்லுவாரானால், மகாத்மா அவர்கள் நான்கு வருணத்தில் தான் எந்த வருணத்தைச் சேர்ந்தவர் என்று சொல்லமுடியும்? மகாத்மா சொல்லுகிற கொள்கைப்படி பார்த்தால், அவர் பிறவியில் ஒன்று சூத்திரராய் இருக்கவேண்டும் அல்லது வைசியரா யிருக்க வேண்டும். எனவே சூத்திரனுக்கும், வைசியனுக்கும் ஏற்பட்ட தர்மத்தைச் செய்வதைவிட்டுவிட்டு, பிராமணனுக்கு ஏற்பட்ட தர்மமாகிய பொதுஜன சேவையைச் செய்வதற்கு மகாத்மாவுக்கு உரிமை ஏது? தன்னாலேயே நடத்திக் காண்பிக்கமுடியாத வருணாசிரம தர்மத்தை மற்றவர்களை ஏற்று நடத்தும்படி சொல்லுவதில் ஏதாவது பொருளுண்டா? இவைகளைப் பற்றி இவ்வளவு தூரம் எழுதினது, தீண்டாமை விஷயத்தில் மகாத்மாவுக்கு உள்ள குழப்பத்தைக் காண்பிக்கவும், அவரும் குருட்டு நம்பிக்கையில் ஈடு பட்டவரே அல்லாமல் பகுத்தறிவுக்கு மதிப்புக் கொடுப்பவராகப் புலப்படவில்லை என்பதை யும் காட்டுவதற்குமே எழுதுகிறோமே அல்லாமல் அவர்மீது குறைகூறுவதற்காக அல்ல. அன்றியும், மகாத்மா நாட்டிற்கும் மக்களுக்கும் செய்திருக்கும் அனேக நன்மைகளைப்பற்றி நமக்கும் மகாத்மாவின் அந்தரங்க சிஷ்யர்கள் என்று சொல்லிக் கொள்பவர்க்கும் யாதொரு வித்தியாசமும் இல்லை. எனினும், இத்தீண்டாமை விஷயத்திலும், வருணாசிரம விஷயத் திலும் மகாத்மாவுக்குத் தெளிவு ஏற்பட்டிருக்குமானால், நமது சமூகத்திற்கு எவ்வளவோ நன்மை உண்டாகும் என்கிற ஆசையே இதைப்பற்றி மேலும் மேலும் எழுதிவரவும் தூண்டுகிறது.

['குடிஅரசு'-தலையங்கம்—7-8-1927]

'மகாத்மா காந்தியும் வருணாசிரமும்' என்னும் விஷயமாய் இரண்டு வாரங்களுக்கு முன் 'குடிஅரசில்' மகாத்மாவின் வருணாசிரம அபிப்பிராயத்தைக் கண்டித்தெழுதியது நேயர்கள் பார்த்திருக்கக்கூடும். அதன்பிறகு பலர் பலப்பல விதமாக நமக்குக் கடிதமூலமாய், 'மகாத்மாவைத் தாக்குவது தர்மமல்ல' என்றும் 'அபிப்பிராய பேதத்தை மகாத்மாவிடம் நேரில் தெரிந்து கொள்ளலாம்' என்றும், 'நேரில் சொன்னால் நமது அபிப்பிராயத்தை மகாத்மா ஒப்புக்கொள்வார்கள்' என்றும் 'எப்படி இருந்தாலும் மகாத்மாவைப்பற்றி ஒரு

வார்த்தையாவது வித்தியாசமாய் எழுதினால் நமது செல்வாக்கே அடியோடு போய்விடும்' என்றும், 'நமது பத்திரிக்கை ஆகிய 'குடிஅரசு' கூட ஜனங்களால் மதிக்கப்படாது போய் விடும்' என்றும் 'மகாத்மா பார்ப்பனரல்லாதார் ஆதலால் அவர்பேரில் குற்றம் சொல்லக் கூடாது' என்றும்,—இப்படியாகப் பலபேர் பலவிதத்தில் கடிதமூலமாயும் நேரிலும் நமக்குத் தெரிவிக்கிறார்கள்.

மற்றும் சிலர், பல பத்திரிக்கைகளிலும் ஜாடைஜாடையாய் நமது அபிப்பிராயத்தைக் கண்டித்தும், மகாத்மாவை ஆதரித்தும் எழுதிவருகிறார்கள். மற்றும் சிலர், 'எல்லா வற்றையும் குற்றம் சொல்லிவிட்டு நீர் என்னதான் செய்யப்போகிறீர்? எதைத்தான் ஆதரிக் கிறீர்கள்? உமது கொள்கைதான் என்ன?' என்று எழுதுகிறார்கள், ஆகவே, இவை களுக்குத் தனித்தனி பதிலும் சமாதானமும் சொல்லிக்கொண்டிருப்பது மிகவும் கஷ்டமான காரியமானதால், இவற்றிற்குப் பொதுவாக இந்த வாரம் சில விஷயங்களை எழுதுகிறோம்.

ஆரம்பத்தில் ஒருவிஷயத்தைப் பொதுஜனங்களுக்குத் தெரியப்படுத்திக்கொள்ள ஆசைப்படுகிறோம். அதென்னவெனில், நாமும் நமது பத்திரிக்கையும் வயிற்றுப் பிழைப்புக்கோ, பொது ஜனங்களின் செல்வாக்குப் பெறுவதற்கோ, பொதுநன்மையின் பேரால் தொண்டுசெய்ய வரவில்லை என்பதே. உண்மையை உண்மை என்றும், சரிஎன்று பட்டதை வெளிப்படுத்துவதற்கும், பொய்யென்றும் தப்பென்றும் பட்டதைக் கண்டிப் பதற்குமே நடைபெற்று வருகிறது என்பதாகவும், பத்திரிக்கையின் கொள்கையே அதுதான் என்பதாகவும் ஆதிமுதற் கொண்டே பலதடவைகளில் வெளிப்படுத்தி இருக்கிறோம்.

இரண்டாவதாக, மகாத்மா காந்தியவர்களிடத்தில் மற்றவர்களுக்கு இருக்கும் அபி மானத்திலும் பக்தியிலும் நமது பக்தி எள்ளளவும் குறைந்ததல்ல வென்பதையும் தெரிவிப்ப தோடு, மகாத்மாவைத் தமிழ்நாட்டு மக்களுக்கு அறிமுகப்படுத்தின அனேகருள் நாமும் ஒருவரென்றும், மகாத்மாவைப் பின்பற்றிவந்த விஷயத்திலும் இப்போது சிபாரிசுக்கு வருகிற எல்லோரையும்விட நாம் பின்பட்டவரல்ல என்பதையும் தெரிவித்துக்கொள்ளு கிறோம்.

நிற்க, மகாத்மாவைக் குருட்டுத்தனமாய் ஆதரிப்பதன் மூலமாய் வரும் செல்வாக்கு நமக்கு அவசியமில்லை என்றும், மகாத்மாவைப்பற்றி நாம் கண்டிக்கும் விஷயம் சரியா தப்பா என்று விசாரணை செய்து பார்த்து ஒருமுடிவுக்கு வரயோக்கியதை இல்லாமல், குருட்டு பக்தியாய் அபிப்பிராயம் கொள்ளுபவரது கண்டனத்தைப் பற்றி நமக்குக் கவலை இல்லை என்றும் தெரிவித்துக் கொள்ளுகிறோம். நிற்க,

இதுவரையில் கடிதமூலமாயும், பத்திரிக்கை மூலமாயும் நேரிலும் நமதுகண்டனத்தை மறுத்தவர்களில் ஒருவராவது பிறவியில் வருணாசிரமதர்மமும் சாதி வித்தியாசமும் இல்லை என்று மகாத்மா சொன்னதாகவாவது, பிறவியில் வருணாசிரம தர்மமும் சாதிப்பிரிவுகளும் உண்டு என்று அவர் சொல்லவில்லை என்றாவது, ஒருவரும் சொல்லவே இல்லை. இனியும் யாராவது மகாத்மாவுக்கு பிறவியில் வருணாசிரம தர்மமும் சாதியும் இல்லை என்று சொல்வார்களேயானால், அல்லது இல்லை என்று மகாத்மா இன்ன இடத்தில் சொல்லி இருக்கிறார் என்று காட்டுவார்களேயானால், உடனே நான் எழுதியவைகளையும் மறுத்து எழுதிவிட்டு, மகாத்மா விஷயமாய் நான் கொண்ட அபிப்பிராயத்தையும் மாற்றிக்கொண்டு, எனது வருத்தத்தையும் தெரிவித்துக்கொள்ளத் தயாராயிருக்கிறேன்.

அப்படிக்கில்லாமல், 'அவர் அப்படி எண்ணி இருக்கமாட்டார்'; 'இப்படி எண்ணி இருக்க மாட்டார்'; 'மகாத்மா சொல்வதற்கு அதுவல்ல அர்த்தம், இதுவல்ல பொருள்' என்பதான வெறும் உத்தேசமும் வியாக்கியானமும் நமது அபிப்பிராயத்தை ஒருசிறிதும் மாற்றிக்கொள்ளும்படிசெய்யவே முடியாது என்பதை வணக்கமாய்த் தெரிவித்துக்கொள்ளு கிறோம்.

நிற்க, நமது கருத்தையும், மகாத்மா கருத்துக்கும் நமது கருத்துக்கும் மாறுபட்ட கருத்துகளைப் பற்றியும் சென்ற மாதம் மகாத்மா அவர்களிடம் நேரில் கலந்துபேசி, நம்மைப் பொறுத்தவரையிலும் ஒரு முடிவுகட்டிக்கொண்டே வந்துவிட்டோம். 'மகாத்மாவிடம் நான் கலந்து பேசினேன்' என்று சொல்லிக்கொள்வதும் எழுதிக்கொள்வதும் இக்காலத்தில் பெரிதும் தற்பெருமைக்கே உபயோகித்துக்கொள்ளக்கூடியதாய் விட்டபடியால், அந்தத் தற்பெருமை நமக்கு வேண்டாம் என்பதாகக் கருதியே நாம் அதுசமயம் அதை வெளிப்படுத்திக்கொள்ளவில்லை.

தவிரவும், அதுசமயம் நமக்கும், மகாத்மாவுக்கும் நடந்த சம்பாஷணைகளின் விபரத்தை மகாத்மாவின் சம்மதம் பெற்றே வெளிப்படுத்த வேண்டியதான ஒரு நிபந்தனைக்கும் நாம் சம்மதம் கொடுத்து வந்ததால், அதையும் வெளியிடமுடியாத நிலையில் இருக்கிறோம்.

முக்கியமாய் மூன்று விஷயத்தைப்பற்றியேதான் மகாத்மாவிடம் நாமும் நமது நண்பரான ஸ்ரீமான் எஸ். இராமநாதனும் சம்பாஷித்தோம். அதாவது என்னுடைய அபிப்பிராயமாக மகாத்மாவுக்கு எடுத்துச் சொன்னதெல்லாம் :

இந்தியாவின் விடுதலைக்கும் சுயமரியாதைக்கும் மூன்றுமுக்கிய காரியங்கள் செய்து முடிக்கவேண்டும் என்றும், அது முடிவுபெறாமல் நமது நாட்டுக்கு விடுதலை இல்லை என்றும் நாம் முடிவு செய்திருக்கிறோம் என்பதாகச் சொன்னோம்.

அதாவது ஒன்று, காங்கிரசு என்பதை ஒழிக்கவேண்டியது ;

இரண்டாவது, இந்துமதம் என்பதை ஒழிக்கவேண்டியது ;

மூன்றாவது, பார்ப்பன ஆதிக்கத்தை ஒழிக்கவேண்டியது—என்பவைகளாகும்.

முதல் இரண்டை ஒழித்தாலே பார்ப்பன ஆதிக்கம் ஒழிந்து விடுமானாலும், இவ்விரண்டின் மூலமாய் ஒழிந்தது போக பாக்கி கொஞ்ச நஞ்சம் இருந்தாலும் அதையும் ஒழிப்பது என்கிற கொள்கையும் அதில் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்ற கருத்தையே காட்டினோம்.

இது விஷயமாய் நடந்த தர்க்கங்கள் முன்சொன்ன காரணத்தால் வெளியிடக்கூடியதல்ல. ஆதலால், இனி இதைப்பற்றி மகாத்மாவிடம் மறுபடியும் கலந்துபேசித் தெரிந்துகொள்ள வேண்டியது ஒன்றும் இல்லை என்பதையும், மகாத்மாவினிடம் நேரிலேயே இம்மூன்று விஷயங்களைப்பற்றியும் மகாத்மா சொன்ன சமாதானங்கள் எம்முடைய அபிப்பிராயத்தை மாற்றக்கூடியதாயில்லை என்றும் சொல்லி, மகாத்மாவினிடம் உத்திரவு பெற்றுக்கொண்டு வந்துவிட்டோம். மகாத்மாவும், தான்சொன்ன சமாதானத்தால் நாம் திருப்தி அடையவில்லை என்பதைத் தெரிந்துகொண்டதாகவும், இன்னும் இரண்டொரு தடவை இதைப்பற்றிப் பேசவேண்டும் என்றும் சொன்னார். எமது நண்பர் ஸ்ரீமான் இராமநாதன் அவர்கள்கூட, மகாத்மா சொன்னதுபோலவே மறுபடியும் இரண்டொரு தடவை மகாத்மாவிடம் பேசலாம் என்றுகூடச் சொன்னார். இதற்கு உடனே நாம், 'மகாத்மா நம்முடைய அபிப்பிராயத்தை மாற்றும்படி திருப்தி செய்வார்கள் என்று நம்புகிறீர்களா ? அல்லது மகாத்மா அபிப்பிராயத்தை நாம் மாற்றக்கூடும் என்பதாகக் கருதுகிறீர்களா ?' என்று கேட்டதில், 'மகாத்மா சொல்வதைக்கொண்டு நம்முடைய அபிப்பிராயங்களை மாற்றிக்கொள்ளக் கூடியதாய் ஏற்படாது என்றும் ஒருகால் நமது அபிப்பிராயத்துக்கு மகாத்மா இணங்கக்கூடியதானால் நமது பிரச்சாரத்திற்கு இன்னும் உதவியாக இருக்காதா ?' என்றும் சொன்னார். உடனே நாம், 'அந்தப்படி எதிர்பார்ப்பது தப்பு என்றும், மகாத்மாவைத் திருத்தும்படியாக நாம் சொல்லி சரிசெய்யமுடியாது என்றும், நம் அபிப்பிராயத்தை நாம் வெளிப்படுத்த வேண்டியதுதான் நமது கடமை' என்றும்

சொல்லிவிட்டோம். இன்ன இன்ன விஷயங்களைப்பற்றி மகாத்மா அவர்களுடன் சம்பாஷித்ததாக திரு. சி. இராஜகோபாலாச்சாரியார் அவர்களிடம் தெரிவித்து விட்டே உத்திரவுபெற்றுக்கொண்டு வந்துவிட்டோம்.

எனவே, இதுசம்பந்தமாக இனி மகாத்மாவின் அபிப்பிராயம் எப்படி என்பதைப் பற்றி நாம் மறுபடியும் அவரைக்கண்டு கேட்கவேண்டியதில்லை என்பதைப் பற்றியும், அதைப்பற்றி நாம்கொண்டுள்ள அபிப்பிராயத்தில் நமக்குக் கொஞ்சமும் சந்தேகமில்லை என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம். வருணாசிரம விஷயமாய் மகாத்மாவுடன் சம்பாஷித்ததை ஆதாரமாய் வைத்துக்கொள்ளாமலேயே, மகாத்மாவே மைசூரில் பேசினதைக் கொண்டும், அதற்கும் அவர் எழுதினதைக் கொண்டும்தான் அந்தமறுப்பு எழுதப்பட்டது. தவிர, மகாத்மாவின் வருணாசிரம தர்ம நியமனமும், சாதி வித்தியாச நியமனமும் பிறப்பை ஒட்டியது என்பதாக இதற்குமுன் எத்தனையோ தடவைகளில் மகாத்மாவின் பேச்சினாலும், எழுத்துக்களினாலும் நாம் தெரிந்தே இருக்கிறோம்.

மகாத்மா, பார்ப்பன மதமான ஆரியரின் மதத்தைத்தான் இந்துமதம் என்று சொல்லிக்கொண்டு, தன்னையும் 'அதே இந்து இந்து' என்று அடிக்கடி சொல்லிவருகிறார். தன்னுடைய பிரசங்கங்களுக்கு அடிக்கடி ஆரியக் கதைகளான புராணங்களைத்தான் அதாவது—இராமாயணம், பாரதம், பாகவதம் முதலியவைகளையே—தனக்கு ஒரு படிப்பினைகளாகவும் மேற்கோள்களாகவும் காட்டிக்கொண்டும் வருகிறார். இந்தமாதிரி புராண வழக்கலானது எப்படியாவது மகாத்மாவைச் சேற்றில் கொண்டுபோய் அழுத்தியே தீரும் என்பதே நமது துணிபு.

தமிழ்நாட்டின் நாகரிகமும், தமிழ்நாட்டின் பழைய பழக்கவழக்கங்களும் மகாத்மாவுக்குத் தெரிவதற்குச் சந்தர்ப்பமே இல்லை. மகாத்மா தென்ஆப்பிரிக்காவில் இருந்த காலத்தில் வள்ளியம்மை, நாகப்பன் என்பவர் போன்ற சில தமிழ்மக்கள் மூலம் தமிழரின் வீரத்தை அறிந்திருக்கலாமே தவிர, தமிழ்நாட்டைப் பற்றியும், தமிழ் மக்களைப் பற்றியும் பார்ப்பனர்களின் மூலமாகத்தவிர வேறொன்றும் அவர் அறிந்திருக்க முடியாது என்பதாக உறுதிகூறலாம்.

ஆரியக்கொள்கையான பார்ப்பன மதத்திற்கும் தமிழர் நாகரிக, பழக்கவழக்கத்திற்கும் ஏறக்குறைய 2000, 3000 வருஷங்களாகவே யுத்தங்கள் நடந்து வரும் விஷயங்களை மகாத்மாவுக்கு எடுத்துச் சொல்லக் கூடியவர்கள், மகாத்மா மடத்தில் யார் இருக்கிறார்கள்? ஆதலால், தமிழ்நாட்டிற்கு ஆரியக்கொள்கைகள் கூடாது என்பதாக நாம் பிரச்சாரம் செய்வதானால், அதைப் பொறுத்தவரை மகாத்மா கொள்கை கூடாது என்றுதான் நாம் சொல்லி ஆகவேண்டும். தொழிலின் மூலமாகக்கூட மக்களைப் பிரிக்கக்கூடாது; பிரிக்க முடியாது; பிரிப்பது உலக இயற்கைக்கும் மனிதத் தன்மைக்கும் சரியல்லவென்று வாதாடுகிற நாம், 'பிறவியில் சாதி உண்டு; தொழில் உண்டு; இதுபெரியோர்களால் ஏற்படுத்தப்பட்டது; கடவுளால் ஏற்படுத்தப்பட்டது, ரிஷிகளால் ஏற்படுத்தப்பட்டது' என்றால் எப்படி ஒப்புக்கொள்ளமுடியும்? ரிஷிகள், கிருஷ்ணன் முதலானவர்கள் காலமல்ல இது என்பதும், நாம் அந்தக் காலத்தில் இல்லை என்பதும், இந்தக் காலத்தில் அவர்கள் இல்லை என்பதும், அது சரியா, தப்பா, நிஜமா, பொய்யா என்பதற்குச் சரியான ஆதாரமும் அவசியமும் சாத்தியமும் இல்லை என்பதும் ஒவ்வொரு பகுத்தறிவுள்ள மனிதனுக்கும் தானாக விளங்கும்போது, 'பாட்டி கதைக்கு' எப்படி மரியாதை கிடைக்கும் என்பது நமக்கே விளங்கவில்லை.

'மகாத்மாவும் வருணாசிரமமும்' என்னும் வியாசத்தை மகாத்மாவுக்கும் அனுப்பித்தான் இருக்கிறோம். மற்றொன்றை அவரது அந்தரங்க சிஷ்ய கோடிகளுக்கும் அனுப்பி, மகாத்மா தகவலுக்குக் கொண்டுபோகும்படி கேட்டுக்கொண்டும் இருக்கிறோமேயல்லாமல்,

மகாத்மாவுக்குத் தெரியாமல் ஒன்றும் செய்துவிடவில்லை. ஆனால், அவரது பரமானந்த சிஷ்யர்கள், 'இம் மாதிரி விஷயங்களை லட்சியம் செய்யாதீர்கள்; லட்சியம் செய்தால் மறுப்புக்கு அதிக யோக்கியதை யுண்டாகிவிடும்; மறுப்பவனுக்கும், அந்தப் பத்திரிக்கைக்கும் யோக்கியதை அதிகமாகிவிடும். ஆதலால், குப்பையில் போட்டுவிடுங்கள்' என்றுதான் சொல்லிக்கொடுப்பார்கள். அதை மீறுவதற்கு மகாத்மாவுக்கும் இதுசமயம் சக்தியில்லை யென்பதே நமது அபிப்பிராயம். ஆகவே, இந்த விஷயம் முக்கியமானதாலும் நமது நாட்டின் விடுதலைக்கும், நமது சுயமரியாதைக்கும், வருணாசிரமம் என்கிற தத்துவமே —அதிலும் பிறவியில் வருணாசிரமமும் சாதியும் உண்டு என்கிற தத்துவமே—'எமனாய்' இருக்கிறது என்பதான கண்ணியமான முடிவுக்கு வந்திருப்பதாலும், அதையொழிக்கப் பாடுபடுவதே நாட்டின் விடுதலையும் சுயமரியாதையும் கோரும் மனிதனின் கடமையென்று நாம் களங்கமற உணருவதாலும், கண்டிக்க வேண்டியதாயிருக்கிறதே என்பதாக வருத்தத் துடன்தான் இதை எழுதுகிறோம்.

['குடிஅரசு'—தலையங்கம்—28-8-1927]

## 12. கோயில் நுழைவு ஏன்?

அக்கிராசனரவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

நமது தமிழ்நாட்டில் சுயமரியாதை மாநாடு நடந்து 8, 9 மாதங்கள் ஆகிவிட்டன. அடுத்து பம்பாயில் சுயமரியாதை மாநாடு நடந்து 3, 4 மாதங்களே ஆயின. ஆனால், பம்பாய்க்காரர்கள் இதற்குள் சத்தியாக்கிரகம் துவக்கிவிட்டார்கள். சத்தியாக்கிரகம் அன்றியும் வடநாட்டில் இல்லாமலும் பல கோயில்கள் எல்லோருக்கும் திறந்துவிடப்பட்டு விட்டன. நாமோ மற்றொருவர் செய்த சத்தியாக்கிரகத்தைப் பாராட்டுவதில் முனைந் திருக்கிறோம். இதை நினைக்கும்போது—நம்மை நாம் வாய்ப்பேச்சு வீரர்கள் என்றே சொல்லிக்கொள்ளவேண்டும். நிற்க,

சிலர் நம்மை 'உங்களுக்குத்தான் இந்த மாதிரி கடவுள்களிடத்தில் நம்பிக்கை இல்லையே; அப்படி இருக்க எதற்காகக் கோயிலுக்குள் போக சத்தியாக்கிரகம் செய்ய வேண்டும்?' என்று கேட்கின்றார்கள். ஆனால், சகோதரர்களே! நாம் மாத்திரமல்ல; இப்போது எங்கு பார்த்தாலும் ஆஸ்திகர்கள் என்பவர்கள்—சொல்லிக்கொள்பவர்கள்கூட— நம்மைப் போலவேதான் அதாவது-கோயிலில் இருப்பது கல்லும் செம்புமே ஒழிய அவைகள் கடவுள்கள் அல்லவென்பதைத் தாராளமாய் ஒப்புக்கொள்கிறார்கள். ஆனால் மனிதன் கடவுளை நினைக்க ஞாபகம் வருவதற்காகவே கோயில் என்றும்—ஆனால், பாமர மக்களுக்கு இதைச் சொன்னால் புரியாதென்றும், அதையே கடவுள் வீடு என்றும், உள் ளிருப்பவைகளே கடவுள் என்றும் சொல்லவேண்டி இருக்கின்றது—என்பதாகத் தத்துவார்த் தம் சொல்லுகின்றார்கள். இவர்களைப்பற்றி நான் என்ன நினைக்கிறேன் என்றால், ஒன்று இவர்கள் கடவுளை மிகக் கேவலப்படுத்துபவர்களாக இருக்கவேண்டும்; அல்லது, கடவுள் தன்மை இன்னது என்பதை அறியாத மூடர்களாக இருக்கவேண்டும். இந்த இரண்டும் இல்லாவிட்டால் பொதுஜனங்களை ஏமாற்றும் அயோக்கியர்களாக இருக்கவேண்டும் என்பதேயாகும்.

ஏனெனில், எல்லாம் வல்லவரும், எங்கும் இருப்பவரும், சர்வ இயங்குதலுக்கும் காரணமான கடவுள் என்பவரை ஆறறிவுள்ள மனிதனுக்கு ஞாபகப்படுத்த மற்றொரு மனிதன் முயற்சி வேண்டும் என்றால், அதுவும் அதற்கு ஒரு கட்டடமும் கல் உருவமும் வேண்டுமென்று ஒருவன் சொல்வானானால், அவன் கடவுள் என்பதற்கு மேற்கண்ட எல்லாம் வல்ல சக்தியும், எங்கும் உள்ள சக்தியும் என்று ஒப்புக்கொண்டவனாவானா என்று கேட்

கிறேன். ஆதலால், ஒரு சமயம் கோயில்கள் மூடர்களால் கட்டப்பட்டன என்று சொல்லுவதானால் நமக்கு ஆட்சேபம் இல்லை. அப்படிக்கில்லாமல், கோயில்கள் அறிவாளிகளால் கட்டப்பட்டன என்று சொல்லுவதானால், கண்டிப்பாய் அந்த அறிவாளிகள் என்பவர்கள் சூழ்ச்சியும் வஞ்சகமும் நிறைந்தவர்களாய்த்தானிருக்கவேண்டும். ஏனெனில், அந்தக் கோயில்கள் இப்போது அந்தப் பெரியவர்களின் ஆதாரப்படி நடந்து வருவனவாகவே இருக்கின்றன. அந்த ஆகமங்கள் என்பவைகளே, மனிதன் அந்தக் கோயில்களுக்குள் போகவும் அங்குள்ள சாமியை வணங்கவும் பல நிபந்தனைகளைக் கொண்டவையாக இருக்கின்றன. அந் நிபந்தனைகள் மனிதத் தன்மைக்குச் சிறிதும் பொருத்தமில்லாதனவாயிருக்கின்றன.

அதில் ஒரு சிறிதும் ஒழுக்கத்திற்கும் பக்திக்கும் ஆதாரமானதும், கடவுள் ஞாபகம் வருவதற்கும் ஆதாரமுமான காரியங்கள் இல்லவே இல்லை. அங்குள்ள கடவுள்களைப் பார்த்தால், கடவுள் ஞாபகம் வருமென்றால், அங்குள்ள தாசிகளைப் பார்த்தால் தாசிகள் ஞாபகம் வராதா என்று கேட்கின்றேன். மற்றும், அங்கு கடவுளை வணங்க வரும் மற்ற பெண்களைப் பார்த்தால், பெண்கள் ஞாபகம் வராதா என்று கேட்கிறேன். உணர்ச்சியற்ற குழவிக்கல்லைப் பார்த்த மாத்திரத்தில் கடவுள் ஞாபகம் வருவதானால், உயிருள்ள ஜீவன்கள்—பெண்கள் தங்களைப் பிறர் பார்க்கவேண்டுமென்றே அலங்கரித்து வந்து நின்றுகொண்டிருந்தால்—ஏன் அந்த ஞாபகம் வராது? அன்றியும், அங்கு கடவுளுக்கு நடக்கும் மற்ற காரியங்களையும் பார்த்தால்—ஏன் பார்க்கின்ற மனிதனுக்கு மற்ற ஞாபகமும் வராது என்று கேட்கின்றேன்.

கோயிலைப்பற்றி என்னுடைய கண்ணியமான அபிப்பிராயமெல்லாம் கோயில்கள் கண்டிப்பாக பக்திக்கும் ஒழுக்கத்திற்கும் ஏற்பட்டவை அல்லவென்றும், மக்களை மூடர்களாக அடிமைப்படுத்தவும் உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி என்கின்ற சாதி வித்தியாசத்தை நிலைநிறுத்தவும், ஒரு கூட்டத்தார் பாடுபடாமல் இருந்துகொண்டே—சோம்பேறித்தனமாய்—வயிறு வளர்க்கவேண்டி, பொதுஜனங்கள் பாடுபட்டுச் சம்பாதித்த பணத்தைக் கொள்ளை அடிக்கவும் வசதி செய்துகொள்வதற்காகவே ஏற்பட்டவையாம்.

முன்காலத்திலிருந்த அரசர்கள் மூடர்களும் அயோக்கியர்களுமாய் இருந்ததால், இம் மாதிரி கோயில் சூழ்ச்சிக்கு அவர்களும் அனுகூலமாயிருந்து வந்திருக்கின்றார்கள். சில அரசர்களுக்கு இம்மாதிரியான கோயில் மூலமாகவே ஆட்சியும் அனுகூலமும் ஏற்பட்டிருக்கின்றன. ஆகையால், கோயில்கள் என்பவை சோம்பேறிக்கூட்டமும், அரசர்களும் சேர்ந்து தங்கள் சுயநலத்திற்காகப் பாமர மக்களை ஏமாற்றுவதற்குச் செய்த சூழ்ச்சியேயாகும். அவ்வித சூழ்ச்சியை ஒழிக்கவே நாம் எல்லோருக்கும் கோயில் பிரவேசம் கேட்கின்றோம்.

இன்றைய சாதி வித்தியாசத்திற்கு ஆதாரமாயுள்ள ரோடு, கிணறு, பள்ளிக்கூடம், சாவடி, முதலியவைகள் எல்லாம் ஒருவிதமாக மாற்றப்பட்டு வந்து கொண்டிருப்பதாலும், இந்தக் கோயில்கள்தான் சிறிதும் மாற்றுவதற்கு இடம்தராமல் சாதிவித்தியாசத்தை நிலை நிறுத்த உபயோகப்பட்டு வருகின்றது. ஆதலால்தான், நான் தீண்டாத மக்கள் என்போர் கண்டிப்பாய்க் கோயிலுக்குள் போய்த்தீரவேண்டும் என்று கூறுகின்றேனே ஒழிய—பக்திக்காகவோ மோட்சத்திற்காகவோ, பாவமன்னிப்புக்காகவோ அல்லவே அல்ல. கோயிலில் சமத்துவமடைந்து விட்டால் மற்ற காரியங்களில் வித்தியாசம் இருக்க முடியவே முடியாது. கோயிலில் பிரவேசித்து நாம் செய்யும் ஒவ்வொரு முயற்சியும் சாதி வித்தியாசத்தை ஒழிக்கச்செய்யும் முயற்சியே ஒழிய வேறில்லை.

இன்றைய தினம் எல்லோரும் கோயிலுக்குள் சாதி வித்தியாசமின்றி விடப்பட்டு விட்டார்கள் என்று ஏற்பட்டு விட்டால், நாளையதினமே நான், அங்கு எதற்காகப் போகின்றீர்கள்? அங்கு என்ன இருக்கின்றது? அங்கு போனதால் உங்களுக்கு என்ன

பலன் ஏற்படுகின்றது? ஏன் உங்கள் பணத்தையும், நேரத்தையும், ஊக்கத்தையும் அறிவையும் பாழாக்குகிறீர்கள்?' என்று சொல்லித் தடுக்கவே முயற்சிப்பேன். ஏனென்றால், கோயிலிலுள்ள சாதி வித்தியாசம் காரணமாகவே சில மூடர்கள் கோயில்களைப் புனிதமான இடம் என்று கருதிக்கொண்டு—தங்கள் பணத்தையும், புத்தியையும் பாழாக்கிவருகின்றார்கள். நமது நாட்டின் வறுமைக்கும் முட்டாள் தனத்திற்கும் கோயில் வரியும் புரோகிதர்களின் வரியும் ஆகமங்களுமே காரணமாகும் என்பது எனது உறுதியான எண்ணம். தரித்திரமும் சாதி வித்தியாசமும் ஒழிந்து நமது நாட்டில் அறிவும் செல்வமும் பெருக வேண்டுமானால், இந்தக் கோயில்களும் புரோகிதர்களும் அடியோடு அழிக்கப்பட்டாக வேண்டும். எனவே, இம்முயற்சிகள் பலாத்காரத்தின் மூலம் துவக்குவது என்பது எனக்கு ஒரு சிறிதும் நம்பிக்கை இல்லாததும் பிடிக்காததுமான காரியமாகும். ஏனெனில், 100க்கு 100மனிதர்கள் உண்மையாகவே தீண்டாமையை நம்பிக்கொண்டு, ஆட்சேபிக்கும்படியான பாமரத்தன்மையில் இருக்கின்றார்கள். அவர்களிடம் பலாத்காரம் செய்வது நியாயமற்றதும் பாதகமானதுமாகும்.

தவிர, நீங்கள் (ஆதித் திராவிடர்கள்) நன்றாகப் படித்த பிறகுதான் இவ்வித உரிமைக்கு அருகதையாவீர்கள் என்று சாமி சகஜானந்தம் சொல்லுகிறார். இதைக்கேட்க எனக்கு மிக வருத்தமாயிருக்கின்றது. இந்த நாட்டில் 100க்கு 90 பேர் கொஞ்சங்கூடப் படிக்காதவர்கள். அப்படியானால், அவர்களெல்லாம் நாயிலும் பன்றியிலும் கடையாய் இருக்கின்றார்களா என்று கேட்கிறேன். இன்றைய தினம் உங்களைத் தெருவில் நடக்க வேண்டாம் என்று தடுத்து விட்டு நடக்கும் மற்றவர்களெல்லாம் படித்தவர்களா? அன்றியும், உங்களைத்தவிர—நடக்கும் நாய், பன்றி ஆகியவைகள் படித்தவைகளா என்று கேட்கிறேன். தவிர, உங்களில் 'ரிக்ஷா' வண்டி இழுப்பவர்கள் முதல் மலம் எடுத்து ஜீவிக்கின்றவர்கள் வரை—எந்தக் காலத்திற்குப் படித்துமுடிவது? நீங்கள் எந்தக் காலத்தில் தெருவில் நடப்பது? கோயிலுக்குள் போவது? எந்தக் காலத்திற்கு இழிவை விலக்கிக் கொள்வது? என்பது எனக்குச் சிறிதும் விளங்கவில்லை. தவிரவும், ஒருவன் படிப்பதினாலேயே யோக்கியனாய் விடுவானா? மேல்சாதியாய் விடுவானா என்றே கேட்கிறேன்.

என்னைப் பொறுத்தவரையில் நான் படித்தவர்களில் அனேகரை அயோக்கியர்கள் என்றே அறிகிறேன். பெரிய பண்டிதர்களும் பெரிய வித்வான்களும் தேவாரம், பிரபந்தம், ஆகமம், சாஸ்திரம், திருக்குறள் முதலியவை படித்த மதப் பித்தர்களும் அயோக்கியர்தளாகவே காணப்படுகின்றார்கள். பெரிய பெரிய ஆங்கிலேயப் பட்டம் பெற்றவர்கள் அதைவிட மோசமாயிருக்கிறார்கள்.

இன்றைய 'சர்க்கார்' வெள்ளைக்காரர், பார்ப்பனர், பணக்காரர் ஆகிய மூவர்களுடைய கூட்டு வியாபாரமாய் நடைபெறுகின்றது. இம்மூன்று கூட்டத்தினரும் ஏழைகளுக்கு நன்மை செய்யவோ, தீண்டாமையை விலக்கவோ சுலபத்தில் சம்மதிப்பார்களா என்று கேட்கிறேன். தவிரவும், சீர்திருத்தமும் சுயமரியாதையும் சட்டம் கொண்டு 'வோட்டு' வாங்கி நிறைவேற்றிப் பெற்றுவிடலாம் என்பது ஒருநாளும் முடியாத காரியம். வோட்டு என்பது கூட்டுக்கொள்ளையே தவிர வேறில்லை. 'என்னுடைய உரிமையைக் கொடுக்கின்றாயா, அதற்காக உயிர் விடட்டுமா?' என்கின்ற கொள்கையுடைய மக்கள்தான் எங்கும் வெற்றிபெற்றிருக்கின்றார்கள். 'இந்தப்படி நடக்கின்றாயா? அல்லது ஜெயிலில்போட்டு அடைக்கட்டுமா?' என்று சொல்லும் அரசாங்கம்தான் சீர்திருத்தங்கள் செய்திருக்கின்றது. அதை விடுத்து, இம்மாதிரி காரியங்களுக்கு வோட்டும், சட்டசபையும் ஜாலவேடிக்கையும் வேடிக்கை பார்க்கும் விளையாட்டுப்பிள்ளை நிலையங்களேயாகும்.

தவிர, இங்கு செய்யும் பிரச்சாரத்தைப் பார்ப்பனர்களுக்கும் அல்லாதவர்களுக்கும் போய்ச் செய்யட்டும் என்று அவர் சொல்லுகின்றார். பார்ப்பனர்கள் நமது பிரச்சாரத்தினால் புத்தி திருந்திவிடுவார்கள் என்பது சுத்தப் பைத்தியக்காரத்தனமாகும். அவர்கள்

தெரியாதவர்களாயிருந்தால் நியாயம் சொல்லலாம். நன்றாய்த் தெரிந்தே, எங்கு தங்கள் ஆதிக்கமும் சோம்பேறிப் பிழைப்பும் போய்விடுகின்றனவோ என்று சுயநலங்கருதி,குரங்குப் பிடிவாதமாய் இருப்பவர்களை நாம் எந்தப் பிரச்சாரத்தால் எப்படி மாற்றக்கூடும் ? பார்ப்பனரல்லாதவர்களோ—முக்கால்வாசிப்பேர்—பார்ப்பனர்களைப் பின்பற்றுபவர்களாகவும், பார்ப்பானுக்குத் தாசிமகனாய் இருந்தாலும் சரி, நாம் பறையனுக்கு மேலே இருந்தால் போதும்—என்று முட்டாள்தனமாய் கருதிக்கொண்டிருக்கின்றவர்கள் என்றாலும், நம்மால் கூடியதைச் செய்துதான் வருகின்றோம். எதற்கும் உங்கள் முயற்சியும் சுயமரியாதை உணர்ச்சியும் இல்லாவிட்டால், ஒரு காரியமும் நடவாது. தவிரவும், தீண்டாமை ஒழிவதற்கு இந்த ஒரே ஒரு மார்க்கந்தான் என்று சொல்ல வரவில்லை. தீண்டாமை ஒழியவேண்டுமானால், மதத்தை விட்டுவிடுங்கள்; அல்லது ஏதாவது மதம் வேண்டுமானால், தீண்டாமை இல்லாத மதத்தைத் தழுவலாம்.

ஆகவே நான் சொல்லுவதைப் பொறுமையுடனும் சுயபுத்தியுடனும் ஆராய்ச்சி செய்துபார்த்து, உங்களுக்குச் சரி என்று தோன்றியபடி நடவுங்கள்.

[சென்னை, நேப்பியர் பார்க்கில், 22–10–1929-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 27–10–1929]

## 13. வைக்கம் சத்தியாக்கிரகம்

அக்கிராசனரவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

சத்தியாக்கிரக ஆரம்பத்தில் பிராமணர்கள் கட்சியில் இருந்த அரசாங்கத்தார், இப்பொழுது பிராமணர்களுக்கு விரோதமாகவே, தீண்டாதாரென்போரைக் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு செல்லுவதை நாம் பார்க்கிறோம்.

அப்பொழுது நமக்கே சத்தியாக்கிரகத்தின் தன்மையைப் பற்றி ஆச்சரியப்படத் தக்கதாய் இருக்கிறது. சத்தியாக்கிரகத்தில் ஏற்பட்ட கஷ்டங்களை நாம் பொறுமையாய் அனுபவித்து வந்ததால், இவ்வித சக்தியை இங்கு காண்கின்றோம். பலாத்காரத்திலோ, கோபத்திலோ, துவேஷத்திலோ நாம் இறங்கி இருப்போமேயானால், இச் சக்திகளை நாம் ஒருகாலும் கண்டிருக்கவேமாட்டோம். சத்தியாக்கிரகத்தின் உத்தேசம்—கேவலம் நாய், பன்றிகள் நடக்கும் தெருவில் நாம் நடக்கவேண்டும் என்பதல்ல. மனிதனுக்கு மனிதன் பொது வாழ்வில் வித்தியாசம் இருக்கக்கூடாது என்பதுதான். அந்தத் தத்துவம் இந்தத் தெருவில் நடந்ததோடு முடிந்துவிடவில்லை. ஆகையால், தெருவில் நிரூபித்த சுதந்திரத்தைக் கோவிலுக்குள்ளும் நிரூபித்துக் காட்டவேண்டியது மனிதர் கடமை.

மகாத்மா காந்தியும், மகாராணியைக் கண்டு பேசிய காலத்தில், மகாராணியார் மகாத்மாவைப் பார்த்து, 'இப்பொழுது தெருவைத் திறந்து விட்டுவிட்டால் உடனே கோயிலுக்குள் செல்லப் பிரயத்தனப்படுவீர்களே' என்று கேட்டார்கள். மகாத்மா காந்தி அவர்கள், 'ஆம்; அதுதான் என்னுடைய குறி. ஆனால், கோயிலுக்குள் செல்ல உரிமை வேண்டிய ஜனங்கள் போதுமான பொறுமையும் சாந்தமும் அவசியமான தியாகமும் செய்யத் தயாராய் இருக்கிறார்கள் என்று நான் அறியும் வரையில்—அக் காரியத்தில் பிரவேசிக்க மாட்டேன். அதற்கு வேண்டிய காரியங்களை அது வரையில் செய்து கொண்டு இருப்பேன்' என்று சொன்னார்.

வைக்கம் சத்தியாக்கிரகத்திற்கு விரோதியாய் இருந்தவர்கள் பிராமணர்களே ஒழிய அரசாங்கத்தார் அல்ல என்பதை அரசாங்கத்தார் நிரூபித்துக் காட்டிவிட்டார்கள். மனித உரிமையை அடைய அன்னிய மதங்களுக்குப் போவது மிகவும் இழிவான காரியமாகும். அப்படி அவசியம் இருந்தாலும் கிறிஸ்துவ மதத்திற்காவது, முகமதிய மதத்திற்காவது




1928-ல்—வைக்கம் வீரர் பெரியார் ஈ. வெ. ரா.

செல்லலாமே ஒழிய, ஆரிய சமாஜத்திற்குப் போவது எனக்கு இஷ்டமே இல்லை. ஏனென்றால், ஆரிய சமாஜத்திற்குப் போவதானால் பொருள் இல்லாத—அர்த்தமற்ற பூணூல் போட்டுக்கொள்வதோடு,—பொருளறியாத சந்தியா வந்தனமும் செய்துகொள்ள வேண்டும். இப்படி ஒரு காலத்தில் பூணூல் போட்டுக்கொண்டு சந்தியா வந்தனம் பண்ணினவர்கள்தான் இன்றைய தினம் நமது சுதந்திரத்திற்கும் சீர்திருத்தத்திற்கும் விரோதிகளாய் இருக்கின்றார்கள். அந்த நிலைமைக்கு நீங்களும் வரக்கூடாது என்று நினைப்பீர்களேயானால் கண்டிப்பாய் அந்தக் கூட்டத்தில் சேராதீர்கள்.

[திருவாங்கூரில், 29–11–1925-ல் வைக்கம் சத்தியாக்கிரக வெற்றி விழாச் சொற்பொழிவு

—'குடிஅரசு' 6–12–1925]

என்னைப் பொறுத்தவரை இன்றைக்குச் சுமார் 35 வருடங்களுக்கு முன்பே நம் சாதிக்கு உள்ள இழிவுகளை—தடைகளை நீக்க, வைக்கத்தில் போராட்டம் நடத்தி, அதில் நான் தலைமை வகித்து, தெருவில் நம்மில் பெருவாரியான மக்கள் நடப்பதற்கும் ரோடில் நடந்து செல்வதற்கும் கூடாதபடி ஆயிரக்கணக்கான ஆண்டுகளாய் இருந்துவந்த தடையை ஒழித்துக்கட்டி உரிமைகளைப் பெற்றோம். அதெல்லாம் தெரிய வேண்டுமானால்—சுமார் 35 வருடத்துக்கு முந்தைய சங்கதியானபடியால்—இன்றைக்கு 45, 50 வயதானவர்களாக இருக்கவேண்டும். அதற்குக் குறைந்த இந்தக் காலத்து இளைஞர்களுக்கு அதெல்லாம் தெரியாது. அந்தக் கிளர்ச்சிகள் இல்லாதிருந்தால்—இன்று இந்த நாட்டிலேயே பெரும்பாலான நம்மவர்கள் பல தெருக்களில் நடக்கக்கூட உரிமையற்றவர்களாக இருப்போம்.

அப்போது இந்த நாட்டில் நிலைமை மிகமிக மோசமானதாக இருந்தது. இது, ஒரே பார்ப்பன—வைதிக—வருணாசிரம ஆதிக்க ஆட்சியாக இருந்தது. எங்கள் நாட்டில் 'பார்ப்பனரல்லாதார் இயக்கம்' (ஜஸ்டிஸ் கட்சி என்று அந்த இயக்கம் நடத்திய பத்திரிகைப் பெயரை வைத்து அழைத்தார்கள்) தோன்றிய பிறகுதான் அப்போதிருந்த பார்ப்பன ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடி, பார்ப்பனரல்லாத மக்களுக்குச் சில உரிமைகள் பெறப்பட்டன.

பார்ப்பனர்கள் 'பிராமண சமாஜம்', 'பிராமண மகாசபை' என்றெல்லாம் வைத்து வெளிப்படையாக நாம் பெற்ற எல்லா உரிமைகளையும் எதிர்த்துப் பலவற்றை ஒழித்துக் கட்டிவிட்டார்கள். பார்ப்பனன் தன்னை மேல்சாதி என்றும், தன்னை பிராமணன் என்றும் அழைத்துக்கொள்ளுவதிலும்; நாமும் அவனைப் பிராமணன் என்று சொல்லுவதிலும் அவனுக்குப் பெருமையுண்டு; ஆனால், நம்மை அவன் சூத்திரன் என்றழைப்பதிலும், சாஸ்திரமும் சட்டமும் நம்மைச் சூத்திரர் என்றே குறித்து வைத்துள்ளதிலும் நமக்கு எவ்வளவு இழிவும், வாழ்வுக்கேடும், முன்னேற்றத் தடையுமிருக்கின்றன? நாம் திராவிடன் அல்லது தமிழன் என்ற பெயரை வைத்துக்கொள்ளாமல் வேறு பெயரை வைத்துக் கொள்ள வேண்டுமென்றால்—'சூத்திரர் கழகம்' என்று தானே வைத்துக்கொள்ளவேண்டும்?

அதனால்தான், நம்மைக் குறிப்புக் காட்டுவதற்கு திராவிடர் என்ற இனப்பெயரை வைத்துத் 'திராவிடர் கழகம்' என்று—தென்னிந்தியர் கட்சி, ஜஸ்டிஸ்கட்சி என்பதற்குப் பதிலாகப் பெயர் மாற்றினோம்.

பார்ப்பனரல்லாதார் இயக்கம் என்றழைக்கப்பட்ட ஜஸ்டிஸ் கட்சிக்காரர்கள் முயற்சியாலேயே 1919, 1920 ஆம் வருடங்களில் நடந்த கிளர்ச்சிகளால் எங்கள் நாட்டிலே, ஏன்—தெலுங்கு, கன்னட, மலையாள நாட்டிலே வீதியிலே நடக்கிற உரிமை வந்துவிட்டது. இப்படி 'வீதியில் எல்லோரும் நடக்கலாம்; எல்லா ரோடுகளிலும் யார் வேண்டுமானாலும் நடக்கலாம்' என்ற நிலைமையை அப்போது அதிகாரத்தின் மூலம் அமுலுக்குக் கொண்டு வந்து விட்டார்கள்.

பார்ப்பனர்கள் தண்ணீர் மொண்டு உபயோகப்படுத்துகிற குளத்திலேயும், கிணற்றிலேயும் மற்ற தாழ்ந்த சாதிக்காரர்கள் எனப்படுகின்ற நாமும் தண்ணீர் எடுக்கலாம்; உபயோகப்படுத்தலாம் என்று அப்போதே ஜஸ்டிஸ் கட்சியினர் சட்டம் செய்தார்கள்.

இதெல்லாம் காந்திக்கு முன்பே நடந்த காரியங்களாகும். காங்கிரசும் காந்தியும் வந்துதான் இந்தக் காரியங்கள் நடந்தன என்பதெல்லாம் புரட்டும் பித்தலாட்டமுமாகும்.

அது மாத்திரமல்லாமல், எல்லா சாதிக்காரனும் பஞ்சாயத்து போர்டிற்கு, முனிசிபாலிடிக்கு, தாலுகா, ஜில்லா போர்டுகளுக்கு, சட்டசபைக்குப் போகலாம் என்று—நியமிக்க வேண்டும் என்றுகூட—காந்தி வருவதற்கு முன்பே—ஜஸ்டிஸ் கட்சியினர் திட்டம் செய்து விட்டனர்! பார்ப்பானும் சட்டசபைக்குள் நுழையலாம், பறையனும் போகலாம் என்பதெல்லாம் காந்தியாலான காரியம் அல்ல. அதற்கு முன்பே பறையர், சக்கிலி, பள்ளர் என்பவர்கள் சட்டசபையில் இருந்தார்கள் என்பதை நீங்கள் நன்றாகத் தெரிந்துகொள்ள வேண்டும்.

குளத்திலேயும், கிணற்றிலேயும் பார்ப்பானும் 'பறையனும்' 'சூத்திரனும்' ஒன்றாகத் தண்ணீர் எடுக்கக்கூடாது; கோயிலுக்குள் போகக்கூடாது; மேல்சாதிக்காரனுக்குத் தனிக்குளம்—கிணறு, தனிக்கோயில், மற்றசாதிக்காரனுக்குத் தனிக்குளம்—கிணறு, தனிக்கோயில் முதலியன கட்டித்தரவேண்டும் என்பதுதான் காந்தியின் திட்டம்; இவை எனக்குத் தெரியும்—யாராவது இல்லையென்று சொல்லட்டுமே பார்ப்போம்! சும்மா இன்றைக்குச் சொல்வார்கள், 'காந்திமகான் காட்டிய வழி', 'மகாத்மாவின் சேவை' என்றெல்லாம்! அது வெறும் புரட்டு.

நான் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக்குக் காரியதரிசியாக, தலைவனாக இருந்த போதுதான் ரூ 48,000 (நாற்பத்தெட்டாயிரம் ரூபாய்) தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக்கு 'கிராண்ட்' அனுப்பினார்கள். எதற்கு? 'பறையன், சக்கிலி, பள்ளனுக்கு—வேறு பள்ளிக் கூடம், வேறு கோயில் கட்டிக்கொடு; மற்ற சாதியானுக்கு, மேல்சாதிக்காரனுக்கென்று இருப்பதில் போய் ரகளை செய்யக்கூடாது' என்பதற்கு.

ஆனால், அந்தக் காலத்திலேயே ஜஸ்டிஸ் கட்சிக்காரர்கள் சட்டம் செய்துவிட்டார்கள்; ஒன்றாகப் படிக்கவேண்டும்; படிக்கிறதில் சாதி வித்தியாசம் காட்டக்கூடாது என்று. இன்றுங்கூட, அந்தச் சட்டப்படிக்கு எல்லாப் பள்ளிக்கூடத்திலும் அமுல் நடக்கிறது. பறையர்கள், பஞ்சமர்கள் எனப்படும் சாதிகளிலிருந்து குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள சில மாணவர்களைச் சேர்த்துக்கொண்டேயாக வேண்டும்; இல்லாவிட்டால் சர்க்காரின் கிராண்ட் அவைகளுக்குக் கிடைக்காது என்று திட்டம் செய்துவிட்டார்கள்.

கல்வி இன்ஸ்பெக்டர் வரும்போது "கீழ்சாதிப் பையன்கள் இல்லையா?" என்பார். "இல்லை; யாருமே வரவில்லை" என்றால், "இல்லாவிட்டால்—போய்ச் சேர்த்துக் கொண்டு வா" என்பார்.

அப்படி எங்கள் நாட்டிலே ஏராளமாக நடந்துகொண்டிருக்கிற நேரத்திலே உங்கள் நாட்டிலே கொடுமை; கீழ்ச் சாதியான் மேல் சாதியான் கண்ணில் தென்படக் கூடாது; அவனின் நிழல்கூட மேல் சாதிக்காரர்களின்மேல் படக்கூடாது என்ற நிலைமை அல்லவா இருந்தது! மற்றும், அவன் தன்னை இன்னான் என்று காட்டிக்கொள்ள மறைவிலிருந்தே ஒருவித சத்தம் போடவேண்டும் என்றும் திட்டமிருந்தது. நாராயண குருசாமி அவர்களின் போற்றத் தகுந்த தொண்டு காரணமாகத்தான் ஓரளவு கீழ்ச்சாதி மக்கள் உணர்வு பெற்று, வைக்கம் கிளர்ச்சி நடந்து, இதற்குப் பரிகாரம் கிடைத்து, நிலைமை மாறியது என்று சொல்லலாம். இதெல்லாம் கூட இன்றைக்கிருக்கும் சிறு பிள்ளைகளுக்குத் தெரியாது. 40, 45 வயதானவர்களுக்குத் தெரியும்.

வைக்கத்திலே நாங்கள் செய்ததும், அதனால் நாங்கள் பல தடவைகள் சிறை சென்றதும், அடிபட்டு அவமானமடைந்ததும்—இக் கொடுமைகளை நீக்கத்தானே?

அந்தக் காலத்தில் ஜெயிலில் வகுப்புக்கள் கிடையாது. ஒரே 'சி' வகுப்புதான்; ஆகவே, அப்போது சாதிக்கொடுமை யொழிய நாம் எப்படிப்பட்ட கொடுமைகளை அனுபவித்து இருந்தோம் என்பதும் இப்போதுள்ள உங்களில் பலருக்குத் தெரியாது. இது எப்படி மாறியது? இப்போது நம் நிலைமை எப்படி இருக்கிறது? என்பதையெல்லாம் நீங்கள் யோசித்தால்தான், 'இப்போது, நாங்கள், மெதுவாக இந்த சாதி ஒழிப்பு விஷயத்தில் போகிறோம்; இன்னும் வேகமாகப் போகவேண்டும்' என்று உங்களுக்குத் தெரியும்.

வைக்கத்திலே போராட்டம் ஆரம்பமானதே ஒரு சிறு நிகழ்ச்சியிலே யிருந்துதான். தோழர் மாதவன் என்ற பி.ஏ., பி.எல். படித்த ஒரு வக்கீல், ஒரு வழக்குக்காக ஆஜராகப் போனார். வழக்கு விசாரணைக்கான கோர்ட்—இடம்—இராஜாவுடைய கொட்டாரத்தில், (அரண்மனையில்) ஓரிடம். இராஜாவின் பிறந்த நாள் விழாவிற்கு அந்த இராஜாவுடைய கொட்டாரத்தில் (அரண்மனையில்) எல்லா பாகத்திலும் பந்தல் போடப்பட்டதில் கோர்ட் நடக்குமிடமும் பந்தலுக்குள்ளாகிவிட்டது. இந்த மாதவன் என்கிற வக்கீல் கேசில் ஆஜராக அங்கே போகவேண்டிய அவசியம் வந்தது. இராஜாவின் பிறந்த நாள் கொண்டாட்டத்திற்காக முறை ஜெபம் ஆரம்பமாயிற்று. இந்த வக்கீல் ஈழவ (நாடார்) சமுதாயத்தைச் சேர்ந்தவராதலால் அங்கே போகக்கூடாது என்று தடுத்தார்கள்.

அந்த நேரம், நான் தமிழ்நாட்டிலே தீண்டாமை விலக்கு என்பதில் தீவிரமாக இருந்து பிரச்சாரம் செய்துகொண்டிருந்த நேரம்! கலப்பு மணம், சம பந்தி போஜனம், எல்லோரும் பள்ளிக்கூடத்தில் படிக்க வேண்டும்—என்பன போன்ற கருத்துக்களில் தீவிர நம்பிக்கை கொண்டு ஜஸ்டிஸ் கட்சிக்காரர்களும் பிரச்சாரம் செய்துகொண்டிருந்தார்கள். இதைப் பார்த்துத்தான் காந்தியும் அதை நிர்மாணத் திட்டத்தில் சேர்த்துக்கொண்டார். அந்தக் காலத்தில் பார்ப்பனர்களை ஜஸ்டிஸ் கட்சிக்காரர் நல்லபடி வெளியாக்கி வெளுத்து வாங்குவார்கள்! ரோடிலே பார்ப்பனர்கள் அப்போது தைரியமாகத் தனியே நடக்கக்கூட முடியாது. டி. எம். நாயரும், தியாகராயரும், ஜஸ்டிஸ் இயக்கமும் ஜனங்களிடத்தில் தீவிரமாகப் பிரச்சாரம் செய்து, பார்ப்பனரல்லாதாரின் ஆதரவைத் திரட்டி ஆட்சியைப் பெற்று (ஜஸ்டிஸ் கட்சி) ஆண்டு வந்தது. பார்ப்பனர்கள் அவர்களைக் கண்டு நடுங்குவார்கள்! பார்ப்பனர்களுக்கு மேடையே இல்லாமல் போன காலம் அது!

அப்போதெல்லாம் பார்ப்பனர்கள், "எங்களுக்கு ஆட்சி வேண்டாம்; அதிகாரம் வேண்டாம்; சட்டசபை வேண்டாம்" என்று குள்ள நரித் தந்திரம் செய்து, மக்களை வசப்படுத்தச் சதி செய்துகொண்டிருந்த காலம். அந்தக் காலத்தில்தான் ஜஸ்டிஸ் கட்சிக்கு இருந்த செல்வாக்கைக் கண்டு வஞ்சக மனத்தோடு—பித்தலாட்டக் கருத்துக்கொண்ட காந்தி, 'தீண்டாமை விலக்கு' என்பதைத் தங்கள் திட்டத்தில் சேர்த்தார்.

அந்தக் காலத்தில் நான் ஜஸ்டிஸ் கட்சித் தலைவர்களுக்கு மிகவும் வேண்டியவனாகத்தா னிருந்தேன்; என்னை நிரம்பவும் மதிப்பார்கள். காரணம், நான் எல்லாப் பதவிகளிலும் இருந்து வந்தவன். திரு. இராசகோபாலாச்சாரியார் வந்து, "சமுதாய சீர்திருத்தம்தான் நமக்கு வேண்டும்; அது காந்தியால்தான் முடியும்" என்று சொல்லி, என்னைக் காந்திக்கு சிஷ்யனாக்கினார். நானும் சேர்மன் பதவியை ராஜிநாமாச் செய்து வெளியேறிக் காங்கிரசில் சேர்க்கப்பட்டுவிட்டேன். சென்ற பிறகு தமிழன் ஒருவருக்குக்கூடக் கிடைத்திராத—தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிச் செயலாளர், தலைவர் இடத்தில் என்னை உட்கார வைத்தார்கள்.

ஏனென்றால், திரு. வி. க. சாதாரணமாக ஒரு பள்ளிக்கூட ஆசிரியராக இருந்து வந்தவர். டாக்டர் வரதராஜுலு அவர்கள் 'பிரபஞ்சமித்திரன்' என்ற வாரப் பத்திரிகை

நடத்தி வந்தவர்; என்றாலும் பார்ப்பனர்கள் அவரை அவ்வளவு நம்பமாட்டார்கள். திடீரென அவர்களை யாரும் மாற்றிவிடலாம் என்று அவர்களுக்குத் தெரியும். வ. உ. சிதம்பரனார் ஒருவர்; அவர் பாவம்! எல்லாவற்றையும் விட்டு நொந்துபோய் கஸ்தூரிரங்க அய்யங்கார் தயவில் இருந்தவர். 'அதனால் சிறிது வசதியுள்ளவன்—பெரிய வியாபாரி—பல பதவிகளை விட்டு வந்தவன்' என்கிற முறையில் இராசகோபாலாச்சாரியார் என்னைத்தான் நம்பி மதிப்புக்கொடுத்து முன்னே வைப்பார், எதற்கும்!

உண்மையாகவே நானும் அதை நம்பி, அவரிடம் மிக விசுவாசமாய் இருந்து, பெரிய பிரச்சாரம் செய்து, பார்ப்பனருக்கு மேடை தேடிக் கொடுத்துவிட்டோம்! அப்போதே நான், 'நாம் தொட்டால் தீட்டுப்பட்டுவிடும் என்கிற சாமி நமக்கெதற்கு? அதையெடுத்து ரோடுக்கு ஜல்லி போடணும்; அல்லது ஆற்றிலே தூக்கிப் போட்டு வேட்டி துவைக்கப் போடணும்' என்று பேசுவேன். டாக்டர் வரதராஜுலு, கலியாணசுந்தரனார், சிதம்பரனார், நான் ஆகிய நால்வரில் பார்ப்பனர்கள் என்னைத்தான் முன்னே தள்ளுவார்கள்; என்னைப் பார்த்து பதவிவேட்டைக்காரன் என்று எவரும் சொல்லமுடியாதென்பதால்—பார்ப்பனர்களும் நான் என்ன சொன்னாலும் வாயை மூடிக்கொண்டிருப்பார்கள்.

சாதி, மதம், கடவுள் துறையில் இப்பொழுது சொல்லுவதெல்லாம் நான் அப்போதே சொல்லுவேன். நான் பேசி முடித்து வந்ததும் ஆச்சாரியார் சொல்லுவார், 'நாயக்கர்! உங்களுடையது ரொம்ப 'Strong dose'" என்று. நான் சொல்லுவேன், 'இந்த மடப் பசங்களுக்கு Strong என்ன? லேசு என்ன?' என்று சொல்லித் தப்பித்துக் கொள்வேன். அவரும் வேறுவழி இல்லாததால் சிரித்துக் கொள்ளுவார். அந்தமாதிரி முறையில் நாட்டைப் பார்ப்பனர் கைக்குப் போகும்படியான அளவுக்குப் பக்குவப் படுத்திவிட்டோம்.

இந்த மாதவன் வக்கீல் சங்கதியை வைத்தே திருவனந்தபுரத்து ஈழவ சமுதாயத் தலைவர்கள் சத்தியாக்கிரகம் ஆரம்பிக்க வேண்டுமென்று முடிவு செய்தார்கள். வக்கீல் மாதவன், டி. கே. மாதவன், கேரள காங்கிரஸ் கமிட்டித் தலைவர் கே. பி. கேசவமேனன் இவர்களெல்லோரும் இன்னும் சிலரும் சேர்ந்து, சத்தியாக்கிரகம் பற்றி முடிவு செய்தார்கள்; முறை ஜெபத்தன்று ஆரம்பிப்பது என்று முடிவு செய்து எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டார்கள். நான் அப்போது தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவராக இருக்கிறேன். எந்த ஊரில் சத்தியாக்கிரகத்தை ஆரம்பிக்கலாமென்பதற்கு, வைக்கத்தையே தேர்ந்தெடுத்தார்கள். ஏனென்றால், அந்த ஊரில்தான் ஊர் நடுவில் கோயிலும், அதன் 4 வாசலுக்கு எதிரிலும் 4 நேர் வீதிகள்—கோயில் மதில்கள்—சுற்றியும் தெருக்கள், பிரகாரம் எல்லாமும் இருக்கும்.

அந்த வீதிகளில் கீழ்ச் சாதிக்காரர்களான—'அவர்ணஸ்தர்கள்' எல்லோரும், அயித்தக்காரர்கள் எனப்படும் தீண்டாதாரும், நான்கு புறத்திலும் கோயில் வாசல்களுக்கு முன்னாலும் நடக்கக்கூடாது! மூன்று பர்லாங், நான்கு பர்லாங் தூரத்திலேயுள்ள ரோட்டில் கூட நடக்காமல், ஒருமைல் தூரம் வேறு ரோட்டில் சுற்றிக்கொண்டுதான் எதிர் ரோட்டிற்குச் செல்லவேண்டும். அயித்தக்காரர், தீண்டப்படாதவர்களைப் போலவேதான். ஈழவர்கள், ஆசாரிகள், வாணியர்கள், நெசவாளிகள் முதலியோரும் அந்த ரோட்டில் நடந்து போகக் கூடாது.

இதேமாதிரிதான் சுசீந்திரத்திலுள்ள கோயில்; மற்றும் அந்த இராஜ்யத்திலுள்ள மற்ற கோயில்கள், தெருக்கள் பக்கமும் நடக்க இவர்களுக்கு எந்தவிதமான உரிமையும் கிடையாது.

வைக்கத்தில் கோயிலுக்குப் பக்கமாக, வாசலுக்கு எதிராக அமைந்த தெருக்களில் தான் எல்லா முக்கிய ஆபீசுகளும், கோர்ட், போலீஸ் ஸ்டேஷன் முதலியனவும் இருந்தன.

ஏதாவது போலீஸ்காரர்களையோ, இன்ஸ்பெக்டர்களையோ, குமாஸ்தாக்களையோ மாற்றுவதானாலுங்கூட, கீழ்ச்சாதியார்களை அங்கு மாற்றி அனுப்பமாட்டார்கள். ஏனென்றால், அந்தப் போலீஸ் ஸ்டேஷன், கோர்ட்டுகள் இருக்கும் இடத்திற்குப் போகக் கீழ்ச் சாதியாருக்கு அனுமதி கிடையாது என்பதால்! முக்கியமான கடைகளும் அந்த வீதிகளிலானதால் கீழ்ச் சாதிக் கூலிகள் அங்கு செல்லமுடியாது.

சத்தியாக்கிரகம் ஆரம்பமானவுடன் வக்கீல் மாதவன், பாரிஸ்டர் கேசவமேனன், டி. கே. மாதவன், ஜார்ஜ் ஜோசப் முதலியவர்களைப்போல் சுமார் 19 பேரை இராஜா அரஸ்ட் செய்யும்படி உத்தரவிட்டு, அதன்படி அவர்கள் கைதுசெய்யப்பட்டார்கள்.

தினசரி ஒருவர் வீதம் கைது செய்து, அவர்களை மாத்திரம் தனிப்பட்ட முறையில் ஸ்பெஷல் கைதிகளாக நடத்த உத்தரவிட்டார்கள். அப்போது இராஜாவிடம் திரு. பிட் என்ற வெள்ளைக்காரர் 'போலீஸ் அய். ஜி'யாக இருந்தார். அவர் இந்த சத்தியாக் கிரகத்தை வெகு சாமர்த்தியமாகவும் ரொம்ப ஜாக்கிரதையாகவும் சமாளித்தார். இந்தப் பத்தொன்பது பேரைப் பிடித்து உள்ளே போட்டவுடன், அடுத்து சத்தியாக்கிரகத்தில் ஈடுபட யாரும் முன்வரவில்லை; ஆள் கிடைக்கவில்லை. அதோடு அது நின்றுவிடும்போல் தோன்றியது.

உடனே, எனக்கு பாரிஸ்டர் மேனன், ஜார்ஜ் ஜோசப், கேசவமேனன் ஆகிய மூவரும் சேர்ந்து கையெழுத்துப் போட்டு ஒரு கடிதம் எழுதி அனுப்பினார்கள். 'நீங்கள் வந்துதான் இதற்கு உயிர் கொடுக்கவேண்டும்; இல்லாவிட்டால் நாங்கள் மன்னிப்புக் கேட்டுக்கொள் வதைத் தவிர வேறு வழியில்லை; அப்படி மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுவதானால் எங்களுக்கொன்றும் நஷ்டம் இல்லையென்றாலும் பெரிய காரியம் கெட்டுப்போகுமே என்று கவலைப்படுகிறோம்; உடனே நீங்கள் வந்து பொறுப்பு ஏற்கவேண்டும்' என்று எழுதி அனுப்பினார்கள். எனக்கேன் எழுதி அனுப்பினார்களென்றால், தீண்டாமையைப்பற்றிப் பேசுவதில் நான் கெட்டிக்காரன்; கிளர்ச்சியிலும் நான் கெட்டிக்காரன் என்று எனக்குப் பெயர். அப்போது நான் சுற்றுப்பிரயாணத்திலிருந்தேன்.

ஈரோட்டிற் கெழுதப்பட்ட அந்தக் கடிதம் 'ரீடைரெக்ட்' செய்யப்பட்டு, மதுரை ஜில்லாவிலுள்ள பண்ணபுரம் என்ற ஒரு மலைப்பக்க கிராமத்தில், தமிழ்நாடு காங்கிரஸ் தலைவன் என்ற முறையில் நான் பேசிக்கொண்டிருந்தபோது என் கைக்குக் கிடைத்தது.

உடனே மீதிச் சுற்றுப்பயண நிகழ்ச்சிகளையெல்லாம் ஒத்திப்போட்டுவிட்டு, நேரே ஈரோட்டுக்குப் போனேன். வீட்டிற்கு வந்தவுடன் வைக்கத்திற்குப் போய் சத்தியாக் கிரகத்தை நடத்துவதென்று மிக்க மகிழ்ச்சியோடு மூட்டைகட்டிவிட்டேன். திரு. இராச கோபாலாச்சாரியார் அவர்களுக்கும் நான் வரும்வரை தலைமைப்பதவியை ஏற்றுக்கொள்ளும் படி ஒரு கடிதம் எழுதிவிட்டு, 'இந்த சந்தர்ப்பம் ஒரு நல்ல வாய்ப்பு, இதை விட்டால் இந்த மாதிரி அருமையான வேலைசெய்ய வேறு வாய்ப்புக் கிடைக்காது' என்று அவருக்கு எழுதி விட்டு, 2 பேரைக் கூட்டிக்கொண்டு வைக்கத்திற்கு வந்தேன்.

வைக்கம் போராட்டத்திற்காக நான் வருகிறேன் என்ற விஷயம் தெரிந்து கொண்டு, போலீஸ் கமிஷனர் திரு பிட், இன்னொரு அய்யர் (அவர் பெயர் சரியாய் ஞாபகத்திற்கு வரவில்லை; சுப்ரமணிய அய்யர் என்று நினைக்கிறேன்), ஒரு தாசில்தார் எல்லோரும் படகிலிருந்து நான் இறங்கும் போதே என்னை வரவேற்றார்கள். 'மகாராஜா அவர்கள், எங்களை அவர் சார்பில் வரவேற்று வேண்டிய எல்லா சவுகரியங்களையும் செய்து தரச் சொன்னார்' என்று சொல்லி எங்களை வரவேற்றார்கள். இது எனக்குப் பெரும் ஆச்சரியத்தைத் தந்தது என்றாலும், ஏன் மகாராஜா அப்படிச் செய்தாரென்றால், அந்த இராஜா டெல்லிக்குப் போவதற்கு ஈரோடு வழியாக வந்து ஒருநாள் ஈரோட்டிலே தங்கிவிட்டு அடுத்த நாள் டெல்லிக்கு இரயில் ஏறிப்போவது வழக்கம். அப்படி ஈரோட்டிலே தங்கும்

போது, அதற்குவேண்டிய வசதிகளை மகாராஜாவின் சிப்பந்திகள் தங்குமிடம் எங்கள் சத்திரத்திலும், இராஜா தங்குமிடம் எங்கள் பங்களாவிலுமாக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும். அப்படி 3 மாதத்திற்கு முன்வந்தபோது அவருடன் அந்தப் போலீஸ் அதிகாரியும் இன்னும் இராஜாவுக்கு உதவிக்குத் தேவையான எல்லா அதிகாரிகளும் வந்து போனதில், அவர்கள் ஈரோட்டில் என்னை நன்றாகத் தெரிந்து வைத்திருக்கிறவர்களாகவும், நானும் அவர்களை எங்கள் வீட்டிற்கு வந்தபோது சந்தித்துப் பேசியவர்களாகவும் இருந்திருக்கிறோம். இதனால் மகாராஜா சற்று மரியாதை காட்டினார்.

சத்தியாக்கிரகத்தைத் தொடர்ந்து நடத்திவந்த என்னை மகாராஜா சார்பில் அந்தப் பெரிய அதிகாரிகள் வரவேற்கிறார்கள் என்று கண்டதும்—அப் பக்கத்தியப் பாமர மக்களுக்கு ஒரே 'குஷாலாக' ஆகிவிட்டது. என்னை விருந்தினராக மகாராஜா கருதினாலுங்கூட, நான் பல இடங்களிலும் சென்று சத்தியாக்கிரகத்தைப் பற்றிப் பேசினேன்; காரசாரமாகப் பேசினேன்! 'கீழ்ச்சாதி மக்களான நாம் உள்ளே போவதால் தீட்டுப்பட்டுவிடும்—செத்துப் போகும் என்று சொல்லும் வைக்கத்தப்பனைப் போட்டு வேட்டி துவைக்கணும்' என்றெல்லாம் கடுமையாகப் பேசினேன். சுற்றுவட்டார மக்கள் ஆயிரக்கணக்கில் வைக்கம் வந்து கூடிவிட்டார்கள். அது இராஜாவுக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது; 5, 6 நாள் வரை சும்மாதான் இருந்தார். பலரும் போய் அவரிடத்தில் நான் பேசுவது குறித்து முறையிட்டார்கள்; பிறகு இராஜாவினால் சும்மாயிருக்க முடியவில்லை.

இப்படிச் சுமார் 10 நாட்களானவுடனேயே ஒரு போலீஸ் (சூபரின்டெண்டண்ட்) அதிகாரி, அவர் அய்யங்கார்; அவர் முயற்சியால் பி.சி. 26 படி தடையுத்தரவு போட்டார். அந்நாட்டில் 26 என்பது இப்போது இங்கே 144 தடையுத்தரவு போன்றது. நானும் சட்டம் மீறுவதைத் தவிர வேறு வழியில்லை என்று கண்டறிந்தேன். உடனே நான் சட்டத்தை மீறிப் பேசினேன். என்னுடன் (தற்போது காங்கிரசிலிருக்கும்) அய்யாமுத்து அவர்களும், மற்றுமிருவரும் சட்டம் மீறினோம்; எங்களைக் கைது செய்தார்கள்; எல்லோருக்கும் ஒரு மாதம் வெறுங் காவல் போட்டார்கள். என்னை அருவிக்குத்தி என்ற ஊரிலுள்ள ஜெயிலிலே வைத்தார்கள். அதற்குப் பிறகு என்னுடைய முதல் மனைவியார் திரு. நாகம்மையாரும், பிறகு நான் வெளியே வந்தவுடன்—எனது தங்கை எஸ். ஆர். கண்ணம்மாளும், மற்றும் சிலரும் வந்து நாடெல்லாம் சென்று பிரச்சாரம் செய்தார்கள். நான் விடுதலையாகி வந்து அதே மாதிரி மறுபடியும் திட்டம் போட்டேன்.

நான் வெளியே வருவதற்குள் இந்தக் கிளர்ச்சிக்கு ஏராளமான அளவில் ஆதரவு பெருகிவிட்டது; மளமளவென்று ஆட்களும் வந்து சேர ஆரம்பித்தனர்; ஏராளமான பேர்கள் பல பகுதியிலும் சென்று சுற்றுப்பயணம் செய்து தீவிரப் பிரச்சாரம் செய்தார்கள். எதிரிகளும் அடிதடி, காலித்தனம், கலவரங்கள் முதலியவற்றிலீடுபட்டு, இதையெப்படியாவது ஒடுக்கிவிட வேண்டுமென்று பலவித முயற்சிகளும் செய்து பார்த்தார்கள்.

ஆனால், போராட்டத்திற்கு மக்கள் ஆதரவு பெருகிக்கொண்டேயிருந்தது. வெளிநாடுகளிலிருந்து மலையாளிகளும் சாதிக்கொடுமை என்பதைக் கண்டு மனந்துடித்து, அதற்குத் தங்கள் எதிர்ப்பையும், சாதிக் கொடுமைகளை யெதிர்த்துச் செய்யப்படும் போராட்டத்திற்குத் தங்கள் ஆதரவையும் காட்டும்வண்ணம் தினம் ரூ. 50, 60, 100 என்று மணியார்டர் அனுப்பிக்கொண்டே யிருந்தார்கள்.

பெரியபந்தல் போட்டு தினசரி போராட்ட வீரர்கள் முகாம் செய்திருந்த வீட்டில் 200, 300 பேர் சாப்பிடுவார்கள்; தேங்காயும் மற்ற காய்கறிகளும் மலை மலையாகக் குவிந்து கிடக்கும்; பெரிய கலியாணவீடு மாதிரி காரியங்கள் நடைபெறும்.

திரு. இராசகோபாலாச்சாரியார் எனக்குக் கடிதம் எழுதினார்; 'நீ ஏன் நம் நாட்டை விட்டுவிட்டு இன்னொரு நாட்டிலே போய் ரகளை செய்கிறாய்? அது சரியல்ல;

அதை விட்டுவிட்டு நீ இங்குவந்து, நீ விட்டுச்சென்ற வேலைகளைக் கவனி' என்றெழுதினார். அப்போதிருந்த எஸ். சீனுவாசய்யங்காரும் இப்படித்தான் என்னை வைக்கத்திற்கு வந்தே அழைத்தார்; வரச் சொன்னார். அதேமாதிரி பத்திரிக்கையிலேயும் எழுதினார்கள். ஆனால், இதற்குள் சத்தியாக்கிரக ஆசிரமத்தில் 1000 பேருக்கு மேல் சேர்ந்தார்கள். தினமும் ஊர்முழுவதும் சத்தியாக்கிரக பஜனையும், தொண்டர்கள் ஊர்வலமும் நடந்து உணர்ச்சி வலுத்துவிட்டது.

பஞ்சாபில் சுவாமி சிரத்தானந்தா என்பவர் ஒரு 'அப்பீல்' போட்டார். அதன் பிரகாரம் பஞ்சாபிலேயிருந்து 20, 30 ஆட்களையும் இரண்டாயிரம் ரூபாயையும் கையிலெடுத்துக் கொண்டு நேரே வைக்கத்துக்கு வந்தார்கள்—தாங்கள் சாப்பாட்டுச் செலவை ஏற்றுக்கொள்ளும் ஆதரவு தருவதற்காக. உடனே இங்கிருந்த பார்ப்பனர்கள் எல்லாம், சீக்கியர்கள் வந்து இந்துமதத்திற்கு எதிராகப் போர் தொடுக்கிறார்கள் என்றெல்லாம் காந்திக்கு எழுதினார்கள்.

உடனே, அதன்பேரில் காந்தியார் துலுக்கன், கிறிஸ்தவன், சீக்கியன், பிறமதக்காரன் ஆகிய எவனும் இதில் கலந்துகொள்ளக் கூடாது என்று எழுதிவிட்டார்.

காந்தி எழுதினவுடனே, இதில் கலந்திருந்த சீக்கியன், சாயபு, கிறிஸ்தவன் எல்லாரும் போய்விட்டார்கள். அதுபோலவே, தீவிரமாக இதிலீடுபட்டு முன்னோடியாக உழைத்த, காலஞ்சென்ற ஜார்ஜ் ஜோசப்புக்கும் இராசகோபாலாச்சாரியார் கடிதம் எழுதினார். "இந்துமதச் சார்புள்ள இந்தக் காரியத்திலே, நீ சேர்ந்திருப்பது தப்பு" என்றார்.

அதை ஜார்ஜ் ஜோசப் அவர்கள் இலட்சியம் பண்ணாமல் திருப்பி எழுதினார். 'நான் என் சுயமரியாதையை விட்டுவிட்டு இருக்கமாட்டேன்; வேண்டுமானால் என்னை விலக்கிவிடுங்கள்' என்றார். தற்போதைய நாகர்கோயில் பயோனீர் டிரான்ஸ்போர்ட்டைச் சேர்ந்த சேவு என்பவரும், அண்மையில் காலஞ்சென்ற டாக்டர் எம். இ. நாயுடு (திரு. எம். எம். பெருமாள் நாயுடு இந்தப் பேச்சுக்கு முதல்நாள் இரவு நாகர்கோயிலில் காலமானார். பிறகு தந்தை பெரியார் சென்று துக்கம் விசாரித்தார்.) அவர்களும் என்னுடனேயே இருந்து தொடர்ந்து நடத்துவதென்று முடிவுசெய்தார்கள். அவர்கள், 'இதை விட்டுவிட்டுப் போகமாட்டோம்' என்று உறுதியாகத் தெரிவித்துவிட்டார்களென்றாலும், காந்தி சத்தியாக்கிரகத்திற்கு விரோதமாக எழுதிப் பணத்தையும் ஆளையும் தடுத்துவிடுவாரோ என்று சிலர் பயப்பட்டார்கள்.

அந்தச் சமயம் சுவாமி சிரத்தானந்தா அவர்கள் வைக்கம் வந்து, தான் பணத்திற்கு வகை செய்வதாகச் சொன்னார். பிறகு, காந்தி கட்டளைக்கு விரோதமாகவே சத்தியாக்கிரகம் நடந்துவந்தது.

இதற்கிடையிலே நடந்த ஒரு நிகழ்ச்சியும் கவனிக்கத்தக்கது. எங்கள் போராட்டத்திற்குப் பெரிய மரியாதையையும், செல்வாக்கையும் தேடிக் கொடுத்துவிட்டது—இந்த காந்தி கட்டளை. இந்தச் சமயத்தில் என்னை மறுபடியும் பிடித்து 6 மாத கடுங்காவல் விதித்து ஜெயிலில் போட்டுவிட்டார்கள். பிறகு, சத்தியாக்கிரகத்தை நிறுத்துவதற்காகவும், எங்களை அழிப்பதற்காகவும் என்று நான் ஜெயிலில் இருக்கிற சமயத்தில்—இந்த நம்பூதிரிப் பார்ப்பனர்களும் சில வைதீகர்களும் சேர்ந்துகொண்டு, 'சத்ருசங்கார யாகம்' ஒன்றை வெகு தடபுடலாக ஆயிரக் கணக்கான ரூபாய் செலவுசெய்து நடத்தினார்கள். ஒரு நாள் நடுச்சாமத்தில் தொடர்ந்து வேட்டுச்சத்தம் கேட்டது. நான் ஜெயிலில் விழித்துக் கொண்டிருந்தேன்; 'ரோந்து' வந்தவனைப் பார்த்துக் கேட்டேன்; "என்ன செய்தி? இப்படி வெடிச்சத்தம் கேட்கிறது? இந்தப் பக்கம் ஏதாவது பெரிய திருவிழா நடக்கிறதா?" என்று கேட்டேன். அதற்கவன் சொன்னான், 'மகாராஜாவுக்கு உடம்பு சவுக்கியமில்லாமலிருந்தது; மகாராஜா நேற்று இரவு திருநாடு எழுந்துவிட்டார்' என்று.

அதாவது, 'இராஜா செத்துப்போனார்' என்று சொன்னான்; அவ்வளவுதான். மகாராஜா செத்தார் என்றவுடன் எங்களுக்கு ஜெயிலுக்குள்ளாகவே ரொம்பப் பெருமை வந்துவிட்டது. அவர்கள் செய்த யாகம் அங்கேயே திரும்பி மகாராஜாவைக் கொன்று விட்டது என்றும், அந்த யாகம் சத்தியாக்கிரகக்காரர்களை ஒன்றும் செய்யமுடியவில்லை என்றும் மக்களிடையில் ஒரு தனி மதிப்பை ஏற்படுத்திவிட்டது. அதன்பிறகு, அரசாங்கம் எங்களையெல்லாம் இராஜாவின் கருமாதியை முன்னிட்டு விடுதலை செய்தது. எதிரிகள் குரலும் கொஞ்சம் கொஞ்சமாக இறங்கி வர ஆரம்பித்தது.

இராணியும் கூப்பிட்டு எங்களோடு ராஜி பண்ணி ஒரு உடன்பாட்டிற்கு வர விருப்பம் தெரிவித்தவுடன், அப்போது சமஸ்தானத்தில் திவானாக இருந்த ஒரு பார்ப்பனர் —என்னிடத்தில் இராணி நேரே பேசக்கூடாது என்று கருதி, திரு. இராசகோபாலாச் சாரியாருக்குக் கடிதம் எழுதினார். இராசகோபாலாச்சாரியாரும்,—எங்கே என்னிடத்தில் இராணி பேசி உடன்பாட்டிற்கு வந்தால் எனக்கு மரியாதையும் புகழும் வந்துவிடுமோ; அந்தமாதிரி வரக்கூடாதே என்று கருதி, அந்த வாய்ப்பைக் காந்தியாருக்கே அளித்து, காந்தியின் மூலமே காரியம் நடந்ததாக உலகுக்குக் காட்டவேண்டுமென்று தந்திரம் செய்து, காந்திக்குக் கடிதம் எழுதினார். எனக்கும் அதைப்பற்றிக் கவலையில்லை; எப்படியாவது காரியம் வெற்றியானால் போதும்; நமக்குப் பேரும் புகழும் வருவது முக்கியமல்ல என்ற கருத்தில் நானும் ஒப்புக்கொண்டேன்.

காந்தியும் புறப்பட்டு வந்தார். இராணியோடு காந்தி பேசினார். (இப்படி இந்த சத்தியாக்கிரகம் நல்லபடி வேரூன்றி வெற்றி நிலைமைக்கு வந்தவுடன் பார்ப்பனர்கள் காந்தியை இதில் புகுத்தினார்கள்.) இராணி காந்தியோடு பேசியபோது, இராணி தெரிவித் தார்கள், 'நாங்கள் ரோடுகளைத் திறந்துவிட்டுவிடுகிறோம். ஆனால், அதை விட்டவுடன் நாயக்கர் கோயிலுக்குள் போக உரிமை வேண்டும் என்று கேட்டு ரகளை செய்தால் என்ன செய்வது? அதுதான் தயங்குகிறோம்' என்றார்கள். உடனே, காந்தி 'டி.பி.'யில் தங்கி யிருந்த என்னிடத்தில் வந்து, இராணி சொன்னதைச் சொல்லி 'என்ன சொல்லுகிறாய்? இதை ஒப்புக்கொண்டு விடுவது நல்லது' என்றார். நான் சொன்னேன், "Public ரோடு திறந்துவிடுவது சரி! ஆனால், அதை வைத்துக்கொண்டு கோயிலைத் திறந்து விடும்படி கேட்கமாட்டோம் என்று நாம் எப்படி உறுதியளிப்பது? கோயில் பிரவேசம் என்பது காங்கிரசின் இலட்சியமாக இல்லாவிட்டாலும்—எனது இலட்சியம் அதுதானே, (கோயில் நுழைவு) அதை விட்டுக்கொடுக்க எப்படி முடியும்? வேண்டுமானால் இராணிக்கு ஒரு வார்த்தை சொல்லுங்கள்; 'இப்போதைக்கு அதுமாதிரி கிளர்ச்சி எதுவுமிருக்காது. கொஞ்சநாள் அதுபற்றி மக்களுக்கு விளங்கும்படி பிரச்சாரம் செய்து, கலவரத்திற்கு இடமிருக்காது என்று கண்டால்தான் கிளர்ச்சி ஆரம்பிக்கப்படலாம், என்று சொல்லுங்கள்" என்று சொன்னேன்.

அதை, காந்தி இராணியிடம் சொன்னவுடன் இராணியார், 'ரோட்டில் யார் வேண்டு மானாலும் நடந்து செல்லலாம்' என்று உத்தரவு போட்டு பொது ரோடாக ஆக்கினார்கள்.

அதன்பிறகு, சிலநாள் பொறுத்து ஈரோட்டிலே நான் தேவஸ்தானக் கமிட்டித் தலை வராக இருந்தபோது, நான் ஊரிலில்லாத ஒரு நாளில் தோழர்கள் அ. பொன்னம்பலமும், சா. குருசாமியும், இப்போது காங்கிரசுக்காரராக இருக்கும் ஈசுவரனும் எங்கள் ஆபீசில் வேலை செய்கிற இரு ஆதித் திராவிடரை விபூதி பூசச் சொல்லிப் பூசிக் கோயிலுள்ளே அழைத்துச் சென்றவுடன் பக்தர்களெல்லாம் சத்தம் போட்டு, கோயிலுக்குள்ளே இவர்கள் சென்றதும் இவர்களை உள்ளே விட்டு வெளிக் கதவுகளைப் பூட்டிவிட்டார்கள்; அது குறித்துக் 'கேசும்' போட்டார்கள்; 'சாமி தீட்டாய்ப் போச்சு' என்று வாதாடி தண்டிக்கச் செய்தார்கள். பிறகு அப்கோர்ட்டிலே அதற்கு எதிராகத் தீர்ப்புக் கிடைத்தது. (அது வெள்ளையராட்சிக்காலம்).

ஆனால், இந்தியாவிலேயே முதன் முதலில் சுசீந்திரம் கோயிலில்தான் கோயில் நுழைவுக்கென்று கிளர்ச்சி துவக்கப்பட்டது. அந்தக் காலத்திலே, கோட்டயத்திலே என் தலைமையில் ஒரு சுயமரியாதை மாநாடு போட்டார்கள். அதில் சாதியொழிப்பு சம்பந்தமாகவும், கோயில் நுழைவு உரிமை சம்பந்தமாகவும் பலவிதத் தீர்மானங்களையும் போட்டார்கள்.

அடுத்து, எர்ணாகுளத்தில் ஒரு மாநாடு என் தலைமையில் கூட்டப்பட்டது. அதில் சாதி ஒழிப்புக்காக, சாதியில்லாத மதமாகிய இஸ்லாம் மதத்தில் இந்துக்கள் சேர்ந்துவிடுவது என்று தீர்மானம் நிறைவேற்றக் கொண்டுவரப்பட்டது. சில செல்வருக்குட்பட்டவர்கள் கிறிஸ்தவ மதத்தில் சேருவது என்று தீர்மானம் கொண்டுவந்தார்கள். மாஜிமந்திரி அய்யப்பன் அவர்கள் இஸ்லாம் மதத்திற்குப் போய்ச் சேருவது என்பதைத் திருத்திப்போட வேண்டுமென்று சொல்லி ஏகமனதாய் நிறைவேறச் செய்தார்.

இஸ்லாத்தில் சேருவது என்ற தீர்மானம் வந்த அன்றைக்கே ஒரு அய்ம்பது பேர்களைப்போல் முஸ்லிம்களாகிவிட்டார்கள்; பிறகு வெளியிலும் பலர் மதம் மாறிவிட்டார்கள்; இது ஒரு பெரிய கலக்குக் கலக்கிவிட்டது.

இப்படி முஸ்லிமான ஒரு ஆள் (அவர் புலையர் வகுப்பைச் சேர்ந்தவர்) ஆலப்புழையில் ஒரு நாயர் கடையில் கடைமீது ஏறி சாமான் கேட்டார் என்பதை வைத்துக்கொண்டு—அவரை ஓங்கி அடித்தான். அவர் சத்தம் போடவே நாயர்களும் ஓடிவந்தார்கள், சாயபுகளும் ஓடிவந்தார்கள். பலமான அடிதடி சண்டை நடந்தது; ஒருவர் செத்துவிட்டார். இந்த மாதிரி இந்து–முஸ்லீம் கலவரம் வலுத்தவுடன், மேலே எல்லாம் தந்தி கொடுத்தார்கள். அப்போது திவானாக இருந்த சர். சி. பி. இராமசாமி அய்யர், இதை இந்து–முஸ்லீம் சச்சரவு என்று சொல்லிக்கொள்ளாமல், ‘முதலாளி–தொழிலாளி சண்டை’ என்று சொல்லி அடக்கிவிட்டார்.

பிறகு, இராஜாவுக்கு சி. பி. சொன்னார், ‘புலையர்களெல்லோரும் துலுக்கர்களாக மாறிக்கொண்டிருக்கிறார்கள். இதற்கு மருந்து, கோயிலைத் திறந்துவிட்டுவிடவேண்டியதுதான்’ என்று கூறினார். அப்போது ஆயுசு ஓமம் நடந்துகொண்டிருக்கிறது. இராஜாவும் இதைக் கேட்டு ஒப்புக்கொண்டு, பிறந்த நாளுக்கு ஏதாவது நல்ல செய்தி வருடா வருடம் சொல்லுவதில்—அந்த வருடத்து இராஜா பிறந்தநாள் செய்தியாக, ‘கோயில் எல்லா இந்துக்களுக்கும் திறந்து விடப்படும்’ என்று அறிவித்தார். இப்படித்தான் அங்கு ஆலயப்பிரவேச உரிமை கிடைத்தது.

இதற்கப்புறம்தான் ஆச்சாரியார் முழங்கினார்; அதற்குப் பிறகுதான் காந்தியாரும் மற்றவர்களும் மாறினார்கள். இந்தக் காரியமெல்லாம் காந்தியால்தான் நடந்தது என்பதெல்லாம் வெறும் பித்தலாட்டமாகும். காந்தி தீண்டப்படாத மக்களுக்கும், ஆதித் திராவிட மக்களுக்கும் ஒடிந்த ஊசியளவுக்குக்கூட அவர்களது இழிவு நீக்கப் பாடுபடவில்லை என்பது அம்பேத்கார் எழுதியுள்ள ‘காங்கிரசும்–காந்தியும், தீண்டாதவர்களுக்குச் செய்தது என்ன?’ (What Congress and Gandhi have done to Untouchables) என்ற புத்தகத்தைப் பார்த்தால் தெரியும்.

[கன்னியாகுமரி மாவட்டச் சுற்றுப்பயணம் செய்தபோது மார்த்தாண்டம், இரணியல் ஆகிய ஊர்களில் ஆற்றிய சொற்பொழிவுகள்—‘விடுதலை’–8, 9–1–1959]

## 14. பழங்குடி மக்கள் இழிவுக்குக் காரணங்கள்

மக்களில் 100க்கு 90 பேர் தாழ்த்தப்பட்ட மக்கள். அவர்களுக்கு சுயராஜ்யம் பற்றியோ, அரசியல் பற்றியோ, ‘கான்ஸ்டிடியூஷன்’ பற்றியோ பேசினால் புரியாது. மேலும், அது தற்காலத்திற்குத் தேவையற்ற சங்கதி என்பதுதான் என் கருத்து.

உங்களுக்குத் தனி உடைமையோ, பொது உடைமையோ என்பது பற்றிக்கூட எனக்குக் கவலையில்லை. மானத்தைக் கவனித்துக்கொண்டு உடைமை பற்றிக் கவனிக்கலாம். ஏன்?

முதலில், மனிதன் மனிதனாக வேண்டும்; இரண்டாவது, அவனுக்கு அறிவு வரவேண்டும். கண்டதுக்கெல்லாம் குனிந்து கும்பிடு போடும் தன்மையும், கண்டதை-கேட்டதை எல்லாம் கண்மூடித்தனமாக நம்பிவிடும் தன்மையும், தண்டவாளத்தின் மீது ரயில் ஓடினால் அதுவும் ஒரு பகவான் அவதாரமோ என்று நினைத்து அதற்குத் தேங்காய் பழம் நிவேதனம் செய்வது போன்ற தன்மையும், மக்களை விட்டகலவேண்டும். நம்மைத் தாழ்வு படுத்துவது எதுவும் நம் முன் நிற்கக் கூடாது. ஆகவே, முதலாவதாக உங்கள் போக்கை—முயற்சியைத் தற்செயலாய்ப் பணக்காரர்களான மிராசுதாரன் பக்கம் திருப்பாமல், அறிவுப்பக்கம் திருப்புங்கள்.

மிராசுதாரன் மீது கோபித்துக் கொள்ளுவதாலோ, அல்லது அவனுக்கு ஆதரவாயிருந்துவரும் பார்ப்பனரின் மீது கோபித்துக் கொள்ளுவதாலோ யாதொரு பயனுமில்லை. பாம்பு கடித்தால் விஷமேறுகிறதே என்று, எவனாவது பாம்பின்மீது கோபித்துக்கொண்டு சண்டைக்குப் போவானா? நெருப்புப் பட்டால் சுடுகிறது என்று, நெருப்புடன் சண்டைக்கு நிற்பானா? மலம் நாற்றம் அடிக்கிறதே என்று, எவனாவது மலத்தின்மீது கோபித்துக் கொள்வானா? பாம்பு கடித்தால் விஷம் ஏறுவதும்; நெருப்புப் பட்டால் கொப்பளிப்பதும்; மலமிருந்தால் துர்நாற்றம் வீசுவதும் இயற்கை. நாம்தான் அவற்றால் கேடு வராமல் பார்த்துக்கொண்டிருக்க வேண்டுமே யொழிய, அவை ஒழியப் பாடுபட வேண்டுமே யொழிய, அவைகளின் இயற்கைக் குணத்தை மாற்ற நம்மால் ஆகாது. நீங்கள் மிராசுதாரன்மீது சண்டைக்குப் போனால் அவனைக் காப்பாற்றப் போலீஸ் படையும், அதற்கான சட்டமும், அவற்றைப் பிரயோகிக்க சர்க்கார் சிப்பந்திகளும் தயாராக இருக்கின்றனர். மிராசுதாரனிடம்தான்—அதாவது நீங்கள் போராடும் மிராசுதாரின் வோட்டுப் பெற்றுத்தான் ஆட்சியாளர்கள் பதவிக்கு வருகிறார்கள். இன்னமும் சொல்லுவேன்அவர்கள்தான் ஆட்சியாளர்கள். ஆகவே, அவனைத்தான் ஆட்சியாளர்கள் காப்பாற்றியாக வேண்டும். அதுதான் இயற்கையுங்கூட.

அப்படியிருக்க, சர்க்கார் பாதுகாப்புக்குட்பட்ட இந்த மிராசுதாரன்மீது கோபிப்பதிலோ, போர் தொடுப்பதிலோ பயன் என்ன? அவனைப் போல் நீங்களும் வோட்டுரிமை பெறவேண்டும்; அவனைப்போல் நீங்களும் ஆட்சியாளராக வேண்டும்; உங்கள் தயவு சர்க்காருக்கு வேண்டும். அப்புறம் ஆட்சி உங்களுக்கு அடக்கமாகிறதா, இல்லையா பாருங்கள். ஆட்சிபீடம் அவர்கள் (மிராசுதார்கள்) பக்கம் இருக்கும் வரைக்கும் உங்கள் கிளர்ச்சி வெற்றி பெறாது; மிராசுதாரர்களை ஆட்சியாளர்கள் காப்பாற்றியே தீருவார்கள். காரணம், அவர்கள் வரி கொடுப்பது அதற்குத்தான்.

உங்கள் கவனத்தை—முயற்சியை ஆட்சியாளர் பக்கம் திருப்புங்கள்! உங்களுக்கு எது நன்மையானது? எது தீமையானது? என்று முதலில் சிந்தித்துத் தெளிவு அடையுங்கள்; உங்கள் எதிரி யார் என்று கண்டுபிடியுங்கள். எப்படி முயற்சித்தால் நல்ல பயன் ஏற்படும் என்பதையும் நீங்களே சிந்தித்துப் பாருங்கள். சிந்திப்பதில் கெடுதியில்லை.

இங்குள்ள பெரும்பாலான மக்கள் ஆதித் திராவிடர்கள். வெள்ளையாகச் சொல்ல வேண்டுமானால் 'பறையர்கள்', 'கீழ்சாதி மக்கள்' 'தீண்டத் தகாதவர்கள்' சாஸ்திரப்படி 'சண்டாளர்கள்'; மற்ற ஒரு கூட்டம் பாட்டாளி மக்கள்–பெரிதும் (சூத்திரர்கள்)—அதாவது மேல்சாதியானின்—பார்ப்பனரின் அடிமை, தாசி மக்கள் என்பவர்கள். இது, என் கருத்துப்படி—சாஸ்திரப்படியுங்கூட. இப்படிப்பட்ட சமுதாய அமைப்பிலும், அரசாட்சியிலும்தான் நாம் இருந்து கொண்டிருக்கிறோம். அதற்கேற்ற பயன்தானே கிடைக்கும்? நாம் சமுதாயத்தில் இப்படி இழிவு படுத்தப்பட்டிருக்கக் காரணம் என்ன? நம் சமுதாயம்

ஏன் இப்படி பிரிக்கப்பட்டிருக்கவேண்டும்? நாம் என்ன தப்பு செய்தோம்? ஏன் நாம் தாழ்மைப்படுத்தப்பட்டோம்? நாம் ஏன் உழைத்தும் உண்டிக்குத் திண்டாட வேண்டும்? நம்மால் உழுது விதைத்து அறுக்கப்பட்ட பண்டத்திற்கும், நாம் ஏன் பாடுபடாத சோம்பேறியைக் கெஞ்ச வேண்டும்? நமது உழைப்பின் பலன், ஏன் ஒரு சோம்பேறி மிராசுதாரனுக்கு போய்ச்சேரவேண்டும்? உழாத, விதைக்காத ஒரு சோம்பேறிப் பார்ப்பான் ஏன் உண்டு கொழுக்க வேண்டும்? என்பவையான இவற்றையெல்லாம் நீங்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

சிந்திப்பதில் கெடுதியில்லை; சிந்திப்பதால் நீங்கள் பாவியாகிவிடமாட்டீர்கள்; சிந்தித்தால்தான் உங்கள் இழிவினுடைய—துன்பத்தினுடைய அஸ்திவாரம், ஆணிவேர் எங்கிருக்கின்றது என்று உங்களுக்குப் புரியும். ஆணிவேரிருக்க, அதன் கிளைகளை வெட்டுவதால் பயனில்லை. வெட்டவெட்ட அது தழைக்குமேயொழிய—அடிமரம் உரம் கொள்ளுமேயொழிய—அது அழியாது. ஆகவே, அதன் ஆணிவேர் எங்கிருக்கிறது என்று பாருங்கள். இந்த ஏற்பாட்டுக்கு மூலகாரணம் எது என்று சிந்தித்துப் பாருங்கள். நமக்குக் 'கடவுள் அறிவு கொடுத்திருப்பதாகச்' சொல்லப்படுவது சிந்திக்கத்தான்; இருப்பதை, கிடைத்ததைக் கொண்டு திருப்தி அடைந்து அடுத்த ஜென்மத்தை நோக்க அல்ல. இருப்பதைக்கொண்டு மேலும் 'இந்த ஜென்மத்திலேயே' முன்னேற்றம் அடையத்தான். ஆகவே 'அவர் (கடவுள்) பார்த்து இடணும், நமது குறை தீரணும்' என்று நீங்கள் நினைக்காதீர்கள். 'அவர்' இட்டது அறிவு. அதை எல்லோருக்கும் சமமாகவேதான் 'அவர்' அளித்துவிட்டார். 'அவர்' கொடுத்துள்ள அறிவை நீங்கள் பயன்படுத்தவில்லை. ஆகவே, அடிமைகளாக உழலுகிறீர்கள். அறிவைப் பயன்படுத்துகிறான் பார்ப்பான். அதனால் அவன் உங்களை அடிமையாக்கிக்கொண்டான். ஆதலின், முதலில் உங்கள் அறிவைப் பயன்படுத்திக்கொள்ளுங்கள். அதுதான் உங்கள் குறைதீர நல்ல மருந்து.

ஆட்சியாளருக்கு உங்களை அறிவுள்ள மக்களாக்குவது பற்றிக் கவலை இருக்காது; அது தேவையும் அல்ல, அவர்களின் சுயநலத்துக்கு. அதனால்தான் 'நாட்டுக்கு நல்ல துரை வந்தால், தோட்டிக்குப் புல் சுமக்கும் வேலை போகாது' என்ற பழமொழியும் நடப்பும் இப்போது நிலவிவருகிறது. பின் இந் நிலை எப்படித்தான் போவது—போகும்? இதைத்தான் நீங்கள் முதலில் சிந்திக்க வேண்டும்.

"நான் ஏன் கக்கூஸ் எடுக்கவேண்டும்—நீ ஏன் மலஜல உபாதைக்குப் போக வேண்டும்? நான் ஏன் உழைக்கவேண்டும்—நீ ஏன் அதன் பயனை அடையவேண்டும்? நீ ஏன் உடுக்கவேண்டும்—நான் ஏன் அறுப்பு அறுக்கவேண்டும்? நீ ஏன் கொண்டுபோய்க் கொட்டிக் கொள்ளவேண்டும்?—என்று நீங்கள் துணிந்து கேட்கவேண்டும். இதை அனுமதிக்கும் கடவுளை வெறுக்கவேண்டும்; உடைத்து ரோட்டுக்கு ஜல்லி போட வேண்டும். இந்த உரிமையை மறுக்கும் சட்டத்தையும், சாஸ்திரத்தையும் நெருப்பிலிட்டுப் பொசுக்கவேண்டும். இந்த உரிமையை மறுக்கும் மதத்தை மடியச் செய்யவேண்டும். மனதில் நீங்கள் உறுதிகொள்ள வேண்டும்; இதைச் சாதிக்க மன உறுதியின்றேல் காரியம் கைகூடாது. உறுதி இருந்தாலோ அது உங்களை வெற்றிப் பாதையில் தள்ளிக் கொண்டு போகும். உறுதி உள்ளவனை—சாமியோ, பூதமோ கூட பயமுறுத்தாது. அதற்கு அதிகாரமும் இல்லை—உன்னுடைய அறிவின் முன்னேற்றத்தைத் தடுப்பதற்கு. எங்களால் இதை ஜம்பமாக, ஏன்—ஆணவமாகக் கூடக் கூறமுடியும்.

தயை, தாட்சணியமின்றி—அறிவு, அதனால் ஏற்பட்ட தெளிவு, அத் தெளிவால் ஏற்பட்ட உறுதி இவைகளைத் தவிர எதையும் நாங்கள் எதிர்த்து வெறுத்து ஒதுக்கினோம். எங்கள் அறிவொன்றையே நம்பி, மனோ உறுதியோடு, மக்களை எதிர்த்து 1926-ல் எங்கள் காரியத்தைத் துவக்கினோம். இன்று எப்படி ஊர்ஊராய் அலைந்துதிரிந்து பிரச்சாரம் செய்கிறோமோ, அப்படித்தான், அன்றும் அலைந்து திரிந்தோம்.

அன்று சொன்னோம்—அனைவரும் கோயிலுக்குள் அனுமதிக்கப்பட வேண்டும் என்று; அன்று சொன்னோம்—அனைவரையும் அனுமதிக்கமுடியாத அந்தக் கடவுள் அழியட்டும் என்று. அன்று எங்களுக்குக் கிடைத்தது—144 தடை உத்தரவு; நாங்கள் செல்லும் ஊரெல்லாம், கோயில்களுக்குப் போலீஸ் காவல்—எங்கு ஆதித் திராவிடரைக் கோயிலுக்கு அழைத்துச் சென்றுவிடுகிறோமோ என்று. போகிற வழியெல்லாம் அயோக்கியப் பார்ப்பனரின், மதவெறியனின், வேஷக்காரனின் அடியாட்கள் தொல்லை. போலீஸ் பாதுகாப்பில் நாங்கள் ஊர்விட்டு மறு ஊர் போகவேண்டிய நிலை. அவ்வளவு எதிர்ப்புக் கிடையேயும் மாதத்திற்கு இரண்டு மாநாடுகள் நடக்கும். எதிர்ப்புக்கு அஞ்சிவிட்டோமா அன்று? அடித்துக் கொண்டேதான் இருந்தோம், எங்கள் அறிவுத் தப்பட்டையை. அடிமேல் அடி அடிக்க அம்மி—ஒன்று, நகரட்டும் அல்லது உடையட்டும் என்றுதான் அறிவுரை கூறிவந்தோம்.

அரசாங்கம் அறிவுபெறுவதாகக் காணோம். அதற்கு ஒரு படிமேலே சென்றோம். பறையனும் பள்ளனும் பார்க்கக் கூடாத சாமி இருந்தென்ன, போயென்ன? அதை எடுத்தெறியுங்கள் என்று சொன்னோம். அப்படித் தீண்டத்தகாதவராக, ஒரு பெரும் பான்மைக் கூட்டத்தை வைத்திருக்கும் மதத்தைவிட்டு வெளியேறுங்கள் என்று பறையருக் கும் பள்ளருக்கும் கூறினோம். அவர்கள் உள்ளத்திலே மதம் மாறும் துணிச்சல் ஏற்பட்டதும்—எந்தப் பார்ப்பான், எந்தப் போலீஸ்காரன், எந்த மாஜிஸ்ட்ரேட், எந்தப் பண்டாரசந்நிதி எங்கள் முயற்சிக்கு எதிர்ப்பாய் இருந்தார்களோ—அவர்களே பிறகு அதே பறையனையும், பள்ளனையும் மேளதாளத்தோடு கோயிலுக்குள் அழைத்துச் செல்வதைப் பார்த்தோம்—பார்க்கிறோம். உள்ளேவிட்டால் சாமி செத்துப்போகும், ஓடிப்போகும் என்று கூறினவனே—இன்று, அதே பறையரையும், பள்ளரையும் கோயிலுக்குள் கூட்டிக் கொண்டு போகிறானா, இல்லையா? இதோடு திருப்தியடைந்துவிடலாமா, நீங்கள்? எதுவரை கூட்டிக்கொண்டு போகிறான்? அதனால் உங்களுக்கென்ன இலாபம்? உங்களுக்கு முன்னமேயே, பல ஆயிரம் ஆண்டுகளாக, சூத்திரர் என்பவர்கள் அந்த 'சுங்கக் கேட்டு' வரை சென்று முடிச்சவிழ்த்துக் கொடுத்துவிட்டு வந்துகொண்டிருக்கிறோமே? நாங்கள் என்ன பயன்கண்டோம், அதனால்? எங்கள் சூத்திரப் பட்டம் போயிற்றா?

அப்படியிருக்க, கோயில் நுழைவால் உங்கள் பாமரத்தன்மை, இழிதன்மை போய்விடுமா? ஆகவே, உறுதியோடு கேளுங்கள்: அவன்மட்டுமேன், அந்தச் சாமிக்குப் பூசை செய்துவரவேண்டும்? நான்மட்டும் ஏன் அவிழ்த்துக் கொடுத்துவிட்டு அப்பால் வரவேண்டும்? கோயில் கட்டிடத்துக்குள் வந்தால் சாமி சாகவில்லையே—இனி அந்தக் கர்ப்ப அறைக்குள் போனால்மட்டும் எப்படிச் சாகும்—என்று; அப்படிக் கிளர்ச்சி செய்தால், ஒன்று—அந்தச் சாமி மடிந்துபோகும் அல்லது பாரபட்சமின்றி, யோக்கியமாக நடந்து கொள்ள ஆரம்பிக்கும். 'இந்த மக்களுக்கு ஓரளவுக்குத்தான் புத்தி வந்துள்ளது. ஆகவே, இந்த அளவுவரைக்கும்தான் அவர்களை அனுமதிக்கவேண்டும்' என்று, அந்தப் பார்ப்பான் அந்த 'சுங்ககேட்' வரைதான் இன்று உங்களை அனுமதிக்கச் சம்மதிக்கிறான். இவர்கள் மேலும் தெளிவடைந்து 'நாம்தான் ஏன் கொடுக்கவேண்டும்? இவன் ஏன் வாங்கிச் செருகிக் கொள்ளவேண்டும்?' என்று கேட்க ஆரம்பித்தால், அப்புறம் அந்த இடத்தை அவனே காலி செய்துவிடுவான். அவனுக்கு இலாபம் இல்லையானால் அவனே அதை எடுத்து எறிய ஆரம்பித்துவிடுவான்; அவனே இதைக் 'கல்' என்று சொல்லிவிடுவான். உங்கள் அறிவு கொண்டு சிந்தித்துப் பாருங்கள், இது உண்மையா, அல்லவா என்று!

ஒரு இடத்தில் பித்தலாட்டத்திற்கு இடம் கொடுத்துவிட்டால் மற்ற இடத்திலும் பித்தலாட்டம் செய்து ஏமாற்றத்தான் முயற்சிப்பார்கள். அதேபோல், ஓரிடத்தில் பித்த லாட்டம் இருப்பதைத் தெரிந்துகொண்டுவிட்டால் மற்ற இடங்களிலுள்ள பித்தலாட்டங்களும் நமக்குத் தெளிவாகப் புலனாகும். எல்லா மனிதர்களும் கடவுள் ஒருவராலேயே படைக்கப்

பட்டவர்களானால்—எல்லோரையும் கடவுள் ஒன்றாகவே நடத்துகிறார் என்றால்—அவர்களில் எப்படி ஏழை—பணக்காரன்; கீழ்சாதி—மேல்சாதி இருக்கமுடியும்? 'எங்கும் எல்லாமாய்', 'எல்லாவற்றிற்கும் ஏகமாய்' இருக்கும் கடவுள், எப்படிப் பாரபட்ச முடையவராக இருக்கமுடியும்? ஆகவே—ஒன்று, கடவுளென்பது பொய்யாக இருக்க வேண்டும்; அல்லது கடவுளைப்பற்றி நாம் கொண்டிருக்கும் கருத்து தவறானதாக இருக்க வேண்டும். ஆகவே, மனிதன் மேலும் தெளிவு பெறவேண்டும். ஒருவன் உயர்வு, ஒருவன் தாழ்வு; ஒருவன் காலை ஒருவன் கழுவிக்குடிப்பது என்பது முட்டாள்தனம், அறியாமை. அவனுக்கும் இவனுக்கும்—எவனுக்கும் பிறவித் தத்துவத்தில் எவ்வித பேதமுமில்லை. இருவருக்கும் நெருப்பு சுடத்தான் செய்யும்; இருவருக்கும் உப்பு கரிக்கத்தான் செய்யும்; இருவருக்கும் வேம்பு கசக்கத்தான் செய்யும். அப்படியிருந்தும், பிறவியின் பெயரால் சாதி வித்தியாசம் இருந்துவரக் காரணம் என்ன என்பதை உங்கள் சொந்த புத்தியைக் கொண்டு சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

மகாத்மா கூறுகிறார் என்றோ, மகான் கூறுகிறார் என்றோ, சாஸ்திரம் கூறுகிறது என்றோ, கடவுள்கள் சொன்னார்கள் என்றோ நீங்கள் ஏமாந்து போய்விடக்கூடாது. அந்த மகான்களும் அவர்களின் சாஸ்திர புராணங்களும் அந்தக் காலத்திற்குத் தேவையாயிருந் திருக்கலாம். அவற்றை நம்பவேண்டுமென்ற கட்டாயமும் அந்தக் கால மக்களுக்குப் பொருத்தமாய் இருந்திருக்கலாம். ஆனால், இந்தக் காலத்திற்கு அவை பயன்படக் கூடியவை அல்ல. அவற்றை நம்பி அவற்றின்படி நடப்பது முட்டாள்தனமாகும். அப்படிச் செய்வது, போனவருடத்திய 'ரயில்வே கைடை'—கால அட்டவணையைக் கொண்டு—இந்த வருடம் ரயிலுக்குப் போவதை ஒக்கும். அப்படிச் சென்றால், எங்காவது ரயில் கிடைக்குமா? அதேபோல், என்றோ செல்லுபடியாய்விட்ட அவற்றை நம்பினால், ஏதாவது பலன் இன்று கிடைக்குமா? அந்த சாஸ்திர புராணங்களுக்குக் கட்டுப்பட்டு 'நீ என்னாங்கோ எஜமானே' என்றால், அவன் 'ஏண்டா பறப்பயலே' என்கிறான். அதை விட்டு, 'நான் ஏன் சூத்திரன், நீ ஏன் பிராமணன்?' என்று நாங்கள் இன்று கேட்டு வருவதுபோல், நீங்களும் 'நான் ஏன் பறையன், நீ ஏன் எஜமான்?' என்று கேளுங்கள். அவன் வழிக்கு வருகிறானா இல்லையா, பாருங்கள். பழைமை ஆதாரம் என்பதைத் தவிர்த்து அறிவினால் சிந்தித்துப் பாருங்கள்.

பழைமைகளில் எது 'மாற்றமடையாமல்' இருந்து வருகிறது? பண்டைக்காலத்தில் நமது பெண்களுக்கு எங்காவது ரவிக்கை உண்டா? அவர்கள் மார்புக்குச் சேலையாவது போட்டு மூடிக்கொள்ள முடியுமா? அப்படி மூடினால், அவர்கள் தண்டிக்கப்பட்ட காலம் ஒன்று இருந்து வந்தது தெரியுமா உங்களுக்கு? இப்போது காலம் அப்படியேவா இருக்கிறது? இன்று அவர்கள் உள்ளே ஒரு லகான், அதற்குமேலே ஒருபாடி, அல்லது அதற் கும் மேலே ஒரு ரவிக்கை, இத்தனை போட்டுக் கொள்ளவில்லையா? இன்று எங்கே போய் விட்டது அந்த ஆசாரம்? அப்போது 4 முழக் கந்தைதான் இடுப்பிலே சுற்றிக்கொண்டு திரிந்தார்கள். இன்று அவர்களுக்கே 12 முழம் சேலை தேவையாயிருக்கிறதே! அதே '4 முழக் காலத்தில்' ராட்டினம் இருந்தால் போதும்; இன்று 12, 16 முழக் காலத்திலும் அதே ராட்டினம் இருக்கவேண்டுமென்றால், அது அறிவுடைமை ஆகுமா? அவ்வப்போதைய ஆசா பாசத்திற்கேற்ப, தேவைக்கேற்ப அந்தந்தச் சாதனங்களும் மாற்றமடைந்து வருவதுதான் இயற்கை. ஆகவே, காலத்திற்கேற்ப நாமும் நம் பழைய எண்ணங்களை விட்டுவிட வேண்டும்.

இன்று ஆறாம் ஜார்ஜ் மன்னருக்கு இதுவரை இருந்து வந்த சக்கரவர்த்திப் பட்டத்தை எடுத்துவிட்டார்களா, இல்லையா? அரசர் கடவுளின் பிரதிநிதி என்ற பழைய கொள்கை இன்று என்னவாயிற்று? கோவணங் கட்டத்தெரியாத குழந்தைப் பிள்ளை களெல்லாம் இன்று, 'அவன் ஏன் பணக்காரன்', 'இவன் ஏன் மிராசுதாரன்' என்று கேட்க

ஆரம்பித்துவிட்டார்களா இல்லையா? அதேபோல், தாழ்த்தப்பட்ட மக்கள் சிந்திக்க வேண்டும்—நாம் எதனால் தாழ்த்தப்பட்டிருக்கிறோம் என்று. அப்போது தெரியும்—தாம் தாழ்த்தப்பட்டிருக்கக் காரணம், தாம் தழுவிநிற்கும் இந்து மதம்தான் என்று. எவனும் தன்னை ஒரு இந்து என்றே கூறிக்கொள்ளக்கூடாது. அந்தத் தாழ்வும் இழிவும் நீங்க ஒரு வழி கண்டுபிடிக்க வேண்டும். கடவுளிடம் பிரார்த்தனை செய்துகொண்டால் இழிவு நீங்காது; நீங்கிவிடும் என்று நினைப்பது முட்டாள்தனம். அது இவனுடைய முயற்சியைத் தான் தடை செய்யும். பிரார்த்தனை செய்வதென்பதே பெரிய முட்டாள்தனம். பெரிய அக்கிரமத்தைச் செய்துவிட்டுப் பிரார்த்தனை செய்துவிட்டால் போதும் என்று, எவனும் துணிவுடன் அக்கிரமம் செய்ய ஆரம்பித்துவிடுகிறான். பிரார்த்தனையில் உள்ள நம்பிக்கையால் கொலை பாதகனும்கூடத்தான் கடவுளைப் பிரார்த்தித்துவிட்டுக் கொலை செய்யச் செல்கிறான். பிரார்த்தனை எங்காவது அவனது கொலை பாதகத்திற்குப் பரிகாரம் ஆகிவிடுமா? பிரார்த்தனையால் ஒரு காரியத்தைச் சாதித்துக் கொள்ளமுடியுமானால், தகுதியும் அறிவும் தேவையே இல்லையே! ஆகவே பிரார்த்தனையின் மூலம் நீங்கள் முட்டாள் ஆவதோடு கடவுளையும் முட்டாளாக்கி விட்டவர்களாகிறீர்கள்.

மன உறுதியோடு, இனி ஒருவனையும் சாமி என்றோ, எஜமான் என்றோ கூப்பிடுவதை நிறுத்திவிடுங்கள். எவனையும் 'அய்யா!' என்று மட்டுமே அழையுங்கள்; அல்லது அவனவன் பேரால் அழையுங்கள். எந்த மிராசுதாரனாவது "என்னடா, புதுசா அய்யா என்று அழைக்கிறாய்; திமிர் ஏறிப் போய்விட்டதா?" என்றால், "இல்லீங்க அய்யா, நாங்களும் உங்களைப்போல் மனிதர்கள்தானே; அப்படியிருக்க நாங்கள் ஏன் உங்களை எஜமான் என்றோ, சாமி என்றோ அழைக்கவேண்டும்? இதுவரை ஏதோ முட்டாள்தனத்தால் நாங்கள் எங்களைத் தாழ்ந்தவர்கள் என்று நினைத்து உங்களை உயர்வாக எஜமான் என்று அழைத்து வந்தோம்; இனி நாங்களும் மனிதத் தன்மை அடையத் துணிந்துவிட்டோம். ஆகவேதான் அய்யா என்று அழைக்கிறோம்" என்று தயை தாட்சணியமில்லாமல் தெளிவாக எடுத்துக் கூறுங்கள். "அடே, உங்களைக் கடவுள் தண்டிப்பார்" என்று அவன் கூறினால், "நீங்கள் கூறும் கடவுளென்பது காட்டுமிராண்டி காலத்திற்குத்தான்; பகுத்தறிவுக் காலத்திற்கு அல்ல" என்று கூறிவிடுங்கள்.

உண்மையில், உங்கள் இழிவு நீங்கவேண்டுமென்ற கவலையும் ரோஷமும் வெட்கமும் இருக்குமானால், இந்த விதத்தில்—வெகு சீக்கிரத்தில்—இந்த இழிவிலிருந்து நீங்கள் விடுதலை பெறலாம். இதற்கு வாலிபர்கள் துணிந்து முன்வரவேண்டும். வாழ்வில் மாற்றம் வேண்டியவர்கள் கடவுளைப்பற்றியோ மதத்தைப்பற்றியோ ஒரு சிறிதும் கவலைப் படக்கூடாது. உயர்ந்த சாதி என்று, எவனெவன் திமிரோடு உங்கள் முன் வருகிறானோ, அவனை, குறுக்கே வரும் பாம்பைப்போல் கருதி, துரத்தி அடிக்கவேண்டும்; அதுதான் சாதி ஒழிப்புக்குச் சரியான மருந்து. அது 'இன்ஜெக்ஷன்' மாதிரி உடனே வேலை செய்ய ஆரம்பித்துவிடும். அதைவிட்டு, சாதி ஒழிப்புச் சட்டத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தால், அதற்குள் சாதி அழியாமல் இருக்க அரசாங்கம் சட்டம் செய்துவிடும். ஆகவே, அடக்குமுறை வருமுன் ஆவன செய்யுங்கள்.

உங்கள் இழிவுக்குக் காரணம் நீங்கள் மாடு தின்பதல்ல; மதம்தான் காரணம் என்பதை உணர்ந்துகொள்ளுங்கள். மாடு தின்பதால் எவ்வித பாபமோ, கஷ்டமோ, நஷ்டமோ வந்துவிடாது. 220 கோடி உலக மக்களில் ஒரு கோடி மக்கள்தான் மாடு தின்னாதவர்கள். இவர்களும் மாட்டின் கொழுப்பைப் பாலாகவும், தயிராகவும், நெய்யாகவும் சாப்பிட்டு வருபவர்கள் என்பதை நீங்களும் உணருங்கள். மாடு தின்பது கொடுமை என்றால், மாட்டின் விதரைப் பதைக்கப் பதைக்க இடுக்கிக்கொண்டு கசக்குகிறார்களே, அடிக்கிறார்களே, பெரும் பாரத்தை இழுக்கும்படி அடிக்கிறார்களே அது கொடுமை இல்லையா என்று கேளுங்கள். மாட்டைத் தின்பது எவனாவது அனாசாரம் என்று

கூறினால், "மாடாவது வெறும் புல்லைத்தான் தின்கிறது; பன்றி, கோழி இவை ஜலதாரையில் இருக்கும் புழுவையும், மலத்தையும்கூடத் தின்கின்றன. அவற்றைத் தின்பது அதைவிட அனாசாரம் ஆயிற்றே" என்று கூறுங்கள். 'மாடு தின்பதால்தான் புலையனாக்கப் பட்டேன் என்றால், சாஸ்திரப் புராணப்படி ஆடு, மாடு, கழுதை, குதிரை இவற்றை உயிரோடு வதைத்துத் தின்ற ஆரியப் புரோகிதர்கள் மட்டும் எப்படி பிராமணர்களாக்கப் பட்டார்கள்?' என்று கேளுங்கள்.

எவனாவது உங்களைப் பார்த்து, 'ஒதுங்கிப்போ' என்று சொன்னால், 'ஏனப்பா, நான் ஒதுங்கவேண்டும்; என் காற்றுப்பட்டால் உனக்கு என்ன காலராவா வந்துவிடும்?' என்று கேளுங்கள். அவன் தானாகவே ஒதுங்கிப் போய்விடுவான். எவனாவது உங்களைக் கண்டு ஒதுங்கிப்போனால் அவனையும் சும்மா விடாதீர்கள். 'என்னப்பா என்னைப் பார்த்து தவளை மாதிரி எட்டிக் குதிக்கிறாய்? நான் என்ன மலமா, தொட்டால் நாற்றமடிக்க? அல்லது நான் என்ன நெருப்பா, தொட்டால் சுடும் என்று கூற; ஏனப்பா இப்படிப் பித்தலாட்டம் செய்கிறாய்? மலத்தைத் தொட்டால்கூட கையைக் கழுவிவிட்டால் சரியாய்ப் போகிறது என்கிறாய்; என்னைத் தொட்டால் உடுத்தியிருக்கிற வேட்டியோடு குளிக்க வேண்டுமென்று சொல்கிறாயே; இதற்கு என்னப்பா அர்த்தம்?' என்று கேளுங்கள். நீங்களே சிந்தித்துப் பாருங்கள்—இவையெல்லாம் கலப்பற்ற அயோக்கியத்தனமா, அல்லவா என்று! நீங்கள், உங்களது இந்த சமூக இழிவுபற்றிக் கவலைப்படாத—உங்கள் மூடநம்பிக்கை நடத்தைபற்றிக் கவலைப்படாத 'கிஸான் சபை'யை நம்பாதீர்கள். கூலி உயர்வால் மட்டுமே உங்கள் இழிவு போய்விடாது. எஜமான், கூலி என்கிற அந்த வேற்றுமையும் அதனால் மறைந்து விடாது. 'உழைக்காத சோம்பேறிக்கு ஏன் உடைமை இருக்க வேண்டும்? உழைக்கும் பாட்டாளி ஏன் அவனிடம் கூலி பெற்று வாழவேண்டும்?' என்று நீங்கள் கேளுங்கள். நீங்கள் முதலில் சரிசமம் ஆன மனிதனாகுங்கள்; பிறகு உடைமையைச் சரிசமமாக்கிக் கொள்ள நீங்கள் பாடுபடுங்கள். உடைமையில் அதிகமான உடைமைக்காரர்களாக இருந்தும் அனேகம் பேருக்கு இழிவு நீங்கவில்லை. உடைமை வரும்; போகும், தற்செயலாய். இழிவு அப்படி அல்ல. ஆகவே, ஒரு காலணா கூலி உயர்வுக்காக அடிபட்டுச் சாவதைவிட, 'அவன் ஏன் மேல்சாதி, அவன் ஏன் முதலாளி, நான் ஏன் தொழிலாளி' என்று கேட்பதில் உயிர் விடுங்கள். கிஸான் தலைவர்களும் அரசாங்கத்தின் ஏவலாளர்கள்; மிராசுதாரரின் கையாட்கள்; பெரிதும் சுயநலமிகள்; தங்கள் வாழ்விற்காக உங்களைப் பயன்படுத்திக் கொள்கிறவர்கள் என்பதை அறிந்து, நீங்கள் உங்கள் அறிவு காட்டும் வழியைப் பின்பற்றி நடவுங்கள். அரசியலில் வோட்டுரிமை பெறவும், சமூக இயலில் இழிவு நீங்கவும், பொருளாதாரத்தில் முதலாளி ஒழியவும் நீங்கள் ஒன்றுபட்டுக் கிளர்ச்சி செய்யுங்கள்.

நமது மக்கள் மாத்திரம் பெரிதும் பலகாலமாகவே முன்னேற்றமடையாமல் இருக்கக் காரணம் என்ன என்று யோசிக்கவேண்டும். இப்படிப்பட்ட நாளை இவ்வாறு சிந்தனை செய்யத்தான் நாம் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். வெகுகாலமாகவே நம் மக்கள் அறிவு வளர்ச்சியடையாமல் இருந்துவரக் காரணம் கடவுள் இல்லாத குறையாலா? அல்லது அவைகளுக்குப் பூஜை சரிவர நடத்திவைக்காததாலா? அல்லது அவற்றை மதிக்கத் தவறிவிட்டதாலா? யாரேனும் பூஜை நடத்தி வைக்கவில்லை என்றோ, கடவுளை நாம் மதிக்கவில்லை என்றோ, அல்லது கடவுள்களுக்கு நம் நாட்டில் பஞ்சம் என்றோ நம்மீது குற்றம் கூற முடியுமா? அப்படியிருக்க, மற்ற சமுதாய மக்களுக்குள்ள வசதியும் வாய்ப்பும் நமக்கேன் இல்லாமற் போய்விட்டன? இவற்றை நீங்கள் சிந்திக்க வேண்டுமென்பதுதான் எனது முக்கிய கருத்து. எனது வாழ்நாளில் கிடைக்கும் வசதியை இந்தக் காரியத்திற்கே பெரிதும் பயன்படுத்த நான் ஆசைப்படுவதால், இதைப் பற்றித் திருப்பித் திருப்பிக் கூறுகிறேன்.

நமது இழிவின் மூலகாரணத்தைக் கண்டுபிடித்து அதை நீக்குவதில்தான் நாம் பூரா கவனத்தையும் செலுத்த வேண்டும். நம் ஊரில் காலராவோ, மலேரியாவோ வந்தால் நாம் எப்படி அவற்றுக்குக் காரணமாயிருந்து வரும் அசுத்தங்களையும் கசுமாலங்களையும் நீக்கி, அந்நோய் பரவ வொட்டாமல் செய்கிறோமோ, அதே போல் நமது இழிவுக்குக் காரண மாயிருந்து வரும் சில கசுமாலங்களையும் நீக்கவேண்டும். நம் குறைபாடுகளுக்கு நாம் தழுவி நிற்கும் மதந்தான் காரணமே தவிர, கடவுள் ஒருபோதும் காரணகர்த்தராக மாட்டார். கடவுள்மீது பழி போடுவது என்பது அற்பத்தனம்; அயோக்கியத்தனம். 'ஏனப்பா திருடினாய்?' என்று ஒரு மாஜிஸ்ட்ரேட் ஒரு திருடனைப் பார்த்துக் கேட்டால் "நான் என்ன செய்யட்டுமுங்க; கடவுள் செயல் என்னை அப்படிச் செய்துட்டதுங்க" என்று சொன்னால், மாஜிஸ்ட்ரேட் ஒப்புக் கொள்வாரா? எவனாவது ஒரு போக்கிரி உங்கள் பாக்கெட்டில் கைபோட்டால், 'எல்லாம் கடவுள் செயல்' என்று நீங்கள் யாராவது சும்மா இருந்து விடுவீர்களா?

'கடவுள் இருக்கிறார் எல்லாம் பார்த்துக்கொள்வார்' என்று எந்த பக்தனாவது தனது பெட்டியைப் பூட்டாமல் விட்டுவிடுகிறானா? 'கடவுள் காப்பாற்றுவார்' என்று நினைத்து எவனாவது காசு, பணம் தேடாமல் தெருவில் சோம்பித் திரிகிறானா? அப்படியிருக்க, நமது இழிவு நீக்கத்திற்கு மட்டும் ஏன், 'எல்லாம் கடவுள் பார்த்துக்கொள்வார்' என்று நாம் விட்டு வைக்கவேண்டும்? நமது இழிவுக்கும் கடவுளுக்கும் சம்பந்தமில்லை. யாரோ, சில சுயநல நயவஞ்சகக் கூட்டத்தார் தம் சுகபோக வாழ்வுக்காகத் தம்மை மேன்மைப் படுத்தியும், மற்றவரைத் தாழ்மைப்படுத்தியும்—சாஸ்திர புராணங்களை எழுதி வைத்துக் கொண்டு, அவற்றைக் கடவுள் வாக்கென்று கூறி, நம்மை ஒப்புக்கொள்ளும்படி சொன்னால்—நாமும் பேசாமல் ஒப்புக்கொண்டு விடுவதா? சிந்தித்துப் பார்க்க வேண்டாமா? என்ன குற்றம் செய்தோம்?

நாம் என்ன குற்றம் செய்ததற்காக நம்மைக் கடவுள் சூத்திரனாகப் படைத்தார்? நாம்தானே கோயில் கட்டுவதும் கும்பாபிஷேகம் செய்வதும்? நம் முன்னோர்தானே சாமிக்குப் படியளந்து வந்தார்கள்? அப்படியிருக்க, நம்மவர் கொடுத்ததை வாங்கி வயிறு வீங்க உண்டு சோம்பேறி வாழ்வு நடத்திய பார்ப்பான், எப்படி உயர்சாதியாக்கப்பட்டான்? பாடுபட்டுழைத்த நம்மவர், எப்படி கீழ்சாதியாக்கப்பட்டார்கள் என்று சிந்தித்துப் பாருங்கள்.

இந்த இழிவிற்குக் கடவுள்தான் காரணம் என்று உங்களுக்குத் தோன்றினால், அந்தக் கடவுளுக்கு உடனே 'நோட்டீஸ்' கொடுங்கள். 'கடவுளே, நாங்கள்தான் உனக்கும், உன்னைக் குளிப்பாட்டிவரும் உனது அர்ச்சகனுக்கும் அன்றாடம் படி அளந்து வருகிறோம்; அதை உணராமல் நீ நன்றி மறந்து எங்களை இழிசாதியாய்ப் படைத்துவிட்டாய். பாடுபடாத உன்னையும், பாடுபடுகிற என்னையும் ஏமாற்றுகிற அவனை—உயர்சாதி ஆக்கிவிட்டாய்; ஆகவே—ஒன்று இனி மக்களில் உயர்வு தாழ்வு இல்லை என்றாவது கூறு; அல்லது நீயல்ல அதற்குக் காரணம் என்றாவது ஒப்புக் கொண்டுவிடு. இந்த நோட்டீஸ் விண்ணப்பத்தை அறிந்த இரண்டு வாரத்திற்குள் நீ ஏதாவது ஒரு முடிவான பதில் தெரிவிக்காவிட்டால் உன் கோயிலை இடித்து விடுவோம்' என்று எச்சரிக்கை செய்யுங்கள். கடவுள் என்று ஒன்று அந்தக் குழவிக் கல்லில் அடைந் திருக்குமானால், அது வாய் திறந்து பேசட்டும்! இன்றேல் அதை உதறித் தள்ளுங்கள். கடவுள் நரகத்திற்கு அனுப்பிவிடுவார் என்று நீங்கள் அஞ்சாதீர்கள்; அப்படி ஒன்று இருக்குமானால் அது அர்ச்சகருக்கே சரியாய்ப் போய்விடும். நரகம் என்பது வெறும் கற்பனைப் பூச்சாண்டி; மதத்தைக் காப்பாற்றிக்கொள்ள—அறிவாராய்ச்சியைத் தடை செய்து தமது வாழ்க்கையைப் பாதுகாத்துக்கொள்ள—சூழ்ச்சிக்காரர்கள் செய்த ஒரு தந்திரம்.

நான் என்னுடைய சூத்திரப் பட்டம் போகத்தான் இவ்வளவு பாடுபடுகிறேன் என்று நீங்கள் நினைத்துவிடாதீர்கள். நான் கிழவனாகிவிட்டேன்; இனி வெகு சீக்கிரத்தில் சாகப்போகிறவன். ஆனால், உங்கள் கதி என்ன? உங்கள் சந்ததிகளின் கதி என்ன? நீங்கள் பாடுபட்டு உழைப்பதெல்லாம் உங்கள் சந்ததியின் நல்வாழ்வுக்குத்தானே? அப்படியிருக்க, அந்தச் சந்ததியின் சூத்திரத் தன்மைபற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாமா? உங்கள் சந்ததியார் மனிதர்களாக வாழ வழி செய்யவேண்டாமா? இதோ எனக்கெதிரில், பிரகாசம் பொருந்திய கண்களோடு பொறுக்கி எடுத்த மனிதன் மாதிரி வீற்றிருக்கும் இவ் இளைஞர்களின் கதி என்னாவது? இவ் இளங் குழந்தைகள் என்ன குற்றம் செய்தார்கள் என்பதற்காக, இவர்கள் சூத்திரர்களாய்—தாழ்ந்த சாதியாய்—இழிமக்களாய் இருக்கவேண்டும்? நீங்கள் சூத்திரர்களாக இருப்பதால்தானே உங்கள் குழந்தைகள் சூத்திரர்களாக, உங்கள் மனைவியர் சூத்திரச்சிகளாக இருந்து வருகிறார்கள்? அதனால்தானே மிருக சீவன்களாக நடத்தப்படுகிறார்கள்? இதைக் கண்டு நீங்கள் வெட்கப்பட வேண்டாமா? துக்கப்பட வேண்டாமா? இந்த இழிவுக்குக் காரணமாயுள்ள மதத்தையோ, சர்க்காரையோ, சமுதாயத்தையோ, ஒழித்துக்கட்ட நீங்கள் திட்டமிட வேண்டாமா? அதை ஒழிக்க உங்களுக்குக் கஷ்டமாயிருந்தாலும் அதை மாற்றியமைக்கவாவது நீங்கள் முற்பட வேண்டாமா?

மணிக்கு ஆயிரம் மைல் வேகத்தில் பறக்கும் ஆகாயக் கப்பல்களும், ஐயாயிரம் மைல்களுக்கப்பால் உள்ள ஒருவரின் குரலை அப்படியே கேட்க வசதி செய்துகொடுக்கும் அதிசய ரேடியோ பெட்டியும் கண்டுபிடிக்கப்பட்டுள்ள அதி அற்புத விஞ்ஞான காலத்திலா—நாம் நம் அறிவைப் பயன்படுத்தாமல் அற்ப—அன்னக்காவடி—லம்பாடிக் கூட்டத்தினருக்கு அடிமைகளாக, தாசி மக்களாக இருப்பது? இதைக் கூறுவதாலா தேசபக்தர்களுக்கு—காங்கிரஸ்காரர்களுக்கு—சமதர்ம ஆட்சியாளருக்குக் குற்றமாகப் படவேண்டும்? இதற்கா எங்களுக்கும் எங்கள் கழகத்தாருக்கும் கல்லடியும் சொல்லடியும் அடக்குமுறைத் தண்டனையும் கிடைக்க வேண்டும்? நான் என்ன ஆட்சியா வேண்டுமென்று கேட்கிறேன்? 'மகாராஜனாக' இன்றைய ஆட்சியே இன்னமும் ஆயிரம் ஆண்டுகள் வேண்டுமானாலும் ஆண்டு வரட்டும். ஆனால், ஆயிரம் சாதிகளையும் பத்தாயிரம் வகுப்புகளையும் இழி சாதிகளையும் பிராமண சாதிகளையும் நாட்டில் இருக்க அனுமதிக்கக் கூடாது. அதற்குக் காரணமாய் இருந்துவரும் மதத்தை மரியாதையாக அழித்து விடட்டும். எல்லா மக்களையும் ஒரே சமுதாய—சரிநிகர் சமான மனிதர்களாக நடத்தட்டும் என்றுதானே கூறுகிறேன். 'மக்களின் அறிவுக்குத் தடை விதிக்கும் எதையும் அழி' என்றுதானே நான் கூறுகிறேன்.

அறிவுகொண்டு ஆராய்வோம். அறிவிற்குத் தென்பட்டதுதான் கடவுளாக இருக்க முடியும்; அறிவினால் ஏற்படுத்தியதுதான் மதமாக இருக்கவேண்டும். அறிவுகொண்டு ஏற்படுத்தியதுதான் சாஸ்திரமும், புராணமும் ஆக இருக்கவேண்டும். ஆகவே, அந்த அறிவுக்குக் கடவுள், மதம் சாஸ்திரபுராணம் மாறானதாக இருந்தாலும்—ஒப்புக்கொண்டு ஆகவேண்டும் என்று நிபந்தனைபோடாதே! எதையும் சுதந்திரமாக, சுத்த அறிவுகொண்டு ஆராய்ச்சி செய்ய அனுமதி! அப்போதுதான் காலத்திற்கேற்ப அது முன்னேற்றப் பாதையில் உன்னை அழைத்துச் செல்லும்; உன் அறிவின் தெளிவுக்கேற்ற பயனளிக்கும். எனவே இவற்றைச் சிந்தித்துப் பார்! உன்னைத்தவிர்த்த மற்ற அயல்நாட்டு மக்கள், அயல் மதஸ்தர்கள் எத்தகைய கடவுள்களை வணங்குகிறார்கள் என்று அறிவால் ஆராய்ந்து பார்; அவர்களது கடவுள்களுக்கு உருவமில்லை; அதை வணங்க அவர்கள் காசு பணம் செலவழிக்கவேண்டிய அவசியம் இல்லை. அதுபோலவே, அவர்களுடைய மதமும் அவர்களைப் பல சாதிகளாகப் பிரித்து உயர்வு தாழ்வு கற்பிக்கவில்லை. அப்படியிருக்க, நாம் மட்டும் ஏன் உருவ வழிபாடு, அதுவும் ஆடம்பரமான செலவுடன் செய்யவேண்டும்? நம் மதம்மட்டும் ஏன் அநியாய உயர்வு - பிராமணன், சூத்திரன் - தாழ்வு கற்பிக்க

வேண்டும்? அவர்களைவிட நாம் எப்படி உயர்ந்தவர்கள், எதில் வல்லவர்கள் அல்லது அறிவாளிகள்? மற்ற விஷயங்களில் எல்லாம் அற்புத அதிசயங்களில் எல்லாம் அவர்கள் காட்டியவழியை நாம் ஆசையோடு பின்பற்றி வரும்போது, அதி முக்கியமான கடவுள் தத்துவத்திலும் மதத்திலும்மட்டும் ஏன் நாம் அவர்களுக்கு நேர்மாறாக—காட்டுமிராண்டிகளாக—நடந்துகொள்ள வேண்டும்?

உனக்கு சுயராஜ்ய அறிவை உண்டாக்கியது அவனா அல்லது உன்னுடைய மதமா? அரசன் வேண்டாமென்று ஆரம்பப் பாடம் கற்றுத்தந்தது அவனா அல்லது உன்னுடைய ஆரியமதமா? அன்பனே, ஆத்திரம் தவிர்த்து நீயே சிந்தித்துப் பார்! அவன் மாடு தின்கிறான், மடையன் என்று சுலபமாய்க் கூறிவிடுகிறாயே! நீ சர்வ சக்திபொருந்திய—சர்வ வியாபகனாகிய கடவுளைச் சாணளவு கல்லில் அடைத்துவிட்டு, அதற்குப் பெண்டு பிள்ளைகள் தேடிவைக்கிறாயே—இந்த அக்கிரமத்திற்காக உன்னை என்னவென்று அழைப்பது? சாணளவு கல்லை நட்டுவிட்டு, 'அதுதானடா சாமி!' என்கிறாய்; அதற்கு வருடாவருடம் கல்யாணம் செய்யவேண்டும் என்கின்றாய். அதுதான் போகட்டும் என்றால் அதுவும் போதாது;—அதற்கு ஆடவும் பாடவும் அழகான கூத்திமார் வேறு வேண்டுமென்கிறாய். அதற்கும் எங்கள் பெண்கள்தான் (பொட்டுக் கட்டிக்கொள்ள) வேண்டுமென்கிறாய்; அந்த ஆடலழகிகளோடும், மேளதாளத்தோடும், ஆனந்தமாக அதை ஊர்வலமாகக் கொண்டு செல்லவேண்டுமென்று கூறி—அதற்கும் எங்களைப் பணம் கொடுக்கும்படி துன்புறுத்துகிறாய். அந்த ஒருபிடி பித்தளை சாமியை—செம்புப் பொம்மையை ஆள் மட்டும் தூக்கிச்சென்றால் போதாது என்று—அதற்கு மரத்தாலும், வெள்ளியாலும், தங்கத்தாலும் யானையும் குதிரையும் வேண்டுமென்கிறாய்; சர்வ சக்தியுள்ள கடவுள் என்று கூறிவிட்டு அதற்கு இத்தனையும் நாம்தானடா செய்யவேண்டும் என்கிறாயே! அப்புறம் அதைக் கைதிமாதிரி ஒரு அறையில் போட்டுப் பூட்டிவைக்கிறாய்; 'உலகமக்கள் எல்லாம் இப்படியா சாமி கும்பிடுகிறார்கள்? நீ மட்டும் ஏன் இப்படிக் கூத்தடிக்கிறாய்' என்று கேட்டால்—இதற்காகவா என்னை நாத்திகன் என்று குற்றம் சாட்டுவது? வேற்று நாட்டான் சிரிப்பான்! கல்லையும், களிமண்ணையும், காட்டையும் மேட்டையும், கழுதையையும், குதிரையையுமாகிய சகலத்தையுமா கடவுளாக்கிவிடுவது?

சிந்தனை அறிவு ஒன்றுதானே உண்மையறிவாகக் கருதப்படக்கூடியது. வெறும் புத்தக அறிவு அறிவாகிவிடுமா? அதைக் குருட்டுப்பாடம்பண்ணி ஒப்புவித்தவனே மேதாவி ஆகிவிடுவானா? அப்படியானால், படித்த மேதாவிகள், பட்டதாரிகள், விஞ்ஞானப் பாடத்தில் பட்டதாரிகள், கல்லைக் கடவுள் என்று நம்பி அதன் காலில் விழுந்து வணங்குவார்களா? மகா விஞ்ஞானம் படித்த மகோன்னத பண்டித நிபுணர் என்பவர்களெல்லாம் மோட்சத்துக்காகச் சாணியையும் மூத்திரத்தையும் கலக்கிக் குடிப்பார்களா? அல்லது பாப விமோசனத்திற்காகத்தான் தீர்த்தமென்று சேற்றுநீரை வாரித் தெளித்துக்கொள்வார்களா? அவர்கள் படித்த 'சயின்சு'க்கும், இந்த சாணி மூத்திரக் கலவைக்கும் ஏதாவது சம்பந்த முண்டா? வேறு நாட்டில் எந்த மடையனாவது இப்படிச் செய்வானா? வெள்ளையன் இதைக் கேட்டால் காறித் துப்பிச் சிரிப்பானே!

எதற்காக ஒரு திருப்பதி சாமிக்கு வருடம் 32 இலட்சம் ரூபாய் வரும்படி? அந்த வரும்படியால் சோம்பேறிகளும், பார்ப்பனர்களும் தின்று கொழுப்பதைத்தவிர, வேறு ஏதாவது பயனுண்டா? சர்க்கார் வரி கேட்டால், கொடுக்க எவ்வளவு சங்கடப்படுகிறாய்? சர்க்காராவது—உனக்கே இல்லாவிட்டாலும், உன்னைப்போன்ற மக்களுக்காவது ஏதாவது நன்மை செய்கிறது; இந்தக் குழவிக்-கல்லுக்கு அழுவதால், பார்ப்பான் ஒருவன்தானே கொழுக்கிறான். இந்தக் குழவிக் கல் கொள்கையை அனுமதிக்கலாமா, நீ? இந்தக் குழவிக் கல்லுக்காக வேண்டி உன்னை மொட்டையடித்துக் கொள்ளலாமா, நீ? புத்தியிருக்கிறதா உனக்கு? இந்தச் சாமியை உனக்குக் காட்டிக் கொடுத்தவன் பார்ப்பான்தானே! அந்தப்

பார்ப்பான் ஒருவனாவது சாமிக்கென்று மயிர்வளர்த்து மொட்டையடித்துக்கொள் கின்றானா? ஒரு பார்ப்பனத்தியாவது சாமிக்காக மொட்டையடித்துக் கொள்கிறாளா? அப்படியிருக்க, நீ மட்டும் ஏனப்பா—மகா கடவுளைக் கண்டுவிட்டவன்போல்—அதற்கு மயிரைச் சிறைக்கக் கொடுக்கிறாய்? அதற்காக ஏனப்பா நீ காவடி தூக்கிக் குதிக்கிறாய்?

நமது மக்களில் 100க்கு 90 பேருக்குப் படிப்பில்லை; அவர்களைப் படிக்கவைக்கப் பணமில்லை என்கிறாய். திட்டம் போடத்திறமையில்லை,—திட்டம் போடுகிறார் நமது கல்வி மந்திரி, மேலும் மக்களை மடையர்களாக்க. மதத்தையோ புராணத்தையோ கேலி செய்யக்கூடாதாம்! செய்தால்—'டிஸ்மிஸ்' செய்வாராம், வாத்தியார்களை. அடேயப்பா, என்ன மதம் அப்பா இவருக்கு? இதுவரை அடிமையாக, தாசிமகனாக, கீழ்சாதியாக ஆக்கி வைத்திருக்கும் இந்து மதம்தானா இவருடைய மதம்? இவர் கூறும் புராண இதிகாசங் களின் யோக்யதையோ இன்னும் சொல்லத் தேவையில்லை.

பாரதம்—அதில் ஒருவனாவது அப்பனுக்குப் பிறந்ததாகக் கூறப்படவில்லை. ஒரு காலத்தில் ஒரு கூட்டம் அப்படி இருந்திருக்குமோ என்னவோ தெரியவில்லை! 1948-ல் போய் அதை ஒப்புக்கொள்ள வேண்டுமா? ஆட்சேபிக்கக் கூடாது என்று மந்திரி கூறுகிறார். இப்படிப்பட்ட கதையை நம் பெண்கள் படிக்க வேண்டுமென்றால் என்ன அர்த்தம்? அதில் கூறப்படுகிறதே ஒரு அழியாத பத்தினி திரவுபதி அம்மையார்—அந்த அம்மாளுக்கு அய்ந்துபேர் கணவர்கள். அதுவும் போதாமல், ஆறாவது மாப்பிள்ளைக்குக் கவலைப்பட்டாளாம். அப்படிப்பட்டவளைப் போய்—நம் தாய்மார்கள் 'பதிவிரதை' என்று வணங்குவார்களானால், அதற்கு ஏதாவது அர்த்தம் இருக்கிறதா? அப்படிப்பட்ட பெண் தன்மையில் கதையைப் படிப்பதால், நம் பெண்களுக்கு ஏதாவது ஒழுக்கம் ஏற்படுமா?

இராமாயணம் அதைவிட மேலான காவியம். அதில் கூறப்படும் தசரதனுக்கோ 60,000 மனைவிமார்; அத்தனை மனைவிகள் இருந்தும் அவனுக்குப் பிள்ளை கிடையாது. அதற்காக ரிஷ்யசிருங்கர் வந்து பிள்ளை உண்டாக்கித் தரவேண்டும். இப்படிப்பட்ட கதையைப் படிப்பதால் கொஞ்சமாவது நாணயமோ பெருந்தன்மையோ ஒழுக்கமோ ஏற்படுமோ? இந்தக் கதையைப்போய் சரித்திரப்பாடத்தில் புகுத்திக் கொலை பண்ணு கிறாயே, இது நியாயமா? இந்தத் தசரதனோ அல்லது இவனுக்கு இஷ்ட புத்திரன் இராமனோ ஆண்டதற்கு ஏதாவது சரித்திர ஆதாரம் உண்டா? இப்படி இருக்க, அதைச் சரித்திரத்தில் புகுத்தி அதைப் படிக்கும்படி ஏன் அனாவசியமாகக் குழந்தைகளை வற்புறுத்தி, அவர்கள் அறிவைக் கெடுக்கப் பார்க்கிறாய்?

வேண்டாமய்யா இந்த இதிகாச புராணங்கள்; இவையல்ல நமக்கு வேண்டியவை. நமக்கு வேண்டியதெல்லாம் சிந்தனை அறிவு! எதனையும் சிந்தித்துச் செய்யுங்கள். விபூதி பூச வேண்டுமா? ஏன் எதற்கு என்று சிந்தித்துப் பார்த்த பிறகு பூசிக் கொள்ளுங்கள்! வேண்டாமென்று கூறவில்லை. சாமியா, விபூதி பூசிக்கொள்ளும்படி சொல்லியது? சாமியா, உன்னை நாமம் போட்டுக் கொள்ளச் சொன்னது? சாமியா, உன்னைத் திவசம் கொடுக்கச் சொன்னது? நீ திவசத்தின்போது பார்ப்பானுக்குக் கொடுக்கும் அரிசி, பருப்பு—நீ கண்டாயா உங்கள் அப்பனுக்குப் போகிறது என்று? நீ சிந்தித்துப் பார்த்தாயா அது அந்தப் பார்ப்பான் வீட்டிற்குப் போகிறதா அல்லது அவன் வைப்பாட்டி வீட்டிற்குப் போகிறதா என்று?

'ஏனப்பா—சாமி கும்பிட சாம்பல் பூசிக்கொள்கிறாய்?' என்றால், 'இறந்த பிறகு எல்லாம் சாம்பலாகத்தானே போய் விடுகிறோம்; அதற்கு அறிகுறி இது' என்கிறார்கள் மத பக்தர்கள். என்ன அர்த்தம்? இந்த உடல் சாம்பலாகுமுன் அது நெருப்பாக எரிந்து தானே சாம்பலாகிறது? நீ அப்போது சவமாகக் கிடக்கிறாயே! அதுதானே உனது முடிவென்று—நீ கொஞ்சம் 'கிரஸினை' மேலே ஊற்றிக் கொண்டு, சவம்போல் படுத்து,

வத்திக்குச்சி எடுத்துப் பற்ற வைத்துக்கொள்ளேன், பார்க்கலாம்! எரியாமல் எப்படிச் சாம்பல் வரக்கூடும் என்று இதைச் செய்வாயா முன்னால்?

ஏனப்பா இப்படி அறிவுக்குப் புறம்பான காரியங்களை மதம் என்ற பெயரால், நீ செய்கிறாய்? உன்னை மூடநம்பிக்கைகளுக்கு அடிமையாகவும்—ஒரு இழிமகனாகவும் வைத்திருக்கும் மதத்தை ஏன் நீ இன்னும் சுமந்துகொண்டு இருக்கவேண்டும்?' என்றால், 'நீ யார் கேட்க, அது என் இஷ்டம்!' என்று கூறினால், அது அறிவுக்குப் பொருந்துமா? ஒரு பாரமான கல்லைத் தலைமீது வைத்து நிற்கிறவனைப் பார்த்து—அதுவும் எதற்காகச் சுமக்கிறோம்; ஏன் சுமக்கிறோம்; யாருக்காகச் சுமக்கிறோம் என்பதுகூடத் தெரியாமல் சுமந்துகொண்டிருப்பவனைப் பார்த்து—'ஏனப்பா அதை வீணாகச் சுமந்துகொண்டிருக்கிறாய்? அதனால் உனக்கு யாதொரு பயனும் இல்லையே; அதை இறக்கி வைத்து விடேன்' என்று கூறினால், 'அதைக் கேட்க நீ யார்?' என்று கூறினால்—அதில் அர்த்தமுண்டா?

இன்னும் எத்தனை காலத்திற்கு நாம் இந்த உலகத்தில் சூத்திரர்களாயிருப்பது? நம் பின்சந்ததிகளைச் சூத்திரர்களாயிருக்கும்படி விடுவது? இத் தலைமுறையிலாவது—இந்த விஞ்ஞான, சுதந்திர காலத்திலாவது—நமது இந்த இழிவு நீங்கி, நாம் மனிதத் தன்மைபெற ஏதாவது செய்ய வேண்டாமா? இதைவிட, இனிமேல் இப்படிப்பட்ட காரியம் நமக்கேது? அதனால்தான், எனது வாழ்நாள் பூராவும் இதற்கென்றே நான் அர்ப்பணித்து வந்திருக்கிறேனே ஒழிய, முட்டாள் தனமல்ல; துவேஷமல்ல; நாஸ்திக உணர்ச்சியாலல்ல.

1925-ல் காங்கிரசில் இருந்து நான் விலகியதற்கும் இதுதானே காரணம்! காங்கிரஸ் ஒரு வகுப்புவாத ஸ்தாபனம்; ஆரியப் பார்ப்பனரின் நலனுக்காகவே பாடுபட்டு வரும் ஒரு ஸ்தாபனம்; வருணாசிரம பாதுகாப்பு ஸ்தாபனம் என்பதைத் தெளிவாக உணர்ந்த பிறகுதானே நான் அதைவிட்டு வெளியேறினேன்!

அன்றுமுதல் நான் இதைத்தானே கூறிவருகிறேன். நம்மை இழிவுபடுத்தும் மதமும், நாம் தீண்டினால் செத்துப்போகும் கடவுளும், நாம் படிக்கக்கூடாத சாஸ்திரமும், நம்மைக் காட்டுமிராண்டிகளாக்கும் புராணமும், நம்மைச் சுரண்டிப் பார்ப்பானுக்கு அழும் தெய்வமும் நமக்குத் தேவையில்லை என்பதுதானே எனது விண்ணப்பம். 1929-லேயே என்னுடைய கருத்தைத் திட்டவட்டமாகத் தெரிவித்திருக்கிறேனே!

உருவமற்ற கடவுளை—யாவரையும் ஒன்றுபோல் சிருஷ்டிக்கும் கடவுளை—ஒழுக்கத்திற்குக் கட்டுப்பட்ட கடவுளை—பகுத்தறிவுக்கு ஏற்ற கடவுளை—காசு பணம் செலவு செய்யாமல் வணங்கக்கூடிய கடவுளை—மூடநம்பிக்கைக்கு இடமில்லாத தன்மையில் யாரும் வணங்கலாம். நீதிக்கும் நேர்மைக்கும் அறிவுக்கும், அன்புக்கும் கட்டுப்பட்ட எந்த மதத்தையும் யாரும் தழுவலாம் என்று அன்றே கூறியிருக்கிறேனே! அதனால்தானே அன்று முதலே நான் நாஸ்திகனாக்கப்பட்டேன். அன்று ஏற்பட்ட எதிர்ப்புச் சொல் கொஞ்சமா? கல்லடி கொஞ்சமா? அப்படியிருந்தும், நெருப்பில் புழுத்த புழுபோல், அறிவு காரணமாக—அதன் நேர்மை காரணமாக அக்கொள்கை அழியாது நின்று, இன்று சற்று செல்வாக்குப்பெற்று விளங்குகிறது. 20 வருட சேவையின் பயனாய் இப்போதுதான் ஏராளமான வாலிபர்கள் இக்கொள்கையை ஏற்று நடக்க முன் வந்துள்ளனர். இனியும் அவர்களது தாய்தந்தையர்கள் ஞானமடையவில்லை; ஞானசூனியர்களாய் இருக்கிறார்கள். ஆணவ அடக்குமுறையால்—அதன் பாதுகாப்பில் நடத்தும் மூடப்பிரச்சாரத்தால்—மூர்க்கத்தனத்தால், அறிவு என்றும் அழிந்ததில்லை என்பதை அமைச்சர்கள் சீக்கிரமே உணர வேண்டும்.

அன்பர்களே! ஒவ்வொரு மனிதனும் செத்துப்போவது உண்மைதான் என்றாலும் அவனோடு அவனுடைய முயற்சியும்—அவன் துவக்கிய காரியமும் செத்துப்போய் விடுவ

தில்லை. அதுவும், அவனுடைய எண்ணத்தை அவனால் கூடுமான அளவுக்கு அவனைச் சூழ்ந்துள்ள மக்களிடையே பரப்பிவிட்டால்—அந்த எண்ணம் ஒருபோதும் அழியாது; அடக்கிவிடமுடியாது. என்னுடைய முயற்சியெல்லாம் மக்கள் எதையும் சிந்திக்கவேண்டும் என்பதுதான், அவர்கள் எதையும் கண்மூடி நம்பிவிடக்கூடாது என்பதுதான். இது போதுமான அளவுக்கு மக்களிடையே வேரூன்றிவிட்டது. இனியும் தொடர்ந்து எனது உயிருள்ள வரையில் நான் இதைத்தான் கூறிவருவேன்.

[புலியனூரில் சொற்பொழிவு—'விடுதலை' 29-2-1948]

# 3. பெண்ணுரிமை

## 1. பெண்கள் விடுதலை

பெண்கள் விடுதலையின் பேரால் உலகத்தில் அனேக இடங்களில் அனேக சங்கங்களும், முயற்சிகளும் நாளுக்குநாள் வளர்ந்துகொண்டு வருவது யாவரும் அறிந்ததே. இம்முயற்சிகளில் ஆண்களும் மிகக் கவலையுள்ளவர்கள் போலக் காட்டிக்கொண்டு, மிகப் பாசாங்கு செய்து வருகின்றார்கள். ஆண்கள் முயற்சியால் செய்யப்படும் எவ்வித விடுதலை இயக்கமும்—எவ்வழியிலும்—பெண்களுக்கு உண்மையான விடுதலையை அளிக்கமுடியாது. தற்காலம் பெண்கள் விடுதலைக்காகப் பெண்மக்களால் முயற்சிக்கப் படும் இயக்கங்களும் யாதொரு பலனையும் கொடுக்காமல் போவதல்லாமல், மேலும் மேலும் அவை பெண்களின் அடிமைத்தனத்திற்கே கட்டுப்பாடுகளைப் பலப்படுத்திக் கொண்டே போகும் என்பது நமது அபிப்பிராயம்.

எதுபோலவென்றால், இந்தியப் பொதுமக்கள் விடுதலைக்கு வெள்ளைக்காரரும், பார்ப்பனரும் பாடுபடுவதாக ஏற்பாடுகள் நடந்துவருவதன் பலனாக—எப்படி நாளுக்கு நாள் இந்திய மக்களுக்கு அடிமைத்தனம்—விடுதலை பெறமுடியாதபடி பலப்பட்டு, என்றென்றைக்கும் கட்டுப்பாடு ஏற்பட்டுவருகிறதோ அதுபோலவும்; சமூக சீர்திருத்தம், சமத்துவம் என்பதாக வேஷம் போட்டுக்கொண்டு பார்ப்பனர்களும், புராணக்காரர்களும் சீர்திருத்தத்தில் பிரவேசித்துவருவதன் பலனாக எப்படி சமூகக் கொடுமைகளும், உயர்வு தாழ்வுகளும் சட்டத்தினாலும், மதத்தினாலும் நிலைபெற்றுப் பலப்பட்டு வருகின்றதோ அதுபோலவுமே என்று சொல்லலாம்.

அன்றியும் ஆண்கள், பெண்களின் விடுதலைக்குப் பாடுபடுவதால் பெண்களின் அடிமைத்தனம் வளருவதுடன் பெண்கள் என்றும் விடுதலை பெறமுடியாத கட்டுப்பாடுகள் பலப்பட்டுக் கொண்டுவருகின்றன. பெண்களுக்கு மதிப்புக் கொடுப்பதாகவும், பெண்கள் விடுதலைக்காகப் பாடுபடுவதாகவும் ஆண்கள் காட்டிக்கொள்வதெல்லாம் பெண்களை ஏமாற்றுவதற்குச் செய்யும் சூழ்ச்சியே ஒழிய வேறல்ல. எங்காவது பூனைகளால் எலிக்கு விடுதலை உண்டாகுமா? எங்காவது நரிகளால் ஆடு கோழிகளுக்கு விடுதலை உண்டாகுமா? எங்காவது முதலாளிகளால் தொழிலாளிக்கு விடுதலை உண்டாகுமா? எங்காவது வெள்ளைக்காரர்களால் இந்தியர்களுக்குச் செல்வம் பெருகுமா? எங்காவது பார்ப்பனர்களால் பார்ப்பனர் அல்லாதவர்களுக்குச் சமத்துவம் கிடைக்குமா? என்பதை யோசித்தால் இதன் உண்மை விளங்கும். அப்படி ஒருகால் ஏதாவது ஒருசமயம் மேற்படி விஷயங்களில் விடுதலை உண்டாகிவிட்டாலும் கூட, ஆண்களால் பெண்களுக்கு விடுதலை கிடைக்கவே கிடைக்காது என்பதைமாத்திரம் உறுதியாய் நம்பலாம்.

ஏனெனில், 'ஆண்மை' என்னும் பதமே பெண்களை இழிவுபடுத்தும் முறையில் உலக வழக்கில் உபயோகப் படுத்தப்பட்டு வருகின்றது என்பதைப் பெண்கள் மறந்துவிடக் கூடாது. அந்த 'ஆண்மை' உலகில் உள்ளவரையிலும் பெண்மைக்கு மதிப்பு இல்லை என்பதைப் பெண்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். உலகத்தில் 'ஆண்மை' நிற்கும்வரையில் பெண்கள் அடிமையும் வளர்ந்தேவரும். பெண்களால் 'ஆண்மை' என்ற தத்துவம் அழிக்கப்பட்டாலல்லது 'பெண்மை' விடுதலையில்லை யென்பது உறுதி. 'ஆண்மை'யால்தான் பெண்கள் அடிமையாக்கப் பட்டிருக்கின்றார்கள்.

சுதந்திரம், வீரம் முதலிய குணங்கள் உலகத்தில் 'ஆண்மை'க்குத்தான் உரியதாக்கப்பட்டுவிட்டன, ஏன்? 'ஆண்மை'க்குத்தான் அவைகள் உண்டு என்று ஆண்மக்கள் முடிவுகட்டிக் கொண்டிருக்கிறார்கள். இதைமாத்திரம் பெண்கள் நன்றாய் உணரவேண்டும் என்று வேண்டிக்கொள்ளுகின்றோம்.

எனவே, பெண்மக்கள் அடிமையானது ஆண்மக்களாலேயேதான் ஏற்பட்டது என்பதும், அதுவும் 'ஆண்மை'யும் 'பெண் அடிமையும்' கடவுளாலேயே ஏற்படுத்தப் பட்டதாக எல்லா ஆண்களும் கருதிக் கொண்டிருக்கிறார்கள் என்பதும், அதோடு பெண் மக்களும் இதை உண்மையென்றே நினைத்துக்கொண்டு வந்த பரம்பரை வழக்கத்தால், பெண் அடிமைக்குப் பலம் அதிகம் ஏற்பட்டிருக்கின்றது என்பதும்—நடுநிலைமைப் பெண்களுக்கும் ஆண்களுக்கும் யோசித்துப் பார்த்தால் விளங்காமல் போகாது. பொது மக்கள் பிறவியில் உயர்வு–தாழ்வு ஒழியவேண்டுமானால், எப்படி கடவுளாலேயே மக்களுக்குப் பிறவியில் உயர்வு–தாழ்வு கற்பிக்கப்பட்டிருக்கின்றது என்ற இந்துமதக் கொள்கையைச் சுட்டுப் பொசுக்கவேண்டியது அவசியமோ—அதுபோலவே, பெண்மக்கள் உண்மை விடுதலைபெற்று உண்மைச் சுதந்திரம் பெறவேண்டுமானால், 'ஆண்மை'யும், 'பெண் அடிமையும்' கடவுளால் உண்டாக்கப்பட்டவை என்பதற்குப் பொறுப்பாயுள்ள கடவுள்தன்மையும் ஒழிந்தாக வேண்டும்.

பெண்கள் விடுதலை பெறுவதற்கு இப்போது ஆண்களைவிடப் பெண்களே பெரிதும் தடையாயிருக்கிறார்கள். ஏனெனில், இன்னமும் பெண்களுக்குத் தாங்கள் முழு விடுதலைக்குரியவர்கள் என்கின்ற எண்ணமே தோன்றவில்லை. தங்களுடைய இயற்கைத் தத்துவங்களின் தன்மையையே தங்களை ஆண்களுக்கு அடிமையாகக் கடவுள் படைத்திருப்பதன் அறிகுறிகளாய்க் கருதிக்கொண்டிருக்கிறார்கள். எப்படியெனில், பெண் இல்லாமல் ஆண் வாழ்ந்தாலும் வாழலாம்; ஆனால், ஆண் இல்லாமல் பெண் வாழமுடியாதென்று ஒவ்வொரு பெண்ணும் கருதிக்கொண்டிருக்கிறாள். அப்படி அவர்கள் கருதுவதற்கு என்ன காரணம் என்று பார்ப்போமானால், பெண்களுக்குப் பிள்ளைகள் பெறும் தொல்லை ஒன்று இருப்பதால், தாங்கள் ஆண்கள் இல்லாமல் வாழமுடியும் என்பதை ருசுப் படுத்திக் கொள்ளமுடியாதவர்களா யிருக்கின்றார்கள். ஆண்களுக்கு அந்தத் தொந்தரவு இல்லாததால், தாங்கள் பெண்கள் இல்லாமல் வாழமுடியும் என்று சொல்ல இடமுள்ளவர்களா யிருக்கின்றார்கள். அன்றியும், அப்பிள்ளை பெறும் தொல்லையால் தங்களுக்குப் பிறர் உதவி வேண்டியிருப்பதால்—அங்கு ஆண்கள் ஆதிக்கம் ஏற்பட இடமுண்டாகி விடுகின்றது. எனவே, உண்மையான பெண்கள் விடுதலைக்குப் பிள்ளை பெறும் தொல்லை அடியோடு ஒழிந்துபோக வேண்டும். அது ஒழியாமல் சம்பளம் கொடுத்துப் புருஷனை நியமித்துக்கொள்வதாயிருந்தாலும் பெண்கள் பொதுவாக உண்மை விடுதலை அடைந்து விட முடியாது என்றே சொல்லுவோம்.

இம்மாதிரி இதுவரை வேறுயாரும் சொன்னதாகக் காணப்படாவிட்டாலும்—நாம் இதைச் சொல்லுவது பெரிதும் முட்டாள்தனமோ என்பதாகப் பொது மக்கள் கருதுவார்கள் என்று இருந்தாலும்—இந்த மார்க்கத்தைத் தவிர—அதாவது பெண்கள் பிள்ளை பெறும் தொல்லையிலிருந்து விடுதலையாக வேண்டும் என்கிற மார்க்கத்தைத் தவிர—வேறு எந்த

வகையிலும் அவர்களுக்கு விடுதலை இல்லை என்கின்ற முடிவு நமக்குக் கல்லுப் போன்ற உறுதியுடைதாய் இருக்கின்றது. சிலர் இதை இயற்கைக்கு விரோதம் என்று சொல்ல வரலாம்.

உலகத்தில் மற்றெல்லாத் தாவரங்கள், ஜீவப்பிராணிகள் முதலியவை இயற்கை வாழ்வு நடத்தும்போது—மானிட வாழ்க்கையில் மாத்திரம் இயற்கைக்கு விரோதமாகவே, அதாவது பெரும்பாலும் செயற்கைத் தன்மையாகவே வாழ்வு நடத்திவருகின்றபோது, இந்த விஷயத்திலும் இயற்கைக்கு விரோதமாய் நடைபெறுவதில் ஒன்றும் முழுகிப்போய் விடாது.

தவிர, 'பெண்கள் பிள்ளை பெறுவதை நிறுத்திவிட்டால் உலகம் விருத்தியாகாது; மானிட வர்க்கம் விருத்தியாகாது' என்று தர்ம நியாயம் பேசச் சிலர் வருவார்கள். உலகம் விருத்தியாகாவிட்டால் பெண்களுக்கு என்ன நஷ்டம்? மானிட வர்க்கம் பெருகாவிட்டால் பெண்களுக்கு என்ன ஆபத்து ஏற்பட்டு விடக்கூடும்? அல்லது இந்தத் தர்ம நியாயம் பேசுபவர்களுக்குத்தான் என்ன நஷ்டம் உண்டாகிவிடும்? என்பது நமக்குப் புரியவில்லை. இதுவரை பெருகி வந்த மானிட வர்க்கத்தால் மானிட வர்க்கத்திற்கு ஏற்பட்ட நன்மைதான் என்ன என்பதும் நமக்குப் புரியவில்லை.

பெண்களின் அடிமைத் தன்மை பெண்களை மாத்திரம் பாதிப்பதில்லை. அது, மற்றொரு வகையில் ஆண்களையும் பெரிதும் பாதிக்கின்றது. இதைச் சாதாரண ஆண்கள் உணருவதில்லை. ஆனால், நாம் இந்த இடத்தில் அதைப் பற்றிச் சிறிதும் கவலை கொள்ளவில்லை. பெண்களைப் பற்றியே கவலை கொண்டு சொல்லுகின்றோம். தற்கால நிலைமையில் பெண்கள் விடுதலைக்குப் பெண்கள் வேறு எவ்விதமான முயற்சி செய்தாலும், அது சிறிதாவது ஆண்களுக்குக் கஷ்டத்தைக் கொடுக்கக் கூடியதாக இருக்கலாம். ஆனால், இந்தக் காரியத்தில்—அதாவது பெண்கள் பிள்ளை பெறுவதில்லை என்கின்ற காரியத்தில் ஆண்களுக்கு எவ்வித கஷ்டமும் கிடையாது என்பதோடு, ஆண்களுக்கு இலாபமும் உண்டு என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

எப்படியெனில், ஒரு மனிதன் தான் பிள்ளை குட்டிக்காரனாயிருப்பதனாலேயே யோக்கியமாகவும், சுதந்திரமாகவும் நடந்துகொள்ளப்பெரிதும் முடியாமலிருக்க வேண்டியவனாய்விடுகிறான். அன்றியும், அவனுக்கு அனாவசியமான கவலையும் பொறுப்பும் அதிகப்படவும் நேரிடுகின்றது. மற்றபடி இதனால் ஏற்படும் மற்ற விஷயங்களையும், முறைகளையும் மற்றொரு சமயம் விவரிப்போம்.

['குடிஅரசு'—தலையங்கம்—12-8-1928]

அக்கிராசனரவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

ஒரு நாடு சுபிட்சத்துடன் வாழவேண்டுமானால், அந்நாட்டு மக்கள் ஒரே ஒழுக்கமுள்ளவர்களாக இருத்தல் அவசியம். ஒழுக்கமென்பதோ, கற்பென்பதோ ஆண் பெண் இருபாலாருக்கும் சொந்தமானதேயன்றி பெண்களுக்கு மட்டுமல்ல. இன்றையச் சீர்கேடான நிலைக்குப் பெண்மக்கள் மிருகங்களினும் கேவலமாகக் கருதப்பட்டதும், அவர்கள் பிள்ளை பெறும் இயந்திரங்களாக எண்ணப்பட்டதும், மனித ஜென்மத்துக்கும் பெண்களுக்கும் சம்பந்தமே இல்லை என ஆண்கள் மதித்து வந்ததும், இவைகளின் சவுகரியத்தினால் இவன் ஒழுக்கம் என்பதை விட்டுவிட்டு நாளாவட்டத்தில் வெகுதூரம் விலகி, அதற்கும் இவனுக்கும் சம்பந்தமில்லாது இன்று வாழ்வதுமே காரணமாகும்.

[ஈரோட்டில், 8-12-1929-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 22-12-1929]

அக்கிராசனரவர்களே! சகோதரிகளே! சகோதரர்களே!

பெண் மக்களை இன்று ஆண்கள் நடத்தும் மாதிரியானது, மேல் சாதிக்காரன் கீழ் சாதிக்காரனை நடத்துவதைவிட, பணக்காரன் ஏழையை நடத்துவதைவிட, எசமான் அடிமையை நடத்துவதைவிட மோசமானதாகும்.

அவர்கள் எல்லாம் இருவருக்கும் சம்பந்தமேற்படும் சமயங்களில் மாத்திரந்தான் தாழ்மையாய் நடத்துகின்றார்கள். ஆனால் ஆண்களோ பெண்களை பிறவி முதல் சாவு வரை அடிமையாயும் கொடுமையாயும் நடத்துகின்றார்கள். நாம் எல்லோரும் அடிமை வயிற்றில் பிறந்து அடிமைகளாய் வளர்க்கப்பட்டோம் என்பதை மறுக்கின்றீர்களா?

'நான் எத்தனை பெண்டாட்டி வேண்டுமானாலும் கட்டிக்கொள்ளுவேன்; நான் எத்தனை பெண்களை வேண்டுமானாலும் ஆசைநாயகிகளாக வைத்துக்கொண்டு அநுபவிப்பேன். ஆனால், பெண்ணாய்ப் பிறந்த நீ ஒரு புருஷன்தான் கட்டிக்கொள்ள வேண்டும்; அவன் செத்துப்போனாலும் புருஷன் என்பதாக ஒரு உயிர் உண்டு; ஆண் பெண் சேர்ந்து அனுபவிக்கும் இன்பம் என்பதாக ஒரு குணம் உண்டு என்பதை மறந்து விடவேண்டும் என்கிற விதி உண்டு. இதற்கும் கடவுள், மதம், முன் பிறவிப் பலன் சம்பந்தப்பட்டிருக்கிறது' என்பதான நியதி இருக்கிறது. இது மிகவும் அநீதியும் அக்கிரமுமான விஷயமாகும். இந்தக் கொள்கைகளை ஆண்கள் மாற்றிக்கொள்ளலாம் என்றும் பெண்கள் அப்படி மாற்றிக்கொள்ள நினைப்பது சுத்த முட்டாள்தனமாகும் என்றும் கருதப்படுகிறது.

ஆண்களைப் போலவே பெண்களும் செய்யத் தயாராக இருக்கவேண்டும். ஆண் இரண்டு வைப்பாட்டிகளை வைத்துக்கொண்டால், பெண்கள் 3 ஆசைநாயகர்களை வைத்துக்கொள்ள முற்படவேண்டும். உடனே நிலைமை சரிப்பட்டுப்போகும்; உண்மையான சமரசம் தோன்றிவிடும். பிறகு இருவருக்கும் கஷ்டமே இருக்காது. சிலர் இப்படிச் சொல்லுவது தப்பு என்றும், ஒழுக்கம் கெட்டுப்போகும் என்றும் ஆண்களுக்கு எவ்வளவு வேண்டுமானாலும் புத்தி சொல்லுங்கள் என்றும் சொல்ல வருவார்கள். ஆண்களுக்குப் புத்தி அனேக காலமாய்ச் சொல்லியாகிவிட்டது. கலியாணம் செய்துகொள்ளுவதே அடிமைப் பிரவேசம் என்றாய்விட்டது.

[கிரே நகரில், 26-1-1931-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 8-2-1931]

திருமணத்துக்குச் சம்பந்தப்படாத, 'கற்பு' என்பது ஒன்று பெண்கள்மீது மாத்திரம் சுமத்தப்பட்டிருக்கிறது. கற்பு என்பதை சுகாதாரத்தையும், சரீரத்தையும், பொது ஒழுக்கத்தையும் பொறுத்து நான் ஆதரிக்கிறேன் என்றாலும், இன்று அந்த முறையில் கற்பு கையாளப்படுவதில்லை. உதாரணம் என்னவென்றால் கற்பு ஆண்களுக்கு வலியுறுத்தப் படுவதில்லை என்பதிலிருந்தே இதை உணர்ந்து கொள்ளலாம். அதற்கு மேலும் உதாரணம் என்னவென்றால், இந்து கடவுள்கள் என்பவற்றுக்கும்கூட—ஆண் கடவுள்களுக்குக் கற்பு வலியுறுத்தப்படுவதில்லை. ஆதலால், அந்த—அதாவது 'ஒரு பிறவிக்கு ஒரு நீதி' என்கின்ற கற்பு முறை அடியோடு ஒழிக்கப்படவேண்டும்.

இந்தத் தனிஉடைமை தேசத்தில் இது ஒழிக்கப்படுவது என்பது சுலபத்தில் ஏற்படக் கூடிய காரியம் என்பது எனக்குத் தெரியவில்லை. ஏனெனில், பெண்களுக்குத்தான் கற்பு; ஆண்களுக்கு வலியுறுத்தக்கூடாது என்கின்ற தத்துவமே தனிஉடைமைத் தத்துவத்தைப் பொறுத்தது.

ஏன் என்றால், பெண் ஆணுடைய சொத்து என்பதுதான் இன்றைய மனைவி என்பவர்களின் நிலைமை.

எப்படியெனில், 'புருஷன் சம்பாதிக்கிறவன்; சம்பாதித்த பொருளுக்கு அவனே சொந்தக்காரன்; மனைவிக்குச் சோறுபோட்டு சேலை கொடுத்துக் காப்பாற்றுகிறவன்; மனைவி பெற்ற குழந்தைக்குத் தன் சொத்துக்களைக் கொடுக்கிறவன். குடும்ப பாரமும், குடும்பப் பொறுப்பும் ஏற்றுக்கொள்ளுகிறவன்; ஆகவே, அவனால் காப்பாற்றப்படுகிற—அவன்மீது பொறுப்பு விழுந்த—மனைவியை அடக்கி ஆள அவனுக்கு உரிமை உண்டு' என்பது இன்றைய சமுதாய முறைச் சட்டமாய் இருக்கின்றது.

சம்பாத்தனை, குடும்பப் பொறுப்பு, குழந்தைகள் பெற்றால் அதைக் காப்பாற்றும் திறமை ஆகியவைகள் ஒரு பெண்ணுக்கு ஏற்பட்டு, இத் திறமைகள் இல்லாத ஒரு புருஷனைக் கட்டிக்கொள்வதாய் இருந்தால் மாத்திரம், ஆண்களைப் பெண்கள் அடக்கி ஆளமுடியும்; முடியாவிட்டாலும் சம சுதந்திரமாகவாவது இருக்கமுடியும். இதில்லாமல் எவ்வளவு சுயமரியாதையும் சம சுதந்திரம் போதித்தாலும், பெண்களுக்குச் சம சுதந்திரமும்—கற்பும் என்பது ஒருநாளும் முடியக்கூடிய காரியமல்ல என்பதே எனது அபிப்பிராயம். அன்றியும் அப்படிப்பட்ட திறமை அற்றவர்களுக்குச் சம சுதந்திரம் அளிப்பதும் ஆபத்தான காரியம்தான்.

ஆதலால், பெண்கள் சுதந்திரம் இந்த மாதிரிக் கல்யாண காலங்களில் பேசி விடுவதாலோ, 'சுத்த' சுயமரியாதைமுறையில் திருமணம் செய்துவிடுவதாலோ ஏற்பட்டு விடாது.

தனிஉரிமை உலகில், பெண்கள் சுதந்திரம் வேண்டுமென்பவர்கள் பெண்களை நன்றாய்ப் படிக்கவைக்கவேண்டும். தங்கள் ஆண் பிள்ளைகளை இலட்சியம் செய்யாமல், பெண்களுக்கே செலவு செய்து படிக்க வைக்கவேண்டும். வாழ்க்கைக்கு ஏதாவது ஒரு தொழில் கற்றுக் கொடுக்கவேண்டும். தாய் தகப்பன்மார் பார்த்து ஒருவனுக்குப் பிடித்துக் கொடுப்பது என்று இல்லாமல், அதுவாக (பெண்ணாகவே பார்த்து) தகுந்த வயதும் தொழிலும் ஏற்பட்டபிறகு—ஒருவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படி செய்யவேண்டும். சுருக்கமாகச் சொன்னால் 'கன்னிகாதானம்,' 'கலியாணம்,' 'தாரா முகூர்த்தம்' என்கின்ற வார்த்தைகளே மறைந்து—அகராதியில்கூட இல்லாமல்—ஒழியவேண்டும். அன்றுதான் பெண்கள் சுதந்திரம் அனுபவிக்க லாயக்கு உள்ளவர்களாவார்கள்.

1, 2, 3 கூட எண்ணத் தெரியாத நிலையில் உள்ள பெண்களைக் கட்டிக்கொண்டு, அவர்களுக்குச் சுதந்திரம் கொடுப்பது என்றால் எப்படி முடியும் 'என்று யோசித்துப் பாருங்கள்.

[ஈரோட்டில், 28–2–1936-ல் சொற்பொழிவு—'குடிஅரசு' 1–3–1936]

தோழர்களே! தாய்மார்களே!

இன்றையதினம் ஒவ்வொரு குடும்பத்தையும் பாருங்கள்! பணம் சம்பாதிப்பது ஆண்கள். அவர்களுக்கு வேண்டிய வசதிகளை எல்லாம் பெண்கள் செய்து கொடுக்கிறார்கள். என்றாலும், அவருடைய இலட்சியம் என்ன? தான் தேடிவைக்கிற சொத்துக்கு வாரிசு வேண்டும்; அந்த வாரிசுக்கு இன்றையதினம் சில இடங்களிலே ஆணுக்குத்தான் வாரிசு என்று செய்துவிட்டார்கள்.

சொத்து உடைய தகப்பன் ஒருவன் இறந்துவிட்டால், அந்தச் சொத்து ஆணுக்குத் தான் சேரவேண்டும்; பெண்ணுக்கு இல்லை. மலையாள நாட்டைப் பொறுத்தவரையில் சொத்து பெண்களுக்குத்தான் சேரவேண்டும்; ஆணுக்கு இல்லை. அங்கே தாயார்தான் முக்கியம். அவர்களுக்குத் தகப்பனைப்பற்றிக் கவலையில்லை. அது அவர்களுடைய குற்றம்; அந்த நாட்டுப் பழமை (வளமை). அந்த நாட்டிலே இன்றையதினம் பெரிய ஜமீன்—இராஜா என்று சொல்லுகின்றவர்களை எடுத்துக்கொண்டு, 'உங்களுடைய

தகப்பன் யார்' என்று கேட்டால், 'ஒரு பார்ப்பான்' என்று பெருமையாகச் சொல்லுவார்கள். காரணம் என்ன? அவர்களுக்குத் தாயார்தான் முக்கியமே தவிர, தகப்பனைப்பற்றிக் கவலையே இல்லை. ஏன்? அங்கு சொத்து தாயாருக்குத்தான் உரிமை. அந்தச் சொத்துக்கு ஒருமகன் அந்தத் தாய் வயிற்றில் பிறந்திருக்க வேண்டும். ஆனதனால் அந்தந்த நாட்டுப் பழக்க வழக்கங்களுக்குத் தக்கவாறு சொத்துக்கு உரிமை பேசுகிறபோது, அந்தச் சொத்துக்குரிய தகப்பனுக்குப் பிறந்த பிள்ளையாகவே இருக்கவேண்டும் என்கிற அவசியம் வந்து விட்டது. அதற்கு ஏற்றபடியே சட்டங்கள் இருக்கின்றன. ஆனதனாலேதான் சொத்துக்கு வருகிற குழந்தை தன்னுடைய மனைவிக்குப் பிறந்ததாக இருந்தாலும், அவனுக்கே பிறந்தவனாக இருக்கவேண்டும்—என்று கட்டுக்காவல் ஏற்படுத்தவேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது.

பெண் சமுதாயத் துறையிலே வேறு வசதியில்லாமல், உரிமை இல்லாமல், அடிமையைப்போல நடத்தப்பட்டு விட்டபடியினாலே, ஏதோ சொத்துக்கு வாரிசான ஒரு பிள்ளை பெற்றுக்கொடுக்க வேண்டிய அவசியத்திற்கு ஆளாக்கப்பட்டுவிட்டாள்—இந்தத் திருமணமுறைமூலம். இதைத் தவிர மற்றபடி அவசியமே இல்லை.

[பெரம்பூரில், 11-2-1951-ல் சொற்பொழிவு—'விடுதலை' 17-2-1951]

## 2. கற்பொழுக்கம்

நமது முன்னோர்கள் வாழ்ந்ததைவிடச் சிறப்பாக வாழக் கற்றுக்கொள்வதே நாம் நமது முன்னோருக்குச் செய்யும் மரியாதை என ஒரு பெரியார் கூறியிருக்கிறார். சமூக முன்னேற்றத்தைப் பற்றிய கருத்துக்கள் பல திறப்பட்டனவாயிருக்கின்றன. முன்னோர்கள் முன்னேற்றத்தைப்பற்றிச் சிந்திக்கவே இல்லை. மேனாட்டாரைப் போலவே கீழ்நாட்டாரும் முன்னேற்ற விஷயத்தில் அலட்சியமாகவே இருந்துவந்தனர். உண்பது, உடுப்பது போன்ற புறத்தேவைகளில் அவர்கள் அதிகக் கவனம் செலுத்திவந்தனர். சீர்திருத்த உணர்ச்சியும் முன்னேற்ற உணர்ச்சியும் மிகச் சமீப காலத்திலே தோன்றின.

இப்பொழுதும் மிக்க ஆர்வமுடைய சீர்திருத்தவாதிகளும்கூட, சில குறிப்பிட்ட துறைகளிலே சீர்திருத்தம் செய்ய விரும்புகின்றனர். சர்வ வியாபகமான சீர்திருத்தங்களை விரும்புவோர் மிகச்சிலரே.

உலகமுழுதும் பொதுவாக இருந்துவரும் சமூக இலட்சியம் என்னவெனில், தமது முன்னோர்களைப்போல் வாழ்க்கை நடத்துவதே.

ஆனால், சமூக ஸ்தாபனங்கள் எல்லாம் குறைபாடுடையனவாகவே இருக்கின்றன. சீர்திருத்தம் தேவையில்லாத ஸ்தாபனங்களே இவ்வுலகத்தில் இல்லையென்று ஒப்புக் கொள்வதே உயர்வான இலட்சியம். ஒழுக்கம் மக்களால் ஏற்படுத்தப்பட்டது என்பதை இப் பொழுது அனேகமாக எல்லாரும் ஒப்புக்கொள்கிறார்கள். பழைமை விரும்பிகள், எப் பொழுதும் சீர்திருத்தத்தை எதிர்த்தே வருகிறார்கள். கற்பு அல்லது ஆண் பெண் ஒழுக்க விஷயமாகத் தற்காலம் இருந்துவரும் ஏற்பாடுகளே சரியானவை என்றும், அவைகளை மாற்றினால் சமூகமே அழிந்துவிடும் என்றும் அவர்கள் வாதிக்கிறார்கள்.

எனவே, தற்காலம் அமலில் இருந்துவரும் ஆண்-பெண் ஒழுக்கம் சம்பந்தமான ஏற்பாடுகளைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம்.

'கற்பு உணர்ச்சி' உலகம் முழுவதும் ஒரேசீராக இருக்கவில்லை. ஒரு தேசத்தில் நல்லொழுக்கமென மதிக்கப்படுவது வேறொரு தேசத்தில் கூடாவொழுக்கமாக எண்ணப் படுகிறது. பொதுவாக, பெண் புருஷனின் அடிமை என்றும், போகப் பொருள் என்றும்,

அவளைப் புருஷன் என்ன வேண்டுமானாலும் செய்துகொள்ளலாம் என்றும் உலக மக்கள் ஒருகாலத்தில் நம்பியே வந்திருக்கின்றனர்.

ஆஸ்திரேலியாவிலே பெண்கள் அடிமைகளிலும் கடையராக வாழ்ந்து வந்திருக்கிறார்கள். பெண்களை புருஷர்கள் மிகக் கொடுமையாக நடத்தினார்கள்; மிருகத்தனமாக இம்சித்தார்கள். பெண்கள் சுந்தரிகளாக இருந்துவிட்டாலோ அவர்கள் பாடு அதோ கதிதான்.

ஆப்பிரிக்கப் பெண்கள் நிலைமையும் மிக்க பயங்கரமாகவே இருந்து வந்திருக்கின்றது. புருஷன் சொத்தாகவே பெண் இருந்துவந்திருக்கிறாள். தன்னிஷ்டப்படி அவளை உபயோகித்துக்கொள்ள புருஷனுக்குப் பூரண சுதந்திரம் இருந்துவந்திருக்கிறது.

இமாலயப் பிரதேசத்திலுள்ள ஒரு சாதியார் திபெத்தியர் வழக்கத்தைப் பின்பற்றி வருகிறார்கள். பண்டங்களை விற்பதுபோல் அவர்கள் பெண்களை விற்பனை செய்து வருகிறார்கள். ஒரு பெண்ணுக்கு ஏககாலத்துப் பல புருஷர்கள் கணவன்மாராக இருந்து வருகிறார்கள். தகப்பன் புத்திரிகளைத் தாராளமாக விற்கிறான். அதோடு மட்டுமல்லாமல், தங்கள் மனைவிகளை யாருக்கு வேண்டுமானாலும் வாடகைக்கு விடுகிறார்கள்.

நியூஜீலந்து வழக்கம் கொடியதாயிருப்பதுடன் விநோதமாகவும் இருக்கிறது. தந்தை தன் மகளையும், சகோதரன் தன் சகோதரியையும் வேறொருவனுக்கு விவாகம் செய்து கொடுக்கும்போது, 'அவள் உனக்கு திருப்தியளிக்கவில்லையானால் அவளை நீ விற்றுவிடு; அல்லது கொன்றுவிடு; அல்லது தின்றுவிடு; நீயே அவளுக்கு எஜமான்; அவளை உன் இஷ்டப்படி என்ன வேண்டுமானாலும் செய்யலாம்' என்று கூறுவார்களாம். காட்டாள சாதியார் பழக்க வழக்கங்கள் இவ்வாறாக, நாகரிக மக்கள் நிலைமை எவ்வாறு இருந்திருக்கிற தெனப் பார்ப்போம்.

ரோமாபுரியில் ஆதிகாலத்திலே, கணவனுடைய குடும்பத்தின் பொதுச் சொத்தாக—பொது அடிமையாகப் பெண் மதிக்கப்பட்டு வந்தாள். காட்டோ என்ற நல்லொழுக்க முடைய பெரியார் தன் மனைவி மரேஷியாவைத் தன் நண்பன் ஹார்ட்டன்சியக்கு இரவலாகக் கொடுத்து, அவன் இறந்தபின்பு அவளைத் திரும்பப் பெற்றுக்கொண்டாராம். ரோமர் கலியாண முறை ஒரு அடிமை ஒப்பந்தமாகவே இருந்து வந்தது. பெண் தன் ஆயுட்காலம் முழுதும் கனவனது அடிமையாகவே மதிக்கப்பட்டு வந்தாள்.

ஆங்கிலப் பெண்கள் நிலைமையும் ஆதியில் மிக மோசமாகவே இருந்துவந்தது. புருஷன் தன் மனைவியை மனங்கொண்டமட்டும் அடிக்கலாம். ஆனால், பெருவிரலை விடப் பருமனான தடியால் அடிக்கக்கூடாது. இந்தப் புராதன கொடிய வழக்கம் சில இடங்களில் இப்பொழுதும் வெகு அபூர்வமாக இருந்தேவருகிறது. பெண்களின் துயரத்தைக் குறைக்கும் சட்டங்கள் தோன்றியபோதெல்லாம் பழமைவிரும்பிகள் மிக வன்மையாக எதிர்த்தே வந்தனர். அத்தகைய எதிர்ப்பு நெடுங்காலம் மிக வன்மையாக இருந்து வந்ததாயினும் காலஞ் செல்லச் செல்ல மாற்றங்கள் ஏற்பட்டே வந்தன.

தகப்பன் மகளைத் தீண்டுவதும், சகோதரன் சகோதரியைத் தொடுவதும் பயங்கர அநாசாரமான பாபச் செயலாக இப்பொழுது மதிக்கப்பட்டுவருகிறது.

ஆனால், கி. மு. 66-ல் அரேபியாவிலே சகோதரர், சகோதரிகளையும்; புத்திரர் தாய்மாரையும் பெண்டாண்டுவந்ததாக ஸ்ட்ராபோ என்பார் கூறுகிறார். வமிச விருத்திக்காக முறை கேடான புணர்ச்சி உலகமுழுதும் அனுமதிக்கப்பட்டேவந்திருக்கிறது.

பிரம்மா தன் புத்திரியான சரஸ்வதியை மணஞ்செய்து கொண்டாராம். எகிப்திய தேவனான அம்மன் தன் தாயை மனைவியாக்கிக் கொண்டானாம். ஒடின் என்ற தேவன்

தன் புத்திரி பிரிக்காவை மனைவியாக்கிக் கொண்டானாம். ஜனுபிட்டர் தன் சகோதரி ஜூனோவை விவாகம் செய்துகொண்டான். இந்தியாவிலும் சில சாதியாருக்கு சகோதரர் சகோதரிகளை மணந்துகொள்ளும் வழக்கம் இப்பொழுது இருந்தேவருகிறது.

ஒரு காலத்திலே ஆணும் பெண்ணும் தன் இஷ்டப்படி கண்டபடி புணர்ந்தே வந்தார்கள். 'ஒரு புருஷன் ஒரு பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ளலாம். ஆனால் அவளைச் சேர எல்லாப் புருஷர்களுக்கு உரிமையுண்டு' என ஹெராடாட்டஸ் கூறியிருக்கிறார். லீசியார், எட்ரூஸ் கானர், சிரீட்டர், அத்தீனியர், லெஸ்பெயின்கள், எகிப்தியர் முதலியவருக்குள் பண்டு ஆண்களும் பெண்களும் தத்தம் இஷ்டப்படி வரையரையின்றிப் புணரும்வழக்கம் இருந்துவந்தது என பாச்சோபின் என்பார் தக்க ஆதாரங்களுடன் விளக்கிக்காட்டியிருக்கிறார். பெண்கள் பருவமடைந்த பிறகு ஏதேனும் ஒரு ஆலயத்துக்குச் சென்று யாரேனும் ஒரு இளைஞனைத் தேடிப் பிடித்துக் கூடி கன்னி கழித்துக் கொள்ள வேண்டியது, பாபிலோன் நகரத்திலே ஒரு புனிதமான மதச்சடங்காக மதிக்கப்பட்டு வந்தது. மெம்பிஸ், அர்மீனியா, டயர்சி டொன் முதலிய பிரதேசங்களிலும் அந்த அநாச்சாரம் இருந்து வந்திருக்கிறது. லிபியன் கன்னிப் பெண்கள் தங்களுக்கு இஷ்டமானவரைக் கூடி சீதனத்துக்கு வேண்டிய பணத்தைச் சம்பாதித்தார்கள். விவாகத்துக்கு முன் அவர்களுக்கு புணர்ச்சி சுதந்திரம் இருந்துவந்தது. எனவே பல பேரைக் கூடி அதிகப் பணம் சம்பாதித்தவர்களையே எல்லோரும் மணக்க விரும்பினர். தாரசிய சாதியாருக்குள்ளும் இவ்வழக்கு இருந்து வந்ததாக ஹெராடாட்டஸ் கூறுகிறார். எகிப்திய இராஜ குமாரி ஒருத்தி விபச்சாரம் செய்து பணம் சம்பாதித்துத் தனக்கென ஒரு கோபுரம் (Pyramid) கட்டிக் கொண்டதாகவும் தெரியவருகிறது.

மார்கு ஸாஸ், பிலிப்பைன், பொலினிஷியத் தீவுகளிலுள்ள சில பிரதேசங்களிலும் ஆப்பிரிக்காவில் சில சாதியாருக்குள்ளும் பெண்களுக்கு இப்பொழுதும் புணர்ச்சி சுதந்திரம் இருந்தே வருகிறது. கலியாண தினத்தன்று பெண்ணின் பந்துக்களான புருஷர்கள் எல்லாம் அப்பெண்ணைக் கூடும் வழக்கம் பாலியரிக் தீவுகளில் மிகச் சமீபகாலம் வரை இருந்துவந்தது. சில சாதியார், எல்லாப் புருஷர்களுக்கும் ஒரு பெண்ணைச் சேர உரிமையுண்டென்பதற்கு அறிகுறியாக, எல்லாருக்கும் பொதுவான சாதித் தலைவர்களோ குல குருவோ அப்பெண்ணைக் கூட அனுமதிக்கிறார்கள். மலையாளத்திலே ஒரு சாதியார் தம் மனைவிமாருக்கு கன்னி கழிக்க மத குருமாரை ஏற்படுத்துகிறார்கள். இந்தியாவின் அனேக பிரதேசங்களிலும், பசிபிக் மகாசமுத்திரத்திலுள்ள சில தீவுகளிலும் இவ்வழக்கம் இப்பொழுதும் அனுஷ்டானத்திலிருந்து வருகிறது. செனிகாப்பியாவில் சாதித் தலைவன் அந்தப் புண்ணிய கருமத்தை நடத்தி வருகிறான். சில பிரதேசங்களிலே கன்னிகழிக்க விக்கிரகங்களை உபயோகப்படுத்துகிறார்கள். இவ்வழக்கங்களைப் பின்பற்றியே அய்ரோப்பாவிலும் மத்தியகாலம் வரை, முதலில் புணரும் உரிமை குறிப்பிட்ட சிலருக்கு இருந்து வந்தது.

ஆண்-பெண் ஒழுக்க ஏற்பாடுகளை நாம் நுட்பமாக ஆராய்ந்து பார்த்தால், அவை யாவும் ஏதேனும் ஒரு முறையில் ஒரு மதக் கொள்கையைத் தழுவி நிற்பதைக் காணலாம். எனவே, ஆண்-பெண் ஒழுக்கக் கொள்கைகளையும் ஆச்சாரங்களையும் நாம் பரிசீலனை செய்யும்போது அந்த விஷயம் மிகவும் சிக்கலானது என்பதையும் விசாலமானது என்பதையும் நாம் முக்கியமாக ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். நம்முடைய ஒழுக்க முறையே மேலானதென்று கண்ணை மூடிக்கொண்டு முடிவு கட்டிவிடலாகாது. மற்ற கால ஆசாரங்களை நுட்பமாக ஆராய்ந்து பார்த்தால்தான் நாம் ஆராய்ச்சி செய்ய வேண்டிய முறை புலனாகும்.

தற்காலக் கிறிஸ்தவக் கற்பொழுக்கத் திட்டங்களுக்குப் புதிய ஏற்பாட்டைத் தழுவிய பழைய ஏற்பாட்டு ஒழுக்க முறைகளும் அவைகளின் பாஷ்யங்களுமே ஆதாரமாகும்.

ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழ்வதைப் பழைய ஏற்பாடு ஆதரிக்கிறது. 'புருஷன் தனிமையாக இருப்பது நல்லதல்ல. நான் அவனுக்கு ஒரு வாழ்க்கைத் துணையை உண்டு பண்ணுவேன்' என்று சொல்லி, ஆணையும் பெண்ணையும் சிருஷ்டித்து, கடவுள் ஜோடி சேர்த்ததாகப் பழைய ஏற்பாடு கூறுகிறது. மற்றும் ஆணையும் பெண்ணையும் கடவுள் ஆசீர்வதித்து 'நீங்கள் பெற்றுப் பெருகி உலகத்தை நிரப்புங்கள்' என்று கட்டளையிட்டானாம். கிறிஸ்தவ ஒழுக்கங்களை வகுத்த ஆதிக் கிறிஸ்தவ ஞானிகள் பிரம்மச்சரியத்தைப் பாராட்டிப் பேசியிருந்தாலும், கிறிஸ்து மதத்துக்கு ஆதாரமான ஹிப்ரு மதம் பிரம்மச்சரியத்தை ஆதரிக்கவில்லை. ஒரு புருஷன் பல பெண்களை மனைவியாகக் கொள்வதைப் பழைய ஏற்பாடு ஆதரிக்கிறது. ஆதாமின் ஏழாம் தலைமுறையான லாமெத்து இரண்டு பெண்களை மணந்திருக்கிறான். தலைமைப் பூசாரி ஒரே பெண்ணைத்தான் மணக்கவேண்டுமென்று பழைய ஏற்பாடு வற்புறுத்தியிருக்கிறது. அரசன் பல பெண்களை மணத்தல் கூடாதென்றும் கட்டளையிட்டிருக்கிறது. எனினும், பல அரசர்கள் அதை மதிக்கவில்லை. தாவீது அரசன் பல பெண்களை மணந்தான். சாலமோன் அரசனுக்கு 700 மனைவிமாரும் 300 வைப்பாட்டிகளும் இருந்தார்கள். ஆபிரகாம் தன் சிற்றப்பன் மகளைக் கலியாணம் செய்துகொண்டான். ஒருவன் இறந்தால் அவனது விதவையை அவன் தம்பி கலியாணம் செய்துகொள்ள வேண்டுமென்று 'லெவியட் சட்டம்' வற்புறுத்துகிறது. ஆபிரகாம் தன் மனைவியின் வேலைக்காரியைக் கூடிப் பிள்ளை பெற்றான். ஜேக்கப் இரண்டு சகோதரிகளை மணந்துகொண்டதுடன், அவர்களுடைய வேலைக்காரிகளையும் வைப்பாட்டியாக வைத்துக்கொண்டான்.

ஹிப்ரு சட்டப்படி, கணவனுக்கு அடிமையாகவே மனைவி இருந்தாள். மனைவியைக் கணவன் இம்சித்தால், சட்டப்படி அவளுக்குப் பரிகாரமில்லை. கணவனுக்கு மட்டும் விவாக விடுதலை உரிமையளிக்கப்பட்டிருந்தது. புருஷனுக்குப் பிடிக்காத பெண்ணை அவன் வீட்டைவிட்டு விரட்டலாம். அவள் அப்பால் விருப்பமுள்ளவனைக் கூடி வாழலாம். கணவன் மனைவியை நீக்கும்போது தன் கைப்பட ஒரு அறிக்கை எழுதி வெளியிட வேண்டும்.

தந்தைக்குத் தன் குழந்தைகள்மீது பூரண அதிகாரம் இருந்துவந்தது. குழந்தைகளைக் கொல்லவும் கூட அவனுக்கு உரிமை இருந்தது; புத்திரிகள்மீதும் பூரண சுதந்திரம் இருந்து வந்தது; அவன் புத்திரிகளை விற்பனை செய்யலாம்; விபச்சாரம் செய்யக்கூடாதென்று பத்துக் கற்பனைகளில் ஒரு விதி இருக்கிறது. மனைவி கணவனின் சொத்தாகையினால், அவளைப் பிறர் உபயோகப்படுத்தக்கூடாதென்பதே அத் தடையின் கருத்து. 'ஒரு மனிதன் தன் அயலான் மனைவியோடாவது பிறன் மனைவியோடாவது விபச்சாரம் செய்தால், விபச்சாரம் செய்த ஆணுக்கும் பெண்ணுக்கும் மரண தண்டனை விதிக்க வேண்டும்' என்று கூறப்பட்டிருக்கிறது. ஆனால், ஒரு கன்னிப்பெண் வேறொரு பெண்ணின் கணவனோடு சேர்ந்தால், அவளுக்குத் தண்டனை வழங்குவதைப்பற்றி எதுவும் கூறப்படவில்லை. விபச்சாரம் ஒரு குற்றமென்று பழைய ஏற்பாடு விதித்திருந்தாலும், அக் காலத்தில் விபச்சாரம் தாராளமாக நடைபெற்றே வந்திருக்கிறது.

லாட் என்பான் வீட்டுக்கு இரண்டு விருந்தாளிகள் வந்தனர். அவர்களை வரவேற்று அவன் உபசாரம் செய்தான். ஆனால், அவ்விருந்தாளிகளை வெளியேற்ற வேண்டுமென்று ஊரார் கேட்டுக்கொண்டார்கள். எனினும் லாட் இணங்கவில்லை. அதிதிகளை விரட்டுவது மகா பாபமென எண்ணினான். எனவே, அதிதிகளை ஊரார் தொந்தரவு செய்யாதிருந்தால் தன் இரண்டு புத்திரிகளையும் ஊராருக்கு வழங்கி விடுவதாக லாட் கூறினான். தன் புத்திரிகளின் கற்பைவிட அதிதி சத்காரமே அவனுக்குப் பெரிதாகத் தோன்றிற்று. இதனால் அக்காலத்துப் பெண்களின் நிலைமை எவ்வளவு இழிவாக இருந்ததென்று விளங்கவில்லையா?

கிறிஸ்துவின் உபதேசங்களைக் கேட்டால் நாம் கனவுலகத்தில் இருப்பதுபோலவே தோன்றும். 'ஒரு பெண்ணைக் காமக்கண்ணால் நோக்குபவன் மனத்தினால் விபச்சாரம் செய்கிறான்' என்று கிறிஸ்து கூறுகிறார். ஆனால், இது அனுபவ சாத்தியமான உபதேசமல்ல. மனத்தினால் விபச்சாரம் செய்கிறவர்களுக்கெல்லாம் சர்க்கார் தண்டனையளித்தால் உலக விடுதலையைப்பற்றிய கிறிஸ்துவின் உபதேசம் மிகவும் கண்டிப்பானதுதான். 'விபச்சார தோஷத்துக்கு ஆளாகாத பெண்களை விவாக விடுதலை செய்பவன் அவன் விபச்சாரம் செய்யும்படி தூண்டுகிறான். விவாக விடுதலை பெற்ற பெண்களை விவாகம் செய்கிறவனும் விபச்சாரம் செய்கிறவனாகிறான்' எனக் கிறிஸ்து கூறுகிறார். இது உயர்வான இலட்சியந்தான். ஆனால், அக்கால மக்களுக்கு அது பொருத்தமானதல்ல. இன்றும் ஆண்களும் பெண்களும் அதைப் பின்பற்ற முடியாத நிலையிலேயே இருக்கிறார்கள். மணவினைகள் சுவர்க்கத்தில் நடைபெற்றால் அவைகளை ரத்து செய்ய நமது நீதி ஸ்தலங்களுக்கு ஒருகால் அதிகாரமில்லாது இருக்கலாம். ஆனால், மண்ணுலகத்தில் நடைபெறும் கல்யாணங்களை ரத்து செய்ய நமது நீதி ஸ்தலங்களுக்கு அதிகாரமிருந்து தான் ஆக வேண்டும்.

மேலும், கிறிஸ்துவின் போதனை பழைய ஏற்பாட்டின் முதல் ஆகமத்துக்கு முரணானதாகவே இருக்கிறது. இல்லறத்தை கிறிஸ்து பாராட்டவில்லை. எல்லாரும் இல்லற வாழ்க்கை நடத்தவேண்டுமென்று அவர் கூறவில்லை. பிரமச்சரியத்தையே அவர் ஆதரிக்கிறார். கிறிஸ்து உபதேசப்படி எல்லாரும் பிரமச்சாரிகளாயிருந்தால் வெகு சீக்கிரத்தில் உலகம் காலியாகிவிடுமென்று நாம் கூறவும் வேண்டுமா?

அது ஒரு பயங்காளித்தனமான போதனை எனினும், அது உலகம் முழுதும் பரவியிருக்கிறது. அது பெண்ணுலகத்தை அவமதிக்கிறது; காதலைக் கேவலப்படுத்துகிறது. மனோகற்பிதமான சுவர்க்கத்தை யடையும் பொருட்டு ஆண்கள் எல்லாம் ஆண்மையை இழந்துவிட வேண்டுமென்று வற்புறுத்துகிறது. பெண்கள் எல்லாம் தேவாலயத்தில் மவுனமாக இருக்கவேண்டுமென்றும், புருஷர்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டுமென்றும் கணவன்மாரின் கட்டளைகளை மீறக் கூடாதென்றும் பால் கூறுகிறார். ஏனெனில், கிறிஸ்து ஆத்மாவின் இரட்சகனாயிருப்பதுபோல, கணவன் மனைவியின் உடலின் இரட்சகனாயிருக்கிறானாம். ஆகவே, ஆதிக் கிறிஸ்தவர்கள் பெண்ணுலகத்தை அவமதித்தே வந்தார்கள்; பிரமச்சரியத்தையே மேலானதாக மதித்தார்கள். இல்லறம் இரண்டாம் பட்சமாகவே மதிக்கப்பட்டது.

மற்றும், பெண் அசுத்தமானவள் என்றும், ஆண்களைத் தப்பு வழியில் செலுத்துகிறவள் என்றும், மக்கள் வீழ்ச்சிக்குக் காரணமானவள் என்றும் பழைய ஏற்பாடு கூறுகிறது. 'பெண்ணே! நீ நரகத்தின் வாயாய் இருக்கிறாய்' என டெர்ட்டுலியன் கூறியிருக்கிறார். 'கலியாணம் ஒரு சாபத்தீடு' என வேறொரு ஞானி கூறுகிறார். பெண் விரைவாக வளரும் ஒரு களை யென்றும் அசுத்தமானவள் என்றும் 13-வது நூற்றாண்டில் வாழ்ந்த வேறொரு கிறிஸ்தவ ஞானி கூறியிருக்கிறார்.

பெண்ணுலகத்தை கிறிஸ்து மதம் மட்டும் இழிவாகக் கூறவில்லை. 'பெண்கள் அவமானத்துக்கு இருப்பிடமானவர்கள், அவர்களைப் பார்க்கவும் கூடாது' என இந்துக்களின் மனுதர்மம் கூறுகிறது.

தத்துவ முறையில் பார்த்தால், தற்கால கிறிஸ்துவ ஒழுக்கத் திட்டங்கள் மிகவும் உயர்வானவைதான். ஆனால், அவை அனுபவ சாத்தியமானதல்ல. சுவர்க்க போகத்துக்காக ஆண் தன்மையை இழந்தவனே கிறிஸ்து மதக் கொள்கைப்படி மேலானவனாகக் கருதப்படுகிறான். இல்லறம் இரண்டாம் பட்சமாகவே கருதப்படுகிறது. விபச்சார தோஷம் ஏற்பட்டால்தான் விவாக விடுதலையுண்டு. விபச்சாரத்துக்கு கிறிஸ்து மதத்

திட்டத்தில் இடமே இல்லை. சுமார் 19 நூற்றாண்டு காலம் இந்த ஒழுக்கத் திட்டம் அமலில் இருந்தே வருகிறது. ஆனால், அந்தத் திட்டத்தினால் ஏற்பட்ட பலன் என்ன என்பதையே நாம் இப்பொழுது முக்கியமாகக் கவனிக்கவேண்டும். சரியாக வேலை செய்யும் திட்டங்கள் எல்லாம் உத்தமமானவை என்று கூறப்படுவதுண்டு. கிறிஸ்துவ ஒழுக்கத் திட்டப்படி நடக்க கிறிஸ்தவர்கள் ஒரு சிறிதாவது முயன்றிருந்தால், அந்தத் திட்டத்துக்கு ஒருவாறு மதிப்புக் கொடுக்கவேண்டியதுதான். ஆனால், அந்த இலட்சியத்தையடைய நாம் முயற்சியே செய்யாது இருந்தால், அந்த இலட்சியத்தில் ஏதோ கோளாறு இருக்கிறது என்றுதான் முடிவு கட்டவேண்டும்.

அந்த இலட்சியத்தை உயர்த்த அறிவாளிகள் எல்லாம் எதிர்க்கிறார்கள். இந்திரிய நிக்கிரகம் அவ்வளவு உயர்வான சீலமல்லவெனக் கூறுகிறார்கள். ஏக பத்தினி விரதம் விபசாரத்துக்கும் மற்றும் எண்ணற்ற முறைகேடான புணர்ச்சிக்கும் இடமளிக்கிறது. கிரியாம்சையில் அதனால் என்ன பலன் ஏற்பட்டிருக்கிறதென இனி ஆராய்ந்து பார்ப்போம்.

['பகுத்தறிவு'—கட்டுரை—1936 மலர் 1, இதழ் 3]

## 3. கற்பு

கற்பு என்கின்ற வார்த்தையைப் பகுபதமாக்கிப் பார்ப்போமானால்—கல் என்பதிலிருந்து வந்ததாகவும் அதாவது, படி—படிப்பு என்பதுபோல், கல்—கற்பு என்கின்ற இலக்கணம் சொல்லப்பட்டு வருகிறது. அன்றியும், 'கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை' என்கின்ற வாக்கியப்படி பார்த்தால் 'கற்பு' என்பது சொல் தவறாமை—அதாவது, நாணயம், சத்தியம், ஒப்பந்தத்திற்கு விரோதமில்லாமல் நடப்பது—என்கிறதான கருத்துக்கள் கொண்டதாக இருக்கின்றது.

அதைப் பகாப் பதமாக வைத்துப் பார்த்தால், மகளிர் நிறை என்று காணப்படுகின்றது. இந்த இடத்தில் மகளிர் என்பது பெண்களையே குறிக்கும் பதமாக எப்படி ஏற்பட்டது என்பது விளங்கவில்லை. நிறை என்கின்ற சொல்லுக்குப் பொருளைப் பார்த்தால் அழிவின்மை, உறுதிப்பாடு, கற்பு என்கின்ற பொருள்களே காணப்படுகின்றன. கற்பு என்பது பெண்களுக்கு மாத்திரம் சம்பந்தப்பட்டது என்பதற்குத் தக்க ஆதாரம் கிடைக்காவிட்டாலும்—அழிவில்லாதது, உறுதியுடையது என்கின்ற பொருள்களே காணக்கிடக்கின்றன.

அழிவில்லாதது என்கின்ற வார்த்தைக்குக் கிரமமான கருத்துப் பார்க்கும்போது, இந்த இடத்தில் சுத்தம்—அதாவது கெடாதது, மாசற்றது என்பதாகத்தான் கொள்ளலாம். இந்த சுத்தம் என்கின்ற வார்த்தையும், கெடாதது என்கின்ற கருத்தில்தான் ஆங்கிலத்திலும் காணப்படுகிறது. அதாவது, 'சேஸ்டிடி' (Chastity) என்கின்ற ஆங்கில வார்த்தைப்படி பார்த்தால் 'வர்ஜினிட்டி' (Virginity) என்பதே பொருளாகும். அதை, அந்தப் பொருளின்படி பார்த்தால், இது ஆணுக்கென்றோ, பெண்ணுக்கென்றோ சொல்லப்படாமல், பொதுவாக மனித சமூகத்திற்கே—எவ்வித ஆண்–பெண் புணர்ச்சி சம்பந்தமே சிறிதுமில்லாத பரிசுத்தத் தன்மைக்கே உபயோகப்படுத்தப்பட்டு இருக்கின்றது என்பதைக் காணலாம். ஆகவே, கற்பு என்பது பெண்களுக்கு மாத்திரம் சம்பந்தப்பட்டதல்ல என்பதும், அதுவும் ஆணோ, பெண்ணோ ஒரு தடவை கலந்தபிறகு, எவ்வளவு சுத்தமாயிருந்தாலும் கற்பு போய்விடுகிறது என்கின்ற கருத்து கொள்ளக்கூடியதாயுமிருக்கின்றது.

ஆனால், ஆரிய பாஷையில் பார்க்கும்போது மாத்திரம், 'கற்பு' என்கின்ற பதத்திற்குப் பதிவிரதை என்கின்ற பொருள் கொள்ளப்படுகின்றது. இந்த இடத்தில்தான் கற்பு என்கின்ற வார்த்தைக்கு அடிமைக் கருத்து நுழைக்கப்படுகின்றது என்பது எனது அபிப்பிராயம். அதாவது,—பதியைக் கடவுளாகக் கொண்டவள், பதிக்கு அடிமையாய்

இருப்பதையே விரதமாகக் கொண்டவள், பதியைத்தவிர வேறு யாரையும் கருதாதவள்—எனப் பொருள் கொடுத்திருப்பதுடன், 'பதி' என்கின்ற வார்த்தைக்கு அதிகாரி, எஜமான், தலைவன் என்கின்ற பொருள்களிருப்பதால் அடிமைத்தன்மையை இவ் வார்த்தைகள் பலப் படுத்துகின்றன. ஆனால், தலைவி என்ற பதத்திற்கும் நாயகி என்கின்ற பதத்திற்கும் மனைவி என்கின்ற பொருள் குறிக்கப்பட்டிருப்பதாலும், அது அன்பு கொண்ட நிலையில் மாத்திரம் ஆணையும் பெண்ணையும் குறிக்கின்றதேயொழிய, வாழ்க்கையில் கட்டுப்பட்ட பெண்களுக்கு 'தலைவி' என்கின்ற வார்த்தை, அதன் உண்மைக் கருத்துடன் வழங்கப் படுவதில்லை. நாயகன், நாயகி என்கின்ற சமத்துவமுள்ள பதங்களும் கதைகளிலும், புராணங்களிலும் ஆண்-பெண் இச்சைகளை உணர்த்தும் நிலைகளுக்கே மிகுதியும் வழங்கப் படுகின்றன. ஆகவே, காமத்தையும் அன்பையும் குறிக்குங் காலங்களில் சமத்துவப் பொருள் கொண்ட நாயகன்-நாயகி தலைவர்-தலைவி என்கின்ற பதங்களை உபயோகித்து விட்டு, கற்பு என்கின்ற நிலைக்கு வரும்போது அதைப் பெண்களுக்கு மாத்திரம் சம்பந்தப் படுத்தி, 'பதி' ஆகிய எஜமானனையே கடவுளாகக் கொள்ளவேண்டுமென்ற கருத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது.

இந்த இடத்தில் நமது திருவள்ளுவரின் நிலைமையும் எனக்குச் சற்று மயக்கத்தையே தருகின்றது. அதாவது, குறளில் வாழ்க்கைத் துணை நலத்தைப்பற்றிச் சொல்லவந்த 6ஆம் அத்தியாயத்திலும், பெண்வழிச் சேறல் என்பதைப்பற்றிச் சொல்லவந்த 91ஆம் அத்தியாயத்திலும், மற்றுஞ் சில தனியிடங்களிலும் பெண்கள் விஷயத்தில் மிக்க அடிமைத் தன்மையையும், தாழ்ந்த தன்மையையும் புகுத்தப்பட்டிருப்பதாகவே எண்ணக் கிடக்கின்றது. 'தெய்வத்தைத் தொழாமல் தன் கொழுநனாகிய தன் தலைவனைத் தொழு கின்றவள்,—மழையைப் பெய்யென்றால் பெய்யும்' என்றும், தன்னைக் கொண்டவன் என்றும்–இம் மாதிரியான பல அடிமைக் குகந்த கருத்துக்கள் கொண்ட வாசகங்கள் காணப் படுகின்றன. இவ்விஷயத்தில் மாறுபட்ட அபிப்பிராயம் கொள்ளுவோர் மேற்கண்ட இரண்டு அத்தியாயங்களையும்—20 குறட்பாக்களையும்—உரைகளைக் கவனியாமல் மூலத்தை மாத்திரம் கவனிக்கும்படி வேண்டுகிறேன். அப்படிப் பார்த்த பிறகு, இந்த இரண்டு அதிகாரங்களும்—அதாவது, 'வாழ்க்கைத் துணைநலம்' அதிகாரமும் 'பெண்வழிச்சேறல்' அதிகாரமும் குற்றமற்றவையென்பதாக யார் வந்து எவ்வளவு தூரம் வாதிப்பதானாலும்—கடைசியாக திருவள்ளுவர் ஒரு ஆணாக இருந்திராமல் பெண்ணாக இருந்து இக் குறளை எழுதியிருப்பாரானால் இம் மாதிரிக் கருத்துக்களைக் காட்டியிருப்பாரா என்பதையாவது கவனிக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறேன். அதுபோல, பெண்களைப் பற்றிய தர்ம சாஸ்திரங்கள் என்பனவும் பெண்களைப் பற்றிய நூல்கள் என்பனவும் பெண்களால் எழுதப் பட்டிருக்குமானாலும்—அல்லது கற்பு என்கின்ற வார்த்தைக்குப் பெண்களால் வியாக்கியானம் எழுதப்பட்டிருந்தாலும்—கற்பு என்பதற்கு 'பதிவிரதம்' என்கின்ற கருத்தை எழுதியிருப்பார்களா என்பதையும் யோசித்துப் பார்க்கும்படிக் கேட்டுக்கொள்ளு கிறேன்.

கற்பு என்பதற்குப் பதிவிரதம் என்று எழுதிவிட்டதன் பலனாலும், பெண்களைவிட ஆண்கள் செல்வம், வருவாய், உடல்வலி கொண்டவர்களாக ஆக்கப்பட்டுவிட்டதனாலும், பெண்கள் அடிமையாவதற்கும்; புருஷர்கள் மூர்க்கர்களாகிக் கற்பு என்பது தங்களுக்கு இல்லை என்று நினைப்பதற்கும் அனுகூலம் ஏற்பட்டதே தவிர வேறில்லை.

தவிர, புருஷர்கள் கற்புடையவர்கள் என்று குறிக்க நமது பாஷைகளில் தனி வார்த்தைகளே காணாமல் மறைபட்டுக் கிடப்பதற்குக் காரணம்—ஆண்களின் ஆதிக்கம் தவிர வேறில்லை.

இந்த விஷயத்தில், உலகத்தில் ரஷ்யா தவிர வேறு நாடோ, வேறு மதமோ, வேறு சமூகமோ யோக்கியமாய் நடந்துகொண்டிருக்கிறது எனச் சொல்லமுடியாது. உதாரணமாக

அய்ரோப்பிய தேசத்தில் பெண்களுக்குப் பலவித சுதந்திரங்கள் இருப்பதுபோல் காணப் பட்டாலும், புருஷர்கள் பெண்சாதி என்பதற்காக ஏற்பட்ட பதங்களிலேயே உயர்வு, தாழ்வு கருத்துக்கள் நுழைக்கப்பட்டிருப்பதுடன், சட்டங்களும் புருஷனுக்கு அடங்கி நடக்க வேண்டியதாகவே ஏற்பட்டிருக்கின்றன.

மற்றும், சில சமூகங்களில் 'பர்தா' என்றும் 'கோஷா' என்றும், 'திரை' என்றும் அதாவது பெண்கள் அறைக்குள்ளிருக்கவேண்டியவர்களென்றும், முகத்தை மூடிக்கொண்டு வெளியில் போகவேண்டியவர்கள் என்றும் ஏற்படுத்தப்பட்ட கொள்கைகளும்; புருஷன் பல பெண்களை மணக்கலாம், பெண்கள் ஏககாலத்தில் ஒரு புருஷனுக்குமேல் கட்டிக்கொண்டு வாழக்கூடாது என்ற கொள்கையும்; நம் நாட்டில் ஒரு தடவை புருஷன்-பெண்சாதி என்கின்ற சொந்தம் ஏற்பட்டுவிட்டால் பிறகு அந்தப் பெண்ணுக்குச் சாகும் வரைக்கும் வேறு எந்தவிதச் சுதந்திரமும் இல்லையென்றும், புருஷன் பல பெண்களைக் கட்டிக் கொண்டு ஒரு பெண்ணின் முன்பாகவே பல பெண்களுடனும் கூடி வாழலாம் என்றும்; புருஷன் தன்னுடைய மனைவியைத் தன் வீட்டில் வைத்துக்கொண்டு, அவளுடன் ஒன்றித்து வாழாமலிருந்தாலுங்கூட, புருஷனை சாப்பாட்டிற்கு மாத்திரம் கேட்கலாமே யொழிய, இன்பத்திற்கோ இச்சையைத் தீர்ப்பதற்கோ அவனைக் கட்டுப்படுத்த மனைவிக்கு உரிமையில்லையென்றும் கட்டுப்பாடுகள் இருந்துவருகின்றன.

இந்நிலை சட்டத்தாலும், மதத்தாலும் மாத்திரம் ஏற்பட்டதென்று சொல்வ தற்கில்லாமல், பெண் சமூகம் ஒப்புக்கொண்டு, இந் நிலைக்கு உதவி புரிந்து வருவதனாலும் இது உரம் பெற்று வருகிறதென்றே சொல்லவேண்டும். அனேக வருடப் பழக்க வழக்கங் களால் தாழ்ந்த சாதியார் எனப்படுவோர் எப்படித் தாங்கள் தாழ்ந்த வகுப்பார் என்பதை ஒப்புக்கொண்டு, தாமாகவே கீழ்ப்படியவும் ஒடுங்கவும் விலகவும் முந்துகின்றார்களோ, அதுபோலவே பெண் மக்களும் தாங்கள் ஆண் மக்களின் சொத்துக்களென்றும், ஆண் களுக்குக் கட்டுப்பட்டவர்களென்றும், அவர்களது கோபத்திற்கு ஆளாகக்கூடாதவர் களென்றும் நினைத்துக் கொண்டு, சுதந்திரத்தில் கவலையற்று இருக்கின்றார்கள். உண்மையாகப் பெண்கள் விடுதலை வேண்டுமானால்—'ஒரு பிறப்புக்கொரு நீதி' வழங்கும் நிர்ப்பந்தக் கற்பு முறையொழிந்து, 'இரு பிறப்பிற்கும் சமமான—சுயேச்சைக் கற்பு முறை' ஏற்படவேண்டும். கற்புக்காகப் பிரியமற்ற இடத்தைக் கட்டி அழுது கொண்டிருக்கச் செய்யும்படியான நிர்ப்பந்தக் கலியாணங்கள் ஒழியவேண்டும்.

கற்புக்காகப் புருஷனின் மிருகச் செயலைப் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டு மென்கின்ற கொடுமையான மதங்கள், சட்டங்கள் மாயவேண்டும்.

கற்புக்காக மனத்துள் தோன்றும் உண்மையன்பை, காதலை மறைத்துக்கொண்டு— காதலும், அன்புமில்லாதவனுடன் இருக்கவேண்டும் என்கின்ற சமூகக் கொடுமையும் அழியவேண்டும்.

எனவே, இக்கொடுமைகள் நீங்கின இடத்தில் மாத்திரமே மக்கள் பிறவியில் உண்மைக் கற்பை—இயற்கைக் கற்பை—சுதந்திரக் கற்பைக் காணலாமேயொழிய நிர்ப் பந்தங்களாலும், ஒரு பிறப்புக் கொரு நீதியாலும், வலிமை கொண்டவன் வலிமையற்ற வனுக்கு எழுதிவைத்த தர்மத்தாலும் ஒருகாலும் காணமுடியாது என்பதுடன், அடிமைக் கற்பையும் நிர்ப்பந்தக் கற்பையுந்தான் காணலாம். அன்றியும், இம் மாதிரியான கொடு மையைவிட வெறுக்கத்தக்க காரியம் மனித சமூகத்தில் வேறொன்று இருப்பதாக என்னால் சொல்ல முடியாது.

['பெண் ஏன் அடிமையானாள்?' என்ற நூலிலிருந்து—அத்தியாயம்-1. பதிப்பு—1971]

## 4. வள்ளுவரும் கற்பும்

கற்பு என்ற கட்டுரைக்கு மறுப்பாகத் திருக்குறளை மேற்கோளாகக் காட்டி, நமது தோழர் ஒருவர் ஒரு நீண்ட மறுப்பு எழுதியுள்ளார்.

அதில் நாம், 'வள்ளுவர் ஒரு பெண்ணாக இருந்து குறள் எழுதியிருந்தால் இக் கருத்துக்களைக் கூறியிருக்கமாட்டார்' என்று குறிப்பிட்டிருந்ததற்கு, நமது தோழர் அதை ஒருவாறு ஒப்புக் கொண்டு—'தன்னலங் கொண்ட ஒரு கூட்டத்தார் ஏற்றுக் கொள்ளவில்லையானால், நீதியானது அநீதியாகிவிடுமோ?'—என்று பதில் கூறியிருக்கிறார்.

இங்குப் பெண்களைத் தன்னலங் கொண்ட கூட்டத்தார் என்று குறிப்பிட்டது பெண்களுக்கு நீதி வழங்கியதாகுமா என்பதை யோசிப்பதோடு, பெண்கள் தர்மம் எழுதுவதில் ஆண்கள் இம்முறை கொண்டு பிரவேசிப்பது தன்னலங் கொண்டதாகாதா என்பதையும் சிந்திக்க வேண்டுகிறேன்.

(இந்த இடத்தில் 'கருத்து' இன்னது என்பதை முடிவு காட்டாவிட்டாலும்) 'தமிழ் நாட்டில் வாழ்ந்த, வாழுகின்ற பெண்ணரசிகளும் அக் கருத்துக்களை ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்' என்று எழுதியிருக்கிறார். எந்தப் பெண்ணரசியாகிலும் தம்மை, ஆண் பிறவிக்கு அடிமையென்றாவது, தாம் அப் பிறவிக்குக் கீழ்ப்பட்டவர்கள் என்றாவது, ஆண் தன்மையைவிட பெண் தன்மை ஒரு கடுகளவாவது தாழ்ந்தது என்றாவது எண்ணிக் கொண்டிருப்பார்களானால், அவர்கள் யாராயிருந்தாலும் அவர்களைப் 'பெண்ணரசி' என்று சொல்ல நாம் ஒருகாலும் ஒப்போம்.

'பல தலைமுறைப் பழக்கத்தால் பெண்கள் அக் கருத்துக்களை ஏற்றுக் கொள்கின்றனர்' என்று நாம் எழுதியிருப்பதும், அதைத் 'தாழ்த்தப்பட்டவர்கள் தங்கள் தாழ்ந்த நிலையை ஏற்றுக்கொள்வதுபோலாகும்' என்பதற்கு ஒப்பிட்டு நாம் எழுதியிருப்பதும் 'தாய்மார்களைப் பழித்துக் கூறியதாகும்' என்று நமது தோழர் கூறியிருக்கிறார்.

அதற்குக் காரணம் காட்டுவதில், 'தாழ்த்தப்பட்டவர்களுக்கு அறிவு வளர்ச்சிக்குரிய சாதனங்கள் கிடைக்கவொட்டாமல் செய்துவிட்டதால் அன்னார்கள் அறியாமையுடையவராகி விட்டார்கள். பெண்களுக்கு அது பொருந்தாது' என்றும் நமது தோழர் சொல்லுகிறார்.

இதை அவர் ஆராய்ச்சியுடன் கூறியிருப்பதாக நமக்கு விளங்கவில்லை. ஏனெனில், எந்தக் காலத்தில் தாழ்த்தப்பட்டவர்கள் என்கின்ற கூட்டம் ஏற்பட்டதோ, எந்தக் காலத்தில் எந்தக் கூட்டத்தார்கள் தாழ்த்தப்பட்டோருக்கு அறிவு வளர்ச்சிக்குரிய சாதனங்கள் இல்லாமல் செய்தனரோ, அக் காலத்திலேயே அந்தக் கூட்டத்தாராலேயே பெண் மக்களுக்கும் அறிவு வளர்ச்சிக்கேற்ற சாதனங்கள் இல்லாமல் செய்யப்பட்டுத் தாழ்த்தி அடக்கி வைக்கப்பட்டிருக்கிறது. இதை ஏன் நமது தோழர் உணர முடியவில்லை என்பதும் நமக்கு அறிய முடியவில்லை.

தவிர, பெண்களின் அறிவுத் திறத்திற்கு உதாரணமாக, இவர் ஒரு அவ்வைப் பிராட்டியை எடுத்துக் காட்டியிருக்கின்றார். அதே மூச்சில் திருவள்ளுவரையும் எடுத்துக் காட்டியிருப்பாரானால், தாழ்த்தப்பட்டிருப்பவர்களுக்குள்ளும் ஏதோ ஒருவருக்கு அறிவு வளர்ச்சி இருந்துவந்தது என்பதை ஒத்துக்கொண்டிருப்பார். எனவே, நாம் ஒன்றிரண்டு பெண்ணரசிகளைப் பற்றிப் பேச வரவில்லை என்பதையும், தற்காலத்தில் நிகழும் நூற்றுக்குத் தொண்ணூற்றொன்பதே முக்காலே மூன்று வீசம் அரைம்வீசம் பெண்களைப் பற்றிப் பேசுகின்றோம் என்பதையும் உணர வேண்டுகின்றோம்.

இப்படிச் சொல்லுவதால், நாம் தாய்மார்களைப் பழித்துக் கூறியதானால், நமது தோழர் சொல்வதிலிருந்து அவர் 'தாழ்ந்த சாதி' என்பவர்களைப் பழித்துக் கூறியதாக ஏற்படவில்லையா என்று வினவுகின்றோம்.

உண்மையைப் பேசும்போது அதனால் யாருக்கும் பழிப்பு ஏற்படுமானாலும் அதைப் பற்றிக் கவலை கொள்ளாது, அப் பழிப்புக்குக் காரணமாயுள்ளதை ஒழிக்க முயல வேண்டியதே வீரர்களின் கடமையாகும்.

தவிர, அவ்வைப் பிராட்டியாரும் திருவள்ளுவரையே அரண் செய்கின்றார் என்பதற்கு எடுத்துக்காட்டாக அவ்வையாரின், 'தையல் சொல் கேளேல்' என்கின்ற முதுமொழியை எடுத்துக் காட்டி, அதற்கு அரணாக வள்ளுவரின், 'பெண் வழிச்சேறல்' என்கின்ற வாக்கைச் சுட்டிக் காட்டுகின்றார். 'பேதைமை என்பது மாதர்க் கணிகலம்' என்ற பிராட்டியாரின் முதுமொழியையும் கூடவே குறிப்பிட்டிருக்கிறார்.

இதனால், நமது தோழர் தனது கடைசி ஆயுதத்தை எறிந்திருக்கிறார் என்றே கூற வேண்டியுள்ளது. பெண்களும் பகுத்தறிவுள்ள—சிந்தனா சக்தியுள்ள மனித ஜீவன்தான் என்பதை ஒப்புக்கொள்ளும் எவரும் இம்மூன்றையும் ஒருகாலும் நடுநிலைமையுள்ளவர் வாக்கென்றோ, உண்மையை ஆராய்ந்த அறிவுடையோர் வாக்கென்றோ ஒப்புக்கொள்ள முடியாதென்பதே நமது துணிபு. அங்ஙனமில்லையாயின், அவ்வக்கால நிலைக்கேற்றதென்றாவது சொல்லியாக வேண்டும். இங்கு சற்று வாசகர்களுக்குச் சங்கடமுண்டாகும் என்பது நமக்குத் தெரியும்; ஆகிலும் குற்றமில்லை.

முதலாவது, அவ்வையும், வள்ளுவரும் சகோதரர்கள் என்பது ஒரு கதை. ஆதி என்கின்ற புலைச்சிக்கும் பகவன் என்கின்ற பார்ப்பானுக்கும் பிறந்த பிள்ளைகள் எழுவரில் இவர்கள் இருவர் என்று அக் கதையே சொல்லுகின்றது. இவற்றுள் மற்றொரு விசேடம் என்னவென்றால், மேற்கண்ட ஆதிக்கும் பகவனுக்கும் புணர்ச்சி முடிந்ததும் பிள்ளை பிறந்ததாகவும், அதை அங்கேயே போட்டுவிட்டுப் போய்விட்டதாகவும் அக்கதை கூறுகின்றது. இது சம்பந்தமாக மற்றும் பலப்பல கதைகளும் உண்டு. அன்றியும், மற்றும் பலப்பல அவ்வைகள் இருந்தார்கள் என்றும் சிலர் கூறுவார்கள். எனினும், இது விஷயத்தில் புராணக்கூற்றையும், தெய்வீகமூட நம்பிக்கையையும் சற்று ஒதுக்கி வைத்துவிட்டு, மேற்கண்ட நீதிவாக்கியங்களும் குறள்களும் யாரால் சொல்லப்பட்டிருந்தாலும் அதையும் கவனியாமல், மேற்படி வாக்கியங்களை மாத்திரம் எடுத்துக் கொண்டு, அது போன்ற மற்ற வாக்கியங்களுக்குப் பொருள் காணுவது போலவே இவைகளுக்கும் பகுத்தறிவைக் கொண்டு பொருள் காணுவோமானால், மேற்கண்ட முதுமொழிகளின் கருத்தான 'பெண்கள் சொல்லைக் கேட்கக் கூடாது' என்பதும்; 'அறியாமை என்பது பெண்களது ஆபரணம்' அதாவது அவர்களின் தன்மைக்கேற்றது என்பதும்; 'பெண்கள் இஷ்டப்படி நடக்கக் கூடாது' என்பதுமே பொருளாக விளங்குகின்ற கருத்துக்கள்தாம் காணக்கிடக்கும்.

இனி, இதற்கு விசேட உரைகளும் தத்துவார்த்தங்களும் பலப்பல சொல்லப் பல வித்துவான்கள் முந்தக்கூடும். ஆனாலும், தத்துவார்த்தமும் விசேடவுரையும் சொல்ல முடியாத சப்தங்களும், எழுத்துக்களும் வாக்கியங்களும் செய்யுள்களும் உலகத்தில் கிடைப்பதரிது என்பது யாவரும் அறிந்ததாகும். ஆதலால், இதற்கு மாத்திரம் தத்துவார்த்தமும், விசேட உரையும் கொண்டு பொருள் கூற வரவேண்டிய காரணம் அறிவாளிகளால் ஒப்புக்கொள்ளக் கூடியதாகாது. அவ்வை முதுமொழியும், வள்ளுவர் குறளும் யார் சொன்னார்கள் என்பது இங்குக் காணவேண்டிய விஷயமல்ல. மற்றபடி, இவ்விரண்டும் நீதி நூல்களில் சிறந்தவைகளாக எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றன. ஆதலால், இதைப் பற்றிப் பேசவே இங்கு முன்வருகின்றோம். இதில் குறுக்கே நிற்கும் சங்கடமென்னவென்றால், இவ்வளவு உயர்ந்த தத்துவங்களைக் கொண்ட நீதிகளை உணர்ந்தவர்கள்

இவ்வளவு பெரிய பிழைகளை இழைத்திருப்பார்களா என்னும் விஷயமாகும். ஆனால், எல்லா விஷயங்களுக்கும் இவ்வாயுதத்தை உபயோகிக்க முற்படுவதால், அவ்வாயுதம் சில சமயங்களில் உபயோகிப்பவர்களையே மோசம் செய்துவிடக்கூடும். அல்லாமலும், கால தேச வர்த்தமானத்தைக் கொண்டுதான் யாரும் எதையும் சொல்லியிருக்க முடியுமே யல்லாமல், பார்ப்பனர்கள் சொல்லுவதுபோல்—எதையும் கடவுள் சொன்னார் என்பதும், அது எக் காலத்திற்கும் ஏற்றது என்பதும் இக் காலத்திற்குப் பொருத்தமற்றதாகும்.

இவ்விரு பெரியார்களும் வாழ்ந்தது உண்மையாயிருந்தாலும் இல்லாவிட்டாலும் இந் நீதிநூல்கள் சொல்லப்பட்ட காலம் ஆரிய ஆதிக்கம் பரவியிருந்த காலமென்பதையாவது ஒவ்வொருவரும் ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டும். தவிர, அவ்வைப் பிராட்டியார் பெயராலோ, வள்ளுவர் பெயராலோ சொல்லப்பட்ட நீதிகளை ஆக்கிய கர்த்தர்கள் நம்மைப் போன்ற மனிதத் தன்மை வாய்ந்தவர்கள் என்பதை முதலாவதாக ஏற்றுக்கொள்ள வேண்டும். அந்த இடத்தில் மேலே குறிப்பிட்டதுபோல், தெய்வத் தன்மைகள் என்று சொல்லப்படுவதை—அதாவது, மனிதத் தன்மைக்கு மேற்பட்டது என்பதெதையும் மூட்டை கட்டி வேறாக வைத்துவிட்டுப் பார்த்தால்தான் உண்மை விளங்கும். அப்படிக்கில்லா விட்டால், யாரும் எதையும் சொல்ல இடமேற்பட்டுவிடும். ஆகவே, அப்படிப் பார்த்தால்தான் அவர்கள் இப்படிச் சொன்னதற்கு நியாயம் கிடைக்கும். அதாவது, 'அக்காலத்திய நிலைமைக்கு—யாராயிருந்தாலும்—நீதி இப்படித்தான் சொல்லியிருக்க முடியும்' என்கின்ற முடிவுகாணலாம். எப்படியென்றால், கம்பர் அறிவுத் திறமுடைய கவி என்பதில் யாருக்கும் வேறுபாடு இராது. ஆனாலும், அப்படிப்பட்ட கம்பர் இராமாயணம் பாடினார் என்றால், ஆரியர் செல்வாக்குக் காலத்தில்—ஆரிய ஆதிக்கத்தில் மக்களுக்கு உணர்ச்சியுள்ள காலத்தில்—பாடியதானதால், அதில் வான்மீகி உரைத்த கருத்துக்களை மாற்றி, அதிலுள்ள ஆபாசங்களை எல்லாம் நீக்கி, ஆரியர்களுக்கே முழுஉயர்வையும் ஆதிக்கத்தையும் வைத்து, மக்கள் கொண்டாடும்படியாகப் பாடியிருக்கின்றார்.

அதுபோலவே, இப்போதுங்கூட எவ்வளவு அறிவு முதிர்ச்சியும், ஆராய்ச்சி முதிர்ச்சியும் பல பண்டிதர்களுக்கிருந்தாலும் ஆரிய ஆதிக்கத்தை மறுப்பதற்குப் பயப்படு கின்றார்கள்; ஆரிய உயர்வையே பேசுகின்றார்கள். காரணம், 'ஆரியருக்குப் பயந்தல்ல' வென்று சொல்லிக் கொண்டாலும், அவர்களுக்கு ஏற்பட்ட ஆரியப் பழக்க வழக்கங்களும், ஆரியர் கதைகளையே படிப்பதும், ஆரிய ஆதிக்கத்திற்கு ஏற்படுத்தின கடவுள் தன்மை களையே வணங்கிவருவதும், ஆரியக்கதையையே ஆதரித்துப் பாடுவதும் எழுதுவதும் ஆகியகுணங்களே இப்படித்தான் நடக்கச் செய்யும். எனவே இம்முறையில் குழந்தைப்பருவ முதல் வளர்ந்து சரீரத்தின் மூலமாகவும், மயிர்க்கால்கள் மூலமாகவும் ஆரியத் தன்மையை ஏற்றுக்கொண்டு மூளையை நிரப்பி வைத்திருப்பவர்கள் என்ன செய்யக்கூடும்? ஆதலால், அவர்கள் பரிசுத்தத் தன்மையும் மேன்மையும் உற்றவர்களானால், அக் காலத்திற்கு ஏற்பக் கூறினார் என்பதோடு முடித்துவிடுவதே நன்று. அப்படிக்கில்லாமல், எக் காலத்திற்கும் ஏற்றதென்போமாயின் அவைகள் குற்றம்—குற்றமே; நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றமேதான்.

பின்பு, நமது தோழர், 'சமத்துவம்' என்பதுபற்றி என்னென்னவோ அவசிய மில்லாத அனேகவற்றைச் சொல்லுகின்றார். அதைப்பற்றி இங்கு இதுசமயம் ஒரு விவகாரமும் வைத்துக்கொள்ள அவ்வளவு அவசியமில்லை. என்றாலும், கடைசியாக அவர் குறிப்பிடும் சமத்துவக் கொள்கையையாவது எடுத்துப் பார்த்தாலும், அதிலும் முறையாகச் சொல்லாமல் நழுவிவிட்டார் என்றே கூறவேண்டும். அதாவது, 'பெண்மக்கள் தமது உரிமையையும், தேவையையும் ஆண்மக்கள் தடையில்லாமலும், பெண்ணின் தடையின்றி அவர்களுக்குத் துன்பமில்லாமல் பெறுதலும், ஒருவருக்கொருவர் உதவி செய்து வாழ்வதும் ஆண், பெண் சமத்துவமாகும்' என்று சொல்லுகிறார்.

ஆனால், அதே மூச்சில், 'ஆண் உரிமை யாது? பெண் உரிமை யாது? அன்னாரின் தனித்தனித் தேவைகள் என்பவை யாவை?' என்பதைப்பற்றி ஆராய்தல் வேறொன்று விரித்தலாகும் என்று சொல்லிவிட்டார்.

இவ்வியாசத்தின்-விவகாரத்தின் ஜீவநாடி, 'ஆண் உரிமையென்ன? பெண் உரிமையென்ன? இவ்விரண்டிற்கும் ஏன் வித்தியாசம் இருக்கவேண்டும்?' என்பதேயாகும். அப்படியிருக்க நமது தோழர், அதை ஆராய்வது வேறொன்று விரித்தல் என்னும் குற்றமாகிவிடும் என்பது, உள்ளத்தை விரிக்கப் பயந்து—'மறைத்தல்' என்கின்ற குற்றத்திற்கு ஆளாகுமே தவிர வேறில்லை என்று சொல்ல வருந்துகிறோம்.

தவிர, 'ஆணின் தன்மை—வீரம், கோபம், வன்மை, ஆளுந்திறம் கொண்டு விளங்குகின்றது' என்றும்; 'பெண்ணின் தன்மை—அன்பு, மென்மை, சாந்தம், பேணுந்திறம் கொண்டு விளங்குகின்றது' என்றும் சொல்லுகின்றார். இம்முடிவுதான் நமது தோழர் திருவள்ளுவருக்கு 'வக்காலத்து'ப் பெற்று மறுப்பெழுத முன்வரச் செய்து விட்டதென்பது இப்போது நமக்கு நன்றாய் விளங்குகின்றது.

வன்மை, கோபம், ஆளுந்திறம் ஆண்களுக்குச் சொந்தமென்றும்; சாந்தம், அமைதி, பேணுந்திறம் பெண்களுக்குச் சொந்தமென்றும் சொல்வதானது—வீரம், வன்மை, கோபம், ஆளுந்திறம் புலிக்குச் சொந்த மென்றும்; சாந்தம், பேணுந்திறம் ஆட்டுக்குச் சொந்தமென்றும் சொல்வது போன்றதேயொழிய வேறில்லை. நாம் வேண்டும் 'பெண்ணுரிமை' என்பது என்னவெனில், ஆணைப்போலவே பெண்ணுக்கும் வீரம், வன்மை, கோபம், ஆளுந்திறம் உண்டென்பதை ஆண்மக்கள் ஒப்புக்கொள்ள வேண்டும் என்பதேயாகும்.

அன்றியும், மனித சமூக வளர்ச்சிக்கு இருபாலருக்கும் நமது தோழர் குறிப்பிட்ட இருபாலர் குணங்களும் சமமாய் இருக்கவேண்டுமென்பதே நமது கருத்தாகும். இருபாலருக்கும் சமமாகவே இருக்க இயற்கையில் இடமும் இருக்கின்றது. ஆனால், அது செயற்கையில்—ஆண்களின் சுயநலத்தால், சூழ்ச்சியால் மாறுபட்டு வருகின்றது.

கர்ப்பமாகிப் பத்துமாதம் சுமந்து பிள்ளை பெறுகின்றகுணம் பெண்களுக்கு இருப்பதாலேயே, பெண்கள் நிலை ஆண்களைவிட எவ்விதத்திலும்—அதாவது, வீரம், கோபம், ஆளுந்திறம், வன்மை முதலியவைகளில் மாறுபட்டுவிடவேண்டியதில்லை என்றே சொல்வோம். கர்ப்பம் தரித்துப் பிள்ளை பெறாத காரணத்தாலேயே ஆண்மக்களுக்கு அன்பும், சாந்தமும், பேணுந்திறமும் பெண்களைவிட மாறுபட்டதாகி விடாதென்றும் சொல்லுவோம்.

உண்மையான சமத்துவத்திற்கு மதிப்புக் கொடுப்போமானால்,—உண்மையான அன்பு இருக்குமேயானால்,—பிள்ளையைச் சுமந்து பெறும் வேலை ஒன்று தவிர, மற்ற காரியங்கள் இருபாலருக்கும் ஒன்றுபோலவே இருக்கும் என்பது உறுதி.

தவிர, 'தற்கொண்டான்' என்பதற்கு, அன்பைக் கொண்டவன் என்கின்றபொருளை வருவித்துக்கொள்வது இங்கு, வள்ளுவருக்குக் காப்புச்செய்யக் கருதியதாகுமேயல்லாமல், குறளுக்கு நீதி செய்ததாகாது.

அன்றியும், பெண்ணிடமிருந்து ஆண் அறியவேண்டிய குணம் ஒன்றுமில்லையென்பதும், அப்படியிருந்தால்தான் 'தற்கொண்டாள்' என்பதாகச் சொல்லலாம் என்பதும் பொருத்தமற்றதென்றே சொல்லலாம்.

அதுபோலவே, 'தொழுதெழுவதையும்' ஆணுக்குக் குறிப்பிட நியதி இல்லையென்பதும் பொருத்தமற்றதேயாகும். பெண்ணைக் கொள்ள ஆணுக் குரிமையிருந்தால்,

ஆணைக்கொள்ளப் பெண்ணுக்கு உரிமை வேண்டும். 'ஆணைத் தொழுதெழவேண்டும்' என்று பெண்ணுக்கு நிபந்தனையிருந்தால், 'பெண்ணைத் தொழுதெழ வேண்டும்' என்று ஆணுக்கு நிபந்தனை இருக்கவேண்டும். இதுதான் ஆண்–பெண் சரிசம உரிமையென்பது.

இஃதில்லாதது எதுவானாலும் சுயநன்மையும் மூர்க்கமுமேயல்லாமல், அன்பு அல்ல வென்றே சொல்லிவிடுவோம்.

தவிர, நமது தோழர் அவர்கள், குறளில் ஆண்களுக்கும் வள்ளுவர் கற்பு கூறியிருப்பதாகச் சொல்லுகின்றார். இருக்கலாமானாலும், பெண்களுக்குக்கூறியது போலில்லையென்றுதான் கூறுகிறோம். அதாவது, ஆண்களின் கற்புக்கு நமது தோழர் அவர்கள் இரண்டு குறட்பாக்களை எடுத்துக்காட்டாகக் கூறியிருக்கிறார். அவை,

“சிறைகாக்கும் காப்பெவன் செய்யும் மகளிர்
நிறைகாக்கும் காப்பே தலை.”

“நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்.”

இவைகளை ஆண்கள் கற்பை வலியுறுத்தக் கூறியதாகக் கூறுகிறார்போல் காண்கின்றது. இவைகள் அதற்காகக் கூறப்பட்டவையல்ல என்பது நமது அபிப்பிராயம்.

அதாவது, முதற் குறளுக்கு, 'காவலினால் பெண்கள் கற்பாயிருப்பதால் பயனில்லை; பெண்கள் தாங்களாகவே கற்பாயிருக்கவேண்டும்' என்பதுதான் கருத்தாக இருக்கலாம் என்று கருதுகிறோம்.

இரண்டாவது குறள், 'விலைமாதரைப் புணர்கின்றவர்க்குக் கூறிய பழிப்புரை'யேயல்லாமல், காதல் கொண்ட மற்ற பெண்களைக் கூடித்திரியும் ஆண்களைக் குறித்துக் கூறியதல்ல வென்பது நமது அபிப்பிராயம். நிறை என்கின்ற வார்த்தை மாத்திரம் காணப்படுகின்றதே தவிர, நிர்ப்பந்தமில்லை.

ஆகவே, இருபாலருக்கும் சமநிபந்தனை குறளில் இல்லை என்பதற்கு மற்றும் பல குறட்பாக்களையும் நாம் கூறக்கூடும்.

தவிர, கடைசியாக நமது தோழர் நமக்கு உறுத்தும் அறிவுக்கு நாம் அவருக்கு நன்றி கூறக் கடமைப்பட்டிருக்கிறோம். அவர் விரும்புவது போலவே, ஆன்றோர் நூல்களில் அய்யம் தோன்றுமிடங்களில் அய்யவினாவாகவே எழுதிவருகிறோம். ஆனால், இக் கற்பு விஷயத்தில் நாம் குறிப்பிட்ட குறளின் கருத்தில் நமக்கு அய்யமில்லையென்று கருதுவதோடு, நமது கூற்றுக்கு ஆதரவாக மற்றும் சில அறிஞர்களின் கருத்தையும் பெற்றோமென்பதையும் தெரிவித்துக்கொள்கின்றோம்.

மற்றும், குறள் விஷயத்திலும், குறளாசிரியர் விஷயத்திலும் நாம் கொண்டுள்ள பக்தி, தோழர் கொண்டுள்ள பக்திக்கு மீறியதல்லவானாலும் குறைந்ததல்ல வென்பதையும் பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகின்றோம். அதற்கு அனேக சான்றுகளுண்டு. மற்றபடி நமது தோழர் குறிப்பிட்ட கடைசி குறட்பாக்கள் இரண்டைப்பற்றி, அதாவது,—'பெரும்பான்மை மக்களது கருத்துக்கு மாறுபடுவதும், பெரியோரிடம் குறைகாணுவதும் மடமை' என்கின்ற பொருள் கொண்டவேறு இரண்டு குறட்பாக்கள்பற்றி நாம் சிறிதும் கவலைப்படவில்லை. ஏனெனில், சரி என்று பட்டதைச் சொல்லும் தன்மை எவனிடமிருந்தாலும் அவன் இக் குறட்பாக்கள் மாத்திரமல்ல—இதுபோன்ற வசைகள் பலவற்றிற்கும், மற்றும் அனேக காரியங்களுக்கும் தயாராயிருக்க வேண்டியவன்தான் என்கின்ற முடிவால் கவலைப்படவில்லை.

['பெண் ஏன் அடிமையானாள்?' என்ற நூலிலிருந்து 11-ம் பதிப்பு, 1971]